# முன்னுரை

சன்மார்க்க நூற்களை வெளியிடும் நமது முயற்சியில் இந்த **'இமாம்கள் சரிதை'** ஒரு முக்கியமான மைல் கல்லாகும். எல்லாம் வல்ல அல்லாஹ்வின் நல்லருளால் இதை இப்போது முஸ்லிம் சமூகத்தின் முன் சமர்ப்பிக்கின்றேன்.

இந்த நூலைப் படித்துப் பார்த்து இதன் முக்கியத்துவத்தை உணரும் சகோதரர்கள் ஒவ்வொருவரும் இதைப் பரப்பும் பணியில் பங்கு கொள்ளவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

இதில் காணப்படும் எழுத்துப் பிழைகளை அன்பர்கள் திருத்திப் படிக்குமாறு வேண்டுகிறேன். வேறு தவறுகள் காணப்பட்டு, எனக்கு எழுதப்பட்டால், இன்ஷா அல்லாஹ், நன்றியுடன் அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்கிறேன்.

இந்த நூலை எழுதுவதற்குத் தேவையான குறிப்புக்களை எடுப்பதில் ஜனாப் மௌலவி கே. பி. முஹம்மது யாகூப் பாக்கவி அவர்கள் அதிகமும் உதவியுள்ளார்கள். அரபி, உர்து நூற்கள் பலவற்றிலுமிருந்து அவர்கள் குறிப்புக்கள் நல்கினார்கள்.

ஆர். பி. எம். கனி
1-11-1958

# பீடிகை

இரு லோக ரட்சகர், எம்பெருமான் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள் : ''என் கூட்டத்தாரில் உத்தமர்கள் சிலர் தோன்றுவார்கள். அத்தகைய புனித சீலர்கள் பனீ இஸ்ராயீல்களிடைகூடத் தோன்றவில்லை. அவர்களுடைய தலையைப் பிளப்பதற்காகத் தலைக்குமேல் வாள் உயர்த்தப் படினும்கூடத் தங்கள் சிரேஷ்டமான சன்மார்க்கத்தின் விஷயத்தில் அணுவளவும் விட்டுக் கொடுக்கமாட்டார்கள்'' என்று.

நமது மதிப்புக்கும், மரியாதைக்கும் உரிய சட்டமேதைகள், சத்தியத்துக்காகவே தங்கள் உயிர்களையும் அர்ப்பணித்த சான்றோர்கள், சன்மார்க்கம் சீர்குலையாது தடுத்து அதன் கட்டுக்கோப்பைக் காப்பாற்றித் தந்த கண்ணியர்கள் ஆகிய நான்கு 'மத்ஹபு'களின் இமாம்களும் இந்த ஹதீஸில் சுட்டிக் காட்டப்படும் ஆதர்ச புருஷர்களாக நடந்து அமரத்துவமடைந்தவர்களாவர். உலகை உய்விக்க வந்த உத்தம திருநபி (சல்) உலகுக்குக் கற்றுத் தந்த உன்னத வழிமுறை ஒரே நூற்றுண்டுக்குள் சுயநல நோக்கங்கொண்ட தீயவர்களாலும், உள்ளொன்று வைத்துப் புறமொன்றுன நயவஞ்சகர்களாலும், இஸ்லாத்தின் எதிரிகளின் கையாட்களாலும் சீர்குலைத்து உருமாறி அழிந்து படலாமோ என்ற அச்சத்துக்கு இடமுண்டாகி இருந்தது. சாதாரண ஜனங்கள் எவ்விதம் ஒழுகுவது என்றே தெரியாது குழம்பிய நிலையும் ஏற்பட்டிருந்தது. இச்சமயம் தான் நமது 'மத்ஹபு'களின் இமாம்கள் அடுத்தடுத்து வந்து, நம்பெருமானார் (ஸல்) அவர்களின் சொல் செயல்களின் அடிப்படையிலேயே சன்மார்க்க நெறிமுறைகளுடன்கூடிய வாழ்க்கை வழியை வகுத்துக்காட்டி, இருளில்

தத்தளித்த மக்களுக்கு ஒளியை நல்கினார்கள். இந்த வேலையில் அவர்கள் எதிர்நோக்க நேர்ந்த ஆபத்துகளோ ஒன்றிரண்டல்ல. தமது ஆட்சிக்கு அவர்களால் ஆபத்து வரலாமோ என்று எண்ணிய ஆட்சியாளர்களின் கையில் அவர்கள் பட்ட அவதிகளோ படிப்போரை இரத்தக் கண்ணீர் விடச் செய்பவையாகும். ஆனால், பாராட்டையோ, பட்டம் பதவியையோ, போக வாழ்வையோ விரும்பாமல், அல்லாஹ்வை முன்னிறுத்தி, எத்துணையோ தொல்லைகளையும் துயரங்களையும் மகா சகிப்புடன் தாங்கிக் கொண்டு அவர்கள் கடமையாற்றினர். இமாம் அபூ ஹனீபா, இமாம் மாலிக், இமாம் ஷாபிஈ, இமாம் அஹ்மதிப்னு ஹன்பல்—இப்படியாக ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும் நாம் படிக்கும்போது, ''சன்மார்க்கத்துக்காக இப்படி யாரே கஷ்டங்களைத் தாங்கியிருக்க முடியும்!'' என்று வியப்புறுகிறோம், அவர்கள் அறிவுத் திறனையும், மகா மேதையையும் காணும்போது இப்படி இஸ்லாத்தின் பெருமையை நிலைநாட்டிய அவர்களின் திரத்தை வியக்கிறோம்.

அன்றையக் குழப்பமான சூழ்நிலையில் இந்த இமாம்கள் தோன்றி வழிகாட்டியிருக்காவிட்டால், அல்லது, இவர்கள் தண்டனைக்கு அஞ்சியோ, சம்மானங்களை ஆசித்தோ ஒரு சிறிதேனும் விட்டுக்கொடுத்திருந்தால் முஸலிம்கள் அன்றே பல்லாயிரம் பிரிவுகளாகிச் சிதறுண்டிருப்பர் என்பதை ஒருக்கணம் சிந்தித்தாலும் இவர்களுடைய மகத்தான சேவையை நாம் உணர முடியும்.

இஸ்லாத்தின் கோட்டையைத் தூக்கி நிறுத்திய மகத்தான இரும்புத் தூண்கள் இவர்கள். எனவே, இவர்களைப் பற்றி தமிழகம்-தமிழ் கூறும் நல்லுலகத்து முஸ்லிம்கள் நன்கு அறிந்துகொள்வது அவசியம். 'ஸுன்னத் வல் ஜமாஅத்'தைப் பின்பற்றும் முஸ்லிம்கள் இந்த நான்கு 'மத்ஹபு'களில் ஒன்றைப் பின்பற்றியே ஆக வேண்டும். இவற்றுக்குப் புறம்பே அவர்கள் இருப்பதென்பதே சாத்தியமல்ல. எனவே,

இந்த இமாம்கள் எப்படி வாழ்ந்தார்கள், எப்படி இஸ்லாத்துக்காகப் பாடுபட்டார்கள். எப்படி இந்த 'மத்ஹபு'கள் உருவாக்கப்பட்டன என்ற விபரங்களை நாம் அறிவது மிகவும் அவசியமாகும்.

''சத்தியம் இறந்து நான் உயிரோடிருப்பதைவிட, நான் இறந்து சத்தியம் உயிரோடிப்பது உத்தமமல்லவா!'' என்று இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் அவர்கள் கேட்டது போன்று சத்தியத்துக்காகத் தம்மை அர்ப்பணித்த இந்த சன்மார்க்க மகான்களை அறிந்துகொள்வதன் மூலம் நமது நிர்ணயம் மாசற்றதாகவும், உறுதியானதாகவும் ஆகப் பாடுபடுவோமாக!

———

# 1. இமாம் அபூ ஹனீபா

''உலகிலுள்ள அறிஞர்களில் ஆயிரம் பேருடைய அறிவுத் திறனை ஒரு தட்டிலும், இமாம் அபூ ஹனீபாவின் அறிவுத் திறனை மறு தட்டிலும் வைத்து நிறுத்தாலும் இமாம் அபூ ஹனீபாவின் அறிவுத்திறனுள்ள தட்டே அதிகக் கனமுடையதாக இருக்கும்'' என்று இமாமுல் அஃலம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களின் அறிவுத்திறனைப் போற்றுகிறார் ஒரு பெரியார்.

உலகில் பல கோடி முஸ்லிம்கள், அவர்கள் வகுத்த இஸ்லாமிய வழி முறையைப் பின்பற்றியொழுகும் வாரிசுகளாய் உள்ளனர். அவர்கள் ஒரு மாபெரும் ஆலிம்; ஒப்பற்ற ஃபகீஹ்; முஹத்திஸ்; ஈடிணையற்ற மெய்வணக்கவாளி; நபி பெருமான் (ஸல்) அவர்களின் அருமைத் தோழர்கள் பலருடன் பழகும் பாக்கியம் பெற்ற புனிதர் (தாபியிய்யி).

மார்க்கச் சட்டமாம் ஃபிக்ஹின் அடிப்படையினையே முதன் முதலாக விதிப்படி முறைப்படுத்தி உலகுக்கு வழங்கிய மாமேதை; இணையற்ற வர்த்தக வேந்தர்; இடையறாது அள்ளி வழங்கிக் கைசிவந்த வள்ளல்.

எம்பெருமானாரின் குடும்பத்தார்மீது கொண்டிருந்த அன்பாலும், சத்தியத்தைவிட்டுச் சறுகாத மாண்பாலும் ஆட்சி பீடத்தாருக்கு அடிவருட மறுத்த அஞ்சா நெஞ்சத்தாலும் இருட் சிறையில் இடம் பெற்றுக் கடுமையாக நடத்தப்பட்டார்கள். கடைசியில் வீர மரணமடைந்த சத்தியத் தியாகி. இவர்கள் தாம் இமாமுல் அஃலம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களாவர்.

## குலமும், பிறப்பும்

இமாம் அபூ ஹனீபாவின் அசல் பெயர் நுஃமான் இப்னு தாபித். எத்தனையோ பெரியார்கள், மகான்கள் எம்பெரு

மானுடையவோ, முக்கிய ஸஹாபாக்களுடையவோ சந்ததியினராக இருக்கக் காண்கிறோம். ஆனால், இஸ்லாத்துக்கு இணையற்ற சேவை செய்த இந்த இமாமவர்கள் தங்கள் பாட்டனாரிலிருந்தே முஸ்லிமான பாரஸீகக் குடும்பமொன்றைச் சேர்ந்தவர்களாவார்கள். அதனால் என்ன? ஸல்மானுல் பார்ஸியும் நெருப்பை வணங்கும் பார்ஸிக் குலத்தைச் சேர்ந்தவர்களாகத்தான் இருந்தார்கள். ஆனால், எம்பெருமானைத் தேடி அலைந்து, அவர்களுடைய உற்ற தோழர்களில் ஒருவராகி, 'ஸல்மான் என்னிலுள்ளவர், என்னைச் சேர்ந்தவர்' என்று பெருமானாராலேயே பாராட்டப்பெற்ற பெருமை அவர்களுடையதல்லவா! அஃதேபோல், இமாம் அபூ ஹனீபாவும் தங்களுடைய அற்புத சாதனைகளால் இஸ்லாமிய உலகில் இணையற்ற இடத்தை அடைந்துள்ளார்கள்.

'அரபு நாட்டின் சிரசு' என்று சிறப்புப் பெயர் பெற்ற கூபாதான் இமாமவர்களின் பிறப்பிடமாகும். கூபா இஸ்லாமிய ஆட்சியில் புதிதாகப் பூத்த ஒரு புது நகரமாகும். ஹிஜ்ரி பதினேழில்தான் அது உருவெடுத்தது. ஹஜ்ரத் உமருல் பாரூக் (ரலி) அவர்களுடைய கிலாபத்தில் அவர்களின் உத்தரவுக்கேற்ப ஸஅதிப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட நகரம் கூபா. அங்கே முதன் முதலில் யமன் வாசிகள் பன்னிரெண்டாயிரம் பேர்களும், நஸார் வகுப்பினர் எட்டாயிரவர்களும் குடியேற்றப்பட்டனர். பல நாடுகளுக்கும் முதலில் ஹிஜ்ரத் சென்ற குடும்பங்கள் சிலவும் அங்கே வந்து குடிபுகுந்தன. இவர்களுக்கு ஹஜ்ரத் உமர் (ரலி) ஆரம்பத்தில் உபகாரச் சம்பளம் கொடுத்து வந்தார்கள். பின்னர் அது தேவையில்லாது போயிற்று. ஏனெனில், பாரஸிக, ரோம சாம்ராஜ்யங்களை எதிர்த்து நிகழ்த்தப்பட்ட போர்களில் கூபாவைச் சேர்ந்த வீரர்கள் அதிகம் பங்கெடுத்துக் கொண்டனர். அந்த நகரவாசிகள் காட்டிய போரார்வத்தையும், மார்க்க ஞானப் பற்றுதலையும் கண்டு மனமகிழ்ந்து கலீபா ஹஜ்ரத் உமர்(ரலி)அவர்கள் கூபாவை 'இறைவனின் துவஜம்' (கொடி) 'ஈமானின் பொக்கிஷம்' என்றெல்லாம் புகழ்ந்து பாராட்டலானார்கள். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுடைய ஆட்சியில்

அவர்கள் கூபாவிலேயே தங்கி அதைத் தமது ஆட்சியின் தலைமைப் பீடமாகவும் ஆக்கிக் கொண்டார்கள். எனவே, ஸஹாபிப் பெரியார்களில் பலரும் அங்கே வந்து தங்கியிருந் திருக்கின்றனர். இஸ்லாமியக் கலைஞானங்கள் பரிணமிக்கும் ஒரு நகரமாக அது அமைந்துவிட்டது. மார்க்க ஆராய்ச்சி— அதிலும் குறிப்பாக 'ஃபிக்ஹு' என்ற இஸ்லாமிய மார்க்கச் சட்டங்கள் பற்றிய ஆராய்ச்சி கூபாவிலிருந்த அறிஞர்களின் விசேஷமான பரிசீலனைக்குள்ளாயிற்று. எனவே, ''ஹஜ்ஜுக் குச் செல்வதற்கு மக்கா, கிராஅத்துக்கு மதீனா, ஃபிக்ஹுக்குக் கூபா" என்று பெரியார் ஸுப்யான் பின் ஐனா அவர்களால் போற்றப்பட்டது. அத்துடனின்றி, இமாம் அபூ ஹனீபாவின் காலத்தில் ஹதீஸ் விளக்கத்தில் தேர்ந்த முப்பது பெரியார் (பலர் தாபியீன்)களும் அங்கே இருந்தனர். இத்தகைய நகரம் இமாமுல் அஃலத்தின் பிறப்பிடமாக அமைந்தது விசேஷமன்றோ!

இமாமவர்கள் அரபு வமிசத்தினர்தாம் என்றும், அவர் களுடைய வம்சாவளி நுஃமான் பின் தாபித் பின் ஜௌத்தி பின் யஹ்யா பின் ஜைத் பின் அஸத் பின் ராஷிதுல் அன்ஸாரி என்றும் ஆசிரியர்கள் சிலர் எழுதிவைத்துள்ளனர். இன்னொரு பக்கம், அவர்களுடைய பாட்டனார் ஜௌத்தி ஆப்கனிஸ்தானி லுள்ள காபூலில் கைதியாகச் சிறைப்பிடிக்கப்பட்டு அரபு நாட் டுக்குக் கொண்டு வரப்பட்டவர் என்றும், அங்கே பனீ தைமுல்லா என்ற குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தியால் அவர் விலைக்கு வாங்கப்பட்டார் என்றும், பின்னர் விடுதலை யானார் என்றும், எனவேதான் அவர் அடிமையாக இருந் ததைக் காட்டக்கூடிய முறையில் இமாமவர்களுடைய குடும்பத் தார் 'மௌலா' (அடிமை) என்று அழைக்கப்படுகின்றனர் என்றும் நூலாசிரியர்கள் சிலர் கூறுகின்றனர். அடிமைகள் பலர் அரசர்களாகி உலகப் புகழ் பெற்றதை இஸ்லாமிய சரிதை எண்பித்துக் காட்டிக் கொண்டிருக்கிறது. அடிமையாக இருந்த ஹபஷி பிலால் (ரலி) இஸ்லாமிய மக்களுடைய இத யத்தில் எத்தகைய அன்பைப் பெற்று விட்டார்கள்! ஆத்ம ஞான போதனை புரிந்த, மக்களுக்கு வழிகாட்டிய மகான்கள்

பலர்கூட அடிமைகளாக இருந்து விடுதலை பெற்றுள்ளனர், இமாம் ஹஸன் பஸரி, இப்னு ஸீரின், தாவூஸ், அதா பின் யஸார், நாபிஉ, இக்ரிமா, மக்ஹூல் போன்ற பெரியார்கள் அடிமைகளாகவோ, அடிமைகளின் பரம்பரையில் தோன்றியவர்களாகவோ இருந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

ஆனல், இமாமுல் அஃலம் அபூ ஹனீபா அவர்களோ பாரஸீக நாட்டைச் சார்ந்த பரம்பரை வர்த்தகக் குடும்பமொன்றிலுதித்தவர்கள், பாரஸீக மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் என்று ஆதாரப்பூர்வமாகத் தெரியவருகிறது. அவர்களுடைய சரியான வம்சாவளியாவது : நுஃமான் பின் தாபித் பின் ஜௌத்தி பின் மாஹ் என்பதாகும். இப்பெயர்கள் யாவும் பாரஸீகத்தவருடையவையாகும். இமாமவர்களின் புத்திரருடைய புத்திரரும் (அவர்கள் பேரரும்) கலீபா மாமூனின் ஆட்சியில் பிரதம நீதிபதியாக இருந்தவருமான இஸ்மாயீல் சொல்கிருர் : ''நாங்கள் பாரஸீகப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். எக்காலத்திலும் எங்கள் குடும்பத்தார் யாருக்கும் அடிமைகளாக இருந்ததில்லை. என் பாட்டனர் இமாம் அபூ ஹனீபா ஹிஜ்ரி எண்பதில் பிறந்தார்கள். என் பாட்டனரின் தந்தையான தாபித், ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுடைய சமூகம் சென்றுள்ளார். அச்சமயம் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் எங்கள் குடும்பத்தாருக்காக நற்பிரார்த்தனை புரிந்துள்ளார்கள்." இந்தக் குடும்பம் மிகவும் பிரபலமானதாக இருந்ததாகவும் இந்த இஸ்மாயீல் கூறுகிருர்.

கூபாவில் சென்று வர்த்தகம் நடத்திவந்த ஜௌத்தி அரபிகளோடு சகஜமாகப் பழகி, அவர்களிடை நற்பெயர் பெற்றுவிட்டார். பின்னர் இவர் ஹஜ்ரத் அலீ (ரலி)யின் முன்னிலையில் இஸ்லாத்தை ஏற்று நுஃமான் என்ற பெயரை அடைந்துகொண்டார். எனவே, இமாமுல் அஃலம் அவர்கள் தமது பாட்டனரின் இஸ்லாமியப் பெயரான நுஃமான் என்பதையே தங்களுடைய இயற்பெயராகவும் அடையப் பெற்றிருந்தார்கள்.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் கூபாவிலிருந்து ஆட்சி நடத்திக்கொண்டிருந்தார்களாதலின், நுஃமான் ஒரு தடவை பாரஸீகத்தவருடைய தேசீயப் பண்டிகையான 'நௌரோஸ் அன்று ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுக்குப் 'ஃபாலூதா' என்ற மதுர உணவைக் கொணர்ந்து சமர்ப்பித்தார். அதைப் பெற்ற ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள், ''இங்கே தினமும் நௌரோஸாகவே இருக்கிறது" என்று கூறியவர்களாக, நுஃமானின் குடும்பத்தாரின் நலனுக்காகப் பிரார்த்தித்தார்கள். இதன் பின்னர் இமாமுல் அஃலமின் தந்தையாரான தாபித் பிறந்த போதும், அவர்களைத் தந்தை நுஃமான், ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுடைய சமுகத்துக்குக் கொண்டுவந்து அவர்களுடைய நல்லாசியைப் பெற்றுச் சென்றுள்ளார்.

இமாமுல் அஃலமவர்களின் தந்தையார் தாபித் அவர்களுடைய தாயாரை மணந்ததுபற்றி ரசமான சம்பவமொன்று கூறப்படுகிறது. அது வருமாறு: அவர் மிகுந்த பேணுதலுள்ள இளைஞராகவும், 'ஹலால்' அல்லாததை விட்டு ஒதுங்குபவராகவும் வாழ்ந்த காலத்தில், ஓர் ஆற்றில் மிதந்து வந்த பழத்தை எடுத்துப் பாதியைத் தின்றுவிட்டார். அப்போது அதன் சொந்தக்காரனிடம் 'ஹலால்' கேட்காமல், அதைத் தின்பது தமக்கு ஆகுமானதல்ல என்ற உதிப்பு உண்டாகவே, அவர் ஆற்றின் எதிர் திசையில் நடந்துபோய், ஆற்றங்கரையிலிருந்த தோட்டம் ஒன்றையும், அதிலிருந்த வெகு குரூரமான தோட்டக்காரனையும் கண்டார். அவனிடம், அந்தப் பழத்தை 'ஹலால்' ஆக்கும்படி கேட்டார். அவனோ அவரிடம் கடுமையாக நடக்கலானான். அவருக்கு அந்தப் பழத்தை 'ஹலால்' ஆக்க வேண்டுமானால் அவர் தன்னுடைய மகளை மணந்து கொள்ளவேண்டும் என்றும், அவளோ குருடியாயும், கைகால் முடமானவளாயும், கண் பார்வையற்றவளாயும், காது கேளாதவளாயும், வாய் ஊமையானவளாயும் இருப்பதாகவும் வருணித்தான். தாபித் சிந்தித்ததில் மறுமையின் நன்மைக்காக இம்மையைத் தியாகம் செய்து விடுவது என்ற முடிவுக்கு வந்து அந்தப் பெண்ணை மணக்கத் தயாரானார். உடனே அவன் அந்தப் பெண்ணை மணமுடித்து வைத்து,

அந்தப் பழத்தையும் அவருக்கு 'ஹலா'லாக்கிவிட்டான். அன்றிரவு தன் மணமகளைத் தனிமையில் சந்தித்த அவர் அவள் சகல லட்சணங்களும் பொருந்திய ஆரணங்காக இருக்கக் கண்டு, ஒருக்கால் அன்னிய மாதாக இருக்கலாம் என்று எண்ணி, ''யார் நீ?" என்று கேட்டார். அந்தப் பெண்மணி ''நான்தான் என் தந்தையார் வருணித்த குருபி" என்றாள். பின் அவர் ஏன் அவளைப் பற்றித் தம்மிடம் படுமோசமாக விவரித்தார் என்று தாபித் கேட்டபோது, அவருடைய மன உறுதியைச் சோதிப்பதற்காகச் சொன்ன சொல் அது என்றாள் அப்பெண்மணி. எந்த ஆணும் தன்னைப் பார்த்ததில்லையாதலால் தன்னைக் குருபி என்றும், விலக்கப்பட்ட நடை, செயல், பார்வை, கேள்வி, பேச்சு ஆகியவற்றை விட்டும் தான் அப்பாற்பட்டவளாதலால் தன்னை முடம், குருடு, செவிடு, ஊமை என்றும் அவர் விவரித்துள்ளார் என்று அவள் விளக்கினாள். அதன்பின், அன்றிரவில் அவர்களிருவரும் இச்சையை அடக்கி இறைவனுக்கு நன்றி தெரிவிப்பதற்காக நீண்ட நேரம் வணக்கத்தில் மூழ்கியிருந்து, பின்னர் வீடுகூடினர் என்றும் அதில் ஜனித்தவர்கள் தாம் இமாம் அபூ ஹனீபா என்றும் சொல்லப்படுகிறது. ஆனால், இது வெறும் கட்டுக்கதையேயன்றி, ஆதாரப்பூர்வமான பசச்சல்ல. இமாமவர்களின் ஆதாரப்பூர்வமான நூல் எதிலும் இது ஒப்புக்கொள்ளப்படவில்லை. மற்றும் பல பெரியார்களுடைய வாழ்க்கையிலும் இதே சம்பவம் நடந்ததாகவும் எழுதிவைக்கப்பட்டுள்ளது. (ஹஜ்ரத் கௌதுல் அஃலமின் பெற்றோரைப் பற்றிக்கூட இதே விஷயம் எழுதப்பட்டுள்ளது.)

இமாமவர்களின் தந்தையார் தாபித், ஜவுளி வர்த்தகத்தில் கைதேர்ந்தவராக இருந்து பெரும் பொருளீட்டிக் கொண்டிருந்தார். அவருடைய நாற்பதாவது வயதில், ஹிஜ்ரி எண்பதில் (கி.பி. எழுநூறில்) நமது இமாமுல் அஃலம் பிறந்தார்கள்.

இமாம் அபூ ஹனீபாவின் இளமைப் பருவம் பற்றி விவரம் எதுவும் கிடைக்கவில்லை. செல்வக் குழந்தையாக அவர்கள் வளர்ந்துவந்த நிலையில் முஸ்லிம் குழந்தைகளுக்குச் சாதாரணமாகக் கற்பிக்கப்படும் ஆரம்ப மார்க்கக் கல்வியை அவர்கள்

பயின்றிருக்கிறார்கள், ஆனால், அவர்கள் தம் இளமை யிலேயே தந்தையை இழந்துவிட்டதால், தங்கள் ஜவுளிக் கடையின் காரியஸ்தர்களோடு சேர்ந்து வர்த்தகத்தைக் கவனிக்க வேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு உண்டாகி விட்டது. அதனால், மேல்படிப்பில் கவனம் செலுத்த இயலாது வர்த்தகப் பயிற்சி பெறலானார்கள்.

## அன்னையிடம் அன்பு

தந்தையை இழந்த நுஃமான், தமது தாயாருடன் வாழ்ந்து வந்தார்கள். தாயாருடைய சொல்லைத் தட்டாத தனையனாக அவர்கள் பெயரெடுத்தார்கள். தமது தாயாரு டைய விருப்பத்தை நிறைவேற்ற எந்தச் சமயத்திலும் அவர்கள் தயங்கியதே இல்லை. பிற்காலத்தில் அவர்கள் உலகப் புகழ்பெற்ற இமாமுல் அஃலமாக, மிக மிகச் சிக்கலான நூற்றுக்கணக்கான பிரச்சினைகளுக்கு வெகு சுலபமாகப் பதில் தந்த மாமேதையாக உலகத்தாரால் போற்றப் பட்டுக்கொண் டிருந்தபோது கூடத் தமது அன்னையாரின் விருப்பங்களை நிறை வேற்றுவதில் சற்றும் தயங்கியதில்லை. இமாமவர்கள் எவ்வ வவு தான் உலகப் புகழ் பெற்றவர்களாக இருப்பினும் தங்கள் அன்னைக்குப் புதல்வர்தாமே! அதனால், தாய் சொல்லை அவர்கள் தட்டுவதில்லை. அந்த மூதாட்டி அம்ரு பின் ஜர்க்கா என்ற ஓர் உபன்னியாசகரிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். தமக்குத் தோன்றும் சகல பிரச்சினைகளுக்கும் அவரிடமே பதில் கேட்பார். எனவே, இதற்காக அபூ ஹனீபாவையே அவர் ஏவுவது உண்டு. அந்தப் பிரச்சினைக்கான பதில் தமக்கே நன்கு தெரிந்திருப்பினும், தமது தாயைத் திருப்திப்படுத்து வதற்காக அவர்கள் அந்த உபன்னியாசகரிடம் சென்று பதில் கேட்பார்கள். அவர்கள்முன், அவர் பதில் கூறத் தயங்குவார். "நீங்களோ பெரிய இமாம்; உங்கள் முன் நான் என்ன சொல்ல முடியும்?" என்பார். ஆனால், இமாமவர்கள் அவரை விடமாட்டார்கள். "உங்களிடம் கேட்டு விடை பெறவேண்டும் என்று என் தாய் ஆணையிட்டார்கள். ஆகவே, நீங்கள் தான் பதிலளிக்க வேண்டும்" என்று கூறுவார்கள். ஒருக்கால்

அவருக்கு விடை தெரியாதிருப்பினும், தாங்களே சொல்லிக் கொடுத்து, அதைத்தங்கள் அன்னையாரிடம் வந்து அவருடைய சொந்த பதிலைப்போல் தெரிவிக்கச்செய்வார்கள்.

அவர்களுடைய மார்க்கத் தீர்ப்புக்காக எத்தனையோ பேர் அவர்களுடைய மன்றத்துக்கு முன்பு காத்திருந்த சமயம், தமது தாயாரைத் திருப்தி செய்வதற்காக அந்தச் சாதாரண உபன்னியாசகரிடம் அவர்கள் சென்று வருவார்கள்.

இமாம் அபூ ஹனீபாவின் வாழ்க்கையில் எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டதுண்டு. அப்போதெல்லாம் அவர்கள் மனங் கலங்கியதில்லை. குறிப்பாக, ஒரு சமயம் ஆணவங் கொண்ட ஆட்சியாளரின் உத்தரவால் அவர்கள் கசையடி பெற நேர்ந்தது. அது குறித்தும் அவர்கள் மனந் தளரவில்லையாயினும், அப்போது உயிரோடிருந்த தங்கள் அன்னையை நினைத்தே வருந்தலானார்கள். ''இதை நான் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை; ஆனால், எனக்களிக்கப்படும் இந்தத் தண்டனையைக் கேள்விப்பட்டு என் அன்னை துடி துடிப்பார்களே என்று எண்ணியதும் வேதனையடைகிறேன்" என்று கூறினார்கள். அன்னையிடம் அன்பு கொண்ட ஓர் ஆதர்ச மகான் இமாமுல் அஃலம் என்பதில் ஐயமில்லை.

## அக்கால அரசியல் நிலை

இமாமவர்களின் கால அரசியல் நிலையை ஒரு சிறிதேனும் விளங்கிக் கொள்ள வேண்டுவது அவசியமாகும். ஏனெனில், ஒரு வகையில் அரசியலோடு அவர்களுக்குத் தொடர்பு இருந்திருக்கிறது. யதேச்சாதிகார மன்னர்கள் வருவதும் போவதுமாகப் பலருடைய ஆட்சி நடந்து விட்டது. உமையா கலீபாக்கள் அறுவருடையும், அப்பாஸிய்யா கலீபாக்கள் இருவருடையவுமாக எட்டு கலீபாக்களின் ஆட்சியை அவர்கள் கண்டு விட்டார்கள். ஒரு யதேச்சாதிகாரப் பரம்பரை மறைந்து, இன்னொரு யதேச்சாதிகாரப் பரம்பரை ஆட்சிபீடத்தமர்ந்ததையும், உடனேயே அதைத் தொடர்ந்து நடந்த இன

நாசங்களையும் பயங்கரப் படுகொலைகளையும், கொடுங் கோன்மைகளையும் இமாமவர்கள்கண்டிருக்கிறார்கள். ஒருபக்கம் இஸ்லாத்துக்கு ஆக்கந் தரும் நற்பணிகள் நடந்துகொண்டி ருந்தன: முஸ்லிம்கள் வெற்றி வீரர்களாய் நெடுகிலும் இஸ் லாமியக் கொடியை உயர்த்தி வந்தனர். இஸ்லாமிய மார்க்க வல்லுனர்கள் அற்புதமான ஆராய்ச்சி வேலைகளில், புதிய புதிய நூற்களை ஆக்குவதில் ஈடுபட்டிருந்தனர். மறுபக்கம் பொறாமையும், பதவிப்பித்தும் பிடித்தவர்கள் தமது சுயநலத் துக்காகச் சூழ்ச்சிகளிலும், கொலைகளிலும் ஈடுபட்டிக் கொண்டி ருந்தனர். ஆட்சிபீடத்திலிருந்தவர்கள் தமது பதவியைக் காப் பாற்றிக் கொள்வதற்காக நல்லவர்களையும், நபியின் பரம்பரை யினரையும், மகான்களையும் கூடக் கொல்லவும், சிறை யிலடைத்துச் சித்திரவதை செய்யவுமாக ஆட்டம் போட்டனர்.

இமாமுல் அஃலம் அபூ ஹனீபா இளமைப் பருவத்தின ராக இருந்த காலை உமையா கலீபா முதலாம் வலீது ஆட்சி நடத்திக் கொண்டிருந்தார். இராக்கில் இவருடைய பிரதி நிதியாக நியமிக்கப்பட்டிருந்தவர்தான் உலகப் புகழ் பெற்ற கொடுங்கோன்மையாளர் ஹஜ்ஜாஜ் ஆவார். ஹிஜாஜில் வலீதின் பிரதிநிதியாக உமர் இப்னு அப்துல் அஜீஸ் இருந்து நீதியாட்சி நடத்தினார். ஒருபக்கம் இமாம்களையும், அறிஞர்களையும், ஹஜ்ஜாஜ் கொன்று தள்ளிக் கொண்டி ருந்தார். மறுபக்கம் உமர் இப்னு அப்துல் அஜீஸ் மார்க்கப் பெரியார்களை மதித்து, அவர்கள் ஆலோசனைப்படி நிர்வா கத்தை நடத்திக் கொண்டிருந்தார்.

முதலாம் வலீதின் ஆட்சியிலேயே ஸ்பெயின் வெற்றி கொள்ளப்பட்டது. சிந்தின்மீதும் இஸ்லாமியக் கொடி உயர்த் தப்பட்டது. மத்தியதரைக் கடலிலுள்ள மஜோர்க்கா, மைனார்க்கா, இவிக்கா, கார்ஸிகா, சார்டீனியா, கிரீட், ரோட்ஸ் போன்ற தீவுகள் பலவற்றையும் வென்று முஸ்லிம் கள் வாகை சூடிக்கொண்டிருந்தனர். ஆனால், இந்நாடுகளி லெல்லாம் இஸ்லாமியக் கலா ஞானங்கள் செழித்தோங்கி வளர முடியாதவாறு கொலைகார நிர்வாகிகள் பலர் அமர்ந்து

அவருக்கு விடை தெரியாதிருப்பினும், தாங்களே சொல்லிக் கொடுத்து, அதைத்தங்கள் அன்னையாரிடம் வந்து அவருடைய சொந்த பதிலைப்போல் தெரிவிக்கச்செய்வார்கள்.

அவர்களுடைய மார்க்கத் தீர்ப்புக்காக எத்தனையோ பேர் அவர்களுடைய மன்றத்துக்கு முன்பு காத்திருந்த சமயம், தமது தாயாரைத் திருப்தி செய்வதற்காக அந்தச் சாதாரண உபன்னியாசகரிடம் அவர்கள் சென்று வருவார்கள்.

இமாம் அபூ ஹனீபாவின் வாழ்க்கையில் எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டதுண்டு. அப்போதெல்லாம் அவர்கள் மனங் கலங்கியதில்லை. குறிப்பாக, ஒரு சமயம் ஆணவங் கொண்ட ஆட்சியாளரின் உத்தரவால் அவர்கள் கசையடி பெற நேர்ந்தது. அது குறித்தும் அவர்கள் மனந் தளரவில்லையா யினும், அப்போது உயிரோடிருந்த தங்கள் அன்னையை நினைத்தே வருந்தலானார்கள். ''இதை நான் ஒரு பொருட்டாக வே மதிக்கவில்லை; ஆனால், எனக்களிக்கப்படும் இந்தத் தண்டனையைக் கேள்விப்பட்டு என் அன்னை துடி துடிப்பார்களே என்று எண்ணியதும் வேதனையடைகிறேன்" என்று கூறினார் கள். அன்னையிடம் அன்பு கொண்ட ஓர் ஆதர்ச மகான் இமாமுல் அஃலம் என்பதில் ஐயமில்லை.

## அக்கால அரசியல் நிலை

இமாமவர்களின் கால அரசியல் நிலையை ஒரு சிறிதேனும் விளங்கிக் கொள்ள வேண்டுவது அவசியமாகும். ஏனெனில், ஒரு வகையில் அரசியலோடு அவர்களுக்குத் தொடர்பு இருந் திருக்கிறது. யதேச்சாதிகார மன்னர்கள் வருவதும் போவது மாகப் பலருடைய ஆட்சி நடந்து விட்டது. உமையா கலீ பாக்கள் அறுவருடையும், அப்பாஸிய்யா கலீபாக்கள் இரு வருடையவுமாக எட்டு கலீபாக்களின் ஆட்சியை அவர்கள் கண்டு விட்டார்கள். ஒரு யதேச்சாதிகாரப் பரம்பரை மறைந்து, இன்னொரு யதேச்சாதிகாரப் பரம்பரை ஆட்சிபீடத் தமர்ந்ததையும், உடனேயே அதைத் தொடர்ந்து நடந்த இன

நாசங்களையும் பயங்கரப் படுகொலைகளையும், கொடுங் கோன்மைகளையும் இமாமவர்கள்கண்டிருக்கிறார்கள். ஒருபக்கம் இஸ்லாத்துக்கு ஆக்கந் தரும் நற்பணிகள் நடந்துகொண்டி ருந்தன: முஸ்லிம்கள் வெற்றி வீரர்களாய் நெடுகிலும் இஸ் லாமியக் கொடியை உயர்த்தி வந்தனர். இஸ்லாமிய மார்க்க வல்லுனர்கள் அற்புதமான ஆராய்ச்சி வேலைகளில், புதிய புதிய நூற்களை ஆக்குவதில் ஈடுபட்டிருந்தனர். மறுபக்கம் பொருளையும், பதவிப்பித்தும் பிடித்தவர்கள் தமது சுயநலத் துக்காகச் சூழ்ச்சிகளிலும், கொலைகளிலும் ஈடுபட்டிக் கொண்டி ருந்தனர். ஆட்சிபீடத்திலிருந்தவர்கள் தமது பதவியைக் காப் பாற்றிக் கொள்வதற்காக நல்லவர்களையும், நபியின் பரம்பரை யினரையும், மகான்களையும் கூடக் கொல்லவும், சிறை யிலடைத்துச் சித்திரவதை செய்யவுமாக ஆட்டம் போட்டனர்.

இமாமுல் அஃலம் அபூ ஹனீபா இளமைப் பருவத்தின ராக இருந்த காலை உமையா கலீபா முதலாம் வலீது ஆட்சி நடத்திக் கொண்டிருந்தார். இராக்கில் இவருடைய பிரதி நிதியாக நியமிக்கப்பட்டிருந்தவர்தான் உலகப் புகழ் பெற்ற கொடுங்கோன்மையாளர் ஹஜ்ஜாஜ் ஆவார். ஹிஜாஜில் வலீதின் பிரதிநிதியாக உமர் இப்னு அப்துல் அஜீஸ் இருந்து நீதியாட்சி நடத்தினார். ஒருபக்கம் இமாம்களையும், அறிஞர்களையும், ஹஜ்ஜாஜ் கொன்று தள்ளிக் கொண்டி ருந்தார். மறுபக்கம் உமர் இப்னு அப்துல் அஜீஸ் மார்க்கப் பெரியார்களை மதித்து, அவர்கள் ஆலோசனைப்படி நிர்வா கத்தை நடத்திக் கொண்டிருந்தார்.

முதலாம் வலீதின் ஆட்சியிலேயே ஸ்பெயின் வெற்றி கொள்ளப்பட்டது. சிந்தின்மீதும் இஸ்லாமியக் கொடி உயர்த் தப்பட்டது. மத்தியதரைக் கடலிலுள்ள மஜோர்க்கா, மைனார்க்கா, இவிக்கா, கார்ஸிகா, சார்டீனியா, கிரீட், ரோட்ஸ் போன்ற தீவுகள் பலவற்றையும் வென்று முஸ்லிம் கள் வாகை சூடிக்கொண்டிருந்தனர். ஆனால், இந்நாடுகளி லெல்லாம் இஸ்லாமியக் கலா ஞானங்கள் செழித்தோங்கி வளர முடியாதவாறு கொலைகார நிர்வாகிகள் பலர் அமர்ந்து

கொட்டமடித்துக் கொண்டிருந்தனர். 'ஆட்சி நிர்வாகத்தில் கொடுமை காட்டாத குற்றத்துக்காக' ஹிஜாஜ் நிர்வாக அதிகாரம்கூட உமர் இப்னு அப்துல் அஜீஸிடமிருந்து கைமாறியது. ''ஸிரியாவில் கலீபா வலீதும், இராக்கில் ஹஜ்ஜாஜும், ஹிஜாஸில் உதுமானும், எகிப்தில கர்ராவுமாக உலகம் முழுவதுமே கொடுமையால் நிறப்பிக்கொண்டிருந் தனர்" என்று துறவி அரசர் உமர் இப்னு அப்துல் அஜீஸ் ஒரு சமயம் வருணித்தது போன்றே அன்றைய நிலைமை ஆகிவிட்டிருந்தது. இதற்கிடையிலும், ஆங்காங்கே தன்னலமற்ற பெரியார்கள் ஹதீஸ் மன்றங்கள், மற்றும் ஆராய்ச்சி நிலையங்கள் நிறுவிச் சேவை செய்து கொண்டிருந்தனர்.

ஹிஜ்ரி 95-ல் கொடுமைக்கார ஹஜ்ஜாஜும், 96-ல் கலீபா வலீதும் காலமானார்கள். வலீதின் சகோதரர் சுலைமான் இப்னு அப்துல் அஜீஸ் கலீபாவானார். உமையாக் கலிபாக்களிலேயே இவர் சிறந்தவராக விளங்கி நற்பெயர் பெற்றார். இவர் உமர் இப்னு அப்துல் அஜீஸைத் தம்முடைய அரசாங்க ஆலோசகராக நியமித்துக்கொண்டார். அத்துடன் தமக்குப் பின் உமர் இப்னு அப்துல் அஜீஸே கலீபாவாக வேண்டும் என்றும் எழுதி வைத்துவிட்டார். எனவே, இவர் ஹிஜ்ரி 99ல் காலமான சமயம் உமர் இப்னு அப்துல் அஜீஸின் புகழாட்சி தொடங்கிற்று. மக்கள் யாவரும் சமமாக மதித்துச் சமமாக நடத்தப்பட்டனர். அன்பு அரியணை ஏறியது. அறிஞர்கள், நபிபெருமானாரின் குடும்பத்தவர் மதிக்கப்பட்டனர். அநியாயக்காரர்கள் தண்டனை யடைந்தனர். ஹஜ்ரத் அலீ (ரலி)யையும், அவர்களைப் பின்பற்றியவர்களையும் இதுவரை வெள்ளிக் கிழமைக் குத்பாக்களில் திட்டி வசைமாரி பாடியது தடுக்கப்பட்டது கலைஞான வெள்ளம் பெருக்கெடுத் தோடியது, ஹதீஸ்களைத் திரட்டி ஒழுங்குபடுத்தும்படி இமாம் ஜஹ்ரிக்கு ஆணையிடப்பட்டது, அவ்விதம் ஒழுங்கு படுத்தித் தொகுக்கப்பட்ட ஹதீஸ் களஞ்சியத்தின் பிரதிகள் பல்வேறு பகுதிகளுக்கும் அனுப்பி வைக்கப்பட்டன.

## கல்வியில் கவனம்

நம்முடைய இமாமுல் அஃலம் அபூ ஹனீபாவும் முதலாம் வலீதின் ஆட்சிக் காலம் முடியுமட்டும், (அதாவது, தங்களுடைய பதினாரும் பிராயம்வரை) மேல்படிப்புப் படிக்க வாய்ப்பின்றியே வர்த்தகத் துறையில் கவனஞ் செலுத்திக்கொண்டிருந்துவிட்டார்கள். அதற்குத் தூண்டுதல் நல்கும் தந்தையும் உயிரோடில்லை. ஆனால், தாங்கள் படிக்கவேண்டிய அவசியத்தை உணரும் பருவம் வந்ததுமே மனம் அதிலேயே திரும்பலாயிற்று. கலீபா சுலைமானின் ஆட்சி ஆரம்பித்ததும் நாட்டில் சற்று அமைதியான சூழ்நிலை உருவாகி அந்த ஆவலை அதிகப்படுத்திற்று. அச்சமயம் நடந்த ஒரு சிறிய சம்பவம் அந்த ஆவலை செயலில் கொண்டுவந்து நிறுத்திவிட்டது.

அபூ ஹனீபா அவசரமாகக் கடைவீதிக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். வழியில் இமாம் ஷஃஅபி என்ற பெரியாருடைய வீட்டைத் தாண்டி அவர்கள் போகவேண்டும். அக்காலையிலிருந்த அறிஞர்களில் ஷஃஅபி ஒருவர்; அரசாங்கச் சட்ட ஆலோசகரும் கூட. அப்பெரியார் தமது வீட்டு வாயிலில் நின்று கொண்டிருந்தார். அபூ ஹனீபா அருகில் வரவே, அவர்களை நோக்கி, "தம்பி, நீ எங்கே போகிறாய்?" என வினவினார். அபூ ஹனீபா வர்த்தகர் ஒருவரிடம் போவதாகக் கூறினார்கள். உடனே ஷஃஅபி, "நீ எங்கே படிக்கிறாய் என்று கேட்டேன்" எனக் கூறவும் "நான் படிக்கவில்லையே!" என்று அபூ ஹனீபா பதிலளித்தார்கள். "தம்பி, உன் முகத்தில் கல்விக்களை சொட்டுகிறது. நீ நல்ல ஆசானைத் தேடிக் கல்வி பெறு!" என்று ஷஃஅபி கூறிவிட்டார். எனவே, அபூ ஹனீபா ஒரே தாகத்தோடு, உடனே கல்வி பயில்வதற்கான ஆயத்தங்களைச் செய்யலானார்கள்.

அக்காலக் கல்வியில் இலக்கியம், அரபு வம்சாவளி, அறியாமைக்கால அரபிகளின் சரிதை, ஃபிக்ஹு, ஹதீஸ், தத்துவ சாஸ்திரம் ஆகியவைதாம் பிரதானமாகக் கற்றுக் கொடுக்கப்பட்ட பாடங்களாகும், இவற்றுள் மாணவன்

ஏதேனும் ஒன்றை விசேஷப் பாடமாக எடுத்து அதில் தேர்ச்சி பெறுவது வழக்கம். இந்தப் பாடங்களிலேயே அக்காலையில் ஃபிக்ஹு பாடம் பல வகையிலும் ரஸமானதாகவும், புதிய புதிய பிரச்சினைகளை உண்டாக்குவதாகவும் இருந்தது. இஸ்லாம் அரபு நாட்டுக்குள் மட்டும் அடங்கி இருந்தவரை 'ஃபிக்ஹி'ன் முடிவுகள் எளிமையானவையாகவே இருந்தன. ஆனால், பாரஸீகம், எகிப்து, ஸிரியா முதலிய நாடுகள் முஸ்லிம்களின் ஆதிக்கத்துள் வந்ததும் இது பெரிதாக விரிய ஆரம்பித்தது. இதில் பல மாற்றங்களும், சிக்கல்களும் உண்டாகலாயின.

அபூ ஹனீபா அடிப்படைக் கல்வியை ஒரே ஆண்டில் கற்றுக்கொண்டு தத்துவ சாஸ்திரத்தை (இல்முல்கலாமை) கற்பதில் விசேஷ கவனஞ் செலுத்தினார்கள். ஆனால், வயது ஆக ஆக அவர்களுடைய இயல்பில் மாறுதலுண்டாகலாயிற்று. தத்துவ சாஸ்திரம் பயில்வதால் பயனுண்டா என்று ஐயுறலானார்கள். நபிபெருமான் (ஸல்) அவர்களின் நற்றோழர்களெல்லாம் இதை ஒதுக்கிவிட்டு மார்க்கச் சட்டங்கள்பற்றிய கல்வியிலேயே கருத்துக்காட்டியதை இமாமவர்கள் எண்ணிப்பார்த்தார்கள். மேலும், தத்துவ சாஸ்திரத்தில் திளைத்துவிட்ட பலர் குண ஒழுக்கமோ, ஆத்ம வளர்ச்சியோ அற்றவர்களாக ஆகியிருப்பதையும் அவர்கள் சிந்தித்தார்கள். எனவே ஃபிக்ஹுச் சட்டங்களைப் பயிலுவதைப்பற்றி யோசித்தார்கள். இச் சமயம் ஒரு நாள் அவர்கள் ஃபிக்ஹு நிபுணரான ஹம்மாது அவர்களுடைய சபையில் ஓர் ஓரத்தில் அமர்ந்து, அவர்கள் பாடம் நடத்துவதைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது பெண்ணொருத்தி அவர்களிடம் வந்து "ஒருவன் ஸுன்னத்தான முறைப்படி தன் மனைவியை விவாகரத்துச் செய்ய விரும்பினால் அவன் செய்யவேண்டுவதென்ன?" என்று கேட்டாள். அவர்கள் இதற்கு முறைப்படி பதில் கூற இயலாதவர்களாக, ஹம்மாதைச் சுட்டிக்காட்டி, அவர்களிடம் சென்று, அதற்கு விடை கேட்கும்படியும், அவர்கள் கூறும் பதிலைத் தம்மிடமும் தெரிவித்துவிட்டுப் போகும்படியும் கூறி அனுப்பினார்கள். அவள் கேட்டதற்கு ஹம்மாது, "பெண்

சுத்தமான நிலையிலிருக்கும்போது அவளோடு வீடுகூடாது ஒரு தலாக்கு மட்டும் சொன்னால், பின்னர் இரண்டு தடவை மாத ருது வந்து சுத்தமாகிக் குளித்தபின், அவள் வேறு கணவனை மணந்துகொள்ளலாம். இதுவே ஸுன்னத்துப் படியான விவாகரத்து'' என்று தெரிவித்தார்கள். இதைக் கேட்டதும் அபூ ஹனீபா தாங்களும் ஹம்மாதிடமே அமர்ந்து ஃபிக்ஹுப் படிக்க முடிவுசெய்து, அவர்களுடைய ஃபிக்ஹு வகுப்பில் சேர்ந்துவிட்டார்கள்.

இதேபோன்று, ''நான் கல்வி பயிலத் தொடங்கியதும் என்முன் பல சாஸ்திரங்கள் காட்சியளித்தன. தத்துவ சாஸ்திரமா, அந்த விதண்டாவாதமே வேண்டாம்! இலக்கியமா, அதற்கு ஆரம்பப் பள்ளியைத் தேடும் நிலைதான் உண்டாகும். கவிதையா, அதில் பழகினால் யாரையாவது புகழ்ந்தோ இகழ்ந்தோ பாடி வாணாளை வீணாக்கலாம்; ஹதீஸ் கலை பயில்வதற்கோ நீண்ட காலம் தேவை: அத்துடன் பலருடைய தாக்குதலுக்கும் ஆளாக வேண்டும். எனவே ஃபிக்ஹுப் பாடத்தைக் கற்பதே எனக்கு உவந்தது என்று இதை எடுத்துக்கொண்டேன்'' என்று இமாம் அபூ ஹனீபா தெரிவித்துள்ளதாகவும் சொல்லப்படுகிறது. ஆனால், இவை யாவும் உண்மைக்கு முரணான கூற்றுக்களாகவே உள்ளன. ஏனெனில், இமாமவர்கள் முதலில் பற்பல பாடங்களிலும் ஓரளவு பயிற்சி பெற்றுப் பின்னரே தத்துவ சாஸ்திரத்தைப் பயிலத் தொடங்கினார்கள். அதன்பின்னரே ஃபிக்ஹுப் பாடத்துக்குள் புகுந்தார்கள். எனவே, சாதாரணமான பிரச்சினைகளுக்குக்கூட அவர்கள் பதில் சொல்ல இயலாதவர்களாக இருந்திருப்பார்கள் என்று சொல்வதும் சரியன்று, அவர்கள் இவ்விதம் மற்றப் பாடங்களை ஒதுக்கிவிட்டு, பிக்ஹிலேயே மூழ்கிவிட்டார்கள் என்பதும் சரியல்ல. குறிப்பாக, ஹதீஸ் விஷயத்தில், அதைக் கற்பதில் அவர்கள் காட்டிய கருத்து எத்தகையது என்பதை இனி வரும் பக்கங்களில் படிக்கவிருக்கிறோம்.

ஃபிக்ஹுப் பாடத்தில் இமாமவர்களின் குருவாக வாய்த்த பெரியார் ஹம்மாது தமது காலத்தில் கூபாவின் இமாம் ஆக

விளங்கினார்கள். எம்பெருமான் (ஸல்) அவர்களுடைய பணியாளாக நெடுங்காலமிருந்து தொண்டாற்றிய ஹஜ்ரத் அனஸ் (ரலி) அவர்களைச் சந்தித்து அவர்களிடமிருந்து பல ஹதீஸ்களை இப்பெரியார் கேட்டுள்ளார்கள். மேலும், தாபியீன்கள் பலரிடமும் அமர்ந்து பல்வேறு பாடங்களையும் கற்றிருந்தார்கள். இதனால், கூபாவிலேயே இமாம் ஹம்மாது அவர்களின் போதனைசாலை தான் புகழ்பெற்றதாகவும், பெரியதாவும் விளங்கி வந்தது, இமாம் அபூ ஹனீபாவை படிக்குமாறு தூண்டிய பெரியார் ஷுஅபிகூட இந்த ஹம்மாதின் சீடர்தாம் என்றால் அவர்களின் பெருமையை ஒருவாறாக உணரலாமல்லவா!

இமாம் ஹம்மாது தமது வாழ்க்கைக்காக யாரையும் நாட வேண்டிய அவசியமற்ற அளவு பொருள் படைத்தவர்கள். எனவே, அவர்கள் அந்தக் கவலையற்று நிம்மதியாகப் பாட போதனையில் கவனஞ் செலுத்தினார்கள். அவர்கள் ஃபிக்ஹு' என்ற இஸ்லாமியச் சட்டங்களைப் பற்றி வெகு நன்றாக அறிந்த நிபுணராக இருந்தார்கள். ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னுமஸ்ஊது (ரலி) அவர்களிடமிருந்து முதன் முதலில் வெளிப்பட்ட ஃபிக்ஹு'ப் பாடத்தை அதே அடிப்படைமீதே இமாம் ஹம்மாதும் போதித்து வந்தார்கள். இத்தகைய பெரியாரிடம் பாடங்கேட்ட இமாமுல் அஃலம் விரைவிலேயே ஆசானை மிஞ்சிய மாணவராக ஆகிவிட்டார்கள்.

ஆசிரியர் ஒரு குறிப்பிட்ட பிரச்சினைபற்றிய விளக்கத்தை வாய்மொழியாகக் கூறுவார். மாணவர்கள் அதை மனனம் செய்து கொள்வார்கள். சில சமயம் எழுதி வைத்துக்கொள்வார்கள். இதுதான் கூபாவில் நிலவிய அக்காலக் கல்வி முறையாகும். இவ்விதம் தான் ஹம்மாதும் பாடபோதனை செய்தார்கள். ஆரம்ப மாணவர்கள் ஆசிரியருடைய இடப்பக்கம் அமர்ந்திருக்க வேண்டும். அவ்விதமே அபூ ஹனீபாவும் அமர்ந்து தாங்கள் ஆரம்பமாணவர் என்பதைக் காட்டிக்கொண்டார்கள். ஆனால், சில

நாட்களுக்குள் பாடங்களைப் புரிந்து கொள்ளும் திறமையிலோ, ஞாபக சக்தியிலோ அபூ ஹனீபாவுக்கு நிகர் யாருமில்லை என்றாயிற்று. அபூ ஹனீபா தமது ஆசிரியரின் முன்பாக வந்து அமர்ந்து விட்டார்கள்.

இமாமுல் அஃலம் அபூ ஹனீபா சொல்கிறார்கள்: ''நான் இரண்டாண்டுகள் பெரியார் ஹம்மாதிடம் பாடங் கேட்டேன், பின்னர் நானே ஒரு மதரஸாவை நடத்திப் போதிக்கலாம் என்ற எண்ணமுண்டாகிவிட்டது. ஆனால், என் ஆசானுக்கு அது அவமரியாதை செய்வதாகும் என்ற எண்ணத்தால் அதற்குத் துணிவு வராமல்போய் விட்டது. அப்போது ஒரு நாள், என் குருநாதரின் உறவினர் ஒருவர் பஸராவில் காலமாகிவிட்டார். அவருக்கு என் குருநாதரையன்றி வேறு வாரிசில்லை. ஆதலால், அவர்கள் என்னை ஆசிரியராக அமர்த்தி விட்டுப் பஸரா சென்றார்கள். அவர்கள் வேலையை நான் இரண்டு மாதங்கள் செய்தேன். இச்சமயம் அதுவரை நான் கேட்டறியாத பல புதுப் பிரச்சினைகளெல்லாம் என்னிடம் தீர்ப்புக்காக வந்தன. என்னால் இயன்ற அளவு அவற்றுக்குப் பதிலளித்தேன். இவ்விதம் நான் கொடுத்த அறுபது தீர்ப்புகளுக்கும் நகல் எடுத்து வைத்திருந்தேன். என் குருநாதர் இரண்டு மாதங்களுக்குப் பின்னர் திரும்பியதும் என் தீர்ப்புகளை அவர்களிடம் காட்டினேன். அவைகளில் இருபதில் மட்டுமே தவறு இருந்தது. மற்றவை முற்றும் சரியாக இருந்தன. இந்த அனுபவம் உண்டான பின்னர் குருநாதர் ஹம்மாது உயிரோடிருக்கும்வரை அவர்களோடு எனக்குள்ள குரு-சீடன் உறவை அகற்றிக்கொள்ளக் கூடாது என்று உறுதி பூண்டு கொண்டேன்.'' இவ்வாறே தங்கள் நாற்பதாவது வயதில் (ஹஜ்ரி 120-ல்) தங்கள் குருநாதர் காலமாகும் வரை அவர்களைத் தங்கள் ஆசானாகவே கருதி மதித்து வந்தார்கள். இமாமவர்கள் தங்களுடைய குருநாதரான ஹம்மாது அவர்களிடம் ஃபிக்ஹுப் பாடம் கற்றுக்கொண்டிருந்த காலையில் அவர்களுடைய சமயோசிதமான திறமையைக் காட்டும் இந்தச் சிறு சம்பவம் நடந்ததாகக் கூறப்படுகிறது: ஹம்மாது அவர்கள் பாடம் நடத்திக் கொண்டிருக்கும்

போது, முரட்டுத் தோற்றமுள்ள மனிதன் ஒருவன் அங்கே வந்தான். அவர்கள் அவனை நிமிர்ந்து பார்த்ததும், ஒரு பிரச்சினைக்கு அவர்கள் தீர்ப்பை நாடி வந்ததாகக் கூறினான். என்ன பிரச்சினை என்று வினவினார்கள். அவன் கேட்டான்: ''நான் ஒரு குதிரை வைத்திருக்கிறேன். அதன்மீது சவாரி செய்கிறேன். அதன் குட்டியையும் நானே பராமரித்து வருகிறேன். அந்தக் குட்டிமீதும் நான் சவாரி செய்யலாமா?'' என்று. ஹம்மாது அவர்கள் இந்தச் சின்ன விஷயத்துக்குத் தங்கள் தீர்ப்பை ஏன் கேட்கிறான் என்று யோசித்தவர்களாகத் தாராளமாகச் சவாரி செய்யலாம் என்று பதிலளித்துவிட்டார்கள். அவன் மிகுந்த மகிழ்ச்சியோடு புறப்பட்டான். அப்போது மாணவராக வகுப்பில் அமர்ந்திருந்த அபூ ஹனீபா அவனை சமிக்ஞை செய்து அருகிலழைத்தார்கள். ''ஆனால், அதற்கு நான்கு கால்களும், ஒரு வாலும் இருக்கவேண்டும். அப்படியானால்தான் சவாரி செய்யலாம்' என்று அவனிடங் கூறி அனுப்பி விட்டார்கள். அவன் போனபின்னர் ஹம்மாது தம் சீடரை நோக்கி அவனிடம் அவர்கள் இப்படிச் சொன்ன தன் கருத்தென்ன என்று வினவினார்கள். இமாம் அபூஹனீபா பணிவோடு சொன்னார்கள். ''காலம் தலைபுரண்டு கொண்டு போகிறது. நமது தீர்ப்புகளை இத்தகையவர்கள் துஷ்பிரயோகம் செய்துவிடக்கூடும் என்று நான் அனுமானித்தேன். எனவேதான், நான் இப்படி மரியாதைக் குறைவாக இந்தத் திருத்தத்தைச் சேர்க்க நேர்ந்தது'' என்று. இது கேட்ட ஹம்மாது தம் சீடரின் திறமையை மெச்சிப் பெரிதும் மகிழ்ந்தார்கள்.

## ஹதீஸ் பாடந் தேடல்

ஹம்மாதையன்றி இமாமவர்கள் மற்றும் பல பிக்ஹு ஆசான்களிடமும் பாடங் கேட்டுள்ளார்கள். அத்துடன் ஹதீஸ்களைப் பற்றிய பாடங்களையும் அவர்கள் விரிவாகப் படிக்கவேண்டிய அவசியம் உண்டாயிற்று. 'ஃபிக்ஹு' (மஸ்அலாக்கள் என்னும்) பிரச்சினைகளில் முடிவு காண்பதற்கு, ஹதீஸ்களின் ஆராய்ச்சி அவசியமானதாகும். அதனால்

ஹம்மாதிடம் 'ஃபிக்ஹு' பாடபோதனை பெறுகையிலேயே இமாம் அபூ ஹனீபா ஹதீஸ் பாடபோதனைகளையும் வேறு பல ஆசான்களிடமிருந்தும் பெறலானார்கள். அந்தச் சமயத்தில் மக்கா, மதீனா, யமன், பஸரா, கூபா போன்ற இடங்களில் சுமார் பதினாயிரம் ஸஹாபாக்கள் பரவி வசித்து வந்தனர். அவர்கள் ஹதீஸ் போதனைகளையும் ஃபிக்ஹு விளக்கங்களையும் கொடுத்துக் கொண்டிருந்தனர். 'ஹதீஸைக் காத்தவர்கள்' என்று அல்லாமா தஹபியால் விவரிக்கப்பட்ட எத்தனையோ பெரியோர்கள் இவ்விடங்களில் வாழ்ந்து மார்க்கச் சேவை செய்து வந்தனர். இவர்களைப் பற்றிக் கேள்விப்படும் பெரியார்களும், மாணவர்களும் நூற்றுக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்து சென்று, இவர்கள் காலடியில் அமர்ந்து பாடங் கேட்பதுண்டு. இதனால் இவ்விடங்கள் யாவும் 'கலா நிலையங்கள்' (தாருல் உலூம்) என்று போற்றப்பட்டு வந்தன.

இமாம் அபூ ஹனீபா அவர்கள் 'ஃபிக்ஹுப்' பாடங்களுக்காக ஹம்மாதின் பாடபோதனையை நம்பியிருந்தாலும் ஹதீஸ் பயிற்சிக்கு அவர்கள் வேறு ஆசான்களையும் நாட வேண்டியதாயிருந்தது. ஏனெனில், 'ஃபிக்ஹு'க்கு விளக்கும் சக்தியும், சுயமான முடிவை எய்தும் திறனும் போதுமானவையாகும். ஹதீஸுக்கோ ஆராய்ச்சி (திராயத்) வேண்டும்; அது வந்த வகையை (ரிவாயத்தை)ப் பரிசீலிக்கும் திறனும் வேண்டும். இவை தமக்கு அவசியம் என்று உணர்ந்ததாலேயே இமாமவர்கள் தமது ஊரில் ஓரளவு அதுபற்றிப் பயிற்சி பெற்றுக்கொண்டு மக்காவுக்கே புறப்பட்டுவிட்டார்கள்

அவர்கள் சொல்கிறார்கள்: "நான் முதன் முதலாக ஹஜ்ஜுக்குச் சென்றிருந்த சமயம் சவரம் செய்து கொள்வதற்காக நாவிதர் ஒருவரை அணுகினேன். அவர் என்னிடம் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். ஹஜ்ஜின்போது நீங்கள் மௌனமாக நடக்கக்கூடாது, தக்பீர் கூறிக்கொண்டே செல்லுங்கள்" என்றார். சவரம் முடிந்து நான் வெளியில்

இ.அ.-3

புறப்படவிருந்த சமயம், ''இரண்டு ரக்அத் தொழுதுவிட்டுப் பிறகு எங்காவது போகலாம்'' என்றார். இது கேட்டு வியப் படைந்த நான், ''இந்த விளக்கங்களை நீர் யாரிடம் கற்றாய்?" என்று கேட்டேன். ''அத்தாரிப்னு அபீ ரிபாஹ் இடம்" என்று பதிலளித்தார்."

உடனே இமாம் அபூ ஹனீபா மக்காவிலிருந்த அத்தா ரிப்னு அபீ ரிபாஹ் என்ற பெரியாரிடம் சென்றார்கள். இவர் களுடைய மன இயல்பை அறிவதற்காக அந்தப் பெரியார் அத்தார் இவர்களிடம் சில கேள்விகள் கேட்டார். இமாமவர் கள், ''நான் முன்னோர்களான பெரியார்களைப்பற்றி குறை கூறிக்கொண்டிருப்பதில்லை. பாவ காரியம் புரிபவர்களைக் 'காபிர்' என்று கூறுவதுமில்லை. இறைவனின் தீர்ப்பையும், முடிவையும் (கலா, கத்ரை) ஒப்புக்கொண்டுள்ளேன்" என்று கூறினார்கள். இது கேட்ட அத்தார், தம் நடத்தும் ஹதீஸ் வகுப்புக்தளில் அவர்கள் அமர்ந்துகொள்ள அனுமதியளித்து விட்டார்கள். சில நாட்களிலேயே அபூ ஹனீபாவின் அபார மான அறிவுத் திறமையை அத்தார் கண்டுகொண்டு அவர் களைத் தங்கள் அருகிலேயே அமர்த்திக்கொண்டார்கள்.

இவ்விதம் அத்தாரிடம் ஹதீஸ் பாடங் கேட்டபின்னர், இமாமவர்கள் மதீனாவிலுள்ள பெரியார்களிடம் சென்று, அங்கேயும் ஹதீஸ் பாடங்களைக் கற்பதில் கவனஞ் செலுத்தி னார்கள். எனினும் அவர்கள் அத்தாரோடு கொண்டிருந்த தொடர்பு ஹிஜ்ரி 115ல் அந்தப் பெரியார் காலமாகும்வரை நீடித்திருந்தது, அவர்கள் மக்கா செல்லும் போதெல்லாம், அந்தப் பெரியாரைப் போய்ப் பார்ப்பதும், அவர்களோடு அளவளாவுவதுமாக இருந்திருக்கிறார்கள். இதே போல் ஹஜ்ஜுக்காக மக்கா, மதீனா செல்லும்போதெல்லாம் அங்கே வந்து குழுமும் பிரபல மேதைகளிடமிருந்தெல்லாம் தங் களுக்குத் தேவைப்பட்ட விளக்கங்களை ஏராளமாகப் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

## அபூ ஹனீபா ஆனது

இமாமவர்களின் இயற்பெயர் நுஃமான் என்பதல்லவா! அவர்கள் அபூ ஹனீபா என்ற பட்டப்பெயரை-அவர்களுடைய பெயராக உலகம் அறிந்துள்ள இப்பெயரை-எப்படி அடைந்தார்கள் என்பதுபற்றி ஒரு கதையுண்டு. இமாமவர்களுக்குப் புத்தி சாதுர்யமுள்ள புத்திரி யொருவரிருந்தார். அவர் பெயர் ஹனீபா. அவரிடம் இமாமவர்களுக்கு மிகுந்த அன்புமிருந்தது. எனினும் அவருடைய சாதுரியத்தைச் சோதிக்க எண்ணினூர்கள். அப்போது அவர்களிடம் கூபாவிலுள்ள பெண்கள் சிலர் வந்து, ''ஓர் ஆண் பல பெண்களை மணக்க இஸ்லாத்தில் அனுமதியிருக்கும்போதும்போது, ஒரு பெண் பல கணவரை மணக்க மட்டும் அனுமதியில்லாத காரணம்யாது?'' என்று வினவினர். மகா மேதையான இமாமவர்கள் தமக்கு இந்தக் கேள்விக்குப் பதில் தெரியாதது போல் திணறினூர்கள், உடனே, தங்கள் மகளிடம் இதைக் கூறினூர்கள். அந்த ஹனீபா என்ற புத்திரி பதில் கூறும் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொண்டு, பெண்களை மறு நாள் ஆளுக்கு ஓர் ஏனத்தில் சிறிது பால் கொண்டுவரும் படி கேட்டுக்கொண்டார். அவ்விதம் அவர்கள் மறுநாள் கொணர்ந்த பாலை ஓர் ஏனத்தில் ஊற்றச்செய்தார். அதன்பின் அந்தப் பெண்களோடு சிறிது நேரம் பொதுப்படையாகப் பேசிக்கொண்டிருந்தார். பெண்கள் வீட்டுக்குப்புறப்பட்டபோது அவரவர்கள் கொணர்ந்த பாலை மட்டும் அவரவர்கள் பிரித்தெடுத்துப்போகுமாறு கூறினூர். உடனே அந்தப் பெண்கள், ''அது எப்படிச் சாத்தியமாகும்! நாங்கள் கொண்டுவந்த பால் எது என்று இதில் கண்டுபிடிப்பதுதான் முடியுமா?'' என்று திகைத்து நின்றனர். உடனே, ஹனீபா என்ற அந்தப் பெண், ''இது போல்தான் ஒரு பெண் பல கணவரை மணந்தாலும் பிறக்கும் குழந்தை யாருடையது என்று கண்டுபிக்க முடியாது'' என்று விளக்கினூர். தமது புதல்வியின் சாதுர்யத்தைக் கண்ட இமாமவர்கள் உடனே ஹனீபாவின் சாதுரியத்தை மெச்சி, அவர் தந்தைதான் தாங்கள் என்று காட்டும் முறையில் அபூ ஹனீபா என்ற பெயரைச் சூடிக் கொண்டார்களாம்.

"இல்லை, இமாமவர்களுக்கு ஹனீபா என்ற ஆண் குழந்தை யொன்றிருந்தது; அதனாலேயே, அவர்கள் அபூ ஹனீபா என்று அழைக்கப்பட்டார்கள்" என்பாரு முண்டு.

இமாம் அபூ ஹனீபாவுக்கு அவர்களுடைய ஆசான் பெயரிடப்பட்ட ஹம்மாது என்ற ஒரு புத்திரனையன்றி வேறு குழந்தைகளே இருக்கவில்லை என்று ஆதாரப்பூர்வமான தகவல் களிலிருந்து தெரியவருகிறது. எனவே, ஹனீபா என்ற தங்கள் புத்திரியின் பெயராலோ, புத்திரரின் பெயராலோ அவர்கள் இப்படிப் பெயர் மாற்றிக் கொண்டிருப்பார்கள் என்பது சாத்தியமாகப் படவில்லை. அவர்கள் ஃபிக்ஹுச் சட்டத்தில் மகா நிபுணராகித் தீர்ப்புகள் வழங்கத் தொடங்கிய சமயம் நுஃமான் என்ற இயற்பெயருடன் சிறப்புப் பெயராக வைத்துக்கொண்டது தான் அபூ ஹனீபா என்ற பெயராகும் என்று தெரியவருகிறது. திரு குர்ஆனில் ஆல இம்ரான் என்ற அத்தியாயத்திலுள்ள பத்தாம் வசனத்தில் 'வத்தபவூ மில்லத்த இப்ராஹீம ஹனீபா' ('மிகத் தூய்மையான-ஹனீப் ஆன இப்ராஹீம் நபியின் மார்க்கத்தைப் பின்பற்றி நடவுங்கள்') என்று கூறப்பட்டுள்ளதில் வரும் 'ஹனீப்' என்ற பதத் திலிருந்துதான் இவ்விதம் இமாமவர்கள் பெயர் சூடிக்கொண் டார்கள் என்று ஆதாரப்பூர்வமான நூற்கள் தெரிவிக் கின்றன.

## ஆசான்கள் காட்டிய மரியாதை

இமாம் அபூ ஹனீபா பிக்ஹுப் பாடங்களில் நல்ல தேர்ச்சியடைந்தபின்னரும், பல ஆசான்கள் நடத்திய வகுப்புக் களில் அமர்ந்து பாடங் கேட்டுள்ளார்கள். அது வகையில் அவர்கள் கூச்சப்படவில்லை. அவர்கள் வகுப்பில் அமர்ந்ததும், அந்த ஆசான்களும் அவர்களுக்கு மரியாதை வழங்கினார்கள். மக்காவிலிருந்த பிரபல ஹதீஸ் விரிவுரையாளரான அம்ருப்னு தீனார் தங்கள் வகுப்புக்களில் அபூ ஹனீபா அமர்ந்திருந்தால்,

வேறு யாரையும் முன்னேக்கிப் பேசாது, அவர்களே முன்னேக்கியே பாடபோதனே செய்வார்கள். ஒரு சமயம் தீக்கோழி முட்டை சம்பந்தமான ஹதீஸ் பற்றி விளக்கந்தேடி இமாமவர்கள் கலீப் என்ற பெரியாரிடம் சென்ருர்கள். அவர்கள் வருவதைக் கண்ட அந்தப் பெரியார் எழுந்து நின்று அவர்களுக்கு மரியாதை காட்டி அவர்களே வரவேற்ருர். தங்களுக்குச் சமமாக அவர்களே அமரச் செய்து, இமாமவர்கள் கேட்ட விளக்கத்தைக் கூறினுர்.

இமாம் மாலிக், இமாம் அபூ ஹனீபாவைவிடப் பதிமூன்று வயது சிறியவர்கள். எனினும், அவர்கள் நடத்திய வகுப்பிலும் சென்றமர்ந்து இமாம் அபூ ஹனீபா பாடங் கேட்டுள்ளார்கள். ''இமாம் மாலிக்கின் எதிரே இமாம் அபூ ஹனீபா ஒரு மாணவரைப் போன்றே பணிவுடன் அமர்ந்து பாடங் கேட்பார்கள்'' என்று அல்லாமா தஹபி தெரிவிக்கிருர்கள்.

அப்துல்லாஹிப்னு முபாரக் என்ற பெரியார் கூறுவதாவது: ''நான் ஒரு சமயம் இமாம் மாலிக்கோடு அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தேன். அப்போது அங்கே ஒருவர் வந்தார். மாலிக் அவர்கள் வந்தவரை மிகவும் மரியாதையாக வரவேற்றுச் சரியாசனத்திலமர்த்தி அளவளாவினுர்கள். அவர் போனபின், 'வந்தவர் யார் தெரியுமா?' என்று என்னிடம் வினவிக்கொண்டு, 'இவர் தான் அபூ ஹனீபா. இந்தக் கல்தூணேக்கூட இவர் விரும்பினுல் தம் பேச்சுத் திறனுல் தங்கம் என்று நிரூபிக்க இவரால் முடியும்' என்று இமாம் மாலிக் அவர்கள் அறிமுகப்படுத்தினுர்கள். பின்னர், அங்கே இன்னெருவர் வந்தார். அவரையும் இமாம் மாலிக் மரியாதையோடு தான் வரவேற்ருர்களாயினும் அபூ ஹனீபாவிடம் காட்டிய பணிவையும், ஆர்வத்தையும் இவர் விஷயத்தில் காட்டவில்லே. இவர் சென்ற பின்னர், 'இவர் தான் ஸுப்யானுத்தெளரி' என்று அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்."

இவ்விதமாக இமாமவர்கள் ஹதீஸ் கலை பயின்ற பலருள் இமாம் ஷஃஅபி, சல்மா பின் குஹைல், மஹாரிப், அபூ இஸ்ஹாக் ஸப்யி, ஔன், சம்மாக், உமர் பின் மர்ரா, மன்தருல் அம்ரு, அஃமஷ், இப்ராஹீம் பின் முஹம்மது, அதீ, அத்தாரிப்னு ஸாயிப், மூஸா, அல்கமா, ஹிஷாம், சுலைமான், கதாதா, அத்தாரிப்னு அபீ ரிபாஹ், இக்ரிமா, மக்ஹூல் ஆகியோர் முக்கியமானவர்களாவர். இவர்களில் பலரிடம் இமாம் அபூ ஹனீபா ஹதீஸ் பாடங்களில் தேர்ச்சி பெற்றதற்கான 'ஸனது'ம் பெற்றிருந்தார்கள்.

## ஆசிரியர் அபூ ஹனீபா

நாற்பது வயதுவரை தங்கள் கல்வி ஞானத்தைப் பலப்படுத்துவதிலேயே இமாமவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். இதற்கு முன்பே சுயமாகத் தீர்ப்பளிக்கும் திறமை உண்டாகி விட்டதெனினும் அதில் அவர்கள் ஈடுபடவில்லை. இந்த ஃபிக்ஹுப் பாடபோதனை செய்வதற்கும் அவர்கள் துணிய வில்லை. இந்த ஃபிக்ஹுப் பாடபோதனை செய்வதற்கும் அவர்கள் துணியவில்லை. ''என் குருநாதர் ஹம்மாது அவர்கள் உயிரோடிருக்கும்வரை அவர்கள் வீடிருந்த திசையை நோக்கிக்கூட நான் கால் நீட்டியதில்லை" என்று இமாமவர்கள் பின்னர் தெரிவித்ததுபோல, அவர்கள் ஜீவித்திருந்தவரை இமாமவர்கள் தனியாக ஃபிக்ஹுப் பாடபோதனை நடத்தத் தயாராயில்லை. கூபாவில் இப்ராஹீம் நக்கயீ என்ற பெரியார் பிக்ஹுப் பாடத்தில் பெரிய நிபுணராக இருந்தார்கள். அவர்களுக்குப் பின்னர் ஹம்மதுதான் அந்தத் திறமையை அடையப் பெற்றிருந்தார்கள். ஹிஜ்ரி 120-ல் ஹம்மாது காலமாகிவிடவே கூபா நகரம் இருண்டுபோயிற்று. ஹம்மாதின் புதல்வரும் இதற்கான கல்வியைப் பெருது வேறு வழியில் திரும்பிவிட்டார். இதனால், வய்து முதிர்ந்த மூஸா பின் கஸீர் என்ற பெரியார் அந்த ஸ்தானத்தில் அமர்த்தப் பட்டார்கள். இவர்கள் பாடபோதனையில் அதிக ஆற்றல் இல்லாவிடினும், போதிய அனுபவமுடையவர்களாக இருந்ததால் சில மாதங்கள் ஃபிக்ஹுப் பாடங்களை நடத்தினார்கள்

கடைசியில் இவர்கள் ஹஜ்ஜுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்கள்.

இச்சமயம் பொதுமக்கள் அந்த ஆசிரியப் பதவியிலமருமாறு இமாம் அபூ ஹனீபாவை வற்புறுத்தினர். இமாமவர்களும் துணிவோடு அதை ஏற்கத் தயாராயில்லை. ஆனால், ஜனங் களின் நிர்ப்பந்தம் அதிகரிக்கவே வேறு வழியின்றி அந்தப் பதவியை ஏற்றுக்கொண்டார்கள். அப்படியும் அவர்களுக்கு மன நிம்மதியே உண்டாகவில்லை. இந்த நிலையில் நடந்த சம்பவத்தை அவர்களே இவ்வாறு சொல்கிறார்கள்: ''ஒரு நாள் இரவு என் கனவில் எம்பெருமான் (ஸல்) அவர்களுடைய அடக்க ஸ்தலத்தை யாரோ தோண்டிக்கொண்டிருப்பதாகக் கண்டேன். பதற்றத்தோடு விழித்துக்கொண்டேன். நான் ஏற்றுக்கொண்ட ஆசிரியப் பணிக்கு நான் அருகதையில்லை என் பதைக் காட்டத்தான் இந்தக் கனவு உண்டாயிற்றோ என்று நான் யோசிக்கலானேன். அச்சமயம் கனவு பலன் கூறுவதில் நிபுணரான இப்னு ஸீரீன் என்னிடம் வந்தார். அவரிடம் என் கனவைக் கூறினேன். அதைக் கேட்ட அவர், 'மரித்துப் போன ஒரு கலையை உயிர்ப்பிப்பதே இதன் பொருள்' என்று விளக்கினார். பின்னரே நான் மன நிம்மதியடைந்தேன்.''

இவ்வாறு அறிவுச்சுடர் கொளுத்தத் தொடங்கிய அவர் களுடைய போதனை மன்றம் நாளுக்கு நாள் வளர்ச்சியடைந்து கூபாவிலிருந்த பல மன்றங்கள் அதனுள் ஐக்கியமாகிவிடும் நிலையை அடைந்தது. எண்ணற்றோர் அங்கே வந்து பாடங் கேட்கலாயினர். இமாமவர்களுக்குப் பாடபோதம் செய்த இஸ்யிர், அஃமஷ் போன்ற பெரியார்கள் கூட அங்கே வந்த மர்ந்து நல்விருந்து பெற்றனர்.

உலகெங்கணும் இமாமவர்களின் கலா நிலையம் புகழ் பரப்பலாயிற்று. அன்றைய முஸ்லிம் உலகில் ஸ்பெயினைத் தவிர உள்ள சகல இடங்களிலிருந்தும் மாணவர்கள் வந்து இமாமவர்களின் வகுப்பில் அமர்ந்து பாடங்கேட்டனர். குறிப்பாக மக்கா, மதீனா, தமாஸ்கஸ், பஸரா, வாஸித்,

மவ்ஸில், ஜஸீரா, ரிகா, நஸீபைன், ரம்லா, கெய்ரோ, யமன், பஹ்ரைன், பக்தாத். அஹ்வாஜ், கிர்மான், இஸ்ப ஹான், ஹுல்வான், அஸ்தராபாத், ஹமதான், நஹாவந்த், ரைய், கௌமஸ். தபரிஸ்தான், ஜுர்ஜான், நைஷாப்பூர், ஸர்கீஸ், நிஸா, புகாரா, சமர்கந்த், கெஸ்,ஸன்ஆன், திர்மத், ஹிரத், நஹஸ்தார், அல்ஜம், கார்ஜம், சீஸ்தான், மதாயின் மஸீஞ, ஹிம்ஸ் போன்ற இடங்களிலிருந்தெல்லாம் மாணவர் கள் வந்து இமாமவர்களிடம் பாடம் கேட்டுள்ளனர். நாளடை வில் இமாம் அவர்கள் நாட்டிலேயே தனியான செல்வாக்குப் பெற்ற அறிஞராக ஆகிவிட்டார்கள்.

அவர்கள் எங்குச் சென்றாலும் 'இராக்கின் ஃபக்கீஹ்' என்று போற்றப்பட்டார்கள். அவர்கள் நிகழ்த்திய விளக்க உரைகளைக் கேட்கப் பல்லாயிரவர் கூடலாயினர். ஏராளமான சிக்கலான மார்க்கப் பிரச்சினைகள் அவர்களுடைய பரிசீல னைக்கு வரலாயின. அவற்றுக்கு அவர்கள் உடனுக்குடன் வெகு பொருத்தமாகப் பதில் கூறும் முறை யாவரையும் வியப்பிலாழ்த்திற்று.

ஒரு சமயம் இமாமவர்கள் தங்கள் பிரயாணத்திடை ஓரிடத் தில் தங்கினார்கள், அவர்களுடைய தீர்ப்புகளைக் கேட்கப் பெருங் கூட்டங் கூடிவிட்டது. இதைக் கண்ட இமாமவர்களே மகிழ்ந்தவர்களாக, ''யாராவது என் சமையல்காரரிடம் போய் இவர்கள் அனைவருக்கும் என் ஜாகையில் உணவு தயாரிக்கச் சொன்னால் நலமாகுமே!'' என்றார்கள். அப்போது வினா ஒன்று விடுக்க அருகில் வந்து நின்ற அபூ ஆஸிம் என்பவர், ''நான் போகிறேன்'' என்றார். ஆனால், அவர் உடனேயே தாம் விளக் கம் தேடிய வினாவையும் அவர்களிடம் விடுத்தார், அவர்கள் பதி லளிக்கத் தொடங்கினார்கள். பல கேள்விகளை அவர் கேட்டார். யாவுக்கும் அவர்கள் விடையிறுத்த பின்னர் ஒருவர் எழுந்து சில கேள்விகளைக் கேட்டார். அவற்றுக்கும் இமா மவர்கள் பதிலளிக்கலானார்கள். இமாமவர்களின் விளக்கத் தைக் கேட்டுக்கொண்டே இருந்துவிட்ட அபூ ஆஸிம் சமையல்

காரரிடம் போகவில்லை. விடையிறுத்துவந்த இமாமவர்கள் இடையில் அந்த நினைவு வந்ததும், ''யாரையோ சமையல் காரரிடம் போகச் சொன்னேனே, போனாரா?" என்று வினவி னார்கள். அபூ ஆஸிம் எழுந்து நின்று, ''நான்தான் போவ தாகச் சொன்னேன்'' என்றார். ''சொல்லிவிட்டீர்களா?'' என்று இமாமவர்கள் கேட்டதற்கு, ''நான் போவதாகச் சொன்னேனேயன்றி உடனடியாகவா போவதாகச் சொன் னேன்!" என்று அவர் பதில் கேள்வி கேட்டார். அதைக் கேட்ட இமாமவர்கள் புன்னகையுடன், ''உங்கள் வார்த்தை பொது ஜனங்களால் நீங்கள் கூறும் அர்த்தத்தில் எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது. ஆனாலும், இதுவும் 'ஃபிக்ஹு' சம்பந்தமான ஒரு பிரச்சினைதான்" என்று கூறினார்கள்.

## பொறாமைக்காரர்கள்

இமாமவர்களின் அறிவு நுட்பமும், திறமையும் எண்ணற் றவர்களை இன்புறச் செய்ததுபோல பொறாமைக்காரர்கள் சிலரைப் புழுங்கவும் வைத்தது. அறிஞர்கள் புகழ் பெறு கிறார்கள் என்றாலே அற்ப புத்தி படைத்த சிலருக்கு அது ஆத்திரத்தை உண்டாக்கும். அவர்கள் பெயரை மாசுபடுத்த இத்தகையவர்கள் ஒல்லும் வகையாலெல்லாம் முயலுவார்கள். இதுபோன்றே இமாம் அபூ ஹனீபாவைப் பற்றியும் வதந்தி கள் பரப்பப்படலாயின. அவர்கள் மார்க்கத்தை விட்டு விட்டுத் தங்கள் மனம் போன போக்கில் தீர்ப்புகள் வழங்குவ தாகக் கூறப்பட்டது. பெரியார்கள் சிலர்கூட இதை நம்பி ஏமாற்றமடைந்திருக்கின்றனர்.

இமாமவர்களின் முக்கியமான சீடர்களில் ஒருவரான அப்துல்லாஹிப்னு முபாரக் ஒரு சமயம் பைரூத் சென்றிருந் தார். அவர் அங்கே ஹதீஸ் கலையின் நிபுணரான ஔஜாயி என்ற பெரியாரைச் சந்தித்தார். பெரியார் ஔஜாயி அப்துல் லாஹ்வை நோக்கி, ''நீர் வசிக்கும் கூபா நகரில் அபூ ஹனீபா என்று ஒருவர் தலையெடுத்திருக்கிறாராமே, அவர் யார்? அவர் மார்க்கத்தில் புதிய புதிய (பித்அத்தான) விஷயங்

களைக் கூறுகிறுராமே?" என்று வினவினர். அப்துல்லாஹ் எந்தப் பதிலும் கூருது மௌனமாக இருந்துவிட்டார். அதன் பின் இரண்டொரு நாட்கள் தள்ளி, தம் கையோடு கையேட்டுப் பிரதிகள் சிலவற்றை எடுத்துக்கொண்டு ஒளஜாயியைச் சந்திக்கச் சென்றுர். ஒளஜாயி அதனை வாங்கித் தலைப்பில் ''கால நுஃமான்'' (நுஃமான் சொல்கிறுர்) என்று இருப்பதைப் பார்த்ததும், அதிலிருந்த வாசகத்தை மிகவும் கவனமாகக் கடைசிவரை படித்து முடித்தார். அதன்பின் அவர் அப்துல்லாஹ்வை நோக்கி, ''இந்த நுஃமான் என்ற பெரியார் யார்?'' என வினவினர், ''இராக்கில் இவர் ஓர் அறிஞர். இவரிடம்தான் நான் கல்வி பயின்றேன்'' என்று அப்துல்லாஹ் தெரிவித்தார். ''இந்த நுஃமான் மாபெரும் மேதையாகத் தெரிகிறதே!" எனப் பெரியார் ஒளஜாயி விசாரித்தார். ''ஆம், இவர்தான் மார்க்கத்தில் புதிய புதிய விஷயங்களையெல்லாம் கூறுகிறுர் என்று தங்களால் குறைகூறப்பட்ட அபூ ஹனீபா" என்று அப்துல்லாஹ் கூறியதும், அந்தப் பெரியார் மிகவும் மனம் வருந்தலானுர்; ''நான் கேள்விப் பேச்சுக்களைக் கொண்டு பெரிய தவறிழைத்துவிட்டேன், அப்துல்லாஹ்!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினர்.

அதே வருடம் இமாம் அபூ ஹனீபா அவர்கள் ஹஜ்ஜுக்குச் சென்றிருந்தார்கள். அங்கே இந்தப் பெரியார் ஒளஜாயியும் வந்திருந்தார். அப்துல்லாஹிப்னு முபாரக் அப்போது அங்கிருந்தார். ஒரு மார்க்கப் பிரச்சினை பற்றி இமாமவர்கள் அற்புதமான விளக்கம் நல்கிக் கொண்டிருந்தார்கள். அந்த விளக்கத்தைக் கேட்டு மனம் நெகிழ்ந்த ஒளஜாயி அப்துல்லாஹ்வை நோக்கி, ''அப்துல்லாஹ், இவரிடமுள்ள அறிவாற்றலும், திறமையும் தான் ஜனங்கள் இவர்மீது பொருமைப்படும்படி செய்துள்ளது. இவரைப்பற்றி நான் நினைத்தது எவ்வளவு தவருனது என்பதையும் இப்போது உணருகிறேன். அதற்காக மிக மிக வருந்துகிறேன்" என்று கூறினர்.

இதேவிதம்தான் நபிபெருமானாரின் நேரடி வாரிஸாக அக்காலையில் மதீனாவினால் வாழ்ந்துகொண்டிருந்த இமாம் ஜஃபருஸ் ஸாதிக் (ரலி) *அவர்களிடமும் இமாமவர்களைப் பற்றி மோசமான அபிப்பிராயம் உண்டாக்கப்பட்டிருந்தது. மேலே குறித்த சம்பவம் நடந்த ஆண்டுக்கு அடுத்த ஆண்டிலும், இமாமவர்கள் ஹஜ்ஜுக்குப் போய் ஹஜ்ஜை முடித்துவிட்டு மதீனா சென்றார்கள். அங்கே அவர்கள் இமாம் ஜஃபருஸ் ஸாதிக் (ரலி)யைச் சந்தித்தார்கள். அவர்களோடிருந்த நண்பரொருவர், ''இவர்தான் அபூ ஹனீபா!'' என்று அவர்களிடம் அறிமுகப்படுத்தினார். உடனேயே அவர்கள், ''அபூ ஹனீபா, நீங்கள் என் திருப் பாட்டனார் எம்பெருமான் (ஸல்) அவர்களுடைய ஹதீஸ் களுக்கெல்லாம் உங்கள் சொந்த அனுமானத்தின் மீது, அவற்றுக்கு மாற்றமான கருத்துக்களைச் சொல்கிறீர் களாமே!" என்று இமாமவர்களை நோக்கி வினவினார்கள். இது கேட்ட இமாம் அபூ ஹனீபா மிகவும் பணிவோடு, ''எம்பெருமான் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களுக்கு நான் மாற்றமான கருத்துக்களைக் கூறுவதா? அவ்வாறு நான் தவறுமலிருக்க அல்லாஹ் என்னைக் காப்பாற்றுவானாக! தயவுசெய்து சற்று அனுமதியளித்தால் தங்களிடம் மூன்று விஷயங்களைக் குறித்து மட்டும் நான் வினவுவதற்குத் தாங்கள் பதிலளிக்கவேண்டும்'' என்று வேண்டினார்கள்.

---

* இது இமாம் ஜஃபருஸ் ஸாதிகின் தந்தையாரான இமாம் முஹம்மது பாக்கிர் (ரலி) அவர்கள் என்று சில நூற் களில் காணப்படுகிறது. ஆனால், ஹிஜ்ரி 118ல் (அதாவது, இமாமவர்களின் முப்பத்து மூன்றும் வயதில்) இமாம் பாக்கிர் (ரலி) காலமாகிவிட்டார்கள். இச்சம்பவமோ இமாம் அபூ ஹனீபா தங்கள் மார்க்கத் தீர்ப்புகள் மூலம் பிரசித்தியடைந்த பின் நடந்துள்ளது. எனினும், இமாம் அபூ ஹனீபா ஏற்கனவே இமாம் பாக்கிர் (ரலி) அவர்களைப் போய்க் கண்டு அவர்களிடம் ஹதீஸ்களைக் கேட்டிருக்கக்கூடும் என்று மட்டும் நம்ப இடமிருக்கிறது.

இமாம் ஜஃபருஸ் ஸாதிக் அனுமதியளித்ததும், இமாம் அபூ ஹனீபா கேட்டார்கள் : ''விந்து, மூத்திரம் இவை இரண்டில் எது அதிக அசுத்தமானது?" என்று.

''மூத்திரம்'' என்று இமாம் ஜஃபருஸ் ஸாதிக் பதிலளித்தார்கள். ''ஆனால், மார்க்கச் சட்டப்படி மூத்திரம் வெளிப்பட்டால் அந்தத் தலத்தை மட்டும் கழுவினால்-சுத்த மாக்கிக் கொண்டால்-போதும் என்றும், விந்து வெளிப்பட்டால் அந்தத் தலத்துடன் மட்டும் நில்லாது உடல் முழுவதையுமே கழுவவேண்டும் என்றல்லவா இருக்கிறது! நான் என் சுய அனுமானப்படி தீர்ப்புக் கூறுவதானால் அதிக அசுத்தமானதன் விஷயத்திலல்லவா அதிகச் சுத்தம் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தியிருப்பேன். நான் அவ்வாறு செய்யாமல், மார்க்கச் சட்டத்தை வற்புறுத்தியல்லவா தீர்ப்பளித்துள்ளேன்!" என்று விளக்கிய இமாம் அபூ ஹனீபா, அடுத்து வினவினார்கள்: ''ஆண், பெண்களில் அதிகப் பலஹீனமானவர்கள் யார்?"

''பெண்கள் தாம்" என்று இமாம் ஜஃபருஸ் ஸாதிக் பதிலளித்தார்கள்.

''பாகப் பிரிவினையில் ஆண், பெண்களில் யாருக்கு அதிகப் பங்கு கொடுக்கப்படுகிறது?''

''ஆண்களுக்குத்தான்"

''நான் மட்டும் என் சுய அனுமானப்படி தீர்ப்புக் கூறுவதானால், பெண்கள் பலஹீனமானவர்களானதால் அவர்களுக்கு இரண்டு பங்கும், ஆண்களுக்கு ஒரு பங்கும் வீதம் சொத்து பாகம் பிரிக்கப்படவேண்டும் என்றல்லவா தீர்ப்பளித்திருப்பேன்! ஏனெனில், பலமற்றவர்களுக்குச் சற்று அதிகம் கொடுப்பதையே நம் சாமான்ய அறிவு ஆதரிக்கிறது. ஆனால், நான் மார்க்கச் சட்டப்படிதானே தீர்ப்பளித்துள்ளேன்?'' என்று அபூ ஹனீபா விளக்கினார்கள்.

கடைசியாக, இமாம் அபூ ஹனீபா கேட்டார்கள் : ''தொழுகை, நோன்பு ஆகிய இரண்டிலும் அதிகம் ஏற்றமானது எது?'' என்று.

''தொழுகைதான்'' என்று இமாம் ஜஃபருஸ் ஸாதிக் பதிலளித்தார்கள்.

''அப்படியானல், மாதவிலக்கான பெண் நோன்பை 'கலா' (திரும்பவும் எடுத்து முடித்தல்) செய்யாமல், தொழுகையைத்தானே 'கலா' செய்யவேண்டும்! நானே அப்படிக் கூருமல், மார்க்கச் சட்டத்தை ஒட்டி நோன்பைக் 'கலா'ச் செய்யும்படிதான் தீர்ப்பளித்திருக்கிறேன்'' என்று இமாம் அபூ ஹனீபா விளக்கினர்கள். உடனே, இமாமவர்களின் நேர்மையை உணர்ந்த இமாம் ஜஃபருஸ் ஸாதிக் மகிழ்ச்சியடைந்து, அவர்களைக் கட்டித்தழுவி நெற்றியில் முத்தமிட்டார்கள்.

இமாம் அபூ ஹனீபா, இமாம் ஜஃபருஸ் ஸாதிக் (ரஹ்) அவர்களிடமிருந்தும் பல விஷயங்களைக் கற்றுக்கொண்டிருக்கிருர்கள்.

## சரித்திரப் பின்னணி

இமாமவர்களுடைய தீர்ப்புகள் மக்களிடை அதிக மதிப்புப் பெற்றதுமே இமாமவர்களின் பெயரும் அரசியலோடு சம்பந்தப்படுத்தப்பட்டது. புரட்சிகளில்கூட அவர்களுடைய கூட்டு இருக்கலாமோ என்று ஐயமுண்டாகலாயிற்று. இதை விளங்கிக் கொள்ள, அச்சமயம் நிலவிய அரசியல் நிலையை ஓரளவாவது தெரிந்து கொள்ள வேண்டுவது அவசியமாகும். இமாமவர்கள் கல்வி பயின்றது பற்றிக் குறிப்பிடுமுன், அதுவரை நிலவிய ஆட்சிமுறை பற்றியும், அரசஞானி உமர் இப்னு அப்துல் அஜீஸ் ஆட்சி செய்ததுபற்றியும் பார்த்தோம். ஹிஜ்ரி 101ல் அந்த மகா புருஷர் விஷமிடப்பட்டுக் கொல்லப்பட்டார். அவருக்குப்பின் இரண்டாம் யஜீது என்பவர் கலீபாவானர். அக்காலையில் இரண்டு பெருங் கட்சியினர் இருந்துவந்தனர். இவர்கள் எமனியர்கள், மதாரியர்கள் எனப்படுவர். கலீபா எமனியருக்கு ஆதரவு தந்தால், மதாரியர்கள் அந்தக் கலீபாவை எதிர்க்கத் துணிவர். கலீபா மதாரியர்களை ஆதரித்தால் எமனியர்களுக்கு ஆத்திரம் வந்துவிடும். எப்படியும்

இவர்களால் ஆட்சியாளர்கள் அதிக கவலைக்கும் தொல்லைக்கும் உள்ளாகி வந்தனர். உமர் இப்னு அப்துல் அஜீஸ்தான் இவ்விரு கட்சியாரிடையேயும் நடுநிலையாக நீதி வழங்கி வந்தார். அவர் மறைந்தபின் இரண்டாம் யஜீது மதாரியர்களை ஆதரித்து எமனியர்களைக் கொடுமைப்படுத்தலானார். இதனால், எமனியர்கள் யஜீது இப்னு முஹல்லப் என்பவருடைய தலைமையில் பெருத்த படை திரட்டிக்கொண்டு ஆட்சியாளரை எதிர்க்கத் தயாரானார்கள். அச்சமயம் பஸராவிலிருந்த இமாம் ஹஸன் பஸரி தம் கூட்டத்தார்கள், இவர்களில் எந்தக் கோஷ்டியாரோடும் சேரவேண்டாம் என்று உத்தரவிட்டார்கள். ஆனால், எமனியக் கோஷங்களால் உணர்ச்சிவசமான பஸராக்காரர்களும், இராக்கியர்களும், எமனியர் படையுடன் சேர்ந்து யுப்ரட்டீஸ் நதிக்கரையிலுள்ள அக்ரா என்ற இடத்தில் நின்றனர். கலீபா யஜீது அனுப்பிய பெரும்படை இந்த எமனியப் பட்டாளத்தை நசுக்கிவிட்டது. ஆனால், இதன் எதிரொலியாக முஸ்லிம் உலகம் முழுமையிலும் ஸ்பெயினில், ஆப்பிரிக்காவில், கிழக்கில் எல்லாத் திசைகளிலும் எமனிய-மதாரியப் பிணக்கு தலைவிரித்தாடி எத்தனையோ படுநாசங்களை உண்டாக்கிக் கொண்டிருந்தது. இந்நிலையில் கலீபா யஜீது ஹிஜ்ரி 105ல் காலமானார்.

மதாரியா-எமனியக் கோஷ்டிகள் பதவி ஆதிக்கத்துக்காகப் போட்டியிட்டனராயினும், தாங்கள் ஆட்சிக்கு உரியவர்கள் என்று கோரி அவர்கள் போராடவில்லை. ஆட்சியாளர்கள் தங்களை மதித்துச் சலுகை தரவேண்டும் என்று தான் அவர்கள் விரும்பினார்கள். ஆனால், அப்போது நடந்துவந்த முஆவிய்யா (ரலி) உண்டாக்கி விட்டிருந்த உமைய்யா வமிசத்தாருக்குப் போட்டியாக, ஆட்சி தமக்குத்தான் சேரவேண்டும் என்று போராடிவந்த இரண்டு கூட்டங்களும் இருந்தன. இவற்றுள் ஒன்று ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் வமிசத்தவர்கள். மற்றொன்று பனூ அப்பாஸியாக்கள் என்ற கூட்டத்தவர்கள். ஹஜ்ரத் அலீ (ரலி)யின் வமிசத்தவர்களில், இமாம் அபூ ஹனீபாவின் காலத்தில் இந்தப் பாத்தியதை கொண்டாடியவர் இமாம் ஹுஸைனின் பேரப்பிள்ளைகளில் ஒருவ

ரான ஜைது என்பவராவார், இவரை ஆதரித்தவர்கள் ஜைதிகள் எனப்பட்டனர். அப்பாஸியாக்கள் என்பவர் களின் உரிமை சற்று விசித்திரமானது. அவர்கள் நபிபெரு மானாரின் சிறிய தகப்பர் ஹஜரத் அப்பாஸ் (ரலி) அவர் களின் வமிசத்தவர்களாவர். ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி)யின் நான்கு புத்திரர்களின் மூத்தவர்களான ஹஜ்ரத் அப்துல் லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் புத்திரர் பெயர் அலீ என்பது. அவர் ஹிஜ்ரி 11/ல் காலமானார். இவருடைய புத்திரர் முஹம்மது என்ற பெயருடையார். இவர் ஆட்சி உரிமை தமக்குத்தான் உண்டு என்று வாதாடினர். அதற்கு இவர் சொன்ன காரணமாவது: கர்பலாப் படுகொலைக்குப் பின்னர் இஸ்லாத்தின் ஆத்மீகத் தலைமைப் பதவி (கிலாபத்) இமாம் ஹுஸைனுடைய புத்திர ரான ஹஜ்ரத் அலீ என்ற ஜைனுல் ஆபிதீனுக்குப் போக வில்லை. அதற்குப் பதிலாக அது ஹஜ்ரத் அலீயின் வீரப் புதல் வராக நாம் கதைகளில் படித்துள்ள முஹம்மது ஹனீபாவுக்குத் தான் போய்ச் சேர்ந்ததாம். அவர்கள் காலமானபின்னர் அவர் களுடைய புதல்வர் அபூ ஹாஷிம் என்பவரிடம் அந்தத் தலைமைப் பதவி போய்ச் சேர்ந்ததாம். அவர் தம் மரணத் தருவாயில் ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி)யின் பௌத்திரரான-நாம் மேலே குறித்துள்ள-முஹம்மது (இப்னு அலீ, இப்னு அப்துல் லாஹ், இப்னு அப்பாஸ்) என்பவரிடம் அந்தக் கிலாபத்தை ஒப்படைத்தாராம். எனவே இந்த முஹம்மதும், இவரைச் சேர்ந்தவர்களும் தாங்கள் தாம் இஸ்லாமியக் கிலாபத்துக்கு அதிபதிகளாக இருக்க உரிமையுடையவர்கள் என்று போரா டிக்கொண்டிருந்தனர். இவர்களுக்கு வெகுதிறமையுடன் வேலை பார்த்து, நெடுகிலும் ஆதரவு தேடுவதில் அபூ முஸ்லிம் என்ற இஸ்பஹானியர் மிகுந்த வெற்றி கண்டுகொண் டிருந்தார்.

தமாஸ்கஸில் கலீபா ஹிஷாம் ஆட்சி செலுத்திக் கொண் டிருந்தகாலையில் இராக்கில் யூஸுப் இப்னு உமர் என்பவர் நிர்வாக அதிகாரியாக இருந்தார். இவர் நயவஞ்சக இயல்பும், அடிக்கடி மாறும் மனநிலையும், கொடூரமான

இவர்களால் ஆட்சியாளர்கள் அதிக கவலைக்கும் தொல்லைக்கும் உள்ளாகி வந்தனர். உமர் இப்னு அப்துல் அஜீஸ்தான் இவ்விரு கட்சியாரிடையேயும் நடுநிலையாக நீதி வழங்கி வந்தார். அவர் மறைந்தபின் இரண்டாம் யஜீது மதாரியர்களை ஆதரித்து எமனியர்களைக் கொடுமைப்படுத்தலானார். இதனால், எமனியர்கள் யஜீது இப்னு முஹல்லப் என்பவருடைய தலைமையில் பெருத்த படை திரட்டிக்கொண்டு ஆட்சியாளரை எதிர்க்கத் தயாரானார்கள். அச்சமயம் பஸராவிலிருந்த இமாம் ஹஸன் பஸரி தம் கூட்டத்தார்கள், இவர்களில் எந்தக் கோஷ்டியாரோடும் சேரவேண்டாம் என்று உத்தரவிட்டார்கள். ஆனால், எமனியக் கோஷ்டிகளால் உணர்ச்சிவசமான பஸராக்காரர்களும், இராக்கியர்களும், எமனியர் படையுடன் சேர்ந்து யுப்ரட்டீஸ் நதிக்கரையிலுள்ள அக்ரா என்ற இடத்தில் நின்றனர். கலீபா யஜீது அனுப்பிய பெரும்படை இந்த எமனியப் பட்டாளத்தை நசுக்கிவிட்டது. ஆனால், இதன் எதிரொலியாக முஸ்லிம் உலகம் முழுமையிலும் ஸ்பெயினில், ஆப்பிரிக்காவில், கிழக்கில் எல்லாத் திசைகளிலும் எமனிய-மதாரியப் பிணக்கு தலைவிரித்தாடி எத்தனையோ படுநாசங்களை உண்டாக்கிக் கொண்டிருந்தது. இந்நிலையில் கலீபா யஜீது ஹிஜ்ரி 105ல் காலமானார்.

மதாரியா-எமனியக் கோஷ்டிகள் பதவி ஆதிக்கத்துக்காகப் போட்டியிட்டனராயினும், தாங்கள் ஆட்சிக்கு உரியவர்கள் என்று கோரி அவர்கள் போராடவில்லை. ஆட்சியாளர்கள் தங்களை மதித்துச் சலுகை தரவேண்டும் என்று தான் அவர்கள் விரும்பினார்கள். ஆனால், அப்போது நடந்துவந்த முஆவியா (ரலி) உண்டாக்கி விட்டிருந்த உமைய்யா வமிசத்தாருக்குப் போட்டியாக, ஆட்சி தமக்குத்தான் சேரவேண்டும் என்று போராடிவந்த இரண்டு கூட்டங்களும் இருந்தன. இவற்றுள் ஒன்று ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் வமிசத்தவர்கள். மற்றொன்று பனூ அப்பாஸியாக்கள் என்ற கூட்டத்தவர்கள். ஹஜ்ரத் அலீ (ரலி)யின் வமிசத்தவர்களில், இமாம் அபூ ஹனீபாவின் காலத்தில் இந்தப் பாத்தியதை கொண்டாடியவர் இமாம் ஹுஸைனின் பேரப்பிள்ளைகளில் ஒருவ

ரான ஜைது என்பவராவார், இவரை ஆதரித்தவர்கள் ஜைதிகள் எனப்பட்டனர். அப்பாஸியாக்கள் என்பவர்களின் உரிமை சற்று விசித்திரமானது. அவர்கள் நபிபெருமானாரின் சிறிய தகப்பர் ஹஜரத் அப்பாஸ் (ரலி) அவர்களின் வமிசத்தவர்களாவர். ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி)யின் நான்கு புத்திரர்களின் மூத்தவர்களான ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் புத்திரர் பெயர் அலீ என்பது. அவர் ஹிஜ்ரி 11ல் காலமானார். இவருடைய புத்திரர் முஹம்மது என்ற பெயருடையார். இவர் ஆட்சி உரிமை தமக்குத்தான் உண்டு என்று வாதாடினார். அதற்கு இவர் சொன்ன காரணமாவது: கர்பலாப் படுகொலைக்குப் பின்னர் இஸ்லாத்தின் ஆத்மீகத் தலைமைப் பதவி (கிலாபத்) இமாம் ஹுஸைனுடைய புத்திரரான ஹஜ்ரத் அலீ என்ற ஜைனுல் ஆபிதீனுக்குப் போகவில்லை. அதற்குப் பதிலாக அது ஹஜ்ரத் அலீயின் வீரப் புதல்வராக நாம் கதைகளில் படித்துள்ள முஹம்மது ஹனீபாவுக்குத்தான் போய்ச் சேர்ந்தது. அவர்கள் காலமானபின்னர் அவர்களுடைய புதல்வர் அபூ ஹாஷிம் என்பவரிடம் அந்தத் தலைமைப் பதவி போய்ச் சேர்ந்ததாம். அவர் தம் மரணத் தருவாயில் ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி)யின் பௌத்திரரான-நாம் மேலே குறித்துள்ள-முஹம்மது (இப்னு அலீ, இப்னு அப்துல்லாஹ், இப்னு அப்பாஸ்) என்பவரிடம் அந்தக் கிலாபத்தை ஒப்படைத்தாராம். எனவே இந்த முஹம்மதும், இவரைச் சேர்ந்தவர்களும் தாங்கள் தாம் இஸ்லாமியக் கிலாபத்துக்கு அதிபதிகளாக இருக்க உரிமையுடையவர்கள் என்று போராடிக்கொண்டிருந்தனர். இவர்களுக்கு வெகுதிறமையுடன் வேலை பார்த்து, நெடுகிலும் ஆதரவு தேடுவதில் அபூ முஸ்லிம் என்ற இஸ்பஹானியர் மிகுந்த வெற்றி கண்டுகொண்டிருந்தார்.

தமாஸ்கஸில் கலீபா ஹிஷாம் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தகாலையில் இராக்கில் யூஸுப் இப்னு உமர் என்பவர் நிர்வாக அதிகாரியாக இருந்தார். இவர் நயவஞ்சக இயல்பும், அடிக்கடி மாறும் மனநிலையும், கொடூரமான

தன்மையும் உடையவர். இவர் ஹாஷிமிய்யாக்களையும் கொடுமைப்படுத்திச் சித்திரவதை செய்யலானார். இதனால், இமாம் ஹுஸைனின் பேரரும், ஹஜ்ரத் அலீயிலிருந்து, கிலாபத்தை உரிமை கொண்டாடியவரும், நாம் மேலே பிரஸ்தாபித்துள்ளவருமான ஜைது என்பார் இந்த யூஸுபிடம் அது பற்றி முறையிடுவதற்காகச் சென்றார். அவரை யூஸுப் மிகவும் அவமரியாதைப்படுத்தி, இழிவாகப் பேசி விரட்டிவிட்டார். எனவே, அவர் வெகு ஆத்திரமாகக் கூபா வந்து ஹிஜ்ரி 120ல் ஒரு படையைத் திரட்டிக்கொண்டு ஆட்சியாளரை எதிர்த்துப் போராடத் தயாரானார். கலீபா ஹிஷாம் அனுப்பிய படை இந்த ஜைதைக் கொன்று, அவருடைய படைகளையும் அழித்து, அவருடைய பிரேதத்துக்கு மிலேச்சத்தனமான 'சிட்சை' கொடுத்தது.

ஏற்கனவே, தமது குடும்பத்தாருக்காக ஹஜ்ரத் அலீ (ரலி) நற்பிரார்த்தனை செய்ததையும், தமது தந்தையாரை ஆசீர்வதித்ததையும் எண்ணி ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் குடும்பத்தார்மீது இமாம் அபூ ஹனீபா அனுதாபம் கொண்டிருந்தார்கள். எனவே, இமாமவர்களின் ஊரான கூபாவில் அந்த வமிசத்தைச் சேர்ந்த ஜைது கிளப்பிய கலவரத்துக்கும் இமாமவர்களின் ஆதரவு இருந்திருக்கலாம் என்று ஊகிக்க இடமுண்டு. இதுபற்றி நாம் திட்டமாக எதுவும் முடிவுகட்ட இயலாவிடினும், அந்தக் கால ஆட்சியாளர்கள் அப்படித்தான் நினைத்தனர். ஆட்டங்கண்டு, எந்த நிமிஷமும் விழுந்துவிடலாம் என்ற நிலையிலிருந்த பனூ உமைய்யா ஆட்சி முற்றாக இமாம் அபூ ஹனீபாமீது சந்தேகங்கொண்டது. ஆனால், உலகப் புகழ் பெற்றுவிட்ட மாமேதையான அவர்களை மற்றவர்களைச் செய்ததுபோல் தலையைச் சீவவும் இயலவில்லை. சந்தேகக் கண்ணோடேயே ஆட்சிபீடம் அவர்களை நோக்கிக் கொண்டு வந்தது.

இமாமவர்கள் பகிரங்கமாக இந்தப் போராட்டங்களைப் பற்றி அபிப்பிராயம் கூறவே மறுத்துவிட்டார்கள். ஒரு சமயம் ஒருவர் அவர்களை அணுகி, ''ஹஜ்ரத் அலீ-முஆவியா ஆகிய

இருவரிடையேயும் நடந்த சண்டையைப் பற்றி உங்கள் கருத்து யாது?" என்று வினவினர். இமாமவர்கள், நாளை மறுமையில் அல்லாஹ் என்னிடம் எது குறித்து வினவுவானே அது குறித்து மட்டுமே நான் அஞ்சுகிறேன்; எனவே, ஹஜ்ரத் அலீ-முஆவியா தகராறு குறித்து அல்லாஹ் என்னிடம் கேட்க மாட்டான். நானும் அதற்காகப் பாவ மன்னிப்புத் தேட வேண்டியதில்லை'' என்று பதிலளித்துவிட்டார்கள். இவ்விதம் அவர்கள் தங்களை அரசியலோடு பிணைத்துவிடக்கூடிய பேச்சுக் களைக் கூடியவரை தவிர்த்து எச்சரிக்கையோடு நடந்து கொண்டார்கள்.

ஆனால், ''பிக்ஹுக் கலை சம்பந்தப்பட்டவரை, ஹஜ்ரத் அலீ-முஆவியா தகராறு ஒரு சிறந்த முன்மாதிரியைத் தந் துள்ளதாக" வேறொரு சந்தர்ப்பத்தில் அவர்கள் கூறியுள்ளார் கள். ''இதில் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் எடுத்துக் கொண்ட நடவடிக்கை மட்டும் நம்முன் முன்மாதிரியாக இல்லாதுபோயின், அரசியல் புரட்சிக்காரர்கள் விஷயத்தில் எடுக்கவேண்டிய நடவடிக்கை என்ன என்பதை நாம் அறியா மலேயே இருந்திருப்போம்'' என்று தெரிவித்தார்கள்.

கலீபா ஹிஷாம் ஹிஜ்ரி 125-ல் காலமானர். அவரு டைய மருமகன் இரண்டாம் வலீது கலீபாவாகித் தம் பிரஜை கள் கையாலேயே கொடூரமாகக் கொலை செய்யப்பட்டார். (ஹிஜ்ரி 126). அதன்பின் மூன்றும் யஜீது ஆறு மாதமும், அவர் சகோதரர் இப்ராஹீம் இரண்டு மாதமும் அரசாட்சி நடத்தினர். பின்னர், ஹிஜ்ரி 127 முதல் 132 வரை இரண் டாவது மர்வான் கலீபாவாகி ஆட்சி நடத்தினர். இவருடைய காலத்தில் யஜீது இப்னு உமர் என்பவர் கூபாவின் நிர்வாகி யாக நியமிக்கப்பட்டிருந்தார். இவர் வெகு திறமையான நிர்வாகம் நடத்தியதாகச் சொல்லப்படுகிறது. இவர்தான் இமாம் அபூ ஹனீபா அவர்களைக் கூபாவில் அரசாங்க நீதிபதி யாக நியமித்து அந்தப் பதவியை ஏற்றுக்கொள்ளும்படி மிகவும் வற்புறுத்தினர். ஆனல், நேர்மையற்ற இந்த ஆட்சியாள

ருக்குக் கீழ் தாங்கள் வேலை பார்க்க இயலாது என்று உணர்ந்த இமாமவர்கள் அதை ஏற்க மறுத்துவிட்டார்கள். பிரபலஸ்தர்கள் பலரை அவர் அவர்களிடம் தூதனுப்பினார். ''யஜீத் இந்த மஸ்ஜிதின் தூண்களை எண்ணும்படி உத்தரவிட்டால் நான் கீழ்ப்படியவேண்டுமா? அல்லது ஒரு முஸ்லிமுக்கு அநியாயமாகத் தூக்கு தண்டனை விதித்து, அந்த உத்தரவில் என்னைக் கையெழுத்திடச் சொன்னால் நான் கையெழுத்திடத் தான் வேண்டுமா?'' என்று வினவியவர்களாகத் தாங்கள் அந்தப் பதவியை ஏற்க முடியாது என்று கண்டிப்பாகக் கூறி விட்டார்கள்.

இந்த மறுப்பு யஜீதின் ஆத்திரத்தைத் தூண்டிவிட்டது. இமாம் அபூ ஹனீபாவைக் கைது செய்துவந்து தினமும் பத்துக் கசையடிகள் கொடுக்கச் செய்தார். ஆனால், இமாமவர்கள் உறுதி இதனாலெல்லாம் அதிகப்பட்டதேயன்றி குறையவில்லை. சில நாட்களில் தன் தோல்வியை உணர்ந்த யஜீது இமாமவர் களை விடுதலை செய்யும்படி உத்தரவிட்டார். விடுதலையான இமாமவர்கள் உடனே மக்கா புறப்பட்டுப் போனார்கள், ஹிஜ்ரி 136 வரை அவர்கள் அங்கேயே தங்கிவிட்டார்கள்.

இதற்கிடையே இஸ்லாமிய உலகமே அரசியலில் ஒரு சிறிய பிரளயத்தைக் கண்டுவிட்டது. ஹஜ்ரத் அலீ (ரலி)யின் வாரிசாகக் கிலாபத்துக்கு உரிமை கொண்டாடிய ஜைது கொல்லப்பட்டதும், அவர் புத்திரரான யஹ்யா என்பவர் குரா ஸானுக்கு ஓடிப்போனார். அங்கே அவர் ஒரு கலகத்தில் கொல்லப்பட்டுப்போனார். இதனால், அப்பாஸியாக்களுக்குக் களையெடுத்தது போலாயிற்று; போட்டியில்லாது போயிற்று. ஆட்டங்கண்டு கலகலத்து நின்ற உமைய்யா ஆட்சியை ஒரே நொடியில் வீழ்த்திவிட்டனர். அப்பாஸியா வாரிஸான முஹம் மது என்பவர் ஹிஜ்ரி 115ல் காலமாகும் தருவாயில், அவருடைய நான்கு புதல்வர்களான இப்ராஹீம், அப்துல்லாஹ், அபுல் அப்பாஸ், அபூ ஜஃபர் என்பவர்கள் ஒருவர்பின் ஒருவாக வாரிஸாக வேண்டும் என்று வஸியத் செய்திருந்தார். உமையாக்களிடம் சிக்கிய இப்ராஹீம் கொல்லப்படவே அவர் சகோதரர் அப்துல்லாஹ் அபுல் அப்

பாஸ், அப்பாஸியாக் கிலாபத்தின் வாரிசாக ஆனார். பக்தாதில் உமையாக் கலீபா இரண்டாவது மர்வான் ஆட்டங்கண்ட நிலையில் தத்தளித்துக் கொண்டிருந்தபோது, இமாம் அபூ ஹனீபாவின் ஊரான கூபாவில் ஹிஜ்ரி 132 ரபீயுல் ஆகிர் கடைசி வெள்ளிக்கிழமையன்று அப்துல்லாஹ் அபுல் அப்பாஸ் இஸ்லாமிய உலகின் கலீபாவாகத் தம்மைப் பிரகடனம் செய்துகொண்டார். அதிலிருந்து ஐந்தாவது மாதம் (ரமலானில்) இவர் தமாஸ்கஸ் நகரையே கைப்பற்றி இஸ்லாமிய உலகின் கலீபாவாகப் பட்டமேற்றார். உமையாக்களின் கடைசி கலீபா இரண்டாம் மர்வான் தப்பியோடியும், கடைசியில் எகிப்தில் கண்டுபிடிக்கப்பட்டுக் கொல்லப் பட்டார். உமைய்யாக்களின் ஆட்சி தொண்ணூற்றொரு வருடங்கள் நடந்து முடிந்துவிட்டது. கலீபா அப்துல்லாஹ் அபுல் அப்பாஸ் முதலாவது அப்பாஸியாக் கலீபாவாக ஆனார்.

பனூ உமையாக்களிடம் நியாயம் கிடைக்கப்பெறாத ஜனங்கள் ஆட்சி மாறுதலால் அமைதியும், நிம்மதியும் உண்டாகும் என்று எதிர்பார்த்தனர். மகான்களையும், பெரியார்களையும் முன்னவர்கள் அவமரியாதை செய்து கொடுமைப்படுத்தியதால், நபிபெருமானின் வாரிசுகளை இழிவாக நடத்தியதால் ஆத்திரமடைந்திருந்த யாவரும், அவர்களெல்லாம் அப்பாஸியாக்களின் ஆட்சியில் நன்கு நடத்தப்படுவர் என்று எதிர்பார்த்தனர். எனவேதான், அவர்கள் ஆட்சிக்கு வருவதற்கு மிகுந்த ஒத்துழைப்பு நல்கினர். ஆனால், அப்பாஸியாக்களின் போக்கு, ஒரு எதேச்சாதிகாரம் ஒழிந்து மறு எதேச்சாதிகாரம் தொடங்கிய கதையாகவே விடிந்தது. ஆட்சிக்கு வந்த அப்பாஸியாக்கள் உமைய்யாப் பூண்டே இல்லாதபடி அழித்து ஒழிக்கலானார்கள். உமைய்யாக்களில் என்றோ செத்துப் புதைக்கப்பட்டுப் போனவர்களுடைய புதைகுழிகளையும்கூடத் தோண்டி உள்ளே இருந்த எலும்புகளைப் பொறுக்கிச் சேர்த்துச் சுட்டுச் சாம்பலாக்கி நெடுகிலும் தூவினர். ஆட்சி கிடைத்துவிட்ட வெறியால், அதை நிலைநாட்ட வேண்டும் என்ற திகிலில் பயங்கரமான அடக்குமுறைகளைக் கையாண்டனர். முதலாவது

அப்பாஸியாக் கலீபா தன் எதிரிகளைக் கருவறுத்த பயங்கர முறையால் 'ஸப்பாஹ்' என்ற பட்டப் பெயர் பெற்றார். இவர் ஆட்சிபீடத்தை ஸிரியாவிலுள்ள தமாஸ்கஸைவிட்டு, இராக்கிலுள்ள பக்தாதுக்கு மாற்றினார். இவ்விதம் ஆட்சிசெய்த பரம்பரை மாறியதுடன், தலை நகரமும் மாறிற்று. இவர் (அப்துல்லாஹ் அபுல் அப்பாஸ்) ஹிஜ்ரி 136 துல்ஹஜ்ஜில் காலமானார். உடனேயே இவருடைய தந்தையார் முஹம்மதின் வஸியத்துப்படி இருவடைய சகோதரரான அபூ ஜஃபர், அல் மன்சூர் என்ற பட்டத்தோடு கலீபாவானார். இவர்தான் பின்னர் புகழ்பெற்ற பக்தாத் நகரையே ஒரு தலையான பட்டணமாகத் திட்டமிட்டு நிர்மாணித்தார். இவர் நல்லியல்பும், தீய தன்மையும் கலந்த ஒரு மனிதராக விளங்கினார். இவர் வெற்றிகள் பல கண்டார். தம் எதிரிகளையெல்லாம் திட்டமிட்டுக் கொன்று தொலைத்தார். தமது ஆட்சிக்கு இடைஞ்சலாக இருந்தவர்களையெல்லாம் அப்புறப்படுத்தினார். தமது குடும்பத்தார்கள் ஆட்சிக்கு வருவதற்காகத் தன் தகப்பன் காலத்திலிருந்தே தீவிரப் பிரசாரம் செய்து ஜனங்களிடை ஆதரவு தேடியதுடன், சகலவிதமான சூழ்ச்சிகளையும் கையாண்டு கடைசியில் அப்பாஸியாக்களை அரியணையிலேற்றிய அபூ முஸ்லிம் என்ற இஸ்பஹானியரைத் தன் அவையிலேயே வைத்துக் கொலை செய்யும்படி செய்தார்.

இந்தக் கலீபா செய்த அட்டூழியங்களில் மிகவும் மோசமானது நபிபெருமானாரின் குடும்பத்தாரை இவர் கொன்றொழித்ததுதான். இமாம் ஹுஸைனின் பேரப் பிள்ளைகளில் ஒருவரான ஜைது என்பவர் உமையாக்களோடு மோதி மாண்டதுபற்றியும், அவர்களுடைய புத்திரர் யஹ்யா குராஸானுக்கு ஓடிச்சென்று அங்கே ஒரு போரில் கொல்லப்பட்டதுபற்றியும் முன்னமேயே குறிப்பிட்டுள்ளோம். இவர்களையன்றி இமாம் ஹஸனின் வமிசத்தார்களும், இமாம் ஹுஸைனின் வமிசத்தார்களும் (அதாவது, இமாம் ஜெய்னுலாபிதீனின் பேரப்பிள்ளைகள்) இதுவரை எந்த அரசியல் இயக்கத்திலும் கலக்காமல் ஒதுங்கியே வாழ்ந்துவந்தனர். அவர்களுக்கு ஆட்சியாளர்கள் தந்த தொல்லைகளிடையிலும்

அவர்கள் மிகுந்த சகிப்புடன் இருந்து வந்தனர். இந்த இரண்டு கூட்டத்தாரும் மதீனாவிலேயே வாழ்ந்தனர். இவர்களுக்கு அங்கே ஜனங்களிடை மதிப்பும் மரியாதையும் கிடைத்துவந்தது.

உமைய்யா ஆட்சி ஆட்டங்கண்டு விழவிருந்த தருணத்தில் தான் நபிபெருமானாரின்குடும்பத்தினரான இவர்கள்அப்போது தாங்கள் சும்மா இருக்க இயலாது என்று கண்டு மதீனாவில் ஒரு கூட்டத்தைக் கூட்டினர். அதில் மற்ற பனூஹாஷிம் குடும்பத்தாரும் கலந்துகொண்டனர். அப்போது அபூ ஜஃபர் (பின்னர் கலீபா மன்ஸூர் ஆன இதே நபர்தான் பனூ ஹாஷிம் ஆனதால்) அந்தக் கூட்டத்துக்கு வந்தார். அங்கே இமாம் ஹஸனின் பௌத்திரர்களில் ஒருவரான முஹம்மது என்ற இளைஞர் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய அப்பழுக்கற்ற ஒழுக்கம் காரணமாக அவர் 'நப்ஸுஸ் ஜகிய்யாஹ்' (பரிசுத்த ஆத்மா) என்று பட்டம் பெற்றிருந்தார். அவருக்கு விஸ்வாசப் பிரமாணம் செய்தவர்களுள் இந்த மன்ஸூரும் ஒருவர். ஆனால், கடைசியில் கிலாபத்தே இவர் சகோதரர் கையில் சிக்கி அப்பாஸியா ஆட்சி ஆரம்பித்து விட்டது. எனவே, மன்ஸூர் கலீபாவானதும் இந்த முஹம்மதையும், இவர் சகோதரர் இப்ராஹீம் என்பவரையும் பிடித்துத் தொலைத்துவிடத் திட்டமிட்டார். அவர்கள் தப்பிவிடவே, அவர்களுடைய குடும்பத்தார்கள் அனைவரையும், இப்ராஹீமுக்குப் பெண் கொடுத்த மாமனார் ஆன முஹம்மதுல் உதுமானி (இவர் கலீபா ஹஜ்ரத் உதுமானின் பௌத்திரராவார்) யையும் கைது செய்து விலங்கிட்டுக் கூபாவுக்குக் கொண்டுபோகச் செய்து அங்கே ஹாஷிமிய்யா என்ற கோட்டையுள் சிறை வைத்தார். அங்கே அவர்கள் பலவிதமாகச் சித்திரவதை செய்யப்பட்டனர். முஹம்மதுல் உதுமானி கொல்லவும்பட்டார். இதற்கிடை முஹம்மது மதீனாவில் ஒரு படையுடன் தோன்றி அங்கே தம்மைக் கலீபாவாகப் பிரகடனம் செய்தார். அச்சமயம் மக்காவில் வாழ்ந்திருந்த இமாம் மாலிக்கும், கூபாவிலிருந்த இமாம் அபூ ஹனீபாவும் இவரை இஸ்லாமிய உலகின் கலீபாவாக

ஏற்றுக்கொண்டனர். ஆனால், மன்ஸூர் அனுப்பிய பெரும் படை விரைவிலேயே முஹம்மதுடன் மோதி அவரைக் கொன்று அவர் ஆதரவாளர்களை நாசம் செய்தது. அதன்பின் முஹம்மதின் சகோதரர் இப்ராஹீம் ஒரு பெரும்படையுடன் கூபாவைக் கைப்பற்றி அங்கே தம்மைக் கலீபாவாகப் பிர கடனப்படுத்தினர், இவரை எதிர்க்கவும் மன்ஸூர் ஒரு பெரும் படையை அனுப்பினர். அந்தப் படை யூப்ரடீஸ் ஆற்றுக்கரையில் இப்ராஹீமின் படையைச் சந்தித்தது. இப்ராஹீம் ஓர் ஆலிமாயும், இனிய சுபாவம் படைத்தவராயுமிருந்ததால் கூபாவிலுள்ள ஆலிம்கள் யாவரும் அவருக்கு ஆதரவு நல்கினர். அவருடைய படையில் பல்வேறிடங்களிலுமிருந்து வந்த பல்லாயிரம் ஆலிம்கள் இருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

இமாம் அபூ ஹனீபா, மன்ஸூரின் கொடுமையையும், முஹம்மது நசுக்கப்பட்ட விதத்தையுங் கண்டு மிகுந்த வேதனையடைந்திருந்தார்கள். அவர்களுக்கு இப்ராஹீம் இப்னு மைமூன் என்றொரு நண்பருண்டு. அவரும் பயபக்திமிக்க ஆலிமாக இருந்தார். அவர் ஒருநாள் இமாமவர்களைக்கண்டு ''நாம் இந்தக் கொடுமைகளைக் கண்டும் பேசாமல்தான் இருக்கவேண்டுமா!'' என்று ஆத்திரத்தோடு கேட்டார். இமாமவர்கள், ''நண்பரே, ஆத்திரப் பட்டுப் பயனென்ன? தடுக்கத்தான்வேண்டும். ஆனால், அதற்கான சந்தர்ப்பமும், சாதனங்களும் வேண்டாமா?'' என்று கூறி அவரைச் சமாதானப்படுத்தினர்கள். ஆனல், சில நாட்களுக்கெல்லாம் மன்ஸூரின் கையாட்கள் (மன்ஸூராலேயே பின்னால் கொலை செய்யப்பட்ட அபூ முஸ்லிம்தான் என்றும் சொல்லப்படுகிறது) இந்த இப்ராஹீம் இப்னு மைமூன் என்ற முதியவரைக் கொலை செய்துவிட்டனர். இதைக் கேள்வியுற்ற இமாமவர்கள் மிகுந்த மனவேதனையடைந்தார்கள். எனவே, முஹம்மதின் சகோதரர் இப்ராஹீம் கூபாவில் புரட்சிக்கொடி தூக்கியதும், அதை ஆதரித்த உலமாக்களுள் இமாம் அபூ ஹனீபாவும் ஒருவராவர்கள். மற்ற ஆலிம்களைப் போல தாங்களேகூடப் போர்க்களம் போக அவர்கள் துடி துடித்தார்கள் என்றும், தங்களிடம்

ஜனங்கள் கொடுத்த அமானிதப் பொருள்கள் இருந்தமையால் அவர்கள் போக முடியவில்லை என்றும் சொல்லப்படுகிறது. இப்ராஹீமுக்கு அவர்கள் நாலாயிரம் திர்ஹம் அன்பளிப்பாக அனுப்பினார்கள் என்றும், தாங்கள் அவருக்கு எழுதிய கடிதத்தில், ''உங்களுக்கு வெற்றி கிட்டிவிட்டால் உங்கள் தந்தையார் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் ஸிப்பீன் போரில் எதிரிகளிடம் நடந்துகொண்ட முன்மாதிரிப்படி நீங்களும் நடந்துகொள்ளவேண்டும். அதாவது, புறமுதுகு காட்டி ஓடுபவர்களையும், காயப்பட்டுக்கிடப்பவர்களையும் கொன்றுவிடுவதுடன், உங்கள் தந்தையார் ஜமல் (ஒட்டகை) போரில் செய்ததுபோல் செய்துவிடாதீர்கள்!'' என்று யோசனை கூறினார்களென்றும் சொல்லப்படுகிறது ஆனால், இவ்விதம் அவர்கள் கடிதம் எழுதினார்களா என்பதற்கு ஆதாரம் காண இயலவில்லை என்று நூலாசிரியர்கள் பலர் கூறுகின்றனர்.

ஒன்று மட்டும் நடந்தது உண்மை. இதில் கண்ட வாசகப்படி இப்ராஹீம் நடந்து கண்டிப்பான முறையில் யூப்ரடீஸ் ஆற்றங்கரையில் போராடியிருப்பின் சரித்திரத்தின் போக்கே மாறிவிட்டிருக்கும்; ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் வமிசத்தார் கிலாபத்தை ஏற்றிருப்பர்; அப்பாஸியா ஆட்சி அற்பாயுளுள்ளதாக அழிந்துபட்டிருக்கும். அப்பாஸியாப் படையை இப்ராஹீமின் படை எதிர்த்து நின்று போராடி முதலில் வெற்றி கண்டது. அப்பாஸிகள் புறமுதுகு காட்டி ஓடலாயினர். அவர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் காய முற்றுக் கீழே விழுந்துவிட்டனர். இந்த இடத்தில் இப்ராஹீம் இமாம் அபூ ஹனீபா பிரஸ்தாபக் கடிதத்தில் சுட்டிக்காட்டியுள்ள போர்முறையைப் பின்பற்றி புறமுதுகு காட்டியவர்களையும், கீழே விழுந்தவர்களையும் மூர்க்கத்தோடு வெட்டி வீசியிருந்தால் அவரே வெற்றிக்கொடி நாட்டியிருப்பார். ஆனால், அவர் அவ்விதம் செய்யாது அனுதாபத்துடன் தமது படையைத் தடுத்து நிறுத்தினார். இதைக் கவனித்த அப்பாஸியாப் படைகள் திடீரெனத் திரும்பிவந்து இப்ராஹீமின் படையைத் தாக்கலாயினர். அற்ப சொற்பமாகக் காயம்பட்டு உயிர் தப்புவதற்காகக் கீழே விழுந்துகிடந்த அவர்களுடைய ஆட்களும்

ஆயிரக்கணக்கில் எழுந்துவிட்டனர். இந்தத் திடீர் தாக்குதலை சமாளிக்க இயலாது இப்ராஹீமின் படை திணறியது. இப்ராஹீமின்மீது ஓர் அம்பு பாய்ந்து அவர் இறந்துவிட்டார். உடனே அவருடைய படையினர் நாசமாக்கப்பட்டனர். இது நடந்தது ஹிஜ்ரி 145 துல்கஃதா இருபத்தி நான்காம் நாளி லாகும்.

இதைத் தொடர்ந்து இப்ராஹீமுக்கு ஆதரவளித்த ஸிரியர்களெல்லாம் சித்திரவதைக்கு உள்ளாக்கப்பட்டனர். பஸராவைச் சேர்ந்த பெரியார்கள் பலர் இவ்விதம் தலை சீவப் பட்டனர். அவர்களுடைய வீடுகள் தரைமட்டமாக்கப்பட்டன. அவர்களுடைய பேரீச்சந் தோப்புகளும் பொட்டலாக்கப் பட்டன. மதீனாவிலே வாழ்ந்த இமாம் ஹஸன்-இமாம் ஹுஸைன் வமிசத்தினர் அனைவரும் தங்கள் சொத்து சுகங் களை இழந்தனர். அவர்களுக்கு எகிப்திலிருந்து மாமூலாக வரும் உணவுப் பொருள்களும் தடுக்கப்பட்டன. அவர்களுள் மதிப்புக்குரிய இமாம் ஜஃபருஸ் ஸாதிகும் ஒருவராவார்கள். அவர்களுடைய உடைமைகளும் பறிமுதலாயின. அவற்றை அவர்கள் தமக்குத் திருப்பித் தரும்படி கேட்டபோது, அந்த மகானையே கொன்றுவிடுவதாக கலீபா மன்ஸூர் மிரட்ட லானார். இமாம் மாலிக்கும் இதனால் பாதிக்கப்பட்டார்கள். கூபாவிலுள்ள ஹுபைராக் கோட்டையுள் அடைபட்டிருந்த நபி பெருமானார் வமிசத்தவரில் பலர் தலைசீவப்பட்டும், மற்ற வர்கள் நஞ்சூட்டப்பட்டும் மாண்டனர். யூப்ரடீஸ் நதிக் கரையில் வீரமரணமடைந்த இப்ராஹீமின் தலையைக்கொய்து, அப்போது மதீனாவில் உயிரோடு ஜீவித்திருந்த அவருடைய முதிய தந்தை அப்துல்லாஹ்வுக்கு மன்ஸூர் அனுப்பி வைத்தார். அந்த முதியவர் தமது துயரைத் தாங்கிக் கொண்டு, ''நமக்கிடையில் நியாயம் வழங்கவிருக்கும் நிரந்தர நீதிபதிமுன் நாம் சென்று நிற்கப்போகும் நாள் தூரத்திலில்லை என்பதை உன் எஜமானனிடம் கூறு'' என்று தமது புத்திரன் தலையைக் கொணர்ந்த மன்ஸூரின் பணியாளிடம் கூறி அனுப்பினார்.

## பதவி மறுப்பும், சிறைவாசமும்

இந்தத் தொல்லைகள் யாவும் இமாம் அபூ ஹனீபா வின் வாழ்க்கையிலும் பயங்கரமாக எதிரொலித்ததால் தான் இதுபற்றி இங்கே இவ்வளவு விரிவாக எழுத நேர்ந்தது. இமாம் அபூ ஹனீபா முதலில் முஹம்மதையும், பின்னர் அவர் சகோதரர் இப்ராஹீமையும் ஆதரித்துள்ளதால் கலீபா, அவர்களைத் தண்டிக்க நாடினர். ஆனால், மற்றவர்கள் விஷயத்தில் கையாண்ட நடைமுறைகளை உலக மேதையான இவர்களுடைய விஷயத்தில் கையாளாமல் வேறொரு நடைமுறையைக் கையாண்டார். உமையாக்களின் ஆட்சியில் இரண்டாவது மர்வானின் பிரதிநிதி யஜீது இப்னு உமர் இமாமவர்களை நீதிபதியாக நியமித்ததையும், அதை அவர்கள் ஏற்க மறுத்ததையும், அதற்காகச் சிறை சென்று, கசையடி கொடுக்கப் பட்டதையும் கலீபா மன்ஸூர் அறிவார். எனவே, இமாமவர்களை அழைத்துவந்து அது போன்றே தமது ஆட்சியில் பிரதம நீதிபதிப் பதவியை ஏற்குமாறு கேட்க வேண்டும், அவர்கள் அதற்கு இணங்கமாட்டார்கள், அதனால், அவர்கள் தம்மை அவமதித்த குற்றத்துக்காகச் சிறை செய்யப் பட்டார்கள் என்று காரணங் காட்டி அவர்களை விரும்பியவிதம் தண்டித்துக்கொள்ளலாம் என்று அவர்திட்டமிட்டார். இதனால் (மக்காவில் சில காலமிருந்தபின் கூபா வந்துவிட்ட) இமாம் அபூ ஹனீபா பக்தாத் வந்து கலீபாவைக் காணவேண்டும் என்று மரியாதையான உத்தரவு ஒன்று சென்றது. அதன்படி அவர்கள் புறப்பட்டு வந்தார்கள்.

இமாம் அபூ ஹனீபா, கலீபா மன்ஸூரின் அவையில் நுழையும் வாயிலில் நின்ற அதிகாரி, ''இன்றைய உலகிலேயே மாபெரும் அறிஞரும், இமாமுமான அபூ ஹனீபா வருகிறார்கள்'' என்று கட்டியங் கூறினர். இமாமர்களுக்கு மரியாதையான ஆசனமும் அளிக்கப்பட்டது. இமாமவர்கள் யார்யாரிடம் கல்வி பயின்றுள்ளார்கள் என்பதுபற்றி அவர்களிடம் மன்ஸூர் வினவினர் அவர்கள் தங்கள் ஆசான்களுடைய பெயர்களையும், ஸஹாபாக்கள் வரைபோகும் அவர்களுடைய பரம்பரைகளையும்

கிரமமாகக் கூறினார்கள். சிறிது நேரம் மௌனமாக இருந்த பின்னர், ''அபூ ஹனீபா நீங்கள் பிரதம நீதிபதிப் பதவியை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று கலீபா மன்ஸூர் கூறினார்.

தங்கள் தலைக்குமேல் கத்தி ஆடுவதை இமாமவர்கள் உணர்ந்தார்கள். சத்தியத்துக்காகவே வாழ்ந்த சான்றோர் ஆன இமாமவர்கள் சற்றும் தயக்கமின்றி, ''நான் அந்தப் பதவிக்கு அருகதையற்றவன்'' என்று கூறினார்கள். இந்தப் பதில் மன்ஸூருக்கு ஆத்திரத்தை உண்டாக்கிற்று ''அபூ ஹனீபா, நீங்கள் பொய் சொல்கிறீர்கள்" என்று அவர் கர்ஜித்தார். இமாமவர்கள் மீண்டும் மிகவும் அமைதியான முறையில், ''நீங்கள் கூறுவது போல நான் ஒரு பொய்யனானால், ஒரு பொய்யனை எப்படி நீங்கள் நீதிபதியாக நியமிக்க முடியும்?" என்று வினவினார்கள். கலீபா பேச்சற்றுவிட்டார்.

இமாமவர்கள் மேலும் சொன்னார்கள்; ''நான் அல்லாஹ்வுக்கு முன்பு மட்டுமே தலைசாய்ப்பவன். அதிகாரிகள் முன் தலைசாய்க்க என்னால் முடியாது. நீங்கள் தரும் நீதிபதிப் பதவியை ஏற்றால் அவ்விதம் தான் தலை சாய்க்க நேரும். எனவே, ஒருக்காலும் நான் அதை ஏற்க முடியாது."

கலீபா மன்ஸூரின் ஆத்திரம் கரைகடந்து போயிற்று. ''சத்தியமாக, நீங்கள் இப்பதவியை ஏற்றுத்தான் ஆக வேண்டும்" என்று அவர் சப்தமிட்டார். இமாமவர்கள் தங்கள் சாந்தமான, ஆனால் உறுதியான குரலில், ''சத்தியமாக, நான் அதை ஏற்க முடியாது'' என்று பதிலளித்தார்கள். முதலில் அவர்கள் உள்ளே வருவதைக் கட்டியங் கூறித் தெரிவித்த அதிகாரி அவர்கள் அருகில் வந்து, ''அபூ ஹனீபா, அமீருல் மூமினீனுக்கு எதிரிலா சத்தியம் செய்கிறீர்கள்?" என்று கோபத்தோடு வினவினார். ''ஆம், நாங்கள் இருவருமே சத்தியம் செய்தோம். ஆனால், சத்தியத்துக்குரிய அபராதத்தைக் கொடுப்பது என்னைவிடக் கலீபாவுக்கு இலகுவானது தானே!'' என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

உடனே, தமது நியமனத்தை ஏற்க மறுத்து, தம் ஆட்சியையே அவமதித்த குற்றத்துக்காக இமாமவர்களைச்

சிறையிலிடும்படி கலீபா உத்தரவிட்டுவிட்டார். இவ்விதம் அவர்கள் ஹிஜ்ரி 146ல் அதாவது தங்களுடைய அறுபத்து ஆறுவது வயதில் சிறை வாசத்தை ஏற்க நேர்ந்தது. இமாம வர்களைத் தான் கைது செய்தது அவர்கள் தம்மை அவமதித்த தற்குத்தான், அவர்கள்மீது பழிவாங்குவதற்காகவல்ல என்று காட்டுவதுபோல சிறையில் அவர்கள் ஓரளவு வசதியுடன் இருக்க கலீபா அனுமதித்தார். அவர்களைக் காணச் செல்ப வர்கள் போய்க் கண்டு செல்லவும் அனுமதி தரப்பட்டது, ஆனால், யாரையும் வெகு விழிப்போடு கவனிக்க நெடுகிலும் ஒற்றர்களையும் நியமித்துவிட்டார். புதிய தலைநகரமான பக்தாத் இஸ்லாமிய உலகம் முழுவதிலுமுள்ள அறிஞர்களை அங்கே ஈர்த்துக்கொண்டிருந்தது. இப்படி வந்தவர்களுள் பலர் இமாம் அபூ ஹனீபாவையும் வந்து கண்டு சென்றனர், அவர்களுடைய மாணவர்கள் சிலர் அடிக்கடி அவர்களிடம் வந்து தங்களுடைய சந்தேகங்களுக்கு விடை பெற்றுச் சென்ற னர். இதனால், சிறையினுள்ளேயே இமாம் அபூ ஹனீபா தங்கள் பாடபோதனையைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருந் தார்கள் என்று நூலாசிரியர்கள் சிலர் எழுதியுள்ளனர்.

## இமாமவர்களின் வீர மரணம்

வருடங்கள் சில இவ்விதம் சென்றன. கலீபா மன்ஸூருக்கு இமாமவர்களைச் சிறையில் வைத்தே கண் காணிப்பது பெருத்த பாரமாக ஆகிக்கொண்டு வந்தது. எனவே, சுலபமான முறை யில் அவர்களைத் தமது கண் காணிப்புத் தேவைப்படாத இடத் துக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தார். அந்த முறையை அவர் கூபாவில் பல ஸாதாத்துகளின்மீது பிரயோகித்து அனுபவப்பட் டிருந்தார். அதுதான் அவர்களுடைய உணவில் விஷம் கலப்ப தாகும். நபிபெருமான் போன்றே தோற்றமுடைய அவர்கள் அருமைப் பேரர் இமாம் ஹஸன் (ரலி), உலகப் புகழ் பெறும் விதமாக ஆட்சியிலிருந்தும் துறவியாக வாழ்ந்த உமர் இப்னு அப்துல் அஜீஸ் ஆகியவர்களைப் போல, அறிவுப் பொக்கிஷம் இமாம் அபூ ஹனீபாவும் விஷம் தலைக்கேறி இறந்தார்கள். (இன்னாலில்லாஹி-வ-இன்னா இலைஹி-ராஜிஊன்) மன்ஸூர்.

ரின் பல படுபாதகச் செயல்களின் சிகரமாக அமைந்தது, அவர் இமாமுல் அஃலம்-உலகின் மாபெரும் அறிஞர்-முதிய வயதை எய்திய மகான்-அபூ ஹனீபா அவர்களுக்கு உணவில் விஷ மூட்டச் செய்தது. தமது குடும்பம் ஆட்சிக்கு வர முழுக் காரணமுமாக இருந்து வாழ்நாளெல்லாம் பாடு பட்ட அபூ முஸ்லிம் இஸ்பஹானியையே நயவஞ்சகமாகக் கொன்ற இந்த கலீபா மன்ஸூரைப் பொறுத்தவரை இது மிகவும் அற்பமான விஷயமாக இருக்கலாம். கழுவ முடியாத கறைபடிந்த அவர் ஆட்சியில் இது பெருத்த கறையாகச் சேர்ந்து கொண்டது.

நஞ்சு கலந்த உணவை உண்ட இமாமவர்கள் நஞ்சு தங்கள் உடலில் வேலை செய்வதை உணர்ந்து கொண்டார்கள். இனித் தங்களுடைய சாந்திபெற்ற நல்லாத்மா அல்லாஹ்வின் சந்நிதியை நோக்கிச் சென்றுவிடும், அனியாயக்காரர்களின் விஷ மூச்சைவிட்டே அப்பாலேகிவிடும் என்பதை உணர்ந்தவர் களாகத் தங்கள் சிரசை ஸஜ்தாவில் வைத்துவிட்டார்கள். அந்த நிலையில்தான் அவர்களுடைய புனித ஆவி பிரிந்தது. அவர்கள் காலமானது ஹிஜ்ரி 150 ஷஅபான் மாதம் இரண் டாம் நாள் (கி. பி. 766ல்) ஆகும்.

இமாமுல் அஃலம் காலமாகிவிட்ட செய்தி வெகு துரித மாகம் பக்தாத் முழுவதும் பரவிவிட்டது. அவர்களுடைய பூத உடலை நல்லடக்கம் செய்வதற்காக நகர் முழுவதுமே திரண்டு வந்துவிட்டது, பக்தாத் நகரின் தலைமை நீதிபதியான ஹஸன் பின் அம்மா என்ற பெரியார் முன்னின்று இமாமவர் களின் உடலைக் குளிப்பாட்டினர். "ஆண்டவன்மீது ஆணை யாக, அபூ ஹனீபா, நீங்கள் மாபெரும் ஃபகீஹ் (ஃபிக்ஹு சட்ட நிபுணர்); ஈடிணையற்ற ஆபிது (வணக்கவாளி); அப் பழுக்கற்ற ஜாஹிது (மெய்த் துறவி); உங்களிடம் உத்தம குணங்கள் யாவும் நிறைந்துள்ளன, யாரும் சென்றடைய முடியாத படிவத்தை அடைந்துவிட்டீர்கள்" என்று பிரலாபித் தவாறு அந்தப் பெரியார் இமாமவர்களின் உடலைக் குளிப் பாட்டினர்.

இமாமவர்களுடைய உடல் ஜாமிஆ மஸ்ஜிதுக்குக் கொண்டு செல்லப்பட்டதும் முதல் தடவை நடத்தப்பட்ட

ஜனாஸாத் தொழுகையில் மட்டும் ஐம்பதாயிரம் பேர்கள் கலந்து கொண்டனர். பக்தாதுக்கு அருகாமையிலுள்ள ஊர்களிலிருந் தும் ஜனத்திரள் வந்து குழுமவே பல தடவை ஜனாஸாத் தொழுகை நடத்தப்பட்டது, அவர்கள் நல்லடக்கம் செய்யப் பட்ட பின்னரும் தொடர்ந்து இருபது நாட்கள் ஜனங்கள் திரண்டு வந்து அவர்களின் அடக்கஸ்தலத்தைத் தரிசித்துச் சென்றனர்.

இமாம் அபூ ஹனீபாவின் பூத உடல் பக்தாதிலேயே ஆக்கிரமிக்கப்படாத இடம் என்று பெயர் பெற்ற கீஜ்ரான் என்ற இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது. அன்றி லிருந்து இன்றுவரை இந்த மகா மேதையின் அடக்கஸ்தலம் உலக முஸ்லிம்கள் சென்று தரிசித்து வரும் புண்ணிய இடமாக ஆகியுள்ளது. பின்னர் வந்த கலீபா அலப் அர்ஸலான் ஹிஜ்ரி 459ல் இமாமவர்களின் அடக்கஸ்தலத்தின்மீது 'குப்பா' ஒன்றைக் கட்டினார். அத்துடன் கலாசாலை ஒன்றையும் நிர் மாணித்தார். பக்தாதில் முதன் முதலாக நிர்மாணிக்கப்பட்ட கலாசாலை இதுவாகவே விளங்கிற்று. ஏனெனில், நிஜாமுல் முல்க் கட்டிய நிஜாமிய்யாப் பல்கலைக் கழகம்கூட இதற்குப் பின்னரே நிறுவப்பட்டதாகும். இந்தக் கலாசாலை திறக்கப்பட்டபோது அந்த விழாவில் அபூ மஸ்ஊது என்பவர் பாடிய ஒரு பாடலின் ஓர் அடியில்,

நீ அறியாயா
இங்கே தூங்கும் மகான் யாரென்று?
புழுதியில் விழுந்துகிடந்த கலாஞானத்தைச்
சீர்செய்து கைதூக்கிவிட்டவர் இவர்

என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இந்தக் கலாசாலை 'மஷ்ஹத் ஹனீபா' என்ற பெயருடன் விளங்கிற்று. சிலகாலம் இது மிகவும் பிரபலமானதாகத் திகழ்ந்தது.

இமாமுல் அஃலம் காலமான சமயம் பல்வேறு நாடு களிலும் பிரபலமான மார்க்க ஞானியர்கள் பலர் வாழ்ந்து

கொண்டிருந்தனர். இமாமவர்கள் காலமான செய்தி கேட்டு அவர்கள் யாவரும் அதிர்ச்சியடைந்துவிட்டனர். அவர்களில் இமாமவர்களுக்குப் பாடபோதனை செய்த பெரியார்கள் கூடச் சிலர் இருந்தனர். இமாமவர்களின் ஆசிரியர்களுள் ஒருவரும் பஸராவின் இமாமுமான ஷுஃபா அவர்கள் இச்செய்தி கேட்டதும் ''கூபா இருண்டு போயிற்று" என்று கூறினர்கள். மக்காவில் பிரபலமான பெரியாராக இருந்த இப்னு ஜரீஹ் அவர்கள், ''அல்லாஹ் மீது ஆணையாக, மாபெரும் ஆலிம் ஒருவர் நம்மை விட்டுப் போய்விட்டார்'' என்றுர்கள்.

''இமாமவர்கள் காலமானபின் அவர்களைக் கனவில் கண்டு, 'அல்லாஹ் உங்களை எவ்வாறு நடத்தினன்?' என்று நான் கேட்டேன். உடனே அவர்கள் மகிழ்ச்சியுடன், 'அல்லாஹ் என் பாவங்களை மன்னித்தான்' என்று கூறினர்கள்" என்று ஜஃபரிப்னு ஹஸன் என்ற பெரியார் தெரிவிக்கிறுர்கள்.

## இமாமவர்களின் சந்ததியார்

இமாமவர்கள் இறக்கும்போது அவர்களுடைய புத்திரர் ஹம்மாது ஒருவரையன்றி வேறு புத்திரர்கள் யாருமிருக்கவில்லை. பொதுவாகவே, அவர்களுக்கு வேறு புத்திரர்களோ, புத்திரியோ இல்லை என்றுதான் பல்வேறு நூலாசிரியர்களும் கூறுகிறுர்கள். தமது குருநாதரின் பெயரைத் தம் புதல்வருக்கு வைத்திருந்த இமாமவர்கள் அவரைச் சிறந்த முறையில் வளர்த்திருந்தார்கள். அவருக்கு 'பிஸ்மில்லாஹ்' தொடங்கும்போது அதைத் தொடங்கிவைத்த ஆசிரியருக்கு மட்டும் ஐநூறு திர்ஹம் அன்பளிப்பாகக் கொடுத்தார்கள், உயர்தரப் பாடங்களையெல்லாம் இமாமவர்களே தமது புத்திரருக்குப் போதித்தார்கள். ஹம்மாது நற்கலைகள் பலவும் கற்ற அறிஞராக விளங்கினர். இவர் தமது தந்தையார் இறந்ததும் அவர்களிடம் பலராலும் ஒப்படைக்கப்பட்டிருந்த அடைக்கலப் பொருள்களையெல்லாம் எடுத்துச்சென்று பக்தாதின் பிரதமக் காஜியான ஹஸன் பின் அம்மாவிடம் ஒப்படைத்து, அவற்றை அவரே உரிமைக்காரர்களிடம் சேர்ப்பிக்கும்படி கேட்டுக்

கொண்டார். காஜி அவற்றை அவரையே வைத்திருக்கும்படி கூறியபோது கூட அதற்கு இணங்காமல் அவைகளைக் காஜி யிடமே ஒப்படைத்து விட்டார். ஹம்மாது ஆட்சிபீடத்தோடு எந்தத் தொடர்பும் அற்றவராக வாழ்ந்திருந்து ஹிஜ்ரி 176ல் காலமானார்.

இமாம் அபூ ஹனீபாவின் புதல்வர் ஹம்மாதுக்கு நான்கு புதல்வர்கள் இருந்தனர். உமர், இஸ்மாயீல், அபூ ஹய்யான், உஸ்மான் என்ற நால்வரில் இஸ்மாயீல், மிகவும் பிரபலஸ்த ராகிக் கலீபா மாமூனுர் ரஷீதின் ஆட்சியில் பக்தாதின் பிரதான காஜியாகவும் வேலை பார்த்திருக்கிறார்.

இன்று இமாமவர்களின் பரம்பரையாக உலகம் முழுவதும் பலகோடி முஸ்லிம்கள் உள்ளனர். இமாமவர்கள் வகுத்துத் தந்த மத்ஹபை ஏற்று அதை அடியொற்றி நடப்பவர்கள் யாவரும் அவர்களின் சந்ததியார் தாம் அன்றோ!

## தோற்றமும் குண ஒழுக்கமும்

இமாமவர்கள் ஒல்லியான உடலும், நடுத்தரமான உயர மும் உடையவர்கள், தலை நிமிர்ந்த நடையுடையவர்கள். பாரஸிகப் பரம்பரைக்கேற்ற எடுப்பான நாசியும், கவர்ச்சிகர மான முகவசீகரமும் பெற்றிருந்ததோடு, அறிவின் விசா லத்தைக் காட்டும் அகன்ற நெற்றியும், அதில் தகத்தகத்த அற்புதமான ஒளியும் உடையவர்களாகவும் விளங்கினார்கள்.

அவர்களோடு உரையாடுபவர்கள் அவர்களை விட்டுப் பிரிந்து போகவே விரும்பாதபடி இனிமையாக பேசுவார்கள்.

இமாமவர்கள் சதாவும் உயர்தரமான உடையே அணிவார் கள். சில சமயங்களில் ஓரங்களில் அருமையான பூ வேலைப் பாட்டுடன் கூடிய மெல்லிய துணியாலான சட்டையையும் அணிவார்கள். "ஒரு சமயம் அவர்கள் சுமார் நானூறு ரூபாய் மதிப்புள்ள ஒரு சால்வையைப் போர்த்திக் கொண்டி ருந்ததை தான் பார்த்தேன்" என்று அவர்களுடைய மாணவர் களுள் ஒருவரான அபூ முதீர் கூறுகிறார். ஒரு சமயம் நஸ்ரு

கான் முஹம்மது என்பவர் அவர்களைப் பார்க்கப்போனூர். அப்போது அவர்கள் வெளியில் புறப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அவசரமாக, நஸ்ரு மேலே போட்டிருந்த போர்வையைக் கேட்டு வாங்கி மேலே போட்டுக்கொண்டு போனூர்கள். பின்னர் திரும்பி வந்தபின், அது மிகவும் மட்டரகமான போர்வையாக இருப்பதாகக் கூறி அதைத் திருப்பிக் கொடுத்தார்கள். அதை நஸ்ரு பன்னிரண்டு ரூபாய்க்கு வாங்கியிருந்தார். வேருெரு சமயம் இமாமவர்கள் எண்பது ரூபாய் மதிப்புள்ள போர்வையைப் போர்த்தியிருந்ததைத் தாம் பார்த்ததாகவும் இந்த நஸ்ரு கூறுகிருர்.

கலீபா மன்ஸூர் அப்பாஸியா அவையைச் சேர்ந்த உயர் தர அதிகாரிகளுக்கென்று விலை உயர்ந்த விசேஷமான தொப்பி ஒன்றை அணியுமாறு உத்தரவிட்டிருந்தார். இமாமுல் அஃலமவர்கள் அதே தொப்பியைத் தாங்களும் வாங்கி அணிந்திருக்கிருர்கள். அதுகண்டு மற்ற உலமாக்களே திகைத்திருக்கின்றனர். இத்தகைய தொப்பிகள் அவர்கள் வீட்டில் ஒரே சமயத்தில் ஏழு எட்டு இருக்கும்.

தாங்கள் நல்லமுறையில் உடுத்ததுடன், மற்றவர்களிலும் வசதி படைத்தவர்களை நல்லபடியாக உடைகள் வாங்கி உடுத்துமாறு அவர்கள் ஏவியிருக்கிருர்கள். ஒரு சமயம் இமாமவர்களைக் காணவந்தவர்களுள் வறியவராகத் தோற்றமளித்த ஒருவரும் இருந்தார். மற்றவர்கள் வெளியில் சென்றதும் இமாமவர்கள் அவரை அருகிலழைத்துத் தாங்கள் அமர்ந்திருந்த விரிப்பின் அடியிலிருந்து ஆயிரம் திர்ஹம் எடுத்து அவருக்குக் கொடுத்தார்கள். அந்த மனிதர் திடுக்கிட்டவராக, "நான் போதிய அளவு செல்வம் படைத்தவன். எனக்கு இது தேவையில்லை, மன்னிக்க வேண்டும்" என்று கூறினூர். அது கேட்ட இமாமவர்கள், "சகோதரரே, உங்கள் நல்ல நிலை கேட்டுப் பெரிதும் மகிழ்கிறேன். ஆனூல், பிறர் உங்களைக் கண்டு ஏழை என்று ஐயுறும் வகையில் ஏன் கோலம் போடுகிறீர்கள்? உங்கள் அந்தஸ்துக்குத் தக்கபடி நாணயமாக உடை உடுத்துங்கள்" என்று போதித்து அனுப்பினூர்கள்.

இமாமவர்கள் எந்தக் காரியத்துக்கும் சத்தியம் செய்வதை வெறுத்தார்கள். ஆனால், தங்களை மறந்து. ''சத்தியமாக!'' என்று சொல்ல நேர்ந்தாலும் அதற்காக ஒரு திர்ஹம் (கால் ரூபாய்) அபராதம் கட்டிவந்தார்கள். இது அதிகரிக்கவே ஒரு சமயம், ''இனி சத்தியம் செய்யத் தோன்றினால் ஒரு தீனார் (இரண்டரை ரூபாய்) அபராதம் கொடுப்பேன்'' என்று தீர்மானித்து அதன்படி நடந்து வந்தார்கள்.

இமாமவர்கள் இனிய சுபாவமுடையவர்கள். பிற்காலத்தில அவர்களைப் பற்றியும் கற்பனையான விஷயங்கள் பல சேர்ந்துவிட்டன. அவர்கள் நாற்பதாண்டுகள் இஷாவுக்குச் செய்த ஒலுவைக்கொண்டே ஸுபுஹுத் தொழுகையையும் தொழுதார்கள், தொடர்ந்து முப்பதாண்டுகள் நோன்பு பிடித்தார்கள் என்பனவும் அவ்விதம் கட்டி விடப்பட்டவைதாம். மேலும், ஒரு சமயம் கூபாவிலோடும் ஆற்றில் சந்தேகத்துக்கிடமான ஓர் இறைச்சித் துண்டு கிடப்பதைத் தின்றுதான் மீன்கள் ஜீவிக்கின்றன என்று கண்டு இமாமவர்கள் நீண்ட நாட்களாக மீன்கறியே உண்டதில்லையென்றும் ஒரு கதை சொல்லப்படுகிறது. இதுபோல் ஆட்டிறைச்சியிலும் ஒரு சமயம் அவர்களுக்கு ஐயமுண்டாகவே நீண்ட நாட்களாக ஆட்டிறைச்சியே சாப்பிடாமலிருந்தார்கள், மேலும் மாதத்தில் பத்தணா அளவுக்கே வீட்டுச் செலவு செய்தார்கள் என்று கூடக் கதைகளுண்டு.

இமாமவர்களின் குணாதியங்களைப்பற்றி ஒரு சமயம் கலீபா ஹாரூனுர் ரஷீது கேட்டபோது, அவருடைய பிரதான ஆலோசகராக இருந்த, இமாமவர்களின் தலையான சீடர் அபூ யூஸுப் (ரஹ்) அவர்கள் சொன்ன பதிலாவது; ''இமாமவர்கள் மிகவும் பேணுதலுடையவர்கள். ஆகாத கருமங்களை விட்டும் அப்பால் விலகிக்கொள்வார்கள். பெரும்பாலும் மௌனமாக இருப்பார்கள். ஆனால் சதாவும்சிந்தித்துக்கொண்டிருப்பார்கள். யாரேனும் ஒரு பிரச்சினைக்குப் பதில் கேட்டுவந்தால், அதற்கு மட்டும் பதிலளிப்பார்கள். ஒப்புற்ற கொடையுள்ளவர்; வாரிக்

மும் எதையும் வேண்டாதவர்கள்; ஆட்சியாளர்களின் பட்டம் பதவிகளைத் துச்சமாக மதித்தவர்கள். யாரைப்பற்றியும் புறம்பேசியே அறியாதவர்கள். ஒருவர் இல்லாத இடத்தில் அவரைப் பற்றிப் பேச்சு வந்தால் அவரைக் கண்ணியப் படுத்தியே பேசுவார்கள். தங்கள் திரண்ட செல்வத்தை யெல்லாம் தேவைப்பட்டோர்க்கு அள்ளி வழங்கியதுபோல, மாபெரும் அறிவுப் பொக்கிஷமான அவர்கள் தமது அறிவுச் செல்வத்தையும் கேட்டோர்க்கெல்லாம் வாரி வழங்கினார்கள்.''

இவ்விதம் இமாம் அபூ ஹனீபாவைப்பற்றி வருணிக்கக் கேட்ட கலீபா ஹாரூனுர் ரஷீது, ''இவையே உத்தம சீலர் (ஸாலிஹீன்)களின் நற்பண்புகளாகும்" என்று கூறினார்.

இமாம் அபூ ஹனீபா மிகவும் சுயேச்சையான போக்குடை யவர்கள். அவர்கள் காலத்து மார்க்க அறிஞர்களில் பெரும் பாலார் கலீபாவிடமிருந்தோ, அதிகாரிகளிடமிருந்தோ, செல் வர்களிடமிருந்தோ உபகாரச்சம்பளம் பெற்றுவந்தனர். அதை அவர்கள் இழிவாகவும் கருதுவதில்லை. இதற்கு இமாமவர் கள் விதிவிலக்காக விளங்கினார்கள். அவர்கள் யாரிடமிருந்தும் உபகாரச் சம்பளத்தையோ, அன்பளிப்பையோ விரும்பியது மில்லை, ஏற்றதுமில்லை. யாரிடமும் தயவு தாட்சண்யம் பாராட்டாது தங்கள் மனத்தில் பட்ட உண்மையை எடுத்துக் கூறவும் அவர்கள் தயங்கியதில்லை

கூபாவில் ஒரு சமயத்தில் கலீபாவின் நிர்வாக அதிகாரி யாகவிருந்த இப்னு ஹபீரா என்பவர் இமாமவர்களிடம் வந்து, ''தாங்கள் என்னிடம் அடிக்கடி வந்து கொண்டிருந்தால் எனக்குப் பேருபகாரமாக இருக்குமே!" என்று கூறியபோது, ''நான் உம்மிடம் வந்து என்ன செய்ய? நீர் தயவுகாட்டி என்னோடு பழகினால் உம் சொல்படி கேட்டு நடக்க நேருமோ என்ற அச்சம் எனக்குண்டு. அஃதேபோல் நீர் கடுமையாக நடந்து கொண்டால் எனக்கு அவமானமாகும். உம்மிடமுள்ள செல்வத்தில் எனக்கு விருப்பமில்லை. அதனால், நான் நீர் கேட்டபடி உம் இருப்பிடத்துக்கு வர இயலாதவனாக இருக் கிறேன்" என்று இமாமவர்கள் அவருக்குப் பதிலளித்து விட்டார்கள்.

கூபாவின் நிர்வாக அதிகாரியாக இருந்த யஜீத் இப்னு உமரிடம் அவர்கள் நடந்துகொண்ட கண்டிப்பான முறையை முன்னரேயே நாம் பார்த்திருக்கிறோம்.

கலீபா மன்ஸூர் இமாமவர்களைக் கைது செய்ய உத்தர விடுமுன்னரே அவர்களை அழைத்து ஒரு மார்க்கத் தீர்ப்புப் பெற நேரிட்டுள்ளது. அதாவது, அவருக்கும் அவர் மனைவி யான ஹூர்ர காத்தூனுக்குமிடையில் தகராறு ஒன்று உண் டாகியிருந்தது. அதாவது, தம் கணவர் தம் விஷயத்தில் நீதி யுடன் நடந்து கொள்ளவில்லை என்பது அவர் மனைவியின்கட்சி. இதில் தீர்ப்பளிக்க இமாமவர்கள், கலீபாவின் மாளிகைக்குச் சென்றார்கள். ஹூர்ர காத்தூன் ஒரு திரைக்குப்பின் மறைந் திருந்து கொண்டார்.

உடனே கலீபா மன்ஸூர் இமாமவர்களிடம் கேட்டார், ''இஸ்லாமியச் சட்டப்படி ஒருவன் எத்தனை பெண்களை மணக்க லாம்?'' என்று. இமாமவர்கள், ''நான்கு பெண்களை'' என்று பதிலளித்தார்கள். இது கேட்ட கலீபா எக்களிப்போடு தம் மனைவியை நோக்கி, ''கேட்டுக் கொண்டீரா!" என்றார். உடனே இமாமவர்கள், ''நான்கு மனைவிகளையும் சம நீதி யோடு வைத்துப் போஷிப்பவன் தான் நால்வரை மணந்து கொள்ளலாம். அதற்குச் சாத்தியமற்றவன் ஒரே மனைவியோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். அதற்கதிமாக மணந்து கொண்டு மனைவியரிடை சம நீதி வழங்காதவன் நேர்மையாள னாக மாட்டான்'' என்று கூறிவிட்டார்கள். இதைக் கேட்டதும் கலீபா மன்ஸூர் சோர்ந்து போனார். இமாமவர்கள் தாங்கள் தங்கியிருந்த இடத்தை அடைந்ததும், அங்கே பணியாள் ஒருவன் ஐம்பதாயிரம் திர்ஹங்கள் அடங்கிய பணப்பை யொன்றை ஒரு தட்டில் வைத்து மூடிக் கொணர்ந்து இமாமவர் களிடம் சமர்ப்பித்து, ''தங்கள் அடிமைப்பெண் (மன்ஸூரின் மனைவி) தங்களுக்கு ஸலாம் சொல்கிறார். தாங்கள் நியாயத் தைக் கூறியதற்காகத் தங்களுக்கு இந்த அன்பளிப்பையும் சமர்ப்பித்து, இதைத் தாங்கள் ஏற்றருள வேணுமென்று மன்றாடுகிறார்" என்று தெரிவித்தான். உடனே இமாமவர் களுக்கு ஆத்திரமுண்டாகிவிட்டது. ''இந்தப் பணத்துக்காக

நான் தீர்ப்புக் கொடுக்கவில்லை. என் கடமையைத்தான் செய்தேன். இதை அந்த அம்மாளிடமே கொண்டுபோய்க் கொடுத்துவிடு" என்று திருப்பி அனுப்பி விட்டார்கள்.

இமாமவர்களின் வாழ்க்கையில் அவர்களுக்குப் பல கஷ்டங்கள் உண்டாகியுள்ளன. அதிகாரிகளால் சங்கடமுண்டாகியுள்ளது. ஆனால், இமாமவர்கள் மன உறுதி தளர்ந்ததே இல்லை. எதையும் பொறுமையுடன் சகித்துக் கொள்வார்கள். ஒரு சமயம் அவர்கள் கூபா ஜாமிஆ மஸ்ஜிதில் அமர்ந்து பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது மேல் தளத்திலிருந்து பாம்பு ஒன்று இமாமவர்கள்மீது விழுந்துவிட்டது. உடனே மாணவர்கள் பதறியடித்துக் கொண்டு வெளியில் ஓடினர். இமாமவர்களோ கொஞ்சங்கூட அசையவில்லை. அவர்கள் முகத்திலும் எந்த மாறுதலுமின்றி அமைதியோடு அமர்ந்திருந்தார்கள்.

ஆனால், தங்கள் விஷயத்தில் கஷ்டங்களைக் கண்டு புன்னகை பூக்கும் இயல்பு படைத்திருப்பினும், மற்றவர்களின் துயரைக் கண்டு அதைத் துடைக்க விரைவார்கள். ஒரு சமயம் அவர்கள் ஜாமிஆ மஸ்ஜிதில் பாடம் நடத்திக் கொண்டிருக்கும் சமயம் ஒருவர் ஓடிவந்து, இன்ன மனிதன் வீட்டு மேல்தளத்திலிருந்து கால்தவறிக் கீழே விழுந்துவிட்டான் என்றார். உடனே இமாமவர்கள் அங்கிருந்தவர்களெல்லாம் நடு நடுங்கும்படி ஒரு சப்தமிட்டு விட்டார்கள். காலில் பாதரட்சைகூடப் போடாது வெகு துரிதமாக அவன் வீட்டுக்கு விரைந்து அவனுக்குத் தேவையான உதவிகளை நல்கினார்கள். அவன் பூரண சுகமடையும்வரை தினமும் அவன் வீடு சென்று விசாரித்து வரலானார்கள்.

ஒரு சமயம் ஒருவன் இமாமவர்களிடம் வந்து தன் வீட்டில் அவன் சில முக்கியமான பொருள்களைப் புதைத்து வைத்ததாகவும், இப்போது எந்த இடத்தில் அவற்றைப் புதைத்தது என்பது தனக்கு நினைவுக்கு வரவில்லை என்றும், என்ன செய்வதென்று தெரியவில்லை என்றும் கூறி வருந்தினான். "புதைத்து வைத்தது உனக்கே தெரியாவிட்டால் எனக்குத் தெரிவது எப்படி?" என்று அவர்கள் கேட்டார்கள். அவனோ அழவே

ஆரம்பித்துவிட்டான். அது கண்டு மனம் பொருத இமாமவர்கள் அவனை அழைத்துக் கொண்டு அவன் வீடு சென்ருர்கள். அங்கே சென்றதும் அவனை நோககி, ''நீ இப்போது ஏதாவது ஒரு முக்கியமான பொருளை மறைத்து வைக்கப்போகிருய் என்று வைத்துக்கொள். அதற்குத் தகுந்த இடம் என்று எதைத் தேர்ந்தெடுப்பாய்?'' என்று வினவினுர்கள். அவன் ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டினுன். அங்கே தோண்டிப் பார்த்தால் அவன் புதைத்துவைத்த பொருள்கள் அவ்விடத்தில் இருக்கின்றன!

இதுபோன்றே இன்னெரு சமயம் ஒரு நபர் இமாமவர்களிடம் வந்து தான் வெகு கஷ்டப்பட்டுத் தேடிய சொத்துத் திரவியத்தை எங்கோ வைத்துவிட்டதாகவும், வைத்த இடம் நினைவு வரவில்லை என்றும், தனக்கு மறுநாள் மிகவும் முக்கியமான செலவு இருப்பதால் என்ன செய்வதென்று தெரியவில்லை என்றும் முறையிட்டான். இது கேட்ட இமாமவர்கள் அவனை நோக்கி, ''சகோதரா, இது ஃபிக்ஹு சம்பந்தப்பட்ட பிரச்சினையல்லவே! நான் உனக்கு எப்படி உதவப் போகிறேன்?'' என்று கூறியவர்களாக, ''நான் சொன்னபடி செய், இன்று இரவு முழுவதும் தொழுது 'கொண்டிரு!'' என்று கூறி அனுப்பினுர்கள். அவ்வாறே அவனும் போய்த் தொழத் தொடங்கவே சிறிது நேரத்துக்கெல்லாம் அவனுக்குத் தான் பணம் வைத்த இடம் நினைவுக்கு வந்துவிட்டது. உடனே அதைத் தேடி எடுத்துக்கொண்டு இமாமவர்களிடம் வந்து அதைத் தெரிவித்தான். இது கேட்ட இமாமவர்கள், ''நீ இரவு முழுவதும் தொழுதுகொண்டிருப்பதை விரும்பாத ஷைத்தான் உடனே அதை உன் நினைவுக்குக் கொண்டு வந்துவிட்டான். எனவே, அல்லாஹ்வுக்கு நன்றி காட்டுவதற்காக இன்று இரவு முழுவதும் தொழுது கொண்டிரு!" என்று கூறி அனுப்பினுர்கள்.

இமாமவர்கள் வீட்டுக்குப் பக்கமாகச் செருப்புத் தைப்பவர் ஒருவர் குடியிருந்தார். அவர் வெகு உல்லாசமாகப் பொழுது போக்குவார்; பகலெல்லாம் செருப்புத் தைப்பார்; அதனுல்

கிடைக்கும் பணத்துக்கு மதுவும், மாமிசமும் வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வருவார். நண்பர்களேயும் அழைப்பார்; இரவு முழு வதும் குடித்துவிட்டுக் கும்மாளம் போடுவார். குடிபோதை வந்ததும்,

''ஜனங்கள் என்னே இழந்தேவிட்டார்கள்!
அந்தோ, எத்தகைய பெரிய மனிதனேத் தெரியுமா?
கோட்டைச் சுவர்கள் தகரப் போரிடப்படும் நாளிலே
தன் ஒப்பற்ற தோள் வலிமையைக் காட்டக்கூடிய
ஒரு மாவீரனேயல்லவா இழந்துவிட்டார்கள்!''

என்ற கருத்துள்ள பாடல் ஒன்றை அவர் பாடுவதுண்டு. அவர் இவ்விதம் கூத்தடிப்பதால், சமீபத்திலிருந்த இமாமவர் களுக்குப் பெருத்த சங்கடமாக இருந்தது. இமாமவர்கள் செய்யும் இரவு வணக்கங்களுக்கு இடைஞ்சலாகவுமிருந்தது. ஆயினும், பொறுமையுடனே இருந்துவிடுவார்கள்,

ஒரு நாள் அவர் நடத்தும் கேளிக்கையைக் கண்ட நகர்க் காவலாளிகள் அவரைப் பிடித்துப்போய்ச் சிறையில் போட்டு விட்டனர். இதை அறியாத இமாமவர்கள் மறு நாள் இரவு அவருடைய ஆரவாரங்கள் கேட்காதுபோகவே, அதுபற்றி விசாரித்தார்கள். அவர் சிறைப்பட்டிருப்பதை அறிந்தார்கள். உடனே அவர்கள் சபை செல்வதற்கான உடையை உடுத்துக் கொண்டு தங்கள் குதிரை மீதிலமர்ந்து கலீபாவின் கூபாப் பிரதிநிதியின் அவையை நோக்கிச் சென்றார்கள். அப்போது அப்பாஸியாக்களின் இரண்டாவது கலீபாவான மன்ஸூ ருடைய சகோதரர் மகன் ஈஸா இப்னு மூஸா கூபாவில் பிரதி நிதியாக இருந்துவந்தார். இவர் இமாமவர்களின் பெரு மையை நன்கு அறிந்தவர். இமாமவர்கள் தமது அவைக்கு வருகிறார்கள் என்று கண்டதுமே, அவர்களே வரவேற்று மரி யாதையோடு அழைத்துவருமாறு உயர்தர அதிகாரிகளே ஏவி னார். இமாமவர்கள் உள்ளே நுழைந்ததும் எழுந்து எதிர் கொண்டழைத்து இருக்கையிலமர்த்தினார். ''நீங்கள் இவ் வளவு கஷ்டப்பட்டு வரவேண்டுமா? எனக்குச் சொல்லியனுப்பி யிருந்தால் நானே வந்து தங்கள் உத்தரவை ஏற்றிருப்பேனே!''

என்று பணிவுடன் கூறினார். இமாமவர்கள் தமது அண்டை வீட்டார் சிறையிலிருப்பதாகவும், அவரை விடுதலை செய்ய வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டார்கள். உடனேயே அவரை விடுதலை செய்யும்படி அவர் உத்தரவிட்டார்.

இமாமவர்கள் அவருடைய சபையைவிட்டு வெளியில் வந்ததுமே, அவர்களின் அண்டைவீட்டாரான செருப்புத் தைப்பவரும் விடுதலை செய்யப்பட்டு அவர்களை வந்து கண்டார்; அவர்களோடேயே நடந்து சென்றவாறே இமாமவர்களுக்கு நன்றி தெரிவித்தார். ''ஜனங்கள் என்னை இழந்துவிட்டனர்" என்ற அவருடைய உல்லாசப் பாடலை எண்ணியவர்களாக இமாமவர்கள், ''நண்பா, உன்னை நான் மட்டும் இழந்துவிடவில்லையல்லவா!" என்று கேட்டார்கள். ''இல்லை, அத்துடன் என்னைக் காப்பாற்றவும் செய்தீர்கள்" என்றார் அவர். அன்றோடு அவர் தமது கேளிக் கைகளையெல்லாம் கைவிட்டுத் தமது பாவங்களுக்காக மன்னிப்புக் கேட்டவராக இமாமவர்களின் காலடியில் வந்து அமர்ந்துவிட்டார். பின்னர், அவரும் 'ஃபிக்ஹு' நன்கு அறிந்த அறிவாளியாகி விட்டார் என்று சொல்லப்படுகிறது.

அற்புதமான நாவன்மை படைத்த இமாமவர்கள் எந்தச் சிக்கலான பிரச்சினையையும் வெகு தெளிவாக, இனிமையாக விளக்கிவைக்கும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். ஆனால், சாதாரணமாக அவர்கள் அதிகம் பேசுவதே இல்லை. தங்கள் வகுப்புகளில் கூட ஃபிக்ஹு சம்பந்தப்பட்ட ஏதேனும் பிரச்சினைகளில் மாணவர்கள் வாதப்பிரதிவாதங்கள் நிகழ்த்தும் போது அதை மௌனமாக இருந்து கேட்டுக்கொண்டிருப்பார் கள். வாதங்கள் சிக்கலாகி, நிவர்த்தி தேவைப்பட்டால்தான் வெகு சுருக்கமாக, ஆனால், தெளிவாகப் பிரச்சினையை விளக்கு வார்கள்.

''நான் யாரையும் சபித்ததில்லை; யார் மீதும் பழிக்குப் பழி வாங்கியதுமில்லை; எந்த முஸ்லிமையோ முஸ்லிமல்லா தாரையோ துன்புறுத்தியதுமில்லை: யாரையும் ஏமாற்றியது மில்லை; சொன்ன சொல் தவறியதுமில்லை" என்று இமாமவர்

கள் அடிக்கடி கூறுவதுண்டு. ''பிறரைப் பற்றிப் புறம் பேசாத நாவை எனக்களித்த இறைவனுக்கு நான் எல்லையற்ற நன்றி செலுத்துகிறேன்'' என்றும் இமாமவர்கள் அடிக்கடி கூறுவதுண்டு. ஒருவன் இமாமவர்களிடம் வந்து, ''உங்கள் பொறுமையைப்பற்றி எவரும் சிறப்பித்துப் பேசக் காணோமே! இருந்தும்கூட நீங்கள் யாரைப் பற்றியும் குறைகூறுமலிருக்கிறீர்களே!'' என்று கூறினன். ''அந்த மகத்தான அருளை அல்லாஹ், தான் நாடியவர்களுக்கே அருளுவான்'' என்ற கருத்துள்ள திருக்குர்ஆன் வசனத்தை இமாமவர்கள் ஓதிக் காட்டினர்கள்.

இமாமவர்கள் காலத்திலேயே வாழ்ந்த பெரியார் ஸுஃப்யானுத் தௌரி அவர்கள் இமாமவர்களுடன் பல பிரச்சினைகள் சம்பந்தமாக அபிப்பிராயபேதம் கொண்டிருந்தார்கள். இருப்பினும் இருவரும் ஒருவர்மீதொருவர் குறை கூறிக் கொண்டதில்லை. இந்த அபிப்பிராய பேதத்தை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு ஒருவன் இமாமவர்களிடம் வந்து, ''உங்களைப்பற்றி ஸுஃப்யான் தவறுன பேச்சுப் பேசுகிருர்" என்று கூறினன். உடனே இமாமவர்கள் இடைமறித்து, ''எங்கள் இருவரையும் அல்லாஹ் மன்னிப்பானுக! உண்மை என்னவென்றுல், (ஃபிக்ஹுஃப் பாடத்தை வளர்த்துத்தந்த) இப்ராஹீம் நக்யியே ஜீவித்திருந்து, ஸுஃப்யான் காலமாகியிருப்பினும், முஸ்லிம் உலகம் இந்த நஷ்டத்தால் ஆற்றெுணுத் துயரத்திலேயே அமிழ்ந்துவிடும்" என்று அறிவித்தார்கள்.

''அபூ ஹனீபா யாரைப்பற்றியும் புறம்பேசியதாக நான் கேள்விப்பட்டதே இல்லை" என்று ஒருவர் ஸுஃப்யானுத் தௌரியிடம் கூறினர். அதற்கு அவர்கள், ''தன்னுடைய மெய் வணக்கங்களையே பாழ்படுத்தும் அறியாமையுடையவர் என்று அவர்களை எண்ணினீர்!'' என ஸுஃப்யானுத் தௌரி பதிலளித்துவிட்டார்கள்.

இமாமவர்களுடைய பணிவும், மன்னிக்கும் இயல்பும் உன்னதமானவைகளாக இருந்திருக்கின்றன. ஒரு சமயம் அவர்கள் தங்கள் மாணவர்களும், நண்பர்களும் கூடிய

சபையிலிருக்கும்போது ஒருவர் அவர்களிடம் வந்து, ஒரு பிரச்சினைக்கு விளக்கம் வேண்டினார். அதற்குத் தகுந்த பதிலை இமாமவர்கள் கூறினார்கள். வந்தவரோ, ''இமாம் ஹஸன் பஸரி இதற்கு வேறுவிதமாக விளக்கம் சொன்னார்களே!'' என்று கேட்டார். ''ஹஸன் பஸரி தவறு தலாகச் சொல்லியிருக்கலாம்'' என்று இமாமவர்கள் பதில ளித்தார்கள். அந்தச் சபையில் ஹஸன் பஸரியின் சீடர் ஒரு வர் இருந்தார். அவருக்கு இந்தப் பதில் மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கிவிட்டது. அவர் கோபத்தோடு எழுந்து நின்று, ''வேசி மகனே, ஹஸன் பஸரியையா தவறிழைத்தார்கள் என்கிறாய்1'' என்று இமாமவர்களைத் திட்டலானார், உடனேயே இமாமவர்களுடைய மாணவர்களுக்கும் ஆத்திரம் உண்டாகி, அவரை அடிக்கவும் தயாராகிவிட்டார்கள். ஆனால், இமாமவர்கள் யாவரையும் கையமர்த்தி, அந்த மனி தனை அருகில் அழைத்து, ''இந்த விஷயத்தில் ஹஸன் பஸரி தவறு செய்து விட்டது உண்மைதான்'' என்று சாந்தமாகக் கூறினார்கள். அதற்கு ஆதாரமாக அப்துல்லாஹ் இப்னு மஸ் ஊது (ரலி) அவர்கள் தெரிவித்துள்ள ஹதீஸை மேற்கோளாகக் காட்டினார்கள். அந்த மனிதர் தம் தவறை உணர்ந்து இமாம வர்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

ஒரு சமயம் போக்கிரியொருவன் இமாமவர்களிடம் வந்து அவர்களைக் கேவலமாகப் பேசலானான், ''நீ ஒரு பொய்யன்" என்றான். இமாமவர்கள் அவன் திட்டியதையெல்லாம் சாந்த மாகக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு, ''அல்லாஹ்வே உம்மை மன்னிக்கவேண்டும், நீர் சொல்வது முற்றும் தவறு என்பதை அவனே நன்கறிவான்" என்று சொன்னதோடு மௌனமாகி விட்டார்கள்.

இமாமவர்கள் மஸ்ஜிதிலமர்ந்து பாடம் நடத்திக் கொண்டி ருந்த சமயம் ஒருவன் வந்து அவர்களைக் கீழ்த்தரமாகத் திட்ட லானான். ஆனால், இமாமவர்கள் அவன் பக்கம் திரும்பவே இல்லை. மேலும், அவன் பக்கம் திரும்ப வேண்டாமென்று

மாணவர்களிடமும் சொல்லிவிட்டார்கள். அவர்கள் வகுப்பை முடித்துக்கொண்டு வீடு செல்லும்போது அவன் தொடர்ந்து அவர்களைத் திட்டிக் கொண்டே பின்னால் சென்றான். இமாம வர்கள் தங்கள் வீட்டினருகில் வந்ததும், அவன் பக்கம் திரும்பி ''சகோதரா, இதுதான் என் வீடு! இதோ நான் உள்ளே போகப் போகிறேன். எனவே, நீ இன்னும் ஏதேனும் திட்ட வேண்டியது பாக்கியிருந்தால் தெரிவித்துவிடு. அது முடியும் வரை வெளியில் நிற்கிறேன்'' என்றார்கள். உடனே அவன் மிகுந்த ஏமாற்றத்தோடு தன் வழியே திரும்பிவிட்டான்.

வேறொரு சமயம், இமாமவர்கள் பாடம் நடத்திக் கொண் டிருக்கும்போது வாலிபனொருவன் அவர்களிடம் வந்து ஒரு பிரச்சினைக்கு விளக்கங் கேட்டான். இமாமவர்கள் கூறினார் கள். உடனே அவன் அவர்கள் சொல்வது தவறு என்றான், அந்தச் சமயம் அங்கே அமர்ந்திருந்த அபுல் கிதாப் ஜுர்ஜானி என்பவர், ''என்ன இது? சிறுவன் ஒருவன் நமது இமாமவர் களை மதியாமல் பேசுகிறானே! பார்த்துக்கொண்டிருக்கிறீர் களே!'' என்றார். இமாமவர்கள் அவரைக் கையமர்த்தி, ''என் தீர்ப்பைப் பற்றி பொதுஜனங்கள் தங்கள் அபிப்பிரா யத்தைக் கூறி அதை நான் பொறுமையோடு கேட்டுத் தவறி ருந்தால் திருத்திக்கொள்ளவேண்டும் என்றுதானே நான் இங்கே அமர்ந்திருக்கிறேன்'' என்று சமாதானங் கூறி னார்கள்.

## வர்த்தக வேந்தர்

இமாமவர்கள் லட்சக்கணக்கில் பொருளீட்டிய வணிகர், வணிக பரம்பரையிலுதித்தவர்கள் என்று முன்னமேயே குறிப்பிட்டுள்ளோம். தங்களுடைய மார்க்க சேவை, பாடபோதனை, இடையறு வணக்கம் ஆகியவற்றிடை ஆகுமான முறையில் ஜவுளி வர்த்தகத்தைச் செய்து வந்தார் கள். தங்களுக்குப் புதிய புதிய ஜவுளிகளை எடுத்து அனுப்பவும், தாங்கள் அனுப்புவதை விற்கவும் பல்வேறு நகர் களிலும் அவர்கள் வர்த்தகர்கள் பலரைத் தங்கள் பிரதிநிதி

களாக நியமித்திருந்தார்கள். நேர்மையாளரான சிப்பந்திகளை வைத்து வர்த்தகத்தைக் கவனித்தார்கள். அதில் நேர்மையும் சத்தியமும் தவறாது நடந்துகொண்டார்கள். ஆகாத வழியில் ஒரு காசும் தங்கள் பணப் பெட்டியில் புகாதபடி பேணிக் கொண்டார்கள். இதனால், சில சந்தர்ப்பங்களில் அவர்களுக்குப் பெருத்த நஷ்டமும் உண்டானதுண்டு. ஆனால், அது பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. ஒரு சமயம் அவர்களுடைய பிரதிநிதிகளுள் ஒருவரான ஹப்ஸு பின் அப்துர் ரஹ்மான் என்பவருக்கு உயரிய வகைத் துணிகள் பலவற்றை அனுப்பினார்கள். அவற்றில் இன்னின்ன துணிகளில் இன்னின்ன பழுதுகள் உள்ளன என்று குறிப்பிட்டு, துணி வாங்குபவர்களிடம் அந்தப் பழுதுகளைத் தெரியப்படுத்தியே விற்கவேண்டும் என்றும் கடிதம் எழுதினார்கள். ஆனால், வர்த்தகச் சந்தடியில் இமாமவர்கள் கூறியிருந்தபடி எவை எவை பழுதுள்ள துணிகள் என்று கவனித்து எடுக்க முடியவில்லை. அவர்கள் அனுப்பிய துணிகள் யாவும் விரைவில் நல்ல லாபத்துக்கு விற்றுப்போயின. இமாமவர்கள் கைக்குப் பணம் வந்தபோது, அந்தப் பழுதுகள் தெரிவிக்கப்பட்டுத் துணிகள் விற்கப்பட்டனவா என வினவினார்கள்; ஹப்ஸு வியாபார நெருக்கடியில் அதை மறந்துபோனார் என்று தெரிவிக்கப்பட்டது. அப்படியானால், குறிப்பிட்ட, பழுதுள்ள துணிகளை வாங்கியவர்கள் யார் என்றாவது கண்டுபிடித்து அவர்களிடம் பணத்தை ஒப்படைக்க முடியுமா என்று விசாரித்தார்கள். அதுவும் இயலாது என்று அறிந்த உடன் அந்தத் தடவை விற்றுவந்த முப்பதாயிரம் திர்ஹங்களையும் தானதருமம் செய்துவிட்டார்கள்.

இன்னொரு சமயம் முதிய பெண்மணியொருத்தி சில பட்டுத் துணிகளை இமாமவர்களிடம் கொண்டுவந்து கொடுத்து விற்றுத் தருமாறு கேட்டாள். "இவை என்ன விலை பெறும்?" என்று இமாமவர்கள் கேட்டார்கள். உண்மையில் அவற்றின் மதிப்பை அறியாத அந்த அம்மாள் அவை சுமார் நூறு ரூபாய் பெறலாம் என்று தெரிவித்தாள். "அது மிகவும் குறைந்த விலையாயிற்றே!" என்று இமாமவர்கள் கூறினார்கள்.

''அப்படியானால் இருநூறு ரூபாய் இருக்கலாம்'' என்று அவள் சொன்னாள். ''இல்லை, ஐநூறு ரூபாய் மதிப்புள்ள துணிகள் இவை" என்று இமாமவர்கள் கூறியபோது, அவர்கள் தன்னைக் கேலி செய்கிறார்களோ என்றுகூட அந்த அம்மாளுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. உடனே இமாமவர்கள் ஐநூறு ரூபாய்களை அந்த அம்மையாரிடம் கொடுத்துவிட்டு அந்தத் துணிகளைத் தாங்களே வாங்கிக்கொண்டார்கள்.

## வள்ளல்

இமாமவர்கள் செல்வத்தில் கிடந்து புரளவேண்டும் என்பதற்காக வாணிபஞ் செய்து பணந்திரட்ட முயலவில்லை. பொது ஜனங்களுக்கு அதன்மூலம் தங்களாலான சகல உதவி களையும் செய்யவேண்டும் என்பதே அவர்களுடைய குறிக் கோளாக இருந்தது. தமது நண்பர்களில் ஏழையானவர் களுக்கு அவ்வப்போது அவர்கள் பொருளுதவி செய்து வந்தார்கள். மார்க்கப் பெரியார்களுக்கென்று தங்கள் வர்த்தக லாபத்தில் ஒரு பகுதியையே ஒதுக்கிவைத்து வழங்கி வந்தார்கள். அவர்கள் தங்கள் வீட்டுக்கு வேண்டிய பொருள் களை வாங்கக் கடை வீதிக்குப் போனால், தங்களுக்குத் தெரிந்த ஆலிம்களுக்குத் தேவையான சாமான்களையும் வாங்கி அவர் களுக்கு அனுப்பிவைப்பார்கள். தங்களைக் காணவருபவர்களில் பொருளுதவி வேண்டுபவர்களுக்கு அவர்களுடைய தகுதிக்குத் தக்கவாறு உதவியுள்ளார்கள்.

தங்களிடம் பயிலவரும் ஏழை மாணவர்களுக்குத் தேவை யான சகல வசதிகளையும் அவர்களே செய்து கொடுப்பதுடன், அவர்களுடைய குடும்பத்தாருக்கும் இமாமவர்கள் பண உதவி செய்வதுண்டு. இவ்விதம் இமாமவர்களிடம் கல்வி பெற்ற பலர் பின்னர் மாபெரும் மேதைகளாகவும் ஆகியுள்ளனர். இமாம் அபூஹனீபாவின் பிரதான சீடரும், அவர்களுக்கு அடுத்தபடியாக ஹனபீ மத்ஹபின் பெரிய இமாம்களான இரு வரில் ஒருவரும், கலீபா ஹாரூனுர் ரஷீதின் சட்ட ஆலோசக ராக இருந்தவர்களுமான காஜி அபூ யூஸுஃப் (ரஹ்) கல்வி

பயில வழியற்ற பரம ஏழையாக இருந்து, இமாமவர்களின் உதவி கொண்டு கல்வி பெற்றவர்கள் தாம்.

[இமாமவர்கள் எத்தனையோ ஏழை மாணவர்களுக்குப் பொருளுதவியும், மற்றும் தேவையான நல்லாதரவும் நல்கியுள்ளார்களெனினும், சிபாரிசுக் கடிதங்கள் வழங்க மட்டும் கண்டிப்பாக மறுத்துவந்துள்ளார்கள். ஒரு சமயம் மாணவர் ஒருவர் இமாமவர்களிடம் வந்து, ''நான் இன்ன ஆசிரியரிடம் சென்று கல்வி பயில நாடியுள்ளேன். அதற்காக எனக்கொரு சிபாரிசுக் கடிதம் தரவேண்டும்'' என்று வேண்டினார். அதற்கு இமாமவர்கள், ''கல்வி போதிக்கும் ஆசிரியர்களுக்கெல்லாம் யாருடைய சிபாரிசும் தேவையில்லை. எந்த ஆலிமும் தம்மிடமுள்ள கலாஞானத்தைப் பிறருக்குப் போதிக்காமல் ஒளித்து வைக்கமாட்டார். கல்வி போதிக்கும் விஷயத்தில் ஏழை, பணக்காரர் என்ற பாகுபாடு ஏது? எனவே, எந்த ஆலிமுக்கும் நான் சிபாரிசு செய்யத் தேவையில்லை'' என்று பதிலளித்து விட்டார்கள்.]

ஒரு சமயம் இமாமவர்கள் நோயாளி ஒருவரைப் பார்த்துவருவதற்காகத் தெருவோடு போய்க்கொண்டிருந்தார்கள். அச்சமயம் இமாமவர்களிடம் கடன் வாங்கியிருந்த ஒருவர் இமாமவர்கள் வருவதைக் கண்டு, தலைமறைவாகி விடுவதற்காகப் பக்கத்திலிருந்த சந்தில் நுழைந்தார். அதைக் கவனித்துவிட்ட இமாமவர்கள் அவரைப் பெயர் சொல்லி நிறுத்தி, அவரிடம் சென்று, ''என்னைக் கண்டதும் நீங்கள் ஒளிக்கவேண்டிய காரணமென்ன?" என்று வினவினார்கள். ''உங்களுக்கு நான் பத்தாயிரம் திர்ஹம் கடன் தரவேண்டுமல்லவா! அதை இன்னும் என்னால் திருப்பித் தர இயலவில்லை. எனவே, உங்கள்முன் வர நான் வெட்கப்பட்டுத் தலைமறைவாகப் போய்விட முயன்றேன்" என்று அவர் கூறினார். அது கேட்ட இமாமவர்கள் அவருடைய தன்மானத்தைப் பாராட்டி, ''அந்தக் கடனை நான் வஜாச் செய்துவிட்டேன். இனி நீங்கள் அதை எனக்கு தரவேண்டியதில்லை. என்னைக் கண்டு நாணப் படவும் தேவையில்லை'' என்று ஆறுதல் சொல்லி அனுப்பினார்கள்.

வேறொரு சமயம் இமாமவர்கள் ஹஜ்ஜுக்குச் சென்றிருந்த போது அப்துல்லாஹ் ஸஹ்மி என்பவரும் அவர்களோடு போயிருந்தார். வழியில் ஓரிடத்தில் தங்கியிருந்த சமயம் காட்டரபி யொருவன் இந்த அப்துல்லாஹ்வை இமாமவர் களிடம் இழுத்துவந்து, ''இவர் எனக்குக் கடன் தரவேண்டியதுள்ளது. அதைத் தாங்கள் வாங்கித் தரவேண்டும்'' என்று கேட்டான். இமாமவர்கள் அப்துல்லாஹ்விடம் வினவியதற்கு அவர் தாம் அவனிடம் கடனே வாங்கியதில்லை என்று கூறினார். இமாமவர்கள் அந்தக் காட்டரபியை நோக்கி, ''உமக்கு இவர் எவ்வளவு பணம் தரவேண்டும்?'' என்று வினவவே, அவன் நாற்பது திர்ஹம் என்றான். உடனே இமாமவர்கள், ''இந்த அற்பத் தொகைக்காகவா இந்தச் சண்டை? இதோ நாற்பது திர்ஹம், எடுத்துக்கொண்டு போ! என்று கூறி அவனுக்குப் பணங்கொடுத்து அனுப்பி விட்டார்கள்.

இன்னொரு சமயம் இப்ராஹீம் பின் அத்பா என்பவர் நான்காயிரம் திர்ஹம் கடன்பட்டு அவரால் அதை அடைக்க முடியாத நிலையுண்டாகிவிட்டது. இதனால், அவர் வெளியில் செல்வதையே நிறுத்திவிட்டார். அவருடைய நிலையைக் கண்டு மனமிரங்கிய அவருடைய நண்பர்கள் சிலர், பலரிடமும் சென்று பண வசூல் செய்து அவருடைய கடனை அடைத்துவிட முடிவுசெய்தனர். அவர்கள் முதலில் இமாம் அபூ ஹனீபா விடமே சென்றனர். இமாமவர்கள் அவருடைய கடன் தொகை எவ்வளவு என்று வினவினார்கள். நான்காயிரம் திர்ஹம் என்று கூறப்பட்டதும், ''இவ்வளவு சிறிய தொகைக் காகவா பலருக்கும் சிரமம் கொடுக்கப்போகிறீர்கள்? இந்த நான்காயிரம் திர்ஹத்தையும் நானே கொடுத்துவிடுகிறேன்" என்று கூறி அந்தத் தொகையை அவர்களே கொடுத்தனுப்பி விட்டார்கள்.

இப்படியெல்லாம் அவர்கள் தருமத்துக்காக அள்ளி வழங்கினாலும், அனாவசியச் செலவுகளுக்காகத் தங்கள் பொருளை அவர்கள் பயன்படுத்தியதில்லை. ஒரு சமயம் மஸ்ஜிது கட்டவேண்டும் என்று சிலர் இமாமவர்களிடம்

பொருளுதவி தேடி வந்தனர். இமாமவர்கள், ''என் பொருள் கல்லுக்கும், சுண்ணாம்புக்கும் வீணே செலவாவதை நான் விரும்பவில்லை. அது ஆகுமான வழியில் சேர்ந்தது'' என்று கூறிவிட்டார்கள். ஆனால், வந்தவர்கள் தாங்கள் 'அல்லாஹ் வின் வீடான' மஸ்ஜிதுதான் கட்டப்போவதாக மீண்டும் விளக்கினார்கள் அதுகேட்ட இமாமவர்கள் அவர்களை நோக்கிச் சொன்னார்கள்: ''ஏற்கனவேயுள்ள மஸ்ஜிதுகளில் தொழுவதற்கு ஆட்களைக் காணோம். அந்த நிலையில் இன்னொரு மஸ்ஜிது கட்டுவதென்பது வீண் பொருள் விரயமாகும். மேலும், ஏற்கனவே கட்டப்பட்ட மஸ்ஜிதுகளில் பல இன்று கவனிப்பாரற்றுப் பாழாகிவருகின்றன. அவற்றை ஒழுங்காகப் பராமரிப்பதை விடுத்து, இப்படி மேலும் கட்டிடங்கள் கட்டி இருளவிடுவதை நான் விரும்பவில்லை'' என்று. வசூலுக்கு வந்தவர்கள் மௌனமாக வெளியேறிவிட்டார்கள்.

இதுபோன்றே பொதுச் சொத்துக்களில் இம்மியும் தங்களால் வீண் விரயமாகக் கூடாது என்பதில் இமாமவர்கள் அளவுக்கு அதிகமான எச்சரிக்கையுடனிருந்து வந்தார்கள். பல்லாயிரக் கணக்கானவர்கள் அவர்களால் பயனடைந்துள்ளனர். எத்தனையோ பேர் அவர்களிடம் தங்கள் பொருள்களைக் கொண்டுவந்து கொடுத்து, அடைக்கலமாக வைத்திருக்குமாறு கேட்டுள்ளனர். அவற்றின் விஷயத்தில் அவர்கள் மிக மிக எச்சரிக்கையாக இருந்து, தங்கள் மீது சிறு தவறும் உண்டாகாதவாறு நடந்துகொண்டார்கள். பொதுச் சொத்து விஷயத்தில் அவர்கள் எவ்வளவு விழிப்புடன் நடந்து கொண்டார்கள் என்பதை விளக்க ஓர் உதாரணம் மட்டும் தரலாம்:

ஒரு நாள் இரவில் மஸ்ஜிதிலமர்ந்து அவர்கள் ஓதிக்கொண்டிருந்தார்கள். அவர்கள்முன் விளக்கொன்று எரிந்து கொண்டிருந்தது. அச்சமயம் நண்பர் ஒருவர் அவர்களைக் கண்டு பேசவந்தார். அவர் சாதாரணமாக அவர்களோடு அளவளாவத் தொடங்கிய உடன், இமாமவர்கள் தங்கள் முன்னர் எரிந்து கொண்டிருந்த விளக்கை அணைத்துவிட்டுப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஏன் அவர்கள் அவ்விதம் விளக்கை அணைக்கவேண்டும் என்று அவர்களுடைய நண்பர்

வினவியபோது, ''இந்த விளக்கும், இதிலுள்ள எண்ணெயும் மஸ்ஜிதைச் சேர்ந்தவை. இவற்றை - இந்தப் பொதுச் சொத்தை-நாம் நம்முடைய சொந்த உபயோகத்துக்குப் பயன் படுத்தக்கூடாதல்லவா! அதனால்தான் விளக்கை அணைத்து விட்டேன்" என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

## அன்றாட வேலையும், வணக்கங்களும்

இமாமவர்கள் தினமும் அதிகாலையில் எழுந்து ஸுப்ஹுத் தொழுகைக்கு மஸ்ஜிதுக்குப் போய்விடுவார்கள். ஸுப்ஹுத் தொழுகை முடிந்ததும், அங்கேயே அமர்ந்து பல்வேறு பாடங்களையும் நடத்துவார்கள். பின்னர் வெளியூர்களிலிருந்து வரும் ஃபிக்ஹுப் பிரச்சினைகளுக்குப் பதிலெழுதி அனுப்புவார்கள். அதன் பின்னர் 'ஃபிக்ஹு மஸ்அலா' தொகுக்கும் வேலை நடைபெறும். லுஹர் நேரத்துக்குத் தொழுகையை முடித்துக் கொண்டு வீடு போவார்கள். வெயிற் காலமாயின் இச்சமயம் சற்று தூங்கி எழுவதுமுண்டு. அதுமுதல் அஸ்ருத் தொழுகை வரை வர்த்தக விவகாரங்களைக் கவனிப்பார்கள். அஸ்ருத் தொழுகைக்குப்பின் மீண்டும் பாடபோதனை நடக்கும். அதன்பின் நண்பர்களைக் காணவோ, நோயாளிகளைப் பார்க்கவோ போகவேண்டியதிருப்பின் செல்வார்கள். மக்ரிபுக்குப்பின் மீண்டும் இஷாவரை பாடபோதனை நடைபெறும். இஷாவுக்குப்பின் நீண்ட நேரம் விழித்திருந்து வணங்குவார்கள். குளிர் காலங்களில் மக்ரிபுக்குப்பின்னர் மஸ்ஜிதிலேயே சிறிது நேரம் தூங்கிவிட்டுப் பத்து மணி சுமாருக்கு இரவு வணக்கத்துக்காக எழுந்துவிடுவார்கள். 'தஹஜ்ஜத்' தொழுகை வஜீபா ஓதுதல் போன்ற வணக்கங்களில் ஈடுபடுவார்கள். சமயங்களில் தங்கள் வர்த்தக ஸ்தலத்திலிருந்தவாறே இந்த வணக்கங்களில் ஈடுபடுவதும் உண்டு.

இமாமவர்கள், ''அல்லாஹும்ம இன்னு நஸ்த ஈனுக்க பிக அலா தாஅதிக்க'' (அல்லாஹ்வே, திண்ணமாக, உன்னைக்கொண்டே, உனக்கு வழிபட உன்னிடத்தில் உதவி தேடுகிறேன்) என்ற துஆவை நியமமாக ஓதி வந்துள்ளார்கள், ''இதை நான் ஓதிவந்ததன் மகிமையால்தான் எனக்கு

அல்லாஹ் அறிவை விசாலமான தாக்கினன்'' என்று அவர்கள் தெரிவித்ததாகவும் சொல்லப்படுகிறது.

மேலும், இமாமவர்கள் ஆயிரம் தடவை தங்கள் கனவில் அல்லாஹ்வைக் கண்டதாகவும், அப்போதெல்லாம் அவர்கள் அவனிடம் தாங்கள் ஈமான் ஸலாமத்துடன் மரணிப்பதற்கான ஓர் அமலைப் படித்துத்தரும்படி கேட்டதாகவும், அதன் பயனாய் ''அல்லாஹு ம்ம அஹ்யினீ அலல் கிதாபி வஸ் ஸுன்னத்தி வத வஃப்பனீ அலல் ஈமானி வத் தௌபத்தி. அல்லாஹு ம்ம ஸல்லி அலா ஸையிதினா முஹம்மதின் வ ஆலிஹி வ ஸல்லிம் வப்அல்பினா தாலிக்க வ பி ஜமீஇல் முஸ்லிமீன்'' (அல்லாஹ்வே, திரு குர்ஆனின் போதனைக் கேற்பவும், நபிபெருமானாரின் முன்மாதிரியின்படியும் நான் ஜீவித்திருக்க அருள் புரி! பாவமன்னிப்புடனும், மெய்விஸ்வாசத்துடனும் நான் மரணிக்கக் கிருபையருள்! முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்கள் வமிசத்தார்மீதும் ஸலவாத்தும், ஸலாமும் சொல்வாயாக! நாங்களும், மற்ற முஸ்லிம்கள் அனைவரும் இதை அமல் நடத்திவரச் செய்தருள்!) என்ற துஆவை ஓதி வரும்படி உத்தரவாயிற்றென்றும், அதைத் தாங்கள் நியமமாக ஓதிவந்ததாகவும் இமாமவர்கள் கூறியதாகச் சில நூற்களில் காணப்படுகிறது.

இமாமவர்களின் வணக்கம் சித்தசுத்தி (இக்லாஸ்)யுடன் கூடியதாகும், சித்தசுத்தியின் அவசியத்தை அவர்கள் வற்புறுத்தும் அழகைப் பாருங்கள்: ''பத்துப் பங்கு கல்வியைவிட ஒரு பங்கு அமல் சிறந்ததாகும்: பத்துப் பங்கு அமலைவிட ஒரு பங்கு பேணுதல் சிறந்ததாகும். பத்துப் பங்கு பேணுதலை விட ஒரு பங்கு சித்தசுத்தி சிரேஷ்டமானதாகும்'' என்பது அவர்களுடைய அருள்வாக்குகளில் ஒன்று.

''இமாமவர்களுடைய மெய்வணக்கங்களும், தியானமும் சந்தேகமற்ற ஹதீஸ்கள்போல் விளங்கிவந்தன'' என்று அல்லாமா தஹபி குறிப்பிட்டுள்ளார். பல சமயங்களில் அவர்கள் தொழுகையில் திருகுர்ஆன் ஓதுகையில் தங்களை

மறந்து அழுதும் விடுவார்கள். இப்ராஹீம் பஸரீ என்பவர் சொல்கிறார் : ''ஒரு தடவை நான் இமாமவர்களோடு சேர்ந்து நின்று ஸுப்ஹுத் தொழுகை தொழுதுகொண்டிருந்தேன். அப்போது தொழுகையை நடத்திய கத்தீப், "அநீதிக்காரர்கள் புரியும் கொடுமைகளையெல்லாம் அல்லாஹ் மறந்து போனான் என்று நீங்கள் எண்ணவேண்டாம்'' என்ற (கருத்துள்ள) வசனத்தை ஓதியதும் என் அருகில் நின்ற இமாம் அபூஹனீபாவின் உடல் நடு நடுங்கிக் கொண்டிருந்தது."

ஜாயிதா என்பவர் சொல்கிறார்; ''ஒரு சமயம் முக்கியமான மார்க்கப் பிரச்சினை யொன்றுக்கு விளக்கம் பெறுவதற்காக நாங்கள் இமாமவர்களிடம் சென்றோம். அவர்கள் இஷாத் தொழுகை தொழுதுகொண்டிருந்தார்கள். அது முடியட்டும் என்று காத்திருந்தோம். இமாமவர்கள் நபில் தொழுதபின்னர் திரு குர்ஆனை ஓத அமர்ந்துவிட்டார்கள். ''வ - கான - அதாபஸ் - ஸமூம்" என்ற திருவசனத்தைத் திருப்பித் திருப்பி ஓதிக் கொண்டிருந்தார்கள். இதற்கிடையே ஸுப்ஹு நேரம் வந்துவிட்டது."

யஜீத் பின் கமீத் சொல்கிறார் : ''நான் இமாமவர்களோடு நின்று இஷாத் தொழுதுகொண்டிருந்தேன். தொழவைத்த கத்தீப், 'இதா ஜுல்ஜிலத்துல் அர்ளு' என்ற அத்தியாயத்தை ஓதினார் தொழுகை முடிந்து ஜனங்கள் வெளியான பின்னர் நான் இமாமவர்களிடம் சென்றேன். அவர்கள் மௌனமாக அமர்ந்து குளிர்ந்த மூச்சை சுவாசித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் வணக்கத்துக்கு இடையூறு செய்யக் கூடாது என்று நான் வெளியில் சென்றுவிட்டேன். பிறகு ஸுப்ஹு நேரத்தில் மஸ்ஜிதுள் சென்று பார்த்தேன். இமாமவர்கள் அதே இடத்தில் கவலை தோய்ந்த முகத்துடன், தாடியைப் பிய்த்தவர்களாக அமர்ந்திருந்தார்கள். அவர்கள் மிகவும் உருக்கமாக, ''தினையளவு நன்மைக்கும் தினையளவு தீமைக்கும் கூலி தருவோனே, இந்த உன் அடியான் நுஃமானுக்கு விமோசனமளித்தருள்!" என்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள்.

ஒரு சமயம் அவர்கள் தங்கள் வர்த்தகஸ்தலத்திலிருக்கும் போது, ஜவுளிகளை அடுக்கிக்கொண்டிருந்த பணியாள், ''இறைவன் எங்களைச் சுவர்க்கத்தில் புகச் செய்வானாக!" என்று கூறிக்கொண்டிருந்தான். இதைக் கேட்ட இமாமவர்கள் திகிலடைந்தவர்களாக உடனேயே கடையை மூடும்படி உத்தரவிட்டு விட்டார்கள். மறுநாள் கடைக்கு வந்து அந்தப் பணியாளை அழைத்து, ''சகோதரா, சுவர்க்கத்தை ஆசிக்க நமக்கு என்ன தகுதி இருக்கிறது? நம் தவறுகளுக்காக அல்லாஹ் நம்மைத் தண்டியாமல் விட்டால் போதாதா?'' என்று உருக்கத்தோடு கூறினார்கள்.

ஒரு சமயம் இமாமவர்கள் கடைவீதியில் போய்க்கொண்டிருந்தபோது அங்கே அமர்ந்து விளையாடிக் கொண்டிருந்த சிறுவன் ஒருவனின் கால்மீது இமாமவர்களின் கால் பட்டு விட்டது. அவன் கூச்சலிட்டவனாக எழுந்து, ''நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயப்படவில்லையா?" என்று அவர்களை நோக்கி வினவினான். இதைக் கேட்டதும் இமாமவர்கள் தங்களை மறந்த நிலையில் செயலற்று நின்றுவிட்டார்கள். அப்போது அவர்களோடு போய்க் கொண்டிருந்த முஸ்யிர் என்பவர் அவர்களை நோக்கி, ''இந்தச் சிறுவன் பேச்சுக்கா நீங்கள் கலங்கிவிட்டீர்கள்?" என்று கேட்டார்.

''ஏன், இதுகூட எனக்கு இறைவனின் மறைமுகமான எச்சரிக்கையாக இருக்கக்கூடாதா?' என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

இன்னொரு சமயம் இமாமவர்கள் தங்களிடம் ஒருவர் கேட்ட விளக்கத்தை நல்கிக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் இன்னொருவர் அவர்களை நோக்கி, ''அபூ ஹனீபா, ஆண்டவனைப் பற்றிய அச்சத்தை மனத்திலிருத்திக் கொண்டு உங்கள் முடிவைச் சொல்லுங்கள்" என்றார். உடனே இமாமவர்களுக்கு முகம் சுண்டிவிட்டது. உடனே அந்த மனிதரை அருகில் அழைத்து, ''சகோதரா, அல்லாஹ் உமக்கு நற்கூலி தருவானாக! நான் ஓர் அச்சத்தால்தான் இந்த மார்க்கத் தீர்ப்பளிக்கும் வேலையை என்மீது தூக்கிப்போட்டுக் கொண்டுள்

ளேன். மறுமையில் அல்லாஹ் என்னை விளித்து, 'அறிவு பெற்றிருந்தும் நீ ஏன் அதை மறைத்துக்கொண்டாய்?' என்று கேட்பானே என்ற அச்சம்தான் அது. இல்லையேல், நான் மார்க்கத் தீர்ப்புக் கொடுக்க முனைந்திருக்கவே மாட்டேன்" என்று விளக்கினார்கள்.

இமாமவர்கள் தங்கள்முன் வரும் பிரச்சினைகளில் எதற்கேனும் பதில் காண முடியாதவர்களானால், ''நான் ஏதோ தவறிழைத்திருக்கிறேன். அதனால்தான் இந்தப் பிரச்சினைக்கு என்னால் சரியான பதில் கூற இயலவில்லை'' என்று கூறி எழுந்துபோய் ஒலுச் செய்து, தொழுது 'இஸ்திக்பார்' ஓதுவார்கள்.

பின்னொரு சமயம் பெரியார் புலைல்பின் இயாலிடம் ஒருவர் வந்து இமாமவர்களுடைய இந்த இயல்பைப் பற்றிக் குறிப்பிட்டபோது அந்த மகான் சொன்னார்கள். ''இமாம் அபூ ஹனீபாவின் தவறுகள் மிக மிகச் சொற்பம். அப்படியிருந்தும் அவர்களுக்கு இந்த நினைப்பு உண்டாகிறது. ஆனால், சதாவும் பாவ காரியங்களில் மூழ்கிக் கிடப்போர்களுக்கோ எத்தனையோ சோதனைகளும், இன்னல்களும் வந்தாலும்கூட இவை யாவும் மறைமுகமான எச்சரிக்கை என்ற எண்ணமே வருவதில்லையே!" என்று கூறி வருந்தினார்கள்.

## விவாத வன்மை

இமாமவர்கள் உலகில் தோன்றுவதுபற்றி முன்னரே அறிவிப்புச் செய்யப்பட்டது என்றுகூடப் பெரியார்கள் சிலர் கருதுகின்றனர். ''பின்னர் முஹம்மது (ஸல்) அவர்களுடைய கூட்டத்தாரிடை ஓர் ஒளியுண்டாகும்'' என்று தௌராத் வேதத்தில் கூறப்பட்டிருப்பதாகவும், அந்த 'ஒளி' இமாம் அபூ ஹனீபாதாம் என்றும் கஃபுல் அஹ்பார் என்ற பெரியார் அபிப்பிராயப்படுகிறார்.

மேலும், ஹஜ்ரத் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் ரிவாயத்துச் செய்ததாகச் சொல்லப்படும் ஹதீஸ் ஒன்றில்,

''என் உம்மத்தில் ஒருவர் வருவார். அவர் பெயர் நுஃமான். அவர் இடுகுறிப் பெயர் அபூ ஹனீபா. அவர் என் கூட்டத்தா ரிடை தீபமாக இலங்குவார்'' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்ததாகச் சொல்லப்படுகிறது.

இத்தகைய பெருமைக்குரிய இமாமவர்களின் விவாத வன்மையும், தீர்ப்புக்களும் அற்புதமானவையாகும். விளக்க வெகு கடினமான எந்தப் பிரச்சினைக்கும் இமாமவர்கள் வெகு சுலபமாகப் பதில் கூறி யாவரையும் வியப்பிலாழ்த்தியிருக் கிறார்கள். சில சமயங்களில் கேள்வி கேட்பவர் சரியான நோக்கமற்றவராய் இருப்பின் அவரை மடக்கித் தாங்களே அவரிடம் கேள்விகளை விடுத்துத் தாங்கள் கூறக்கூடிய பதிலை அவர் வாய் வார்த்தைகளாகவே வெளிப்படுத்திவிடுவார்கள். இது இமாமவர்களின் விசேஷமான திறமையாகும்.

இமாமவர்களின் காலத்தில் நாத்திகவாதம் பேசி வந்த பல கூட்டத்தினர் இருந்தனர். அவர்கள் பகுத்தறிவின்மூலம் தங்கள் கொள்கையை நிலைநாட்ட முயல்வதுண்டு. அவர்கள் இமாம் அபூ ஹனீபாவிடமும் வந்து பேசத் துணிந்ததுண்டு. இமாமவர்களோ எந்த விவாத முமின்றியே அவர்களைக் கடவு ளுண்மையை ஏற்க வைத்துவிடுவார்கள். ஒரு சமயம் இவ் விதம் சிலர் அவர்களிடம் வந்து, ''இறைவன் உண்டாஎன்பது பற்றித் தங்களிடம் விவாதிக்க வந்திருக்கிறோம்'' என்றனர். அவர்களை இமாமவர்கள் மரியாதை கொடுத்து அமரச் செய் தார்கள். ''நாம் இதுபற்றிப் பேசுமுன் ஒரு சிறிய விஷயம் குறித்துப் பேசலாமா?'' என்று இமாமவர்கள் அவர்களிடம் வினவினார்கள். வந்தவர்கள் அதற்கு இசையவே இமாமவர் கள் கேட்டார்கள்: ''கப்பல் தலைவனோ, வேலையாட்களோ இல்லாத கப்பலொன்று தானாகவே வகை வகையான பொருள் களை ஏற்றிக்கொண்டு திஜ்லா நதிக்கரையிலுள்ள ஊர் ஒன்றில் வந்து தானாகவே யாவையும் இறக்கிவிட்டுப் போகுமா?"

வந்தவர்கள், ''அது சாத்தியமல்ல; அப்படி வரும் என்று நினைப்பதே பகுத்தறிவுக்குப் பொருந்தாத விஷயம்" என்று கூறினார்கள்.

''இந்தச் சுடருக்கு ஏது திசை?'' என்று அவன் திருப்பிக் கேட்டான்.

''கேவலம், இறைவனுடைய சிருஷ்டிகளில் ஒன்றான இந்தச் சுடருக்கே முகம் இன்ன பக்கத்தைப் பார்த்துள்ளது என்று சொல்ல இயலாதிருக்கும் போது சகல திருஷ்டிகளையும் உண்டாக்கிய இறைவன் இன்ன திசையைத் தான் நோக்குகிறான் என்று எண்ணுவதே முழு மூடத்தனமாகும்'' என்று இமாமவர்கள் விளக்கம் தந்தார்கள்.

நாஸ்திகன் தன் கடைசிக் கேள்வியை விடுத்தான்: ''உங்கள் இறைவன் எங்கே இருக்கிறான்?''

இமாமவர்கள் அதே தீபத்தைச் சுட்டிக் காட்டி ''இதன் வெளிச்சம் எங்கேயுள்ளது?" என்று வினவினார்கள். அவன் விழிக்கவே, ''கேவலம், இந்தச் சிருஷ்டியின் வெளிச்சமே இன்ன இடம் என்றில்லாது நெடுகிலும் பரவியிருக்கும்போது சர்வ வியாபியான அல்லாஹ்வும் இன்ன இடத்தில்தான் இருக்கிறான் என்று சொல்வதும் சாத்தியமா?" என்று அவர்கள் கேட்டார்கள். கேள்வி கேட்க வந்தவன் வாயடைத்தவனாக வெளியேகினான்.

இமாமவர்கள் காலத்தில் வாழ்ந்த பல விசித்திரக் கூட்டத்தாரில் காரிஜிகள் என்ற பயங்கரவாதிகளும் உண்டு. இவர்கள் தமது கொள்கைப்படி நடவாதவர்களை எல்லாம் கொலை செய்து விடுவதன்மூலம் 'புதிய சமுதாய'த்தை உண்டாக்கிவிடலாம் என்று கனவு கண்டவர்கள். இவர்களுடைய கொள்கைகளுள் ஒன்று 'பாவம் செய்தவர்கள் அனைவருமே காபிர்கள்தாம்' என்பதாகும். இதை இமாம் அபூ ஹனீபாமூலமே வற்புறுத்தி விட எண்ணிய அவர்களில் தலையான சிலர், அவர்கள் வீட்டிலிருக்கும் சமயம் அவர்களிடம் வந்து, ''விபசாரத்தில் கர்ப்பிணியாகி மரித்தவள், குடி போதையில் இறந்தவன் ஆகிய இரண்டு பேர்களுடைய பிரேதங்கள் உங்கள் வீட்டுக்கு வெளியில் கிடத்தப்பட்டுள்ளன. அவர்கள் காபிர்களா, மூமின்களா?" என்று அவர்களிடம் வினவினர்.

''அந்தப் பிரேதங்கள் யூதர்களுடையவையா, (நெருப்பை வணங்கும்) மஜூஸிகளுடையவையா?'' என்று இமாமவர்கள் விசாரித்தார்கள்.

உடனே காரிஜிகள், ''இல்லை, அவை முஸ்லிம்களுடையவைதாம்'' என்று பதிலளித்தார்கள்.

''அப்படியானால் அவர்கள் யார் என்பதை நீங்களே அறிந்துள்ளீர்களே!''

''அது எப்படி?''

''அவை முஸ்லிம்களுடையவை என்று நீங்களே ஒப்புக் கொள்ளும்போது, முஸ்லிம்களை நீங்கள் எப்படிக் காபிர்களாக்குவீர்கள்?''

உடனே அந்தக் காரிஜிகள், ''அவர்கள் இருவரும் சுவர்க்கவாதிகளா, நரகவாதிகளா?'' என்று வினவினர்.

''இவர்களையும்விடக் கொடிய பாவஞ் செய்தோர் விஷயத்தில் இப்ராஹீம் நபி (அலை) அவர்களும், ஈஸா நபி (அலை) அவர்களும் கூறிய அதே வார்த்தைகளில் உங்களுக்குப் பதில் தரவேண்டுமானால், பாவிகளின் பிழைபொறுப்பதும், பொறுக்காமல் அவர்களைத் தண்டிப்பதும் அல்லாஹ்வின் நாட்டத்தைப் பொருத்ததாகும்'' என்று இமாமவர்கள் கூறினார்கள். இதைக் கேட்டதும் அந்தக் காரிஜிகள் இமாமவர்களிடம் மன்னிப்புக் கேட்டுத் தௌபாச் செய்து மீண்டனர். பின்னர், இமாமவர்கள் அந்தப் பிரேதங்களைக் குளிப்பாட்டச் செய்து, ஜனாஸாத் தொழுகை நடத்தி, நல்லடக்கம் செய்தார்கள். இதில் அந்தக் காரிஜிகளாக இருந்தவர்களும் கலந்து கொண்டார்கள்!

இந்தக் காரிஜிகளின் தலைவர் ஒருவரிடம் ஒரு தடவை இமாமவர்கள் சிக்கிக் கொண்டார்கள். அவர் தம்முடைய வாளை உருவிக்கொண்டு, ''அபூ ஹனீபா, எங்கள் அபிப்பிராயத்தை ஏற்காத உம்மை வெட்டப் போகிறேன்'' என்றார்.

இமாமவர்கள் நிதானமாக, ''எந்த அபிப்பிராயத்தை?'' என்று வினவினார்கள்.

''அதுதான் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுக்கும் முஆவி யாவுக்கும் இடையில் நடந்த தகராறில் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் மூன்ருவது மனிதர் ஒருவரை மத்தியஸ்தராக நியமித் துக்கொண்டதை நாங்கள் தவறு என்கிறோம். அதனுலேயே இஸ்லாமிய உலகைப் பீடித்துள்ள தொல்லேயெல்லாம் உண்டாயின என்கிறேம். நீரோ அவ்விதம் அவர்கள் மத்தி யஸ்தத்துக்கு ஒப்புக்கொண்டது சரி என்கிறீர். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் தங்கள் கட்சியில் நியாயமிருப்பதை உணர்ந் திருப்பார்களாயின் இவ்விதம் அவர்கள் மத்தியஸ்தர் தீர்ப்புக்கு ஒப்புக் கொண்டிருக்கலாமா?''

''அதுபற்றி நான் பேச அவகாசமளியும். நான் சொல் வது தவறுஞல் கடைசியில் உமது இஷ்டப்படி செய்துகொள்ள லாம்'' என்று இமாமவர்கள் அமைதியாகக் கூறினர்கள். அவரும் அவ்விதம் விவாதிப்பதை விரும்பினர்.

இமாமவர்கள் சொன்னர்கள் : ''எல்லாம் சரி, நான் என் கட்சியையும், நீர் உமது கட்சியையும் எடுத்துக் கூறுவோம். இதில் தகராறு வந்தால் என்ன செய்வது?''

''யார் சொல்வது சரி என்று தீர்மானிக்க ஒருவரை நிய மிப்போம்'' என்ருர் காரிஜித் தலேவர். அதன்படி அவர் தமது ஆள் ஒருவரை மத்தியஸ்தராக நியமித்தார். இமாமவர்கள் அதற்கு இணங்கிச் சற்று நேரம் விவாதித்துக்கொண்டிருக்கும் போது சொன்ஞர்கள் : ''இத்தகைய சூழ்நிலேயில்தான் உம்மைப்போல் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களும் மத்தியஸ்தத் துக்கு ஒப்புக்கொண்டார்கள். நீர் உமது கட்சி நியாயமான தாக இருக்கிறது என்று நம்பும்போது என்னேடு விவாதிப் பதில் மத்தியஸ்தர் ஒருவரை நியமித்துக்கொள்ள ஒப்பியது சரியல்லவா!'' என்று. காரிஜித் தலேவர் மேலே பேச முடி யாமல் வாளே உறையில் போட்டுக்கொண்டு அங்கிருந்து அகன்ருர்.

கூபாவில் வெகு தீவிரமான ஷீயாக்களும் சிலர் இருந் தனர். அவர்கள் ஹஜ்ரத் அபூபக்கர், உமர், உதுமான் (ரலி

அன்ஹூம்) ஆகிய முதல் மூன்று கலீபாக்களையும் ஒப்புக் கொள்ளாதவர்கள். அத்துடன் அவர்களைப் பற்றி வெகு இழி வாகவும் பேசிவந்தனர். அவர்களுள் ஒருவர் ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்களை 'யூதர்' என்று அடிக்கடி திட்டுவ துண்டு. இதை யறிந்த இமாமவர்கள் அவருக்கு வெகு நாசூக்காகப் புத்தி கற்பிக்க எண்ணினார்கள். ஒரு சமயம் இமாமவர்கள் எதிரே அவர் வந்தார். அவரை அழைத்து அவருடைய க்ஷேமலாபங்களை விசாரித்துவிட்டு, ''உங்களுக்கு மணப் பருவமெய்திய பெண் குழந்தையொன்று உண்டே, அதற்கு மணமாகி விட்டதா?" என்று பரிவுடன் வினவினார்கள். அவர், ''இல்லை, மாப்பிள்ளை தேடிக்கொண்டிருக்கிறேன்" என்றார்.

இமாமவர்கள் சொன்னார்கள். ''எனக்குத் தெரிந்த மாப்பிள்ளையொருவன் இருக்கிறான். நல்ல இடம். செல்வம் நிறைந்தவன். மிகவும் பேணுதலானவன். திருகுர்ஆனை மனனம் செய்தவன். இரவெல்லாம் வணக்கத்திலேயே கழிக் கிறான். அவனுக்கு உங்கள் மகளை......?" என்றதும் அந்த ஷீயாவுக்கு மகிழ்ச்சி கரை கடந்துவிட்டது. ஆஹா, அதற் கென்ன, தாராளமாகக் கொடுக்கிறேன். உறுதிப்படுத்தி விடுங்கள்" என்றார். உடனே இமாமவர்கள் அவரைக் கைய மர்த்தி, ''ஆனால் அந்த மாப்பிள்ளை யூதனாயிற்றே!" என்றார் கள். அதைக் கேட்டதும் அந்த ஷீயாவுக்குக் கோபம்பொத்துக் கொண்டு வந்தது. ''என்ன, என் பெண்ணை ஒரு யூதனுக்கா கொடுக்கச் சொல்கிறீர்கள்! ஓர் இமாம் இப்படிப் பேசலாமா?" என்று ஆத்திரத்தோடு கேட்டார். இமாமவர்கள் சாந்தமாகக் கேட்டார்கள், ''நான் சொன்ன அத்தனை யோக்கியதையு முள்ள ஒரு 'யூதரு'க்கு நம்பெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் இரண்டு புத்திரிகளை மணஞ் செய்து கொடுக்கவில்லையா!" என்று. இதைக் கேட்ட ஷீயாவுக்கு விஷயம் விளங்கிவிட்டது. நபிபெருமானாரின் இரண்டு புத்திரிகளை (ருகைய்யா, குல்ஸூம் ஆகிய இருவரை) மணந்த ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்களைத் தான் 'யூதர்' என்று இகழ்ந்துவந்ததை இடித்துக் காட்டி அது எவ்வளவு பெரிய தவறு என்பதையே இமாமவர்

கள் இவ்வளவு அருமையாக உணர்த்துகிறார்கள் என்பதை அவர் உணர்ந்து தமது நடத்தைக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

இமாமவர்கள் வசித்துவந்த தெருவில் இன்னொரு ஷீயா இருந்தான். அவன் இன்னும் கொடூரமான வக்கிர புத்தி படைத்தவன். அவன் இஸ்லாமிய உலகின் முதல், இரண்டாம் கலீபாக்களை அவமதிக்கும்வகையில் தான் வளர்த்த இரண்டு கழுதைகளுக்கும் அந்த இரண்டு மகான்களுடைய பெயர்களையும் வைத்திருந்தான். ஒருநாள் அந்தக் கழுதைகளில் ஒன்று அவனை உதைத்து விட்டது. அதனால் அவன் இறந்துவிட்டான்: ''உமர் என்று அவன் பெயர் வைத்த கழுதைதான் அவனை உதைத்திருக்கும்" என்று தமது புத்திரர் ஹம்மாதிடம் கூறினார்கள். பின்னர் விசாரித்ததில் அதுவே சரி என்று தெரியவந்தது.

ஒருசமயம் இமாமவர்கள் குளிக்குமிடம் ஒன்றுக்குச் சென்றார்கள். அங்கே நிர்வாண மனிதன் ஒருவனைக் கண்டார்கள். அவன் மார்க்கவிஸ்வாசம் பேதலித்தவன் என்று அவர்களிடம் கூறப்பட்டது. அப்போது அவன் அவர்கள் எதிராக வரவே, அவர்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். இதைப் பார்த்த அவன், ''இமாமே, அல்லாஹ் எப்போது உமது பார்வையைப் போக்கினான்?" என்று கேட்டான். உடனே இமாமவர்கள், ''எப்போது உன் மறைப்பைக் குலைத்து, உன் மானத்தைப் போக்கினானோ அப்போதுதான்" என்று பதிலளித்தார்கள்.

இமாமவர்கள் தங்கள் தீர்ப்பு ஒன்றில், புளித்த திராட்சைப் பழத்தின் சாற்றைப் பிழிந்து எடுத்த 'நபீது' என்ற பானம் 'ஹலால்' என்றும், ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் ஒரு மஜ்லிஸியால் குத்தப்பட்ட சமயம், அவர்கள் அதைக்குடித்துள்ளார்கள் என்றும் கூறியுள்ளார்கள். இதனால் ஆத்திரமடைந்த ஒருவன் சுண்ணாம்பு போடாத 'நபீது' என்ற பானத்தை இமாமவர்கள் மஸ்ஜிதில் இருக்கும் போது அவர்களிடம் கொண்டுவந்து கொடுத்து, ''இது ஹலால் என்றீரே, நீரே

குடித்துக்காட்டும்!" என்ருன். உடனே இமாமவர்கள் அமைதியாக அவனை நோக்கி, ''உமது மனைவி உமக்கு ஹலாலா, ஹராமா?" என்று கேட்டார்கள். அவன் ஹலால் தான் என்ருன். ''அப்படியானுல், அவளை நீர் இங்கேவைத்து வீடுகூடுவீரானுல், நானும் இதைக் குடிக்கிறேன்" என்று இமாமவர்கள் கூறவே அவன் முகம் சாம்பியவனுக அங்கிருந்து அகன்ருன்.

ஒரு சமயம் இமாமவர்களுக்கு நாவிதனொருவன் சவரம் செய்துகொண்டிருந்தான். பழுத்த மயிர்களைக் களைந்துவிடும் படி அவனிடம் அவர்கள் கூறினுர்கள். ''அதைப் பிடுங்கப் பிடுங்க அதிகமாகப் பழுக்கும்" என்று அவன் பதிலளித்தான். உடனே இமாமவர்கள், ''அப்படியானுல் கருப்பு மயிர்களைப் பிடுங்கிவிடு; அதாவது அதிகமாக முளைக்கட்டும்'' என்று நகைச்சுவையோடு கூறினுர்கள். இதைக் கேள்விப்பட்ட ஷரீக் என்ற நீதிபதி, ''இமாமவர்கள் தங்கள் அனுமானத்தை (கியாஸை) நாவிதனிடங்கூடக் காட்டாது விடவில்லையே;" என்று கூறிச் சிரித்தார். உண்மையில் ஆயிரக்கணக்கான பிரச்சினைகளுக்கு அவர்கள் இவ்விதம் அனுமான முறையில் பதில் கண்டுள்ளார்கள்.

## அற்புதமான தீர்ப்புகள்

இமாமவர்கள் கொடுத்த தீர்ப்புகள் உலகப் பிரசித்தி பெற்றவை. அவற்றுள் விநோதமான சிலவற்றை மட்டும் இங்கே பார்க்கலாம்.

ஒரு சமயம் இமாமவர்களின் சபையில் பிக்ஹில் நிபுணர் களான ஸுப்யானுத் தௌரி, இப்னு அபீ லைலா, ஷரீக் போன்ற பலர் அமர்ந்திருந்தனர். அப்போது ஒருவன் இமாம வர்களிடம் வந்து இந்தப் பிரச்சினைக்குப் பதில் கேட்டான்: ''ஒரு கூட்டத்தில் ஒருவன்மீது பாம்பு ஒன்று ஏறிற்று. அதை அவன் அப்பால் தள்ளினுன். அது அருகிலிருந்தவன்மீது போய் விழுந்தது. அவனும் அதை அப்பால் தள்ளினுன். அது இன்னொருவன்மீது விழுந்தது. இவ்விதம் ஒருவர்பின் ஒருவ ராகத் தட்டிவிடவே, பாம்பு கடைசியில் ஒருவன்மீது விழுந்து அவனைக் கடித்து விட்டது. அதனுல் அவன் மாண்டுபோனுன்.

எனவே, இந்தச் சாவுக்காக அவன் குடும்பத்தாருக்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டியது (தியத்) யாருடைய கடமை?"

இந்த நுட்பமான பிக்ஹுப் பிரச்சினை அங்கிருந்த அறிஞர்கள் அனைவரையுமே சிந்திக்கவைத்தது. ஒவ்வொருவரும் ஒரு தீர்ப்புக் கூறலாயினர். முதலில் பாம்பைத் தள்ளியவன்தான் நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்றார் ஒருவர். இல்லை, இல்லை, கடைசியாக அதைத் தட்டிவிட்டவன்தான் நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்றார் இன்னொருவர். இமாமவர்களுடைய தீர்ப்பை அறிய அனைவரும் ஆவலோடு அவர்களை நோக்கினர். அவர்கள் சொன்னார்கள்: "முதல் மனிதன் பாம்பைத் தனக்கு அருகிலிருந்தவன்மீது தள்ளினான். அந்த (இரண்டாம்) மனிதன் அதனால் மரிக்கவில்லை. அதனால், முதலில் பாம்பைத் தள்ளியவன் நஷ்டஈடு கொடுக்கவேண்டியதில்லை. இவ்விதம் பலரைத் தாண்டிப் பாம்பு கடைசியாக மரித்தவனுக்கு முந்திய நபரிடம் வந்துசேர்ந்தது. அவன்தான் அதை மரித்தவன்மீது தள்ளினான். இங்கே இரண்டு நிலைகளுக்கு இடமுண்டு. அதாவது, இந்த நபர் கடைசி ஆள் (மாண்டுபோனவன்) மீது பாம்பைத் தள்ளிய உடனேயே அது அவனைக் கடித்து அதனால் அவன் இறந்தானா? அப்படிக் கடித்திருப்பின் கடைசியாகப் பாம்பைத் தள்ளியவனே நஷ்டஈடு கொடுக்க வேண்டும். ஆனால், அந்தப் பாம்பு இறந்த ஆள் மீது தள்ளப்பட்ட உடனே கடிக்காமல், சற்று நேரம் சென்று கடித்திருப்பின், கடைசியாகப் பாம்பைத் தள்ளிய நபரும் நஷ்டஈடு கொடுக்கவேண்டியதில்லை. ஏனெனில், பாம்பு தன் மீது விழுந்தவுடன் அதை அப்பால் தள்ளித் தன்னைக் காத்துக் கொள்ளாமல் சும்மா இருந்தது இறந்து போனவனுடைய குற்றமாகும்" இமாமவர்களின் இந்த முடிவே சரியானது என்று யாவரும் ஏற்றுக்கொண்டனர்.

கூபாவில் ஒரு பிரமுகர் தம்முடைய இரண்டு பெண்களுக்கு ஒரே சமயத்தில் திருமணம் நடத்தினார். மறுநாள் திருமண விருந்துக்காக நகரப் பிரமுகர்களுடன், பிரபல பகீஹ்களான முஸ்யிர், ஹஸன் பின் ஸாலிஹ், ஸுப்யானுத் தௌரி, அபூ

ஹனீபா ஆகியோரும் சென்றிருந்தனர். விருந்தினர் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது பெண்களின் தந்தை பெரிதாகக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார். விஷயம் என்னவென்று விசாரித்ததில் இரவில் திருமணம் நடந்து முடிந்ததும் மணப்பெண்கள் தத்தம் மாப்பிள்ளைகளுடன் சயனிக்க அனுப்பப்பட்டனர். ஆனால், பெண்களின் தவறால் மூத்தவளின் கணவன் இளையவளோடும், இளையவளின் கணவன் மூத்தவளோடும் படுக்க நேர்ந்துவிட்டது. இதுபற்றித்தான் வீட்டுக்காரர் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார். விருந்து முடிந்ததும், வந்திருந்த பெரியார்களிடம் இதற்கு என்ன செய்யலாம் என்று அவர் வினவினார்,

ஸுப்யானுத் தௌரி சொன்னார்கள் : ''இதனால் விவாக பந்தத்தில் தவறு ஏதுமில்லை. எனினும், எவளோடு எவன் படுத்திருந்தானோ அவனே அவளுக்கு மஹர் தொகையைக் கொடுக்க வேண்டும்" என்று. அருகிலிருந்த முஸ்மிர், இமாம் அபூ ஹனீபாவின் தீர்ப்பை வேண்டினார். அவர்கள் முதலில் இரண்டு மாப்பிள்ளைகளையும் தங்களிடம் தனித்தனியே அழைத்துவரச் செய்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரிடமும் ரகசியமாக, ''நீ இரவில் எவளோடு சயனித்திருந்தாயோ அவளே உனக்கு மனைவியாக வருவதை விரும்புகிறாயா?'' என்று கேட்டார்கள். இருவரும் ஆம் என்று கூறிவிட்டனர். உடனே இமாமவர்கள் சபையினரை நோக்கிச் சொன்னார்கள்: ''எந்தப் பெண்களோடு இவர்களுக்கு நிக்காஹ் நடந்ததோ அவர்களை இருவரும் தலாக்குச் சொல்லிவிட்டு, இன்று இரவில் எவர்களோடு படுத்திருந்தார்களோ அவர்களை இருவரும் நிக்காஹ் செய்து கொள்ளவேண்டும்!''

இந்தத் தீர்ப்பை ஸுப்யானுத் தௌரியும் ஏற்றுக் கூறியதாவது : ''தப்பபிப்பிராயத்தில் நேர்ந்துவிட்ட இந்த வீடு கூடலால் விவாக முடிச்சு அறுபட்டுவிட வில்லைதான். ஆனால், வேறொருவனோடு படுத்த பெண்ணை ஏற்றுக்கொள்ள அவள் கணவனின் தன்மானம் இடந்தராது. அப்படியே அவள் சேர்த்தாலும் அவர்களுடைய தாம்பத்திய வாழ்க்கை மகிழ்ச்சியுடையதாக இருக்காது. மேலும், இந்த நிலையில் (தாங்கள்

தங்கள் மனைவியரோடு வீடுகூடாமல்) தங்கள் மனைவியரை இவர்கள் தலாக்குச் செய்வதால் அதற்குப் பாதி மஹர்தான் உண்டு. எனவே, சகல வகையிலும் அபூ ஹனீபாவின் தீர்ப்பு சிறந்ததாகும்.''

எகிப்தில் புகழ்பெற்ற இமாமாக விளங்கிய லைஸ் பின் சஃது சொல்கிறார் : ''நான் இமாம் அபூ ஹனீபாவைப் பற்றி அதிகமாகக் கேள்விப்பட்டிருந்தாலும் அவர்களை நேரில் சந்தித்ததில்லை. ஒரு தடவை நான் ஹஜ்ஜுக்குப் போயிருந்த சமயம் மக்காவில் மிகப் பெரிய கூட்டமொன்றில், தலைவர் ஆசனத்திலமர்ந்திருந்த ஒருவரிடம் பலரும் மார்க்கத் தீர்ப்புகள் கேட்டுப் பெறக் கண்டேன். இச்சமயம் அந்தத் தலைவரை நோக்கி ஒருவர், ''அபூ ஹனீபா!'' என்று விளித்ததும்தான் அவர்கள் இமாம் அபூ ஹனீபா என்று நான் அறிந்துகொண்டேன். உடனே அவர்கள் குரல் கொடுத்தவரை அருகிலழைத்து, ''என்ன சேதி?'' என்று வினவினார்கள். அந்த மனிதர் கேட்டார்: ''எனக்கொரு போக்கிரிப் புத்திரன் இருக்கிறான். அவனுக்கு மணம் செய்துவைத்தால் மனைவியைத் தலாக்குக் கூறிவிடுகிறான். அடிமைப் பெண்ணை வாங்கிக் கொடுத்தாலும் உரிமை கொடுத்து அனுப்பிவிடுகிறான். இந்த நிலையில் நான் என்ன செய்யலாம்?" என்று. இமாமவர்கள் சொன்னார்கள் : ''அப்படியானால் உமது மகனை அடிமைப் பெண்கள் விற்கும் சந்தைக்கு அழைத்தேகும். அவனுக்குப் பிரியமான பெண்ணை விலைக்கு வாங்கி அவனுக்கு மணம் முடித்துவிடும். அவன் அவளுக்கு உரிமை கொடுக்க விரும்பினால் அது செல்லாது. ஏனெனில், அவள் அவனுடைய அதிகாரத்தில் (மில்க்கில்) இல்லை. (நீர் வாங்கிய அவள் உம் பொருள் தான்.) அவன் அவளைத் தலாக்குச் சொல்லிவிட்டாலும் உமக்கு ஒன்றும் நஷ்டமில்லை. நீர் வாங்கிய அடிமைப் பெண் உம்மிடமே இருந்துவிடுவாள்." இந்தப் பொருத்தமான பதிலைக் கூறிய இமாமவர்களை நான் பெரிதும் மெச்சினேன்.''

இமாமவர்கள் தங்கள் மதரஸாவிலிருந்த சமயம் பெண் மணியொருத்தி அங்கு வந்து, பலரும் கூடியிருந்த சபையில்

தலை குனிந்தவாறே, இமாமவர்கள் முன் நாரத்தம் பழம் ஒன்றை வைத்தாள். அதன் ஒரு பகுதி மஞ்சளாகவும், மறு பாகம் சிகப்பாகவும் இருந்தது. இமாமவர்கள் அதைக் கையி லெடுத்து இரண்டாகப் பிளந்து காட்டினார்கள். அதைப் பார்த் ததும் அந்தப் பெண் வெளியில் போய்விட்டாள். இதன் தாத் பரியம் என்ன என்பதை அறியாத சபையினரில் ஒருவர் மெதுவாக இதன் விபரமென்ன என்று அவர்களிடம் வினவி னார். இமாமவர்கள் சொன்னார்கள் : "இந்தப் பெண்ணுக்கு ஒரு மாதம் மஞ்சளாயும், ஒரு மாதம் சிகப்பாயும் மாத ருது வெளியாகிக்கொண்டிருக்கிறது. இதுபற்றி என்னிடம் தெளிவு காண, வாயால் சொல்ல இயலாத நிலையில் அந்த நாரத்தம் பழத்தைக் கொண்டுவந்தாள். நான் அதைப் பிளந்து, அதனுள் இருப்பதுபோல்—இரண்டுவித ருதுவுக்குப் பின்னும்-- ஒரே வகையாக வெள்ளையைக் கண்டால் சுத்தமாகி விட்டாள் என்று அறிவித்தேன்."

ஒரு சமயம் இமாமவர்கள் (அவர்கள் சிறையிலிருந்த காலத்திலாய் இருக்கலாம்) கலீபா மன்ஸூருடைய சபைக்கு அழைத்துவரப்பட்டார்கள். அங்கே மன்ஸூருடன் அபுல் அப்பாஸ் என்ற பிரமுகர் அமர்ந்து உரையாடிக்கொண்டிருந் தார். இந்த அபுல் அப்பாஸ் எப்பொழுதும் இமாமவர்கள்மீது குறை கூறிக்கொண்டும், அவர்களுடைய கண்ணியத்தைப் போக்க முயன்று கொண்டுமிருந்தார். அங்கே வந்த இமாம் அபூ ஹனீபாவை இன்று எப்படியாவது தலைகுனிய வைத்து விடுவது என்ற உறுதியுடன் அவர் இமாமவர்களிடம் கேட்டார் : "நமது அமீருல் மூமினீன் (கலீபா) சிற்சில சமயங் களில் யாரையாவது சுட்டிக்காட்டி அவரைக் கொன்றுவிடு மாறு ஆணையிடுகிறார்கள். அந்த மனிதன் குற்றவாளியா, இல்லையா என்பதைக்கூட நாங்கள் அறிய முடிவதில்லை. இந்த நிலையில் நாங்கள் அமீருல் மூமினீனுடைய ஆணையை அமல் படுத்துவதெப்படி?"

உடனே இமாமவர்கள் அபுல் அப்பாஸை நோக்கி, ''சரி, கலீபாவின் ஆணை சரியாக இருக்குமா, தவருக இருக்குமா என்பதுபற்றி உங்கள் அபிப்பிராயம் யாது?" என்று வினவினுர்கள். ''சரியாக இருக்கும் என்பதே என் அபிப்பிராயம்" என்று அவர் கூறவே, ''அப்படியாளுல், சந்தேகமென்ன, அவர் ஆணைப்படி நடக்கவேண்டியது தானே!" என்று கூறிவிட்டார்கள். இப்படி எதிர்பாராத விதமாக மடக்கப்பட்ட அபுல் அப்பாஸ் தலையைத் தொங்கப் போட்டுவிட்டார்.

இதுபோன்ற கலீபா மன்ஸூரின் சபையைச் சேர்ந்த ரபீக் என்பவரும் இமாமவர்களைப் பழிவாங்க முயன்ருர். மன்ஸூரின் மூதாதையான ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், ''ஒருவன் ஒரு விஷயம்பற்றிச் சத்தியம் செய்து, பின்னர் இரண்டொரு நாட்களுக்கப்பால் அதில் சில அம்சங்களை ஒதுக்கிக்கொண்டால் அது ஆகும்'' என்று கூறியிருக்கிருர்கள் என்றும், இமாம் அபூ ஹனீபாவோ, ''அவ்விதம் ஒதுக்கியது சத்தியத்துடன் சேர்ந்திருந்தால் தான் ஆகும்'' என்று கூறுகிருர்கள் என்றும், இதுபற்றி அவர்களிடம் விசாரிக்க வேண்டும் என்றும் இந்த ரபீக் கலீபா மன்ஸூரைத் தூண்டினுர். இமாமவர்கள் தமது சபைக்கு வந்தசமயம், அது பற்றி அவர்களிடம் வினவுவதற்குக் கலீபா அனுமதியளித்தார். ''நீங்கள் இவ்விதம் கூறுவது எப்படிப் பொருந்தும்?" என்று இமாமவர்களிடம் ரபீக் கேட்டதற்கு, தமது அபிப்பிராயந்தான் சரி என்பதை அவர்கள் ஓர் உதாரணத்தால் விளக்குவதாகக் கூறி, ''இப்போது அமீருல் மூமினீன் இருக்கிருர்கள். இவர்கள் முன் ஜனங்கள் இவர்களின் கிலாபத்தை ஏற்று, சத்தியம் செய்து கொடுத்துவிட்டு, வீட்டுக்குப் போனதும் அதற்கு மாற்றமாக நடந்து கொண்டால் இவர்கள் ஆட்சி நடப்பது எப்படி? எனவே, தான் சொல்வது சரி என்பதைக் கலீபாவே ஒப்புக் கொள்வார்கள்'' என்ருர்கள். இமாமவர்கள் இவ்விதம் கூறவே கலீபா தமது திருப்தியைப் புன்னகையால் வெளியிடலாளுர்.

ஒரு மனிதன் தன் மனைவியோடு சச்சரவிட்டுக் கொண்டான். அப்போது கோபத்தில், ''நீ என்னிடம் முதலில்

பேசாதவரை சத்தியமாக நான் உன்னிடம் பேசமாட்டேன்'' என்று சத்தியம் செய்துவிட்டான். அவன் மனைவியும் கோபத்தில் அவனை நோக்கி, ''நீர் என்னிடம் முதலில் பேசாவிட்டால் நானும் உம்மிடம் சத்தியமாகப் பேசவே மாட்டேன்" என்று கூறிவிட்டாள். இருவரும் கோபந் தணிந்து, சுய நிலையை அடைந்ததும் ஒருவரோடொருவர் பேச இயலாது பெரிதும் வருந்தினார்கள். இருவரும் ஒருவரை யொருவர் மிகவும் நேசித்தவர்கள். எனவே, பேசாமல் இருப்பதென்பது அவர்களுடைய விஷயத்தில் வெகு கடினமான காரியமாக இருந்தது. கடைசியில் இதற்கு ஏதேனும் வழியுண்டா என்று கணவன் பெரியார்கள் பலரிடமும் சென்று முறையிட்டான். செய்த சத்தியத்துக்கு அபராதம் (கப்பாரா) கொடுத்தாக வேண்டும் என்றே யாவரும் கூறிவிட்டனர். கடைசியில் அவன் இமாம் அபூ ஹனீபாவிடம் வந்தான். விஷயத்தைக் கேட்ட அவர்கள் அவன் அபராதம் கொடுக்கத் தேவையில்லை என்றும், தன் மனைவியிடம் பேசலாமென்றும் அனுமதி கொடுத்துவிட்டார்கள்.

இமாமவர்களுடைய இந்தத் தீர்ப்பு ஸுஃப்யானுத் தௌரியின் காதுக்கும் எட்டிற்று. இதுகேட்டு வருத்தமுற்ற அவர்கள் இமாமவர்களிடம் வந்து, ''அபூ ஹனீபா, நீங்கள் இப்படிந் தீர்ப்புச் சொல்லக் காரணம் யாது?" என்று வினவினார்கள். உடனே இமாமவர்கள் அந்த மனிதனை அழைத்துவரச் செய்தார்கள். நடந்த சம்பவத்தை மீண்டும் அவன் வாயாலேயே சொல்ல வைத்தார்கள், பின்னர் அவர்கள் ஸுஃப்யானை நோக்கி, ''இந்த மனிதன் தன்மனைவிதான் முதலில் தன்னிடம் பேசவேண்டும் என்று சத்தியம் செய்தான். அதன்படியே அவளும் முதலில் (அவன் பேசி முடித்த உடனேயே) பேசிவிட்டாள். (அவள் பேசிய வாசகம் என்ன என்பது வேறு விஷயமல்லவா!) இந்த நிலையில் அபராதம் ஏது?'' என்று வினவியதும் ஸுஃப்யான் இமாமவர்களைப் பாராட்டிச் சென்றார்கள்.

இதுபோன்றே மூடத்தனமாகச் சத்தியம் செய்து விட்டுத் திண்டாடிய இன்னொரு மனிதனுக்கும் இமாமவர்கள் நிவர்த்தி

தந்தார்கள். இந்த மனிதன் அடுக்கடுக்காக மூன்று சத்தியம் செய்துவிட்டான். அதாவது, ''இன்று நான் வீடுகூடிய அசுத்தம் நீங்க (ஜுனுபத்துக்காகக்) குளித்தால் என் மனைவிக்கு மூன்று தலாக்கும் பூர்த்தியாகிவிட்டது'' என்று கூறியவன், அதைத் தொடர்ந்து, ''இன்று எனக்கு எந்த நேரத் தொழுகை யாவது 'கலா'வானுலும் என் மனைவிக்கு மூன்று தலாக்கும் கிடைத்துவிட்டது" என்ருன். அத்துடன் நில்லாது, ''இன்று என் மனைவியோடு வீடுகூடாமலிருந்தாலும் அவளுக்கு மூன்று தலாக்கும் பூர்த்தியாகி விட்டது" என்று சத்தியம் செய்து விட்டான். அவனுக்கு நிதான புத்தி வந்தபிறகு யோசித்துப் பார்த்தால் இதிலிருந்து விடுபட மார்க்கமே காணோம். மனைவியைப் பிரிவதையன்றி வேறு மார்க்கமிருப்பதாகவே பட வில்லை. அதற்கு மனம் இடந்தரவில்லை. தன் வாழ்க்கைத் துணைவியை அவ்வளவு இலகுவில் பிரிந்துவிடுவதா என்று பதறினுன். உடனே அவன் சட்ட நிபுணர்கள் பலரிடம் போனுன். தான் சத்தியம் தவருமலிக்க என்ன செய்யவேண் டும் என்று வினவினுன் யாராலும் திருப்திகரமாகப் பதில் தர இலயவில்லை: நடுப்பகலில் அவன் இமாம் அபூ ஹனீபாவிடம் வந்து சேர்ந்தான். அவனுடைய சத்தியங்களைக் கேட்ட அவர் கள், அதிலிருந்து அவன் தவருமலிருக்கச் சுலபமான வழி யொன்றைக் கூறினுர்கள். ''நீ இன்று அஸர் தொழுது முடித்த உடன் உன் மனைவியோடு வீடுகூடு. சூரியன் அஸ்த மனதான உடனேயே முழுக்கு நீங்கக் குளித்து விட்டு, மக்ரிபைத் தொழு. நீ செய்த சத்தியம் முறியாது" என்று அவர்கள் மார்க்கங் காட்டினுர்கள். மகிழ்ச்சியால் பூரித்த அவன் ''எப்படி?'' என வினவினுன். ''சூரியன் அஸ்தமித் ததும் வேறு நாள் தொடங்கிவிடுகிறது. இன்றையப் பொழுது போய், நாளைப் பொழுது வந்து விடுகிறது" என்று இமாமவர் கள் விளக்கம் நல்கினுர்கள்.

இமாமவர்கள், தங்கள் அற்புதமான தீர்ப்புகளிடையே யும், ஒரு மனிதர் என்ற முறையில் தவறு செய்திருப்பதும் கூடு மல்லவா? இதை விளக்கும் சம்பவமும் ஒன்று பேசிவரப்படு

கிறது. அது வருமாறு : இமாமவர்களின் பிற்காலத்தில் மரியாதையான, கல்வியறிவு பெற்ற வாலிபர் ஒருவர் அவர்களிடம் வந்து, ''இமாமவர்களே, நீங்கள் எப்போதாவது ஒரு தீர்ப்பளித்துவிட்டுப் பின்னர் அதற்காக வருந்தியதுண்டா?" என்று கேட்டார். அதற்கு இமாமவர்கள், ''பல ஆண்டுகளுக்குமுன், நான் தீர்ப்புக்கள் அளிக்கத் தொடங்கிய காலத்தில் என்னிடம் சிலர் வந்து, அருகாமையிலுள்ள ஊர் ஒன்றில் நிறைமாதக் கர்ப்பிணியான பெண்ணொருத்தி இறந்துவிட்டதாகவும், அவள் வயிற்றிலுள்ள குழந்தை துடித்துக் கொண்டிருப்பதாயும், அதற்கு என்ன பரிகாரம் என்றும் கேட்டனர். அப்போது நான் சிறிது யோசித்துவிட்டு, தாயின் வயிற்றைப் பிளந்து, குழந்தையை வெளியில் எடுத்துக் கொண்டு, மையித்தை அடக்கலாம் என்று தீர்ப்புக் கொடுத்துவிட்டேன். அதற்குப்பின், அந்த மையித்தை வேதனைப்படுத்தும் படியாக நாம் தீர்ப்பளித்துவிட்டோம் என்ற எண்ணம் என்னுள் உண்டாகலாயிற்று. அதிலும், வயிற்றிலிருந்த குழந்தையை உயிரோடு எடுத்தார்களா, அது பிழைத்ததா என்றும் என்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை. அதனால் என்னுடைய மனவேதனை அதிகமாயிற்று. இதில்தான் நான் தீர்ப்பளித்தபின் பெரிதும் வருந்தினேன்" என்று கூறினார்கள்.

அது கேட்ட அந்த வாலிபர் சொன்னார் : ''இமாமவர்களே, அது குறித்து நீங்கள் வருந்தத் தேவையில்லை. அந்த மையித்துத்தான் என் தாய்; நான்தான் அவர் வயிற்றை அறுத்து எடுக்கப்பட்ட குழந்தை. உங்கள் நல்லாசியால் நானும் கல்விமானாக விளங்குகிறேன்'' என்று. இது கேட்ட இமாமவர்கள் பெரிதும் மகிழ்ந்து அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தினார்கள்.

இமாமவர்கள் உலகிலேயே மாபெரும் அறிவாளிகளில் ஒருவராக இருந்ததால் மட்டும் இவ்விதம் அற்புதமான தீர்ப்புக்களை வழங்கினார்கள் என்று எண்ணிவிடக் கூடாது. அவர்களுடைய சித்தசுத்தியும், ஏகாக்கிர சித்தமும், பெருத்த செல்வத்தில் திளைத்தாலும் இம்மையின் பந்தபாசங்களை விட்டு

விடுபட்டதும் இந்த அறிவுத் தீட்சண்யத்துக்கு உறுதுணையாக நின்று அற்புதமான—இன்று நாம் பார்த்து வியக்கும்படியான-தீர்ப்புகளை வழங்கச் செய்தன. ஒருசமயம் ஒருவர் இமாமவர்களிடம் வந்து, ''பிக்ஹு கற்று, தீர்ப்புகள் எது தர அவசியம்?" என்று வினவினார். இமாமவர்கள் ''மனஓர்மை'' என்று பதிலளித்தார்கள். ''மனஓர்மை உண்டாவதெப்படி?'' என்று அவர் மீண்டும் கேட்டபோது. ''இம்மையின் தொடர்புகளைக் குறைத்துக் கொள்ளவேண்டும். அதாவது. மனிதன் என்ற முறையில் மிகமிக அவசியமான தேவைகளை மட்டும் கவனித்துக்கொண்டு மற்றவைகளை ஒதுக்கிவிடவேண்டும்" என்று விளக்கியுள்ளார்கள். இவ்விதமே அவர்கள் நடந்து வெற்றி கண்டார்கள். இமாமவர்கள் மார்க்கத் தீர்ப்பு வழங்குவதற்காக எடுத்துக் கொண்ட முன்னேற்பாடுகளையும், அதற்காக அவர்கள் அமைத்த குழுவையும் பற்றிப் பின்னர் படிக்கவிருக்கிறோம்.

## இமாமவர்களின் உபதேசம்

இமாமவர்கள் செய்த உபதேசங்கள் எவ்வளவு அனுபவப் பூர்வமானவை, கற்றோர் யாவரும் பின்பற்ற அருகதையானவை என்பதைக் காட்டுவதற்காக அவர்கள் தங்களின் தலையான மாணவரும், பின்னர் கலீபா ஹாரூனர் ரஷீதின் பிரதான சட்ட ஆலோசகராக ஆனவருமான இமாம் அபூயூஸுபுக்குக் கல்வி பயிலுங் காலத்திலும், கல்வி பயின்று முடித்த பின்னும் சொன்ன உபதேசங்கள் அருமையானவை. அவையனைத்தும் திரட்டி இங்கே தரப்படுகின்றன: (இமாம் அபூ ஹனீபா சொல்கிறார்கள்:) ''அபூ யூஸுப், நீர் ஆட்சியாளர்களோடு, ஏன் கலீபாவோடுகூட நெருங்கிப் பழகக் கூடாது. நெருப்போடு பழகுவதுபோல் அவர்களோடு பழக வேண்டும், அதிகாரிகள், கலீபா ஆகியோரின் அவைக்குப் போயாகவேண்டிய அவசியம் உண்டானால், அங்கே உமது கண்ணியத்துக்கும், தன்மானத்துக்கும் இழுக்கு உண்டாக்கும் எச்செயலையும் செய்யக்கூடாது. அத்தகைய சபைகளில்

உமக்குத் தெரியாத புது மனிதர்களைக் கண்டால் அவர்களிடம் வெகு விழிப்போடு நடந்துகொள்ளவேண்டும். ஏனெனில், அவர்களுடைய தன்மை, இயல்பு, அறிவாற்றல் ஆகியவற்றை நீர் அறியாத நிலையில் நீர் அவர்களிடம் பேசக்கூடிய பேச்சு தப்பபிப்பிராயங்களை உண்டாக்கிவிடலாம். அவர்கள் உம்மை விட அறிஞர்களாய் இருந்து, அவர்களுடைய மேதாவிலா சத்தை நீர் மதிக்காவிட்டால் நீர் மரியாதை தெரியாதவர் என்று அவர்கள் எண்ண இடமுண்டாகிவிடும். அதுபோலவே, அவர்கள் உம்மைவிடத் தாழ்ந்தவர்களாக இருந்து நீர் அவர் களை அளவுக்கதிகமாகக் கௌரவிக்கநேர்ந்தால் அப்போது உம் கௌரவத்துக்குக்கும் கண்ணியத்துக்குமே மாசு உண்டாகி விடும்.

''ஒருக்கால் கலீபா உம்மை நீதி இலாக்காவின் அதிப ராக—பிரதம நீதிபதியாக—நியமிக்க விரும்பலாம். அப்படி நீர் நியமனம் பெற்றால், உம் வழிப்படி நடக்க அவர் அனும திக்கிறாரா என்பதை முதலில் அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். இன்றேல், பின்னர் உம் மனசாட்சிக்கு முரணாகக்கூட நீர் நடந்து சீரழிய நேரிடும். உமக்குத் தகுதி யற்ற, அல்லது நீர் தகுதியற்றவரான எந்தப் பதவியையும் ஒருக்காலும் ஏற்கவேண்டாம்! யாராயினும் சரி, அரச அவையைச் சேர்ந்தவராயினும் சரி, இஸ்லாத்தின் பெயரால் சன்மார்க்கத்துக்கு முரணான ஒரு செயலைப் புதிதாக (பித் அத்தாக)ச் செய்ய முயன்றால், அது தவறு என்பதை நீர் பகிரங்கமாக எடுத்துக் கூறவேண்டும். அப்போதுதான் மற்ற வர்கள் அத்தகைய செயல்களைச் செய்யாமல் விலகிக்கொள்வார் கள். நீர் உண்மையை எடுத்துக் கூறும்போது அல்லாஹ் உம்மோடிருந்து நிச்சயம் உமக்கு நல்லுதவிபுரிவான். அவனே தன் சன்மார்க்கத்துக்குக் காவல் தருபவனாவான்.

''கலீபாவே தவறு செய்தாலும், அவரைத் தனியே சந்தித்து, ''நீங்கள் செய்தது, இன்ன வகையில் தவறாகும். நீதிபதிப் பதவியால் நான் தங்களுக்குக் கட்டுப்பட்டவனாயினும் தாங்கள் தவறு செய்யும்போது அதைச் சுட்டிக் காட்டுவது

என் கடமை என்பதை உணர்ந்து இவ்விதம் செய்கிறேன்' என்று எடுத்துக்கூற வேண்டும். உம் வாதத்துக்கான திருகுர்ஆன், ஹதீஸ் ஆதாரங்களையும் அவரிடம் தெரிவிக்க வேண்டும். அப்படியும் அவர் அந்தத் தவறைவிட்டு விலகாவிடின், அது உம்மையும் பீடித்துவிடாமலிருக்க அல்லாஹ்விடம் புகலிடம் தேடவேண்டும்.

''கல்வி பெறுவதையே தலையாய கடமையாகக் கொள்ள வேண்டும். பின்னரே நேர்மையான முறையில் ஜீவனோபாயத்துக்கான சம்பாத்தியத்தில் இறங்க வேண்டும், ஏக காலத்தில் கல்வியையும் செல்வத்தையும் அடைய இயலாதாகையால் முதலில் கல்வியைத் தேடிக்கொண்டு பின்னர் இவ்விதம் ஜீவனோபாயத்தைத் தேடுவதே முறையாகும். அதன்பின்னரே மணமுடிக்கலாம். குடும்ப நிர்வாகத்துக்குப் போதிய வசதிகளை உண்டாக்கிக்கொண்டு மணமுடிப்பது சாலச் சிறந்ததாகும். வேறொரு கணவனால் குழந்தை பெற்று வைத்துள்ள பெண்ணை மணக்கவேண்டாம்! சாதாரண ஜனங்களோடு, குறிப்பாகச் செல்வர்களோடு நெருங்கிப் பழக வேண்டாம். உமக்குப் பணத்தாசை இருப்பதால்தான் அப்படிப் பழகுகிறீர் என்று பலரும் எண்ணவும், உமக்கு லஞ்சந் தர உம்மை நெருங்கவும் பலர் முன்வந்து விடுவார்கள். கடைவீதிகளில் உலவுவதிலும், கடைகளில் உட்காருவதிலும், வழியில் நடந்துகொண்டோ மஸ்ஜிதில் அமர்ந்துகொண்டோ எதையும் தின்னும் விஷயத்திலும், கூலிக்குத் தண்ணீர் ஊற்றும் கூலியாட்கள் கையால் தண்ணீர் குடிப்பதிலுங்கூட மிகவும் பேணுதலாக இருக்க வேண்டும்.

''யாராவது ஒரு பிரச்சினைக்குப் பதில் கேட்டால், கேள்விக்கு மட்டும் பதில் சொல்லும். உம் இஷ்டப்படி எதையும் மிகைப்படுத்திப் பேசவேண்டாம்; ஷரீஅத்தின் சித்தாந்தங்களின் நுட்பங்களைப்பற்றியெல்லாம் வாதித்துக்கொண்டிருக்கக் கூடாது. உம் மாணவர்களைப் பிறர் உம் சொந்தப் புதல்வர்கள் என்று கருதும் வண்ணம் அன்போடும் பரிவோடும் நடத்த வேண்டும். கல்வியறிவற்ற சாமான்ய ஜனங்களோடு

விவாதத்திலிறங்க வேண்டாம்! அயலூர் சென்ருல் அங்குள்ள உலமாக்கள், அறிஞர்களோடு பழகும்போது அவர்கள் உம்மைத் தமது உறவினர்களைப் போல் கருதிக்கொள்ள இடங் கொடுக்கக்கூடாது. பிரச்சினைக்குப் பதில் கூற நேரும்போது, நன்கு சிந்தித்து, திருப்திகரமாக ஆதாரங்காட்ட முடியக்கூடிய அம்சங்களுக்கே பதில் சொல்ல வேண்டும்.

''விவாதம் நடத்துகையில் நீர் தைரியத்தோடும் உறுதி யோடும் நடந்துகொள்ள வேண்டும். சற்றேனும் அச்சமுண்டா யினும் நீர் எண்ணிய கருத்து சரியாக வெளிவராது; பேச்சில் தயக்கமும் குழப்பமும் உண்டாகிவிடும். விவாதமுறையை அறியாதவர்களோடும் விதண்டாவாதம் செய்பவர்களுடனும் ஒருக்காலும் விவாதத்தில் இறங்கவேண்டாம். வாதப் பிரதி வாதங்களிடை கோபப்படக் கூடாது. எந்த வேலையையும் அமைதியாகவும், கண்ணியத்தோடும் செய்யவேண்டும். எவ ராயினும், உம்முன் வந்துநின்று பேசாதவரை அவர் கேட்ப தற்குப் பதிலளிக்க வேண்டாம். ஏனெனில் பின்னுலிருந்து குரல் கொடுப்பது பிராணிகளின் இயல்பாகும். பாதையில் நடக்கும்போது வலமும், இடமும் திரும்பிப் பார்க்கக்கூடாது. பொதுஜனங்கள் உபயோகிக்கும் குளிக்குமிடங்களுக்கு (ஹமாம்களுக்குச்) சென்ருல், அங்கு குளிப்பதற்காக மற்றவர் களைவிடக் கொஞ்சம் அதிகமாகக் கட்டணம் கொடுக்கவேண் டும். மேலும், நடுப்பகலில் கண்டிப்பாகக் குளிக்குமிடங்களுக் குப் போகக்கூடாது. யாருடனும் இனிய மொழிபேசவேண்டும். அதுவும் அளவுக்கு அதிகம் பேசக்கூடாது. ஏதாவது சாமான் வாங்கவேண்டு மென்றிருந்தால் நீரே கடைவீதிக்குப் போய் வாங்காமல் பணியாளை அனுப்பி வாங்கி வரச் செய்யவேண் டும். குடும்ப நிர்வாகத்தைக்கூட நம்பிக்கையான ஒரு பணி யாளிடம் ஒப்படைத்து விட்டால்தான் நீர் உமது பணியைச் செவ்வனே செய்யப் போதிய அளவு அவகாசங் கிடைக்கும். ஆட்சியாளர்களுடன் அதிக நேரம் தங்கியிருக்க விரும்பாதீர்! ஏழ்மையிலும் செம்மையாகவே நடந்துகொள்ளும். சாதாரண ஜனங்களிடையில் எழுந்துநின்று ஞானுேபதேசம் புரிய ஆசைப்

படவேண்டாம். அத்தகைய நிலையில் வீண்பொய்க் கதைகளைச் சொல்லும் நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடும்.

''உம்முடைய மாணவர்களில் யாருக்கேனும் பிக்ஹு வகுப்புக்கள் நடத்த நீர் அனுமதியளித்தால், சிற்சில சமயங்களில் நீரும் சென்று அந்த வகுப்புக்களில் அமர்ந்து கவனிக்க வேண்டும். அப்போதுதான் அந்த மாணவரை மற்றவர்கள் கண்ணியமாக மதிப்பார்கள். வகுப்பு நடத்தும்போது அவர் ஏதும் தவறாகக் கூறினாலும் நீர் அதை உடனே திருத்திக் கொடுக்க வேண்டும். இல்லாவிடின் அவர் சொல்வது சரிதான் போலும் என்று ஜனங்கள் எண்ண இடமுண்டாகிவிடும். ஆனால், ஃபிக்ஹுப் பாடங்கள் அல்லாத வேறு பாடங்கள் நடத்துவதற்கு உமது மாணவன் யாருக்கேனும் நீர் அனுமதியளித்தால் அவன் நடத்தும் வகுப்பிலும் நீர் சென்று அமர வேண்டுமென்பதில்லை. யாரேனும் நண்பரையோ, வேறு மாணவரையோ அங்கே அனுப்பி அவன் எப்படிப் போதிக்கிறான் என்று கவனிக்கச் செய்யலாம்.

''சகல விஷயங்களிலும் அல்லாஹ்வுக்கு அஞ்சி சித்த சுத்தியுடன் நடந்துகொள்வதும், அவன்மீது முழு ஆதரவு வைப்பதும் அவசியமாகும். ஜனங்களுக்காக நீர் செய்யக்கூடிய சகல சேவையையும் அல்லாஹ்வுக்காகவே செய்யவேண்டும். 'பாங்கு' சத்தம் கேட்டதுமே தொழுகைக்காக விரைந்து மஸ்ஜிதுக்குச் சென்றுவிடவேண்டும். ஒவ்வொரு மாதத்திலும், இரண்டு நாட்களை நோன்பு நோற்பதற்காக ஒதுக்கி நோன்பு பிடித்துவரவேண்டும். ஒவ்வொரு நேரத் தொழுகைக்குப்பின் ஏதாவது ஒரு வஜீபாவை ஓதி வருவதும், தினமும் சிறிதளவாவது திரு குர்ஆனை ஓதுவதும் அவசியமாகும்.

''இம்மையில் சுகபோகங்களை அதிகமாக விரும்பக் கூடாது. அடிக்கடி கப்ருஸ்தான் பக்கம் சென்று சிந்திப்பதைப் பழக்கமாக்கிக் கொள்ளவும். வீண் விளையாட்டுக்களை விரும்பாமல் பேணுதலாக நடந்துவாரும். உமது அண்டைவீட்டார்கள் தவறு ஏதும் செய்தால் அதைப் பிரமாதமாக விளம்பரப்படுத்

திக் கொண்டிராமல் மறைத்துவிடவேண்டும். மார்க்க முரணான 'பித்அத்'களைச் செய்வோருடன் சேர்ந்து பழகக்கூடாது. ஜனங்கள் கூடி உம்மை இமாமாக நிறுத்தும்வரை தொழுகை நடத்த இமாமாக முன் நிற்கவேண்டாம்! உம்மைச் சந்திக்க வருபவர்கள் தாங்களாகவே கலாஞானச் சர்ச்சைகளில் ஈடுபடு மாறு செய்யவேண்டும். அவர்கள் அறிவாளிகளாயின் உம் சர்ச்சைகளால் பயனடைவர். இன்றேல், உங்களுக்கிடையி லுள்ள அன்பாவது அதிகப்படும்.''

## இமாமவர்களின் பாடல்கள்

இமாம் அபூ ஹனீபா, இமாம் ஷாபியீயைப்போல் ஏராள மாகக் கவிதைகள் எழுதவில்லையாயினும், சிறிய அளவில் பாடல்கள் எழுதியுள்ளதாகத் தெரிகிறது. அவர்கள் தங்கள் பாட்டொன்றில்,

நேர்மையாளர்கள் மீது அன்புகொண்டேன்.
அவர்களுள் ஒருவனாக இல்லாத எனக்கு
அதன்மூலமேனும் அல்லாஹ்
நேர்வழி காட்டுவான் என்று நம்பியே
அவ்விதம் உகப்பானேன்

என்று கூறியுள்ளார்கள். மேலும்,

நீ கல்வியைப் பற்றிப்பிடித்துக்கொள்!
அறிவு பெறுபவன் அறிவீனனைப் போன்றவனல்லன்.
அறிவற்ற 'பெரிய மனிதன்' கற்றோர் சபையில்
சிறியவனாகிவிடுகிறான்.

என்றும் ஓர் அடியில் கூறுகிறார்கள். மேலும்,

கல்வியறிவற்றவன் எத்தனை பெரியசெல்வனாயினும்,
கல்வியும், பண்புமுடையவர்களுக்குச்
சமமாக மாட்டான்
நாய்க்கு நீ பொன்னாலான
அணிமணிகளைப் பூட்டினாலும்
அது புலிக்குச் சமமாகுமா?

என்று ஓர் அடியில் கேட்கிறார்கள்.

# இமாமவர்களும் ஆத்மஞானமும்

இமாமவர்கள் ஆரம்பத்திலே ஆத்மஞானம் பெறுவதில் ஆர்வங்கொண்டிருந்தார்கள் என்றும், அவர்கள் கல்வி கற்ற பின், ஆத்மசாபல்யம் கருதித் துறவு பூண்டு காடு சென்று தவம் செய்வதில் ஈடுபட ஆயத்தமானார்கள் என்றும், அப்போது இமாமவர்கள் கனவில் நபி பெருமான் (ஸல்) அவர்கள் தோன்றி அவர்கள் நாட்டிலிருந்து சன்மார்க்கச் சேவை செய்ய வேண்டும் என்றும், அல்லாஹ், அவர்களைச் சிருஷ்டித்தது தங்கள் சன்மார்க்கத்தை ஜீவனுள்ளதாக ஆக்குவதற்காகத் தான் என்றும் கூறிச்சென்றார்கள் என்றும், அதன்பின்னரே, அவர்கள் நாட்டிலிருந்து சன்மார்க்கச் சேவை செய்தார்கள் என்றும் கூட சொல்லப்படுகிறது.

அத்துடனின்றி அவர்கள் வழியாக ஆத்மஞானப் போதனை யருளும் தரீக்கா ஒன்றே உண்டாகியுள்ளது என்றும், அதில் பல ஸூபி மஹான்களின் பெயர்கள் வருகின்றனவென்றும் சொல்லப்படுகிறது. அந்தச் சங்கிலித் தொடரில், இமாம் அபூ ஹனீபாவின் பெயரையடுத்து மஃரூபுல் கர்கிய்யி—ஸரியுஸ் ஸிக்திய்யி—ஷைகு ஷிப்லீ—அபுல் காஸிம் போன்ற பெரியார் களின் பெயர்கள் காணப்படுகின்றன. எனவே, ஆத்மஞானப் பாதையிலும் அவர்கள் குருநாதராகத் திகழ்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

இவ்விதம் அவர்களிடம் ஆத்மஞானபோதம் பெற்ற அரசு துறந்த துறவி இப்ராஹீமிப்னு அத்ஹமின் சரிதை மிகவும் ரசமானதாகும். இப்ராஹீமிப்னு அத்ஹம் தங்கள் நப்ஸை அடக்குவதற்காகப் பல கீழான பணிகளைக் கூடச் செய்தார்கள். அரியணையிலிருந்து அரசோச்சிய அவர்கள் பலரிடம் பணியா ளாய் அமர்ந்து, அடிபட்டு, குற்றேவல் புரிந்து நப்ஸை அடக் கினார்கள். ஒரு சமயம் அவர்கள் வேலைக்கமர்ந்த எஜமானன் ஒருவன், அவர்களைக் கக்கூசிலுள்ள மலத்தை வெளியில் வாரிக்கொட்டும் வேலையை செய்யுமாறு உத்தரவிட்டான். துறவி இப்ராஹீம் மிகுந்த பொறுமையோடு கூடையில்

மலத்தை அள்ளிச்சென்று வெளியிலோரிடத்தில் கொட்டி வந்தார்கள். அப்போது மழை வந்துவிடவே அவர்கள் தலைமீது வைத்திருந்த கூடையிலிருந்த மலம் அவர்கள் முகத்தின் வழியாகவும் வடிந்தது. அந்த நாற்றம் சகிக்காமல் மூக்கைச் சுளித்து, அவர்கள் தங்கள் அருவருப்பைக் காட்டினார்கள். உடனே, அந்த மலம் அவர்களை நோக்கிக் கூறுவதுபோலக் கண்டார்கள் : ''நான் நேற்றுவரை விலையுயர்ந்த உணவாக இருந்தேன்; என்னைக் கண்டு நாக்கில் ஜலம் கொட்டினர். ஆனால், அரை நாள் மட்டும் நான் மனிதனுடன் சகவாசங் கொண்டேன். அவன் என்னை இந்த நிலையிலாக்கிவிட்டான். நீ இப்போது முகம் சுளித்தாயே, அந்த நிலையை அவனுடைய 'தான்' எனும் பெருமைதான் எனக்குத் தந்துவிட்டது." இவ்வாறு மனித மலம் தங்களை இடித்துரைப்பதுபோல் கண்ட அவர்கள் தங்களைச் சுத்தமாக்கிக்கொண்டு சிந்திக்கலானார்கள். எவ்வளவோ தங்களைப் பணிவாக்கியும், கீழான வேலைகளைச் செய்தும் தங்கள் 'பெருமை'யை அகற்ற இயலவில்லையே, அதை அகற்றுவது எப்படி என்று யோசித்து யோசித்து ஒரு முடிவும் காணாதவர்களாக இமாம் அபூ ஹனீபாவிடம் வந்து தங்கள் குறையைக் கூறினார்கள். உடனே இமாமவர்கள், ''பெருமையடங்கலும் அல்லாஹ்வுக்கே" என்று திக்ருச் செய்துவாரும்; அதன் மூலம் உமது பெருமை தானாகவே அகன்றுவிடும்'' என்று போதித்ததாகவும், அவ்விதமே அப்பியசித்து இப்ராஹீமிப்னு அத்ஹம் வெற்றி கண்டார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

இதுபோன்றே ஸூபி மகான் தாவூதுத் தாயீ இமாமுல் அஃலமிடம் இருபது ஆண்டுகள் கல்வி பெற்றார்களென்றும், பின்னர் அவர்கள் இமாமவர்களை நோக்கி, ''இதற்குப்பின் நான் எதன்மீது கவனந்திருப்புவது" என்று கேட்டார்கள் என்றும், ''நப்ஸை அடக்கி, அமலில் ஈடுபடும்'' என்று இமாமவர்கள் கூறினார்கள் என்றும், ''அமலில்லாத ஆலிம் உயிரில்லாத உடல்போலாவார்; நப்ஸை அடக்குவது பெரிய சத்தியப் போர் (ஜிஹாத்)" என்று அறிவித்தார்களென்றும், அவ்விதம்

தாஊதுத் தாயீ செய்து வெற்றி கண்டார்களென்றும் சொல்லப் படுகிறது.

## ஃபிக்ஹின் வரலாறு

இமாம் அபூ ஹனீபா ஃபிக்ஹுச் சட்டத்தை ஒழுங்கு படுத்தப் பாடுபட்டதையும், அதற்காக அவர்கள் மேற்கொண்ட பேணுதலேயும், அந்த வகையில் அவர்கள் இஸ்லாமிய உலகுக் குச் செய்துள்ள மகத்தான சேவையையும் பற்றிப் படிக்குமுன் ஃபிக்ஹுச் சட்டம் என்றால் என்ன, இது எப்போது எப்படி உண்டாயிற்று, எப்படி வளர்ந்தது என்ற விபரங்களையெல் லாம் அறிந்து கொள்வது அவசியமாகும். ஹதீஸ் ஆராய்ச்சி யில் திளைத்து, ஹதீஸ்களைத் தொகுத்தவர்கள், விளக்கங் கொடுத்தவர்கள் முஹத்திஸ்கள் என்று அழைக்கப்படுவது போல, ஹதீஸ்களின் அடிப்படையில் தனி மனிதனுடையவும், சமுதாயத்துடையவும் நெறிமுறைக்கான மார்க்கத்தின் ஏவல் விலக்கல்களையும், அவற்றின் தன்மைகளையும் விளக்கித் தீர்ப்பு கள் நல்கியவர்களை ஃபகீஹுகள் என்கிறோம். இந்த வகையில் ஃபகீஹுகளின் கடமை மகத்தானதாகும். இந்த ஃபகீஹு களையும், இவர்கள் நல்கிய ஃபிக்ஹுச் சட்டத்தையும் பற்றிய வரலாற்றை டெல்லியில் வாழ்ந்த பெரியார் ஷாஹ் ஒலியுல் லாஹ் முஹத்திஸ் அவர்கள் எழுதிய 'ஹுஜ்ஜத்துல்லாஹில் பாலிகா' என்ற நூலிலிருந்து இங்கே கீழே எடுத்துத் தருகிறோம் :

நபிபெருமான் (ஸல்) அவர்களுடைய காலத்தில் ஷரீஅத் தின் ஏவல் விலக்கல்களுக்கு ஃபர்லு, வாஜிபு, ஸுன்னத்து என்ற பலவகையான பெயர்கள் வைக்கப்படவில்லை. ஸஹா பாக்களுக்கு எதிரில் நபிபெருமான் 'ஒலு'ச் செய்தார்கள் என்றாலும், இது ஃபர்லு, இது ஸுன்னத்து, இது வாஜிபு என்றெல்லாம் அவர்களுக்கு விளக்கிக் கூறவில்லை. நபிபெரு மானார் 'ஒலு'ச் செய்ததைப் பார்த்து அதுபோன்றே ஸஹா பாக்களும் தாங்களும் 'ஒலு'ச் செய்துகொண்டனர். தொழுகை யிலும் இவ்வாறுதான் நடந்தது. அதாவது, ஸஹாபாக்கள்

எது ஃபர்லு, எது ஸுன்னத்து என்றெல்லாம் நபிபெருமானா ரிடம் நுணுக்கமாகக் கேட்டுக்கொண்டிருக்கவில்லை. நபிபெரு மானார் தொழுததுபோன்றே தொழுதார்கள். ''தங்கள் நபியை அப்படியே அடியொற்றி நடப்பதில் நபிபெருமானாரின் ஸஹாபாக்களைவிடச் சிறந்தவர்களாக நான் வேறு எந்த உம் மத்துக்களையும் காணவில்லை என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களே கூறியுள்ளார்கள். ஆனால், இதே இப்னு அப்பாஸ் கூட நபிபெருமானார் உயிரோடிருந்தவரை பதின்மூன்று மார்க்க விளக்கங்களை (மஸ்அலாக்களை)த்தான் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அந்த பதின்மூன்று விளக்கங்களும் கூடத் திரு குர்ஆன் வசனங்களிலேயே கூறப்புட்டுள்ளவை தாம்.

எப்போதாவது ஏதேனும் ஒரு சம்பவம் நிகழ்ந்தால் மட்டும் அது சம்பந்தமாக ஸஹாபாக்கள் நபிபெருமானாரிடம் விளக்கம் கேட்டுப் பெற்றுள்ளனர். வேறு சில வேளைகளில், ஜனங்களே ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்யும்போது, அதைப் பார்த்து அது சரியாயின் வேண்டாமென்று தடுக்காமல் நல்லதுதான் என்று கூறியோ, அவசியமற்றதாயின் தங்கள் அதிருப்தியை வெளிப்படுத்தியோ வந்துள்ளார்கள். இத்தகைய தீர்ப்புகள் பெரும்பாலும் கூட்டமாக இருந்த இடங்களில் கொடுக்கப் பட்டுள்ளன.

எம்பெருமான் (ஸல்) அவர்கள் காலமானபின் இஸ்லாத் துக்கு, வெற்றிமேல் வெற்றி கிட்டிவந்ததால் முஸ்லிம்களின் ஆதிக்கத்துக்குள்ளான நிலப்பரப்பும் அதிகமாகிவிட்டது. இந்த நிலையில் புதிது புதிதான பல நிகழ்ச்சிகள் நடக்கலாயின. அவற்றைப்பற்றித் தீர்ப்பளிக்க இஜ்திஹாத் (திரு குர்ஆன், ஹதீஸிலிருந்து மஸ்அலாக்களைப் பிரித்தெடுத்தல்) தேவைப் பட்டது. அத்துடன் மறைமுகமாகக் கூறப்பட்டுள்ள ஏவல் விலக்கல்களுக்கும் விளக்கங்கள் காணவேண்டியதிருந்தது. உதாரணமாக ஒருவன் தொழுகையில் ஏதோ ஒன்றை விட்டு விட்டான் என்று வைத்துக்கொள்வோம். தொழுகையிலடங்கிய காரியங்கள் அனைத்தும் பர்லுகள்தான் என்று திட்டப்படுத்திக் கொள்ள முடியாத நிலையிலிருந்தபோது, தொழுகையில்

ஃபர்லுகள் எத்தனை, வாஜிபுகள் எத்தனை, ஸுன்னத்துகள் எத்தனை, முஸ்தஹப்புகள் எத்தனை என்று திட்டப்படுத்த வேண்டிய நிர்பந்தம் உண்டாகிவிட்டது. இல்லாவிட்டால் இந்த நபர் விட்ட விஷயம் எத்தகையது, அது விடுபட்டதால் தொழுகை கூடிவிட்டதா, அல்லவா என்பதை அறிந்துகொள்ள இயலாதல்லவா! இவ்விதம் ஃபர்லு, வாஜிப், ஸுன்னத் முதலியவைகளைப் பிரிப்பதற்கும் மூலாதாரமான விதிமுறைகள் அவசியமாயின.

இந்த நிலையில் எத்தனையோ விஷயங்களில் ஸஹாபாக்களின் ஒருமுகமான முடிவு என்றுஎதுவுமில்லாமலும் இருந்தது. தீர்ப்புகளில் பல அபிப்பிராயங்கள் வெளியாயின. சிற்சில விஷயங்களில்தான் ஒரு முகமான முடிவு உண்டாகியிருந்தது.

நபிபெருமானாரின் காலத்தில் உண்டாகியிராத, பின்னர் உண்டான நிகழ்ச்சிகள் பலவற்றை எடைபோடத் திரு குர்ஆன், ஹதீஸ் அடிப்படையிலான சுய முடிவும், அனுமானமும் (இஜ்திஹாதும், கியாஸும்) தேவைப்பட்டன. இந்தச் சுய முடிவு (இஜ்திஹாத்), அனுமானம் (கியாஸ்) ஆகியவற்றுக்குக்கூட அப்போது எந்த மூலதாரமுமிருக்கவில்லை. எனவே, அது பற்றியும் அபிப்பிராயபேதங்கள் பல எழுந்தன. இதனால், மஸ்அலாக்களையும், அஹ்காம் (மார்க்க விதிமுறை) களையும் உருவாக்குவதற்கான தனி வழிமுறைகள் ஸஹாபாக்களின் காலத்திலேயே ஏற்பட்டுவிட்டன.

இவ்விதம், (திரு குர்ஆன், ஹதீஸ்களான) மூலங்களிலிருந்து 'இஜ்திஹாத்' செய்யக்கூடிய திறமையும் பண்பும் பெற்றிருந்த ஆதர்ச மகான்களான ஸஹாபாக்களே. அக்காலத்தில் 'முஸ்தஹுி', 'ஃபகீஹ்' என்ற பெயர்களால் அழைத்துப் போற்றப்பட்டனர். இவர்களில் வெகு பிரசித்தமாக விளங்கியவர்கள் நால்வர்தாம். அவர்கள் முறையே ஹஜ்ரத் உமர் (ரலி), ஹஜ்ரத் அலீ (ரலி), ஹஜ்ரத் அப்துல்லா இப்னு மஸ்ஊது (ரலி), அப்துல்லா இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியவர்களாவர். இவர்களுள் ஹஜ்ரத் அலீ (ரலி), அப்துல்

லாஹிப்னு மஸ்ஊது (ரலி) ஆகிய இருவரும் பெரும்பாலும் கூபாவிலேயே இருந்து வந்ததால் அந்தப் பகுதியில் இவ்விரு வர்களுடைய தீர்ப்புக்களே பரவியிருந்தன. இதுபோன்று ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களும், அப்துல்லாஹிப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் ஹரமைனில் (மக்கா, மதீனாவில்) வாழ்ந்த தால் அங்கே இவ்விருவர்களுடைய தீர்ப்புக்கள் பரவி யிருந்தன.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் சிறுவயதுமுதலே எம்பெரு மான் (ஸல்) அவர்களோடு நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற் றிருந்தார்கள். அதனால், அவர்கள் மற்றயாரையும் விடப் பெருமானாரின் சொல், செயல்களையும், அவற்றின் தாத்பரியங் களையும் வெகு நன்றாக அறிந்து கொண்டிருந்தார்கள். மற்ற வர்களைவிட ஹஜரத் அலீ (ரலி) அதிகமான ஹதீஸ்களை ரிவா யத்துச் செய்தது பற்றி அவர்களிடம் கேட்கப்பட்டபோது, ''நான் நபிபெருமானார் (ஸல்) அவர்களிடம் வினவுவேன், அவர்கள் பதிலளிப்பார்கள். சில சமயம் நான் மௌனமாக இருந்தாலும் அவர்களே சொல்வார்கள். அதனால்தான் நான் மற்றவர்களைவிட அதிக ஹதீஸ்களைத் தெரிந்துகொண்டுள் ளேன்'' என்று பதிலளித்துள்ளார்கள். மேலும் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுக்கு இயற்கையாகவே மிகவும் அதிகமான புத்தி தீட்சண்யம் உண்டாகியிருந்தது. அதனால் ''ஓர் இக்கட் டான மஸ்அலா நிகழும்போது அங்கே இறைவன் ஹஜ்ரத் அலீயையும் ஆஜராக்கட்டும்'' என்று ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களே சிலாகித்துப் பேசியுள்ளார்கள். ''எந்தப் பிரச் சினைக்கும் ஹஜ்ரத் அலீயின் தீர்ப்புக் கிடைத்துவிட்டால் போதும்'' என்று ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு மஸ்ஊது (ரலி) அருளியுள்ளார்கள்.

ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு மஸ்ஊதும் ஹதீஸ், ஃபிக்ஹு ஆகிய இரண்டு துறைகளிலும் நிபுணத்துவ முடையவர்களாக விளங்கினார்கள். அவர்கள் நபிபெருமானாரோடு மிகவும் நெருங்கிப் பழகியுள்ளார்கள். அபூ மூஸா என்பவர் சொல் கிறார்: ''நாங்கள் யமனிலிருந்து மதீனா வந்து சில நாட்கள்

தங்கியிருந்தோம். அப்போதெல்லாம் அப்துல்லாஹிப்னு மஸ்ஊது (ரலி) நபிபெருமானாரிடம் அடிக்கடி வந்துபோய்க் கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்த நாங்கள் அவர்களும் நபிபெருமானாரின் குடும்பத்தவர்தாமோ என்று ஐயுற லானோம்". மேலும், ''திருக்குர்ஆனின் எந்த வசனமும் எந்தச் சந்தர்ப்பத்தில், ஏன் இறங்கிற்று என்பதுபற்றி எனக்குத் தெரியாமலிராது" என்றும், ''திருக்குர்ஆன் சம்பந்த மாக என்னைவிட அதிகமாக யாருக்கும் விஷயங்கள் தெரியாது. இது ஸஹாபாக்களனைவருக்கும் தெரியும்" என்றும் அப்துல் லாஹிப்னு மஸ்ஊது (ரலி) அவர்களே கூறியுள்ளார்கள்.

அப்துல்லாஹிப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் தங்களுக்கே உரிய ஒரு முறையோடு ஹதீஸையும், பிக்ஹையும் போதித்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் அவர்களிடம் அக் காலப் பிரபலஸ்தர்கள் பலர் பாடங் கேட்டனர். அவர்களுள் அஸ்வத், உபைதா, ஹாரித், அல்கமா ஆகியோர் முக்கிய மானவர்களாவர். குறிப்பாக, இந்த அல்கமா நபிபெருமா னாரின் காலத்திலேயே ஜனனமாகிவிட்டவர்கள்; ஹஜ்ரத் உமர் உதுமான், அலீ, ஆயிஷா, ஸஅத், ஹுதைபா, காலித் பின் வலீத், கப்பாப் போன்ற மாபெரும் ஸஹாபாக்களிடமிருந் தெல்லாம் ஹதீஸ்களைக் கேட்டவர்கள். இவர்கள் அப்துல்லா ஹிப்னு மஸ்ஊதுடன் மிகவும் நெருங்கிப் பழகி, சகல விஷயங் களிலும் அவர்களையே அடியொற்றி நடந்தார்கள். அதனால், ''அல்கமாவைப் பார்த்தவர்கள் அப்துல்லா ஹிப்னு மஸ் ஊதைப் பார்த்தவர்கள் போன்றவர்களே" என்ற பேச்சும் நிலவலாயிற்று. ''எனக்குத் தெரிந்ததையெல்லாம் நான் அல்கமாவுக்குப் போதித்துவிட்டேன்" என்று அப்துல்லா ஹிப்னு மஸ்ஊதே கூறியுள்ளார்கள். ஸஹாபாக்கள் பலரே பல ஐயங்களை அல்கமாவிடம் கூறித் தெளிவுபெற்றுள்ளார்கள். அல்கமாவுக்குச் சமமாக விளங்கியவர்கள் அஸ்வத் ஒருவர் தாம்.

அல்கமா, அஸ்வத் ஆகிய இரண்டு மேதைகளும் கால மானபின், 'பகீதுல் இராக்' (இராக்கின் ஒப்பற்ற செல்வம்), 'ஸைரபில் ஹதீஸ்' (ஹதீஸ்களைச் சேர்த்துவைத்த முதலாளி)

என்றெல்லாம் புகழ்பெற்ற மாமேதை இப்ராஹீம் நக்கயி அவர்கள் கலாபீடத்திலமர்ந்து பிக்ஹை வளர்த்து வந்தார்கள். இந்த மாமேதை காலமானபோது, அதைக் கேள்வியுற்ற 'அல்லாமத்துத் தாபியீன்' என்று பெயர் பெற்ற இமாம் ஷஃஅபியவர்கள், ''தனக்கு நிகராக யாரையும் விடாமல் இப்ராஹீம் போய்விட்டார்களே!" என்று கூறி வருந்தினார்கள். அப்போது அருகிலிருந்த ஒருவர், ''ஏன், ஹஸன் பஸரி, இப்னு ஸீரின் போன்ற பெரியார்கள் இல்லையா?'' என்று கேட்டதற்கு, ''ஆம், ஹஸன் பஸரி, இப்னு ஸீரின் என்ன, பஸரா, கூபா, ஸிரியா, ஹிஜாஜ் ஆகிய இடங்களில் எங்கே தேடினாலும் இப்ராஹீமுக்கு நிகர் இப்ராஹீமாகவே இருத்தார்கள்'' என்று ஷஃஅபி பதிலளித்தார்கள்.

இப்ராஹீம் நக்கயியின் உதவியால் ஹதீஸ்களையும், ஹஜ்ரத் அலீ (ரலி), அப்துல்லாஹிப்னு மஸ்ஊது போன்ற பெரியார்களின் தீர்ப்புக்களையும் ஆதாரமாக வைத்து 'பிக்ஹஃ மஸ்அலா'க்களின் தொகுப்பு ஒன்று உருவாயிற்று. ஆனால், அது நூலுருவில் எழுதப்படாது இப்ராஹீம் நக்கயி அவர்களின் மாணவர்களின் இதயங்களிலேயே பதிக்கப்பட்டிருந்தது. குறிப்பாக, நக்கயியின் தலையான மாணவரும், இமாம் அபூ ஹனீபாவின் குருநாதருமான ஹம்மாது அவர்களே அதன் பெரும் பகுதியை மனனம் செய்திருந்தார்கள். இதனாலேயே, இப்ராஹீம் நக்கயி காலமானபின், அவர்கள் ஸ்தானத்திலமர்ந்து ஃபிக்ஹுப் பாடபோதனைபுரியும் பொறுப்பை ஜனங்கள் ஹம்மாதின்மீது சுமத்தினர். ஹிஜ்ரி 120ல் அவர்கள் காலமானபோது அந்தப் பொறுப்பு அவர்களிடமிருந்து இமாம் அபூ ஹனீபா அவர்களிடம் வந்துவிட்டது. அதுவரை இந்த ஃபிக்ஹு ஒரு சிலர் மட்டும் அறிந்த விஷயமாக இருந்தது. இமாம் அபூ ஹனீபா அதை உலக முஸ்லிம்கள் யாவரும் அறியும் வகையைச் செய்தார்கள்.*

* ஃபிக்ஹின் சரிதையையே சுருக்கமாகக் கூறுவதுபோல் இமாம் அபூ பக்ரின்னஜீபில் காலி என்ற பெரியார் மிகுந்த ரசமாகக் கூறியுள்ளதாவது: ''ஃபிக்ஹு எனும் பயிருக்கு அப்துல்லாஹிப்னு மஸ்ஊது (ரலி) விதை தூவினார்கள். அல்கமா

## ஃபிக்ஹை வளர்த்த அபூ ஹனீபா

இமாம் அபூ ஹனீபா தோன்றிய காலநிலையையும், சுய நலமே உருவான எண்ணற்ற கூட்டங்களும் கோஷ்டிகளும் தத்தம் நலனுக்காக மார்க்கத்தையே விற்றுவிடவும் துணிந்து நின்றதையும் முன்னமேயே குறிப்பிட்டிருக்கிறோம். இத்தகையவர்கள் தத்தமக்கு வசதி தரக்கூடிய முறையில் நாயக வாக்கியங்களை உண்டாக்கி, சாதாரண ஜனங்கள் கண்ணில் மண் தூவலாயினர். உண்மையில் நபிபெருமானாரின் உண்மையான அனுஷ்டானங்கள் யாவை, அவர்கள் உண்மையிலேயே சொன்னவை யாவை என்பதை ஜனங்கள் அறியமுடியாத அளவு ஜனங்களிடை குழப்பமுண்டாக்கப் பட்டிருந்தது. இதனால், அவர்களுடைய வணக்கங்களும், வாழ்க்கை முறையுமே குழப்பமானவையாக ஆகலாயின. எனவேதான், அபூ ஹனீபா துணிந்து முன்வந்து மார்க்கச் சட்டத்தைத் தொகுத்து வழங்க வேண்டிய அவசியமுண்டாயிற்று. இதற்கு திருக்குர்ஆனேயும், ஹதீஸையும் ஆதாரமாகக் கொண்டு அவர்கள் வேலை செய்ய நேர்ந்தாலும், பொய் ஹதீஸ்கள் ஏராளமாகச் சிருஷ்டித்துவிடப்பட்டிருந்த நிலையில் அவைகளைப் பிரித்தறிய வேண்டிய பெரிய பொறுப்பும் அவர்களுக்கு உண்டாயிற்று. உண்மையான (ஸஹீஹான) ஹதீஸ்களைத் தட்டிப்பார்த்துத் தொகுக்க, இமாமவர்களுக்குப் பின்னர் இமாம் புகாரி(போன்ற ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களின் தொகுப்பாளர்கள்) வர வேண்டுவதிருந்தது. இமாம் அபூ ஹனீபா ஒரு பொதுச் சட்டத்தைப் பின்பற்றி ஹதீஸ்களைத் தேர்ந்தெடுத்தார்கள்.

---

(ரலி) அதற்குத் தண்ணீர் பாய்ச்சினார்கள், இப்ராஹீம் நகயி கதிர் அறுத்தார்கள். ஹம்மாது இப்னு அபீ ஸுலைமான் சூடடித்தார்கள். இமாம் அபூ ஹனீபா அதை மாவாக்கினார்கள். காஜி அபூ யூஸுஃப் அந்த மாவைக் குழைத்துப் பிசைத்தார்கள். இமாம் முஹம்மது இப்னு ஹஸன் அதை ரொட்டியாகச் சுட்டார்கள். மற்றும் இமாம்கள் அதை விருந்துக்குப் படைத்தார்கள். நாமனைவரும் அதை உண்டு பசி தீருகிறோம்."

அதாவது, எம்பெருமான் (ஸல்) அவர்கள் வாழ்க்கை முறையை கவனிப்பவர்கள், அவர்கள் பகுத்தறிவுக்கு முரணான எதையும் கூறியிருப்பார்கள், செய்திருப்பார்கள் என்று கற்பனை கூடச் செய்ய இயலாது. எனவே, இமாம் அபூ ஹனீபா முதலில் பகுத்தறிவுக்கு முரணான ஹதீஸ்களையெல்லாம் ஒதுக்கினார்கள். மற்றவற்றிலும் பலமான ஆதாரமுள்ளவைகளை எடுத்துக்கொண்டார்கள். திருக்குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் தங்கள் முடிவுகளைக் கண்டார்கள். அவர்கள் கண்ட முடிவுகள் ஹனபிகள் என்று அழைக்கப்படும் பலகோடி முஸ்லிம்களால் பின்பற்றப்படுகின்றன. அவை யாவும் எப்பெருமானாரின் ஒழுக்கத்தையும், திருக்குர்ஆனையும் அடிப்படையாகக் கொண்டவை என்பதை நபிபெருமானாரே ஒப்புக்கொண்டு, இமாமவர்கள் கனவில் அவர்களுக்குத் தங்கள் ஆசியை நல்கியுள்ளார்கள்.

இமாம் அபூ ஹனீபா சுய அனுமானம் (கியாஸ்), செயலுக்குப் பொருந்தும் இயல்பு (இஸ்திஹ்ஸான்) ஆகிய இரண்டின்படியும் பல முடிவுகளை அடையவேண்டியதாயிற்று. அதாவது, திருக்குர்ஆனிலோ, ஹதீஸிலோ நேரடியாகப் பதில் கிடைக்காத ஒரு பிரச்சினை விஷயத்தில் அதையொத்த, அல்லது அதற்கு நேர் முரணான ஒரு பிரச்சினைக்கு இவற்றில் பதில் கிடைப்பின் அதை வைத்துக்கொண்டே கையிலிருக்கும் பிரச்சினைக்கு முடிவு காண்பதுதான் 'அனுமானம்' (கியாஸ்) ஆகும். இதற்கு ஆதாரமாக நபிபெருமான் (ஸல்) அவர்களுடைய காலத்தில் நடந்த சம்பவமொன்று சுட்டிக்காட்டப்படுகிறது. அதாவது, ஹஜ்ரத் முஆத் இப்னு ஜபல் அவர்களை நபி பெருமானார் எமனுக்கு நீதிபதியாக நியமித்தனுப்பினார்கள். அவர்கள் புறப்படும் சமயம் நபிபெருமானார், அவர்களை நோக்கி, ''ஒரு பிரச்சினை எழுந்தால் நீர் எப்படி முடிவு செய்வீர்?'' என்று வினவினார்கள். ''அல்லாஹ்வின் வேதநூலில் (திருகுர்ஆனில்) சொல்லப்பட்டுள்ளபடி'' என்று அவர்கள் பதிலளித்தார்கள், ''அல்லாஹ்வின் வேத நூலில் அதற்குப் பதில் கிடையாவிடின்?" என்று நபி பெருமானார் கேட்டார்கள். ''அப்படியானால், அல்லாஹ்வின்

திருத்தூதரின் முன்மாதிரியை வைத்து முடிவுகட்டுவேன்'' என்று முஆத் பதிலளித்தார்கள். ''அந்த முன்மாதிரியிலோ, திருகுர்ஆனிலோ பதில் கிடையர்விடின்?'' என்று நபி பெருமானார் கேட்கவே, ''அப்படியாயின், தயக்கமின்றி என் சொந்த முடிவுப்படி (அஜ்தஹிது ரை) தீர்ப்பளிப்பேன்'' என்று முஆத் கூறினார்கள். உடனே நபிபெருமான் (ஸல்) அவர்கள் மகிழ்ச்சியுடன் முஆதின் நெஞ்சில் தங்கள் கையால் தட்டியவர்களாக, ''அல்லாஹ்வின் தூதரின் தூதர் இவ்வாறு அவருக்கு, (அல்லாஹ்வின் தூதருக்குத்) திருப்தி தருமாறு பதிலளிக்கச் செய்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்!'' என்று அருளினார்கள்.

இந்த அடிப்படையிலும், பலர் நினைப்பதுபோல இமாம் அபூ ஹனீபா தங்கள் சொந்த அபிப்பிராயப்படி தீர்ப்பளித்தவர்களல்லர். திருகுர்ஆன், ஹதீஸ் தொடர்பின்றிச் சொந்த முடிவுப்படி தீர்ப்பளிப்பதற்குத்தான் 'ரை' என்று பெயர் கொடுக்கப்பட்டது. இவ்விதம் 'ரை'யின் அடிப்படையிலேயே இமாமவர்கள் தீர்ப்பளித்தார்கள் என்று கூறுவது சரியல்ல. இவ்விதமன்றி நாம் முதலில் சொன்னபடி திருகுர்ஆன் அல்லது ஹதீஸில் ஒரு பிரச்சினைக்கு நேரடியான பதில் கிடைக்காவிடினும், அதற்கு மாற்றமான அல்லது, அதுபோலொத்த ஒரு விஷயத்தில் காணப்படும் பதிலைவைத்துப் பிரஸ்தாபப் பிரச்சினைக்கு முடிவுகாண்பது 'கியாஸ்' (அனுமானம்) ஆகும். இதுதான் இமாம் அபூ ஹனீபா கையாண்ட அனுமான முறையாகும்.

'இஸ்திஹ்ஸான்' என்பதும் 'கியா'ஸின் ஓர் அம்சம் தான். ஒரு விஷயம் ஒரு பிரச்சினைக்குப் பொருந்துமா என்று பொருத்தத்தைக் கவனித்து முடிவளிப்பதே 'இஸ்திஹ்ஸான்' ஆகும். உதாரணமாக, கழுவும் ஒரு பொருளைப் பிழியவேண்டும் என்கிறோம். இது துணி போன்ற பொருள்களின் விஷயத்தில்தான் பொருத்தமாகும். மரம் அல்லது, உலோகத்தால் ஆன பொருள் விஷயத்தில் இது பொருந்தாது. இவ்வஸ்துக்கள் விஷயத்தில் கழுவியதும் துடைக்கவேண்டும் என்பதே

பொருந்தும். அதுவே இவற்றுக்கான 'இஸ்திஹ்ஸான்' ஆகும் ஒருவன் தான் வாங்கும் பொருளைப் பார்க்க வேண்டும் என்பது சட்டம். அதனால், இனித் தயாரிக்கப் படவிருக்கும் ஒரு பொருளை ஒருவன் விலை பேசி விற்பது சட்டப்படி செல்லாது. ஆனால், இது திருகுர்ஆன் ஹதீஸால் தடுக்கப்படாதது, வர்த்தகர்களிடை பழக்கத்திலுள்ளது, வாங்குபவனுக்கு இன்றியமையாதது என்றிருப்பின் இப்படி விற்பதும் செல்லும் என்பது இஸ்திஹ்ஸான். இமாம் அபூ ஹனீபாவையன்றி, இமாம் மாலிக்கும் இந்த முறையைச் சில சமயங்களில் கையாண்டுள்ளார்கள். இமாம் அபூ ஹனீபா திருகுர்ஆன் ஹதீஸுடன், இஜ்மா, கியாஸ் ஆகியவற்றின் அடிப்படையில் ஃபிக்ஹுச் சட்டத்தை ஒழுங்குபடுத்தி உருக்கொடுக்க ஒரு குழுவையே அமைத்துவிட்டார்கள்.

முஸ்லிம் உலகின் பொதுவான சூழ்நிலை ஒருபக்கமிருக்க இமாமவர்களுக்குப் பல்வேறு ஊர்களிலுமிருந்து ஏராளமான கேள்விகள் வந்து குவிந்து கொண்டிருந்தன. அத்துடன், அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட காஜிகள் என்ற நீதிபதிகளும் தங்கள் தீர்ப்புக்களில் பல பெரிய தவறுகளைச் செய்து கொண்டிருந்தனர். எனவே, பிக்ஹை ஒழுங்குபடுத்திச் சட்டத்தை உருவாக்கும் வேலையில் இமாமவர்கள் தீவிரமாக ஈடுபடவேண்டுவதாயிற்று.

இதுபற்றிப் பல நாட்களாக எண்ணிக் கொண்டிருந்த இமாமவர்களை ஒருநாள் ஒரு சிறிய நீதிபதி அளித்த சிறியதொரு தீர்ப்பு உடனே செயலில் இறங்கத் தூண்டியதாகச் சொல்லப்படுகிறது. இரண்டு மனிதர்கள் குளிக்குமிடம் ஒன்றுக்குச் சென்றனர். அவர்கள் தங்களிடமிருந்த பணத்தைக் குளிப்பறைக் காவல்காரனிடம் ஒப்படைத்து, இருவரும் வந்து கேட்கும்போது அதைத் தரும்படி கூறிவிட்டுக் குளிக்கப் போனார்கள், இருவரில் ஒருவன் முன்பாக வெளியில் வந்து பணத்தைக் கேட்கவே காவல்காரன் பணத்தை அவனிடம் கொடுத்துவிட்டான். பின்னர், மற்றவன் வந்து பணத்தைக் கேட்டான், ''உன் கூட்டாளி வாங்கிப்போய் விட்டான்'' என்று காவலாளி கூறியதை அவன் ஏற்கவில்லை.

காவல்காரனை அவன் நியாய ஸ்தலத்துக்கு இழுத்துச் சென்றான். நீதிபதி, ''காவலாளி பணத்தை ஒருவனிடம் கொடுத்தது தவறு; எனவே, மீண்டும் அவன் பணத்தைக் கொடுக்கவேண்டும்'' என்று கூறிவிட்டார். அந்த ஏழைக் காவல்காரன் அழுது கொண்டு இமாமவர்களிடம் வந்து இதை முறையிட்டான். உடனே இமாம் அபூ ஹனீபா அவனிடம், ''நீ அந்த மனிதனிடம் அவன் கூட்டாளியை அழைத்து வந்தால் பணந் தந்துவிடுவதாகக் கூறு'' என்று யோசனை கூறி அனுப்பினார்கள். இருவரும் வந்து கேட்டால்தானே பணங் கொடுக்கவேண்டும்! இந்தச் சம்பவம் நடந்த அன்றுதான், நீதிபதிகள் மட்டுமன்றி சாதாரண ஜனங்கள் கூடத் தவறு செய்யாமலிருக்கவேண்டுமானால் மார்க்கச் சட்டம், மார்க்கத் தீர்ப்புகள் ஒழுங்காக எழுதப்படவேண்டும் என்று தீவிரமாக முடிவுசெய்து. அதற்கான குழுவையும் அமைத்தார்கள். அந்தக் குழுவில் மொத்தம் நாற்பது பேர்கள் சேர்க்கப்பட்டனர். இவர்கள் யாவருமே திருகுர்ஆனிலும், ஹதீஸிலும் திறமையான ஆராய்ச்சியுள்ளவர்களாவர். இவர்கள் ஒவ்வொருவருமே அக்காலத்தில் மேதைகளாக யாவராலும் போற்றப்பட்டவர்களாவர். இவர்களுள் இமாமவர்களுடனே சதாவுமிருந்து பல்வேறு பாடங்களிலும் விசேஷத் தேர்ச்சி பெற்றிருந்த யஹ்யா பின் ஜாயிதா, ஹப்ஸு பின் கியாஸ், காஜி அபூ யூஸுப், தாவூதுத் தாயீ, ஹபான் மற்றும் மந்தல், இமாம் ஜஅபர், இமாம் முஹம்மது காஸிம், அஸது, யூஸுப் பின் காலித், ஆபியா அஜ்தி, அபூ அலீ. உஜ்ஜா, அலீ மஹ்ரி ஆகியோர் முக்கியமானவர்களாவர். சபையின் முடிவை எழுதும் பணியை யஹ்யா என்பவர் செய்ததாகச் சொல்லப்படுகிறது.

இந்தக் குழு 121லிருந்து ஹிஜ்ரி 150 வரை சுமார் முப்பதாண்டுகள் (அதாவது, இமாமவர்கள் மன்ஸூரால் சிறை செய்யப்பட்ட பின்னரும்கூட) சட்டங்களை ஒழுங்குபடுத்தும் பணியில் ஈடுபட்டிருந்தது.

மஸ்ஜிதின் ஒரு பகுதியில் இமாமவர்கள் பாட போதனை செய்யும் இடத்திலேயே இந்தக் குழு அமர்ந்து வேலை செய்தது.

அங்கே இமாமவர்கள் தலைமையில் இரண்டு வரிசைகளில் இந்த நிபுணர்கள் யாவரும் அமர்ந்திருப்பர். முதலில் ஒரு குறிப்பிட்ட பிரச்சினையை ஒருவர் படிப்பார், அனைவரும் அதற்கான தமது தீர்ப்புகளைக் கூறவேண்டும். யாவருடைய முடிவும் ஒன்றுபட்டிருந்தால் அது உடனேயே எழுதிக் கொள்ளப்படும். அங்கத்தினர்கள் இங்கே சர்வ சுதந்திரத்தோடு விவாதிக்கலாம், யாவருக்கும் முழு வாய்ப்புமளிக்கப்பட்டது. சில சமயங்களில் வாதப் பிரதிவாதங்கள் நாட்கணக்கில் நீண்டு கொண்டு போனதுமுண்டு. இத்தகைய சந்தர்ப்பங்களில் இமாமவர்கள் பொறுமையோடும், கவனமாகவும் கேட்டுக் கொண்டிருப்பார்கள்; யாவரும் அபிப்பிராயங் கூறிய பின் தங்கள் முடிவை, யாவரும் ஏற்றுக்கொள்ளும்படியான ஆதாரங்களுடன் விளக்குவார்கள். சில சமயங்களில் உறுப்பினரில் யாரேனும் இமாமவர்களுடைய முடிவை ஏற்பதில்லை. அப்பொழுது, அந்தத் தீர்ப்புக்குக் கீழே, ''இது சம்பந்தமாக இன்ன உறுப்பினருடைய முடிவு இது'' என்று அவருடைய மாறுபட்ட முடிவு குறிக்கப்பட்டிருக்கும். இந்தக் குழுவுக்கு ஒரு முக்கியமான நிபந்தனை என்னவென்றால், அதில் மூன்றில் ஒன்று, அல்லது இரண்டு பங்கு அங்கத்தவர் மட்டும் இருந்தால் போதாது; சபை உறுப்பினர் அனைவரும் வந்தால் தான் விவாதத்தைத் தொடங்கலாம். விவாதம் நடந்துகொண்டிருக்கும் போது யாரேனும் எழுந்து வெளியில் போனால் கூட, அவர் திரும்பி வரும்வரை விவாதம் நிறுத்தப்பட்டிருக்கும். இவ்வாறு வெகு எச்சரிக்கையாக, விழிப்போடு முப்பது ஆண்டுகள் பாடுபட்டு ஃபிக்ஹுச் சட்டத்தை ஒரு சரியான அமைப்பில் கொண்டு வந்தார்கள். (இந்தச் சபையில் ஒரு பிரச்சினைக்கு முடிவெடுக்கப்பட்டால் உடனே 'அல்லாஹு அக்பர்' என்று தக்பீர் முழக்கப்படும் என்றும் சிலர் தெரிவிக்கின்றனர்.)

## ஃபிக்ஹுல் அக்பர்

இந்தத் தொகுப்பில் முதல் அத்தியாயத்தில் பாபுத் தஹாரத்தும் (ஒலு, குஸுல், தயம்மும் போன்ற உடல் சுத்தி

செய்தல் சம்பந்தமான விஷயங்கள்), இரண்டாம் அத்தியாயத்தில் தொழுகை நோன்பு, மற்றுமுள்ள வணக்கங்களை விளக்கும் விஷயங்கள் அடங்கியிருந்தன. மூன்றும் அத்தியாயம் முஆமலாத் (வர்த்தகம், தொழில், பொருளாதாரம் பற்றிய விஷயங்கள்) பற்றியது. பத்தாவது (கடைசி) அத்தியாயம் மீராஸ் (பாகப் பிரிவினை) பற்றியது. இமாமவர்களுடைய காலத்திலேயே இந்த நூல் அக்கால அறிஞர்கள் பலராலும் போற்றிக் கொண்டாடப்பட்டது. அவர்களோடு பல விஷயங்களில் அபிப்பிராயபேதங் கொண்டிருந்த பெரியார்கள் கூட இந்தத் தொகுப்பை மிகவும் உவந்து படித்துவந்தனர். ஸுஃப்யானுத் தௌரி அவர்கள் இதிலிருந்து 'கிதாபுர் ரிஹன்' (அடமானம், ஒத்திவைப்பு) என்ற பகுதியைமட்டும் எப்படியோ பெற்றுப்படித்து, மனப்பாடம் செய்து கொண்டிருந்தார்கள். ஜாயிதா என்பவர் சொல்கிறார்: ''நான் ஒரு சமயம் பெரியார் ஸுஃப்யானைக் காணப் போயிருந்தேன். அப்பொழுது அவர்கள் அபூ ஹனீபாவின் 'கிதாபுர் ரிஹ'னைப் படிப்பதைப் பார்த்துவிட்டு, 'நீங்களும் இமாம் அபூ ஹனீபாவின் கிதாபைப் படிக்கிறீர்களா?'' என்று வியப்புடன் வினவினேன். 'அந்தோ, இமாமவர்களின் கிதாபின் முழுப் பகுதியும் எனக்குக் கிடைக்கவில்லையே!' என்று அவர்கள் வருந்தினார்கள்."

இமாமவர்களிலிருந்து மாறுபட்ட கருத்துடைய அக்கால அறிஞர்கள் யாருமே இந்தத் தொகுப்பிலுள்ள விஷயங்களுக்கு மறுப்புக் கொடுக்க முடியவில்லை. இமாம் ராஜி கூடத் தங்களுடைய 'மனாகிபுஷ் ஷாபியீ' என்ற நூலில், ''அபூ ஹனீபாவும், அவர்களுடைய குழுவினரும் ஒழுங்குபடுத்தி வெளியிட்டிருந்த ஃபிக்ஹுத் தொகுப்பை அக்காலத்தில் வாழ்ந்துகொண்டிருந்த எந்த முஹத்திஸும் சரியில்லை என்று கூறவே இல்லை" என்று குறிப்பிட்டுள்ளார்கள். ஆனால், இமாம் ஔஜாயி அவர்கள் இந்தத்தொகுப்புக்கு மறுப்பொன்று எழுதி 'கிதாபுஸ்ஸியர்' என்ற பெயரால் அதை வெளியிட்டார்கள். அதற்குக் காஜி அபூ யூஸுஃப் மறுப்புபொன்று எழுதி ஔஜாயியின் மறுப்புக்களெல்லாம் சரியன்று என எடுத்துக்காட்டியுள்ளார்கள்.

இமாம் அபூ ஹனீபாவின் தலைமையில் தொகுக்கப்பட்ட இந்த நூலில் மொத்தம் பன்னிரண்டு லட்சத்துத்தொண்ணூ ருயிரம் 'மஸ்அலாக்கள்' இருந்திருக்கின்றன. அதில் ஆறு லட்சம் 'மஸ்அலா'க்களே உண்டு என்பாரு முண்டு. ஆனால், இமாமவர்களின் பிரதான மாணவரான இமாம் முஹம்மது இப்னு ஹஸன் ஷைபானிய்யி அவர்கள் தங்கள் நூற்களில் பன்னிரண்டு லட்சத்துத் தொண்ணூருயிரம் மஸ்அலாக்கள் இருந்தன என்பதையே ஊர்ஜிதப்படுத்தியுள்ளார்கள்.

இந்த அற்புதமான தொகுப்புக்கு 'பிக்ஹுல் அக்பர்' என்ற பெயர் வைக்கப்பட்டது. ஆனால், முஸ்லிம் உலகின் துரதிருஷ்டம், இது பின்னர் எப்படியோ காணமல் போய் விட்டது; எங்குமே கிடைக்கவில்லை. சுமார் அறு நூறு ஆண்டு களுக்கு முன்பே அது காணமல் போயிருக்க வேண்டும் என்று, இமாம் ராஜி தரும் தகவல்களை வைத்து முடிவுகட்ட வேண்டுவ தாக இருக்கிறது. இதுமட்டுமன்றி, அதே காலத்தில் வெளி யான இமாம் ஔஜாயி, இப்னுஜரீஹ், இப்னு அருபா, ஹம் மாத் பின் அபீ ஸுலைமான் போன்ற பெரியார்கள் எழுதிய நூற்கள்கூட எதுவுமே கிடைக்கவில்லை; யாவுமே காணமல் போய்விட்டன. இமாமவர்களுடைய இந்த ஃபிக்ஹுல் அக்பரி லிருந்து பல்வேறு நூற்களிலும் மேற்கோள் எடுத்துக் கையாளப்பட்டதுதான் இன்று இந்த நூலிலுள்ள விஷயங் களாகப் பார்க்கக்கிடைக்கின்றன. குறிப்பாக, இமாம் முஹம் மது இப்னு ஹஸன் ஷைபானிய்யி, இமாம் அபூ யூஸுப் ஆகிய இரண்டு பிரதம சீடர்களும் அந்த நூலிலுள்ள தீர்ப்புக் களை விளக்கி எழுதியுள்ள நூற்களிலிருந்து அதிலுள்ள விஷயங் களையும், அவற்றின் சிறப்பையும் அறிந்துகொள்ள முடிகிறது. இந்த இரண்டு பெரியார்களுடைய நூற்களும் இன்றும் கிடைப் பவையாயுள்ளன. (அவற்றுள் இமாம் முஹம்மதின் 'கிதாபுல் அஸ்லு அல்லது அல் மப்ஸூத்,' 'ஜாமிஉல் கபீர்,' 'ஜாமிஉஸ் ஸகீர்,' இமாம் அபூ யூஸுபின் 'கிதாபுல் கராஜ்' ஆகியவை முக்கியமானவையாகும். 'பிக்ஹுல் அக்பர்' என்ற பெயரில் இன்று விளங்கிவரும் நூல் பின்னர் உண்டானதாகும், இமா மவர்களால் தொகுக்கப்பட்ட இப்பெயருடைய நூல்தான்

காணுமல்போய்விட்டது.) இமாமவர்களுடைய இந்தத் தொகுப்பு நூல் 'முஸ்னது' என்று சில நூற்களில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது. இது சரியன்று. இமாமவர்களின் தீர்ப்பு களிலுள்ள ஹதீஸ்கள் தொகுக்கப்பட்டு 'முஸ்னது இமாம் அபூ ஹனீபா' என்று வெளியிடப்பட்டுள்ளன. அதுபற்றிய விபரம் கீழே வரவிருக்கிறது.

இமாமவர்கள் மறைந்தபின் அவர்களுடைய தலையான மாணவர்களான இமாம் முஹம்மது இப்னு ஹஸன் ஷைபானிய்யியும், இமாம் அபூ யூஸுபும் ஹனபி மத்ஹபின் நடைமுறைகளை இமாமவர்கள் விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து ஒழுங்குபடுத்திப் பூரண உருக்கொடுத்தனர். இந்த முப்பெரும் பெரியார்களும் வெளியிட்டுள்ள அபிப்பிராயங்களிடை அபிப்பிராயபேதம் காணப்படுவதாகக் குற்றஞ்சாட்டப்பட்டது. ஆனால், அவை உண்மையில் அபிப்பிராயபேதங்களல்ல. பல் வேறு சந்தர்ப்பங்களில் இமாமவர்கள் வழங்கிய தீர்ப்புக்கள் சிலவற்றில் இரண்டுவிதக் கருத்துக்கள் காணப்பட்டதால் வந்த முரண்பாடுதான் இது. முன்னர் ஒரு ஹதீஸின் அடிப்படையில் தீர்ப்பளித்திருப்பார்கள்; பின்னர் அது போன்ற ஒரு பிரச்சினையில் வேறு ஒரு ஹதீஸ் பதிதாகக் கிடைத்து அதன் அடிப்படையில் தீர்ப்பளித்திருப்பார்கள். இரண்டுக்குமிடையில் முரண்பாடு இருக்கும். இமாம் ஷாபியீ அவர்களின் தீர்ப்புக் களிலும் இப்படி நேர்ந்ததுண்டு. இது தவிர்க்க முடியாததாகும்.

## ஹதீஸே மூலாதாரம்

இமாமவர்கள் தங்கள் சுயேச்சைப்படி தீர்ப்பளித்ததாகவும், ஹதீஸ் ஆதாரம் வேண்டுமே என்று பொருட்படுத்துவதில்லை என்றும், எனவே, அவர்கள் தீர்ப்புக்களில் பெரும் பாலும் ஹதீஸ் அடிப்படையில்லை என்றும் பலர் குற்றஞ் சாட்டியுள்ளனர். இது எத்தனை விஷமத்தனமானது, எத்தனை தூரம் உண்மைக்குப் புறம்பானது என்பதை அவர்கள் தீர்ப்புகள் வழங்குவதற்கு எடுத்துக் கொண்ட எச்சரிக்கைகளையும்,

அவர்கள் சபை நடத்திய முறையையும், இமாம் ஜஃபருஸ் ஸாதிகுக்குத் தந்த பதிலையும் படித்த யாரும் உணரலாகும். எந்தத் தீர்ப்பையுமே அவர்கள் ஹதீஸ் ஆதாரத்தை எதிர் பாராமல் வெளியிட்டதில்லை என்பதுதான் முழுஉண்மையாகும். இவ்வித மறுப்புக்கள் பல்வேறு காலங்களிலும் எழுந்ததால், இமாமவர்கள் தங்கள் தீர்ப்புக்களில் கையாண்டுள்ள ஹதீஸ் களை மட்டும் திரட்டி அவ்வப்போது தொகுப்பு நூற்கள் வெளி யிட்டுவந்துள்ளனர். இத்தகைய தொகுப்புகள் 'முஸ்னது இமாம் அபூ ஹனீபா' என்ற பெயரில் விளங்கி வருகின்றன. சுமார் பத்துத் தொகுப்புகள்வரை இப்பெயரில் வெளிவந் துள்ளன. இஃதொன்றே இமாமவர்கள் ஹதீஸ் அடிப் படையை எந்த அளவு மதித்துப் போற்றினார்கள் என்பதை விளக்கப் போதுமாகும்.

இமாமவர்கள் வெறும் அறிவு தீட்சண்யத்தின் அடிப்படை யில் அல்லது, திருகுர்ஆன், ஹதீஸ் ஆதாரத்துக்குப் புறம் பான எந்த ஆதாரத்தின்மீதும் தீர்ப்பு வழங்குவதை வெறுத் தார்கள். அவர்களுடைய வாழ்க்கையின் பிற்காலத்தில் நடந்த தாகச் சொல்லப்படும் சம்பவமொன்று இதை நன்கு விளக்குவ தாகும். அது வருமாறு: மலசுத்தி செய்வதில் எந்த அளவுக்கு பேணுதல் காட்டவேண்டும் என்பதை இமாமவர்களிடம் கேட்டறிவதற்காக அவர்கள் வீட்டுக்குச் சிலர் வந்தனர். அப் போது இமாமவர்கள் ஏதோ வேலையாக வீட்டினுள் இருந்தார் கள். அவர்களுடைய வயதான வேலைக்காரி வெளியில் வந்து அவர்கள் என்ன வேலையாக இமாமவர்களைப் பார்க்க வந்திருக் கிறார்கள் என்று வினவினாள். வந்தவர்கள் அவளிடம் விஷ யத்தைச் சொன்னார்கள். உடனேயே அவள் "இது தெரியாதா, வழவழப்பு நீங்கி வரவரப்பு (வழவழப்பற்ற நிலை) வரும்வரை கழுவவேண்டும்" என்று கூறினாள், "இது இமா மவர்கள் முன்பே தெரிவித்த பதிலா?" என்று வந்தவர்கள் கேட்கவே, வேலைக்காரி, "இல்லை, இது என் வேலையில் கிடைத்த அனுபவம். கொழுப்பு, நெய் முதலியன படிந்த உணவுத் தட்டுகளை நான் கழுவுகிறேன். அவற்றின் மீது சாம்பலைப் போட்டுத் தேய்த்துப் பூசுகிறேன், அவற்றிலுள்ள

வழுவழுப்பு நீங்கி, என் கையில் 'வரவரப்பு'த் தட்டுப்பட்டதும், தட்டுகள் சுத்தமாகி விட்டதை அறிந்து அவற்றைப் பூசுவதை நிறுத்திக் கழுவிவிடுகிறேன்" என்று விளக்கந் தந்தாள். அவள் தன் வேலையைக் கவனிக்கச் சென்று சில நிமிஷங்களுக்கெல்லாம் இமாமவர்கள் வெளியில் வந்தார்கள். அவர்களிடம் தாங்கள் கேட்கவந்த விஷயத்தையும், அதற்கு அவர்கள் வீட்டு வேலைக்காரி தந்த பதிலையும் வந்தவர்கள் தெரிவித்தனர். தங்கள் முகத்தில் புன்னகை படர இமாமவர்கள் அந்த வேலைக்காரி இப்படி எந்த ஆதாரத்தைக்கொண்டு பதிலளித்தாள் என வினவினுர்கள். அவள் சொன்ன உணவுத் தட்டுகள் கழுவும் விருத்தாந்தத்தை இமாமவர்களிடம் தெரிவித்தனர். அவ்வளவுதான், இமாமவர்களின் வதனம் கோபத்தால் சிவந்து விட்டது. அவர்களுடைய உதடுகள் துடிக்கலாயின. உடனே, அந்த வேலைக்காரியை அழைத்து, ''நான் அனுமானம் (கியாஸ்) கொண்டு தீர்ப்பளிக்கிறேன் என்று நீயும் அப்படிச் செய்யத் துணிந்தாயா? உன் நாவைத் துண்டிக்கவேண்டும்" என்று கடிந்து கொண்டார்கள். பின்னர், சற்று சாந்தமாகி திரு குர்ஆன், ஹதீஸின் அடிப்படையிலன்றி மார்க்க விஷயங்களில் இவ்விதம் தன் சொந்த அனுபவத்தையோ, அறிவையோ கொண்டு தீர்ப்புக் கொடுப்பது சரியல்ல என்று விளக்கினுர்கள். கடைசியில், ''நாம் எந்த அடிப்படையில் பேசுகிறோம் என்பதைத் தெரிந்து கொள்ளாதவர்கள் நம்சொல்லை ஆதாரமாக வைத்துத் தீர்ப்புக் கூறுவது ஹராமாகும்'' என்று மிகத்தெளிவாகக் கூறினுர்கள். எனவே, இமாமவர்களின் தீர்ப்புக்கள் வெறும் அறிவின் அடிப்படையில் மட்டும் அமைந்தவை என்று கூறுவது அபத்தமாகும்; உண்மைக்கு மாற்றமான பேச்சாகும். அத்துடன் ஸுன்னத்தைப் பேணுவதில் அவர்கள் காட்டிய பேரார்வத்தை அவர்கள் உண்டாக்கியளித்த மத்ஹபின் அனுஷ்டான முறையிலிருந்து நன்கு விளங்கிக் கொள்ளலாகும்.

## ஹனபி மத்ஹப்

இமாம் அபூ ஹனீபாவால் நபிபெருமான் (ஸல்) அவர்களின் சொல், செயல்களை அடிப்படையாகக் கொண்டு ஆக்கப்

பட்டு, இமாம் முஹம்மதுஇப்னு ஹஸன் ஷைபானிய்யியாலும், இமாம் அபூ யூஸுபாலும் முறைப்படுத்தப்பட்டு உருவான ஹனபி மத்ஹப் இந்த இரண்டு பெரியார்களுடைய காலத் திலேயே இராக் முழுமையும் பரவிவிட்டது. அப்பாஸியாக் கலீபாக்களின் காலத்தில், இந்த மத்ஹபின்படியே தீர்ப்புக்கள் வழங்கப்பட்டன. பின்னர், அங்கிருந்து இது குராஸான், புகாரா முதலிய பகுதிகளில் பரவிற்று. ஹிஜ்ரி ஐந்தாம் நூற்றாண்டு வரை ஹனபி மத்ஹப் வடமேற்கு ஆப்பிரிக்கா விலும் மாலிக்கி மத்ஹபுடன் சேர்ந்து பரவியிருந்தது. பின்னர், துருக்கிய ஸுல்தான்களின் கிலாபத்தில் ஹனபி மத்ஹப் உன்னதம் பெற்று விளங்கிற்று. அத்துடன் எகிப்து, தூனிஸ் போன்ற இடங்களில் பாதிக்குப் பாதி ஹனபி மத்ஹபைப் பின் பற்றுவோராயினர். மத்திய ஆசியா (அதாவது, ஆப்கனிஸ் தான், துருக்கிஸ்தான், புகாரா, ஸமர்க்கந்து), இந்தியா ஆகிய இடங்களில் இன்று இந்த மத்ஹபைப் பின்பற்றுவோர் மிகவும் அதிகமாவர். இதற்கு இந்தப் பிரதேசங்களை ஆட்சி செய்த மன்னர்களும் ஹனபிகளாக இருந்தது ஒரு முக்கிய காரணமாகும். எதேச்சாதிகாரம் செலுத்திய அப்பாஸியாக் கலீபாக்கள் மட்டும் எந்த மத்ஹபையும் பின்பற்றவில்லை. தங்களை 'முஜ்தஹிதுகள்' என்றும், தங்களுக்கு எந்த இமாமை யும் பின்பற்றத் தேவையில்லை என்றும் இவர்கள் கூறிக் கொண்டனர். இவர்களுடைய ஆட்சி உச்ச நிலையிலிருந்த காலத்தில் இவ்விதம் அவர்கள் நடந்துகொண்டனர். இவர்கள் கீழ்நோக்கிவரத் தொடங்கிய பின்னரோ இவர்கள் எந்த மத்ஹபைப் பின்பற்றினார்கள் என்பது பற்றியே யாரும் கவலைப் படவில்லை. பின்னர் வந்த அப்பாஸியாக் கலீபாக்கள் சிலர்-குறிப்பாக, அப்துல்லாஹிப்னு முஃதஸிம்-ஹனபிகளாக இருந் துள்ளனர். அப்பாஸியாக்களுக்குப் பின்னர் வந்த மன்னர் பலரும் ஹனபிகளாகவே இருந்துள்ளனர். கஷ்கரிலிருந்து பைத்துல் முகத்தஸ் வரை, கான்ஸ்டாண்டி நோபிளிலிருந்து குஜ் நாடுவரையும் உள்ள பகுதியைப் பன்னெடுங்காலம் ஆட்சிபுரிந்த சல்ஜூக்கிய மன்னர்கள் யாவரும் ஹனபிகள் தாம். மன்னர் மஹ்மூது கஜ்னவி ஹனபி மத்ஹபின் மாபெரும்

ஆலிமாக விளங்கி, சுமார் அறுபதாயிரம் மஸ்அலாக்கள் கொண்ட 'அந்நபரீத்' என்ற கிரந்தத்தையும் ஆக்கியுள்ளார்.

சிலுவைப் போரில் வெற்றிக்கொடி நாட்டிய ஸுல்தான் ஸலாஹுத்தீனுக்குப் போர்முறையைப் போதித்தவரும், பைத்துல் முகத்தஸுக்காக நடந்த போரில் முதன் முதலாக வெற்றிப்பாதைக்கு வழி வகுத்தவருமான நூருத்தீன் ஜங்கி என்ற மன்னர் ஹனபியாக இருந்தார். இவர் 'தாருல் ஹதீஸ்' என்னும் கலா சாலையையும் நிறுவினர், இவருடைய பரம்பரையினர் ஹனபிகளாக இருந்ததோடு, ஷாபியீ, மாலிக்கி மத்ஹபுகளின் கண்ணியத்தையும் போற்றிக் காத்தனர். ஸுல்தான் ஸலாஹுத்தீன் ஷாபியீ மத்ஹபைச் சேர்ந்தவராயினும், இவர் வமிசத்திலுதித்த பலர் ஹனபிகளாக இருந்திருக்கின்றனர்.

பெரும் நிலப்பரப்பை ஆட்சிசெய்த தீரர், பேரறிஞர் ஈஸப்னுல் மலிக் என்ற அரசரும் ஹனபிதான். எகிப்தில் ஹிஜ்ரி 405 வரை நாற்பத்தேழு ஆண்டுகள் அரசோச்சி வெற்றிகள் பல கண்ட ஜர்ராக் பரம்பரை மன்னர்கள் அனை வரும் ஹனபிகளேயாவர். மேலும், அவர்களுடைய சட்ட மன்றங்களிலும் ஹனபி மத்ஹபின் தீர்ப்புகளுக்கு முதலிடந் தரப்பட்டு வந்தது. சுமார் அறுநூறு ஆண்டுகள் துருக்கியை ஆட்சி செலுத்திய மன்னர்கள் அனைவரும் ஹனபிகள்தாம். மேலும், இந்தியாவை அரசோச்சிய சுல்தான்களும், அவர் களைத் தொடர்ந்துவந்த மொகலாயச் சக்கரவர்த்திகளும் ஹனபிகளாகவே இருந்தனர். இவர்களுடைய நீதி மன்றங் களில் பெரும்பாலும் ஹனபி மத்ஹபின் ஃபிக்ஹுப்படி தீர்ப்புக் கள் வழங்கப்பட்டன. இன்றும் இந்திய முஸ்லிம்களில் மிகப் பெரும்பான்மையானவர்கள் ஹனபிகளாகவே இருக்கின்றனர்.

இவ்விதம் பிரபலமான ஆட்சியாளர்களின் ஆதரவைப் பெற்ற இந்த மத்ஹபின்படி ஆங்காங்கே தீர்ப்புக்கள் வழங்கப் பட்டன. எனவே, ஹனபி மத்ஹபைப் பற்றி ஆயிரக் கணக் கான ஆசிரியர்கள் சட்ட நூற்கள் வெளியிடலாயினர். அவ் விதம் ஹனபி மத்ஹபைப்பற்றி வெளிவந்துள்ள நூற்களை

யும் பத்வாக்களையும் ஒருங்கு திரட்டினால் அவைகளை [illegible] வைக்கப் பல மாடிகள் கொண்ட ஒரு மிகப் பெரிய கட்டடமே தேவைப்படும். ஹனபி மத்ஹபின் பழைய முறைப்படி சட்ட விளக்கம் செய்தவர்களுள் கஸ்ஸாப், தஹாவி, [illegible] அபுல் லைதுல் ஸமர்க்கந்தி, குதூரி, ஷம்ஸுல் அயிம்மா ஸரக்ஸி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர். ஹனபி மத்ஹபின் சட்டதிட்டங்கள்பற்றி புதிய பாணியில் விளக்கம் செய்தவர்களுள் 'ஹிதாயா' எழுதிய மர்கீனானி, 'கன்ஸுத்தகாயிக்' எழுதிய நஸபீ, 'துர்ருல் ஹுக்காம்' எழுதிய முல்லா குஸ்ரு, 'முல்தகாவுல் அபுர்' எழுதிய ஹலபி ஆகியோர் வெகு பிரபலமான ஒரு சிலராவர். கடைசில் பிரஸ்தாபித்துள்ள நூலுக்கு ஹஸ்காபீ என்பவர் எழுதிய 'துர்ருல் முக்தார்' என்ற விரிவுரை நூல் யாவரும் நன்கு அறிந்ததாகும். இது போன்று இந்த நூற்கள் ஒவ்வொன்றுக்கும் நூற்றுக்கணக்கான வியாக்கியான நூற்கள் எழுதப்பட்டுள்ளன. ஹனபி சட்டத்தைச் சரியானபடி தொகுப்பதற்கு அப்துல் அஸீஸ் பாஷாவின் தலைமையில் (துருக்கி கிலாபத்தில்) ஒரு கமிட்டி அமைக்கப் பட்டது. அந்தக் கமிட்டி வெளியிட்ட சட்டத் தொகுப்பு நூல் 'மஜல்லீ'யும், அதற்கு அலி ஹைதர் என்பவர் துருக்கி மொழியில் எழுதிய விரிவுரை நூல் 'துர்ருல் ஹுக்காமு'மும் குறிப்பிடத் தக்கவையாகும்.

ஹனபி மத்ஹபின் பத்வாக்களின் தொகுப்புக் கடலில் மிகவும் முக்கியமான சிலவற்றை மட்டும் இங்கே பிரஸ்தாபிக்கலாம்: புர்ஹானுத்தீன் இப்னு மாஜா எழுதிய 'ஸகீரதுல் புர்ஹானிய்யா,' காதீகான் எழுதிய 'கானிய்யா,' ஸிராஜுத்தீன் சஜாவந்தீ எழுதிய 'ஸிராஜிய்யா,' இப்னு அலாவுத்தீனின் 'தாதார்கானிய்யா,' பஜ்ஜாஜீயின் 'பஜ்ஜாஜிய்யா,' இப்னு நுஜைமின் 'ஸைனிய்யா,' ஹமீது அபீந்தியின் 'ஹமீதிய்யா,' கைருத்தீனுர் ரம்லியின் 'கைரிய்யா,' ஔரங்கஜேப் பாதுஷாவின் கட்டளைப்படி தயாரிக்கப்பட்ட 'பதாவா ஆலம்கீரிய்யா' முதலியனவாம். மேலும், உஸூல் (மூலச் சட்டம்) சம்பந்தமான நூற்களும் எண்ணற்றனவுண்டு.

## அபிப்பிராயபேதமான சில 'மஸ் அலாக்கள்'

இமாம் அபூ ஹனீபாவின் தீர்ப்புகளுக்கும், மற்ற மாலிக்கி ஷாபியீ, ஹன்பலி மத்ஹபுகளின் இமாம்களின் தீர்ப்புகளுக்கு மிடையே எத்தனையோ சில்லரை வேற்றுமைகளுண்டு. அவை யாவையும் சேர்த்துக் கொடுப்பது என்பது இந்த நூலில் சாத்தியமேயல்ல. எனவே, உதாரணத்துக்காகத் திருட்டு சம்பந்தமான சில விஷயங்களில் காணப்படும் அபிப்பிராயபேதங்களை மட்டும் இங்கே குறிப்பிடலாம்:

1. இமாம் அபூ ஹனீபா (இ.அ.): ஒருவனைத் திருட்டுக் குற்றத்துக்காகத் தண்டிப்பதாயின் அவன் குறைந்தது ஒரு அஷ்ரபி (வெள்ளி நாணயம்)யாவது திருடியிருக்கவேண்டும். (மற்ற இமாம்கள்: ஒருவன் கால் அஷ்ரபி திருடினாலும் அவனைத் திருட்டுக் குற்றத்துக்காகத் தண்டிக்கலாம்.)
2. இ.அ: ஒரே தொகையைப் பலர் சேர்ந்து திருடியிருப்பின் யார் கையையும் வெட்டக்கூடாது. (மற்ற இமாம்கள்: அனைவருடைய கைகளையும் துண்டிக்க வேண்டும்.)
3. இ.அ: சிறுவர்கள் திருடினால் அவர்கள் கையைத் துண்டிக்கக்கூடாது. (இமாம் மாலிக்: துண்டிக்க வேண்டும்.)
4. இ.அ: மையித்தின் 'கபன்' துணியைத் திருடியவனின் கைகளை வெட்டக்கூடாது. [மற்ற இமாம்கள்: வெட்டவேண்டும்.]
5. இ. அ: கணவன்—மனைவியருள் ஒருவர் மற்றவர் பொருளைத் திருடிவிட்டால் திருடியவர் கையை வெட்டக் கூடாது. [இமாம் மாலிக்: வெட்டவேண்டும்.]
6. இ.அ: தகப்பன் சொத்தை மகன் திருடிவிட்டால் மகன் கையை வெட்டக்கூடாது. [இமாம் மாலிக்: வெட்ட வேண்டும்.]

7. இ.அ: நெருங்கிய உறவின் முறையார் [சகோதரர், சிற்றப்பன் போன்ரோர்] ஒருவர் பொருளை மற்றவர் திருடினால் திருடியவன் கையை வெட்டக்கூடாது. [மற்ற இமாம்கள்: வெட்ட வேண்டும்.]

8. இ.அ: ஒருவன் மற்றவனிடம் ஒரு பொருளை இரவல் வாங்கிக்கொண்டு பின்னர் கொடுக்க மறுத்தால் அவன் கையை வெட்டக்கூடாது. [மற்ற இமாம்கள்: வெட்டவேண்டும்.]

9. இ.அ: ஒருவன் தான் திருடிய பொருளை உடையவனிடமிருந்து அன்பளிப்பு [ஹிபா] ஆகவோ, விலை கொடுத்தோ வாங்கி அதற்கு உரியவனாகிவிட்டால் அவனுடைய கையை வெட்டக்கூடாது. [மற்ற இமாம்கள்: இவன் முதலில் திருடியவனாதலால் அதற்காக இவனுடைய கையை வெட்டவே வேண்டும்.]

10. இ.அ: திருடிய முஸ்லிம் அல்லாத ஒருவன் ஒரு முஸ்லிமிடம் அபயங்கேட்டு, முஸ்லிம் ஆட்சியிலிருந்தால், அவனுடைய கையை வெட்டக்கூடாது. [மற்ற இமாம்கள்: அப்படிப்பட்டவன் கையையும் வெட்ட வேண்டும்.]

11. இ.அ: திருகுர்ஆனைத் திருடியவன் கையை வெட்டக்கூடாது. [இமாம் மாலிக், இமாம் ஷாபியீ: வெட்டவேண்டும்.]

12. இ.அ: விறகு, மற்றும் விரைவில் கெட்டுப்போகக் கூடிய பொருள்களைத் திருடியவன் கையை வெட்டக் கூடாது. [மற்ற இமாம்கள்: கையை வெட்டலாம்.]

  

# இமாம் மாலிக்

''நான் மதீனாவில் எங்குமே வாகனத்தில் ஏறிப்போக மாட்டேன், ஏனெனில், இதே வீதிகளில்தான் எம்பெருமான் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் கால்நடையாக நடந்து சென்றிருக்கிறார்கள்" என்று கூறி ஆட்சியாளர் ஒருவர் அனுப்பிய வாகனத்தை ஏற்க மறுத்த சத்புருஷர்—

கல்வி போதிக்கத் தமது மாளிகை வருமாறு கலீபரசர் அழைத்தகாலையில், ''ஜனங்கள் கல்வியை நாடிச் செல்வார்களேயன்றி, கல்விஞானம் ஜனங்களைத் தேடிப்போகாது" என்று கூறி மறுத்த மகாபுருஷர்—

தாம் அளித்த தீர்ப்பொன்றைச் சுயநலமே உருவான அரசியலார் மாற்றச் சொல்லி நயத்தாலும், பயத்தாலும் வற்புறுத்தியும் மாற்ற மறுத்து, எழுபது கசையடிகளை ஏற்றும் மனந் தளராது தமது தீர்ப்பையே ஊர்ஜிதம் செய்த மன உறுதியாளர்—

மதீனாவின் மாபெரும் முஹத்திஸ்ஆகவும், பகீஹ் ஆகவும் விளங்கிய உத்தமசீலர்—

இவர்கள்தாம் இமாம் மாலிக் ஆவார்கள். ஒரு சர்வ கலா சாலையாக விளங்கிய தனி மனிதர், துறவு வாழ்வில் திளைத்த தூயர், மதீனாவின் மகத்துவத்தைப் பேணிய மாமேதை இந்த இமாமவர்களாவார்கள்.

மாலிக் இமாமவர்களின் இடுகுறிப் பெயர் அபூ அப்துல் லாஹ்; பட்டப் பெயர் இமாம் தாருல் ஹிஜ்ரத்.

## பிறப்பும், கல்வியும்

இவர்கள் மூழுக்க முழுக்க அரபி மரபைச் சேர்ந்தவர்களாவர். இஸ்லாத்துக்கு முன்னும், பின்னும் இவர்களுடைய குடும்பம் மிகவும் பிரபலமாக விளங்கியதாகும். இமாமவர்களின் முன்னோர்கள் யமன் பகுதியில் வாழ்ந்தவர்கள். இஸ்லாம் தோன்றியபின்னர் மதீனாவில் வந்து குடியேறினர்.

இமாமவர்களுடைய வம்சாவளி வருமாறு: மாலிக் பின் அனஸ் பின் மாலிக் பின் அபீ ஆமிர் பின் அம்ரு பின் ஹாரிஸ் பின் கீமான் பின் குதைல் பின் அம்ருபின் அல் ஹாரிதுல் அஸ் பாஹி. இமாமவர்கள் ஹிம்யர் என்ற உயர் குடியைச் சேர்ந்த வர்கள்

இமாம் மாலிக்கின் தந்தையின் பாட்டனாரான அபூ ஆமிர் தான் ஹிஜ்ரி இரண்டில் இஸ்லாத்தைத் தழுவியவராவார்,

ஹிஜ்ரி 93-ல் இமாமவர்கள் பிறந்தார்கள். அப்போது தமாஸ்களில் உமைய்யா கலீபா வலீத் பின் அப்துல் மலிக் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தார். இஸ்லாமிய ஆட்சி கிழக்கிலும் மேற்கிலும் உன்னதமாகப் பரவியிருந்த சமய மல்லவா அது!

மதீனாவிலுதித்த இமாம் மாலிக் கல்வி பயிலத் தேவை யான சகல வசதிகளையும் அடையப்பெற்றிருந்தார்கள். கல்வி மணந் திகழ்ந்த புனித பூமியான மதீனா, மகாமேதைகள், மகான்கள் தோன்றும் சுரங்கமாகவே திகழ்ந்தது. அங்கிருந்து நூற்றுக்கணக்கான ஸஹாபாக்கள் இஸ்லாத்தைப் பரப்புவதற் காக உலகின் பல பகுதிகளுக்கும் போய்விட்டார்களாயினும், பின்னும் தங்கம் விளையும் சுரங்கமாகவே அது திகழ்ந்தது. நபிபெருமான் பூத உடல் நீத்தபின் இருபத்தைந்து ஆண்டுகள் இஸ்லாமிய ஆட்சியின் தலைமைப்பீடமாகவே அது மிளிர்ந்தது. இஸ்லாமிய ஆட்சிக்கான சட்டதிட்டங்களை வகுத்துத்தந்த ஸஹாபாக்களின் சட்டசபை அங்குதான் கூடி வந்தது. அங்கு உருவான சட்டதிட்டங்களும், ஃபிக்ஹு மஸ்அலாக்களும் முஸ்லிம் உலகம் எங்கும் பரவி யாவராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டன.

ஷரீஅத்தின் புனிதமான அகமியங்களின் மூலம் போன்று விளங்கிய ஹஜ்ரத் அபூபக்கர். உமர், ஆயிஷா (ரலி—அன்ஹும்), நபி பெருமானாரின் மெய்வணக்கங் களையும், முன்மாதிரியையும் அணுவளவும் பிசகாது அனுஷ்டித்து மகிமை பெற்றிருந்த ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு உமர், 'இந்த உம்மத்தின் மூளை' எனச் சிறப்புப் பெயர் பெற்ற ஹஜ்ரத் இப்னு அப்பாஸ், ஏராளமான நாயகமொழிகளை

வெளியிட்ட ஹஜ்ரத் அபூ ஹுரைரா, திருக்குர்ஆன் 'வஹி' இறங்கியதை அவ்வப்போது, உடனுக்குடன் எழுதிவைத்துப் பாதுகாத்து நின்ற 'காத்திபுல் வஹி' ஜைது பின் தாபித் போன்ற மாமேதைகள் எண்ணற்ற அறிஞர்களை ஆக்கி வெளியில் அனுப்பிக் கொண்டிருந்தனர்.

இவர்கள் காலமான பின்னர் ஹிஜ்ரி 94-ல் அபூபக்கர் பின் ஹாரிதும், ஹிஜ்ரி 99-ல் காரிஜா பின் ஜைதும், ஹிஜ்ரி 101-ல் காஸிம் பின் முஹம்மதும், சயீது பின் முஸய்யிபும், ஹிஜ்ரி 107-ல் ஸுலைமான் பின் யஸாரும் ஆகிய ஏழு மாபெரும் பகீஹுகள் மதீனா நகரிலிருந்தே கலைஞானம் பரப்பினர்.

எனவே, இமாம் மாலிக் கல்வியில் கருத்துக் காட்டிய போது எண்ணற்ற மாமேதைகளிடமிருந்து கலா ஞானங்களை அள்ளிச் சேகரிக்க முடிந்தது. இவ்விதம் அள்ளிச் சேகரித்த செல்வங்களையெல்லாம் தங்கள் இதயப் பொக்கிஷத்தில் அடைத்துவிட்டார்கள். இதனால், அவர்கள் 'இமாம் தாருல் ஹிஜ்ரத்' என்று பட்டம் பெற்றார்கள்.

இமாமவர்களின் பாட்டனார், தந்தையார், சிறிய தகப்பனார் ஆகிய அனைவருமே ஒப்பற்ற முஹத்திஸ்களாய் இருந்ததால் தொடக்கத்தில் இமாமவர்கள் இவர்களிடமே கல்வி பயின்றிருக்கிறார்கள். பின்னர், திருக்குர்ஆனைக் காரீ அபூ ரதீம் நாபிய்யிய்யி [இவர்களுடைய கிராஅத் முறைதான் இன்று இந்திய முஸ்லிம்கள் பெரும்பாலோரால் ஓதப்படுவதாகும்] அவர்களிடமும், ஹதீஸ்களை ஷிஹாபுத்தீன் ஜுஹ்ரி, ஜஃபருஸ் ஸாதிக் [ரலி], முஹம்மது பின் யஹ்யா, அபூ ஹாஜிம், யஹ்யா பின் சயீத் போன்ற பெரியார்களிடமும் பாடங் கேட்டார்கள். பிக்ஹுப் பாடங்களை ராபிஅத்துர் ரை அவர்களிடம் கற்றுள்ளார்கள்.

இமாமவர்கள் கல்வியில் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தும், சுயமே தீர்ப்புக்கள் வழங்குமுன் சுமார் அறுபத்தாறு பெரியார்களிடம் அனுமதிப்பத்திரம் பெற்றுள்ளதாக அவர்களே தெரிவிக்கிறார்கள். மிகவும் இளமையான வயதிலேயே

[அதாவது சுமார் 30—35ல்] அவர்கள் கலாஞானப் போதனை செய்யவும், மார்க்கத் தீர்ப்புகள் வழங்கவும் தொடங்கி விட்டார்கள்.

எம்பெருமானாரின் முன்மாதிரியை முழுக்க முழுக்கப் பின்பற்றியொழுகிய ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு உமர், பெருமானாருக்குப் பின்னர் ஏழு ஆண்டுகள் ஹதீஸ் ஃபிக்ஹூப் பாடங்களையும், மார்க்கத் தீர்ப்புக்களையும் வழங்கிக்கொண்டிருந்தார்கள். இமாம் மாலிக்கின் கிராஅத் ஆசிரியர் நாபிஇய்யி இவர்களிடமே கல்வி பெற்றார்கள். அப்துல்லாஹிப்னு உமர் காலமானதும் அந்த ஸ்தானத்தில் நாபிஇய்யே அமர்ந்து பாடம் நடத்தினார்கள். இவர்களும் காலமானபின் மக்கள் இமாம் மாலிக்கை அந்த ஸ்தானத்தில் அமர்த்தி விட்டனர். [இவ்விதம் அவர்கள் இருபத்தைந்து இருபத்தாறும் வயதிலேயே ஆசானாக ஆகிவிட்டார்கள் என்று சிலர் கூறுகின்றனர். எனினும், ஹதீஸ் விளக்க மன்றங்களிலிருந்து பாடங்கேட்க மாணவருக்கு குறைந்தபட்சம் இருபது வயதாவது ஆகியிருக்கவேண்டும் என்று மதீனப் பெரியார்கள் நிபந்தனையொன்றை உண்டாக்கியிருந்தார்கள். ஆனதால், இமாமவர்கள் கல்வி கற்று, தேர்ச்சியடைந்து பாடம் நடத்த ஆரம்பிக்க அதிலிருந்து சுமார் பத்து ஆண்டுகளாவது ஆகியிருக்க வேண்டும்.)

## இமாமவர்களின் கலாஞான மன்றம்

இமாமவர்கள் ஹதீஸ், பிக்ஹூப் பாடபோதனையளிப்பதற்கென ஒரு மன்றத்தை நிறுவிக்கொண்டார்கள். உலகப் புகழ் பெற்றுவிட்ட இந்த மன்றத்துக்கு உலகின் சகல பாகங்களிலுமிருந்து மாணவர்கள் வரலாயினர். கிழக்கே சீஸ்தான், மேற்கே முஸ்லிம் ஸ்பெயின் ஆகிய இரண்டு எல்லைகளுக்கும் உட்பட்ட நூற்றுக்கணக்கான ஊர்களிலிருந்து மாணவர்கள் வரலாயினர். அவர்களுடைய கலாமன்றத்தில் கூடிய மாணவர்களுடைய தொகையைக் கவனித்தால் அந்த மன்றம் ஒரு தனி மனிதர் நடத்திய சர்வ கலாசாலையாகவே மிளிர்ந்த தெனலாம். அதிலும், ஹஜ்ஜூக்

வரும் இமாமவர்கள் குளித்து முழுகிவிட்டு, தலையையும், தாடியையும் சீப்பினால் வாரிக்கொண்டு, சிறப்பான தூய உடையுடுத்தி, தலைப்பாகையணிந்து, அத்தர்போன்ற வாசனைகளைச் சற்று அதிகமாகவே பூசிக்கொண்டு, இரண்டு ரகஅத் தொழுது விட்டு வந்து சபையில் அமருவார்கள். அவர்கள் தங்கள் ஆசனத்தில் அமரும்போது, யாவரும் மிகுந்த பணிவுடன் தலையைத் தொங்கப்போட்டுக் கொள்வார்கள். உடனே, சபையில் ஊசி விழுந்தாலும் கேட்கும்படியான நிசப்தம் நிலவும். மிகவும் உணர்ச்சிவசமானவர்களாக இமாமவர்கள் ஹதீஸ் விளக்கம் செய்வார்கள். நபிபெருமானாரைப் பற்றிப் பேசும்போது அவர்களின் நிறம்மாறி, உடல் ஒடுங்கும். ‘அச்சமயத்தில் நான் காண்பதை நீங்கள் கண்டீர்களாயின் என்மீது குறை கூற மாட்டீர்கள்’ என்று பின்னர் தங்கள் அன்பர்களிடம் அவர்கள் கூறியதுண்டு.

இமாம் மாலிக் அவர்கள் ஹதீஸ் பாடம் நடத்தும்போது யாரேனும் இரைந்து பேசினால்கூட அவர்களால் தாங்க முடியாது. உடனே அவர்களை நோக்கி, ‘‘விஸ்வாசிகளே, உங்கள் சப்தத்தை உங்கள் நபியுடைய சப்தத்துக்கு மேலாக உயர்த்தாதீர்கள்!’’ என்ற கருத்துள்ள ஆயத்தை ஓதிக்காட்டுவார்கள். அதாவது, நபிபெருமானாரின் திருமொழிகளைப் பற்றிய விளக்கம் கொடுக்கும்போது, தன் சப்தத்தை உயர்த்துபவன் நபியின் சமுகத்தில் மரியாதையின்றித் தன் சப்தத்தை உயர்த்தியவனாவான் என்பது அதன் தாத்பரியமாகும் என்று கூறுவார்கள்.

ஒருசமயம் இமாமவர்கள் சபையில் பாடம் நடத்துவதைக் கண்ட கவிஞர் ஒருவர் சபையின் ஒழுங்கையும் இமாமவர்களின் மேதைமையையும் மரியாதையையும் கண்டு வியப்புற்று [illegible] அதில் கேட்பவரின் கேள்விகளுக்கு இமாமவர்கள் உடனுக்குடன் விடை தராவிடினும், சபையில் நிலவிய காம்பீர்யம் காரணமாக கேட்டவர் மீண்டும் விளக்கம் கேளாமலே

மௌனமாகத் தலைகுனிந்து அமர்ந்திருக்கிறார்.
அரச அவைக்குரிய மரியாதை
அங்கே மிளிர்கிறது
யாவரும் பயபக்தியால் ஆட்கொள்ளப்பட்டுள்ளனர்.
இமாமவர்கள் ஓர் அரசர் அல்லர்தாம்;
எனினும், அவர்களுக்கு அரசரைவிடவும்
அதிக மரியாதையும், பணிவும் காட்டப்படுகின்றன.
அவர்கள் அவையிலே மாமன்னரெல்லாம்
தலைகுனிந்து, வாய்மூடிப் பணிவுடன் அமர்ந்துள்ளனர்.

என்று குறிப்பிட்டுள்ளார்.

## இமாமவர்களும், அரசியலும்

இமாம் அபூ ஹனீபாவைப்போலவே, இமாம் மாலிக்கும் பல கலீபாக்களின் ஆட்சியைக் கண்டவர்களாவர். உமைய்யாக்கள், அப்பாஸியாக்கள் என்ற இரண்டு பரம்பரையினரின் ஆட்சியாளர்களிலும் பலர் ஆளுவதை அவர்கள் கண்டார்கள். அவர்கள் பிறக்கும்போது வலீத் பின் அப்துல் மலிக் என்ற உமைய்யாக் கலீபா ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தார். அவர்களுடைய பன்னிரண்டாம் வயதில் ஹிஷாம் கலீபா வானார். இமாமவர்களின் முப்பத்து இரண்டாம் வயதுவரை ஆட்சி செலுத்திய இந்த ஹிஷாம் ஹிஜ்ரி 125-ல் காலமாகி, இரண்டாம் வலீது கலீபாவானார். இவர் மறு வருஷம் கொலை செய்யப்பட்டுவிடவே, மூன்றும் யஜீது கலீபாவானார். ஆறும் மாதத்தில் அவர் காலமாகவே, உமைய்யாக்களின் ஆட்சி ஆட்டங்கண்டு, கொந்தளிப்பு மிகுந்திருந்த அச்சமயம் அவர் சகோதரர் இப்ராஹீம் இரண்டு மாதங்கள் கலீபாவாக இருந்தார். இமாமவர்களின் முப்பத்து நான்காம் வயதில் இரண்டாம் மர்வான் கலீபாவானார். இமாமவர்களின் முப்பத்தொன்பதாம் வயதில் உமைய்யாக்களின் ஆட்சி சரிந்து விட்டது. இவ்விதம் அவர்கள் நாற்பது வயதடையுமுன் ஆறு உமைய்யாக் கலீபாக்கள் மாண்டு மறைந்து, அவர்களுடைய பரம்பரையும் மறைந்துவிட்டது.

ஹிஜ்ரி 132-ல் தொடங்கிய முதல் அப்பாஸியாக் கலீபா அபுல் அப்பாஸின் ஆட்சி நான்கு வருடங்கள் நடைபெற்றது. அடுத்து அவர் சகோதரர் அபூ ஜஃபருல் மன்ஸூர் ஹிஜ்ரி 136-ல் கலீபாவானுர். அப்பாஸியாக்கள் பதவியைக் கைப் பற்றும்வரை, ஏன், அதற்குப் பின்னருங்கூட இவர் மதீனுவிலேயே வாழ்ந்திருந்தார். அங்கே, சாதாத்துகள் கூடி ஹஸனின் பௌத்திரர்களுள் ஒருவரான முஹம்மது (நப்ஸுஸ் ஸகிய்யா) என்பவரைக் கலீபாவாகப் பிரகடனம் செய்தபோது, இவரும் அந்தக் கூட்டத்தில் பிரசன்னமாகவிருந்து, அவரிடம் விஸ்வாசப் பிரமாணம் செய்துகொண்டார். ஆனுல், பின்னர் இவர் தலைமயனுர் கிலாபத்தைக் கைப்பற்றவே, இவர் தாம் கொடுத்த வாக்குறுதியை மறந்துவிட்டார்! முஹம்மது (நப்ஸுஸ் ஸகிய்யா) இவருக்கு எதிராக மக்காவில் கலகக் கொடி உயர்த்தி, ஆட்சியைக் கைப்பற்றினுர். இவரை அடக்க மன்ஸூர் பெரிதும் கஷ்டப்பட நேர்ந்தது. எனவே, முதலில், நப்ஸுஸ் ஸகிய்யாவின் ஆதரவாளர்களுக்கு அச்சமயம் மதீனுவில் நன்கு செல்வாக்குப் பெற்றிருந்த இமாம் மாலிக் மூலம் ஒரு வேண்டுகோள் அனுப்பினுர். அதாவது, இந்த நப்ஸுஸ் ஸகிய்யாவையும், அவர் சகோதரர் இப்ராஹீமையும் தம்மிடம் ஒப்படைக்கவேண்டும் என்று கேட்டார். அத்துடன், இமாம் மாலிக்கிற்குத் தனியாக ஒரு கடிதமெழுதி, அந்தக் கலகக்காரர்கள் இருவரையும் அவர்கள் பிடித்துத் தம்மிடம் அனுப்புவதாயின் அந்தக் கலக்காரர்களுடைய தகப்ஞரான அப்துல்லாஹ்வின் பெரிய சொத்து முழுமையையும் இமாமவர்களுக்கே கொடுத்துவிடுவதாக எழுதினுர். இமாமவர்களோ, நீதியைவிட்டுப் பிறழ மறுத்து விட்டார்கள். மன்ஸூர் யாரைக் கலீபாவாக ஒப்புக்கொண்டு விஸ்வாசப் பிரமாணம் செய்தாரோ, அதே நபரைத் தூக்கிலிடத் தாம் உதவ இயலாது என்று அவர்கள் கூறிவிட்டார்கள். அத்துடன் உண்மையிலேயே, கிலாபத், நப்ஸுஸ் ஸகிய்யாவுக்கே உரியதாகும் என்ற தங்கள் அபிப்பிராயத்தையும் அவர்கள் பிரகடனப்படுத்தினுர்கள். அவரிடம் ஜனங்கள் விஸ்வாசப்பிரமாணம் செய்து கொடுக்கலாம் என்று அறிவித்தார்கள். இது கேட்ட மதீனுவாசிகள் ஒன்றுதிரண்டு இமாமவர்களிடம்

வந்தனர். ''நாங்கள் மன்ஸூரிடம் விஸ்வாசப்பிரமாணம் செய்து கொடுத்து விட்டோமே, இப்போது என்ன செய்வது?'' என்று வினவினர். அதற்கு இமாமர்கள். ''மன்ஸூர் உங்களிடம் பலவந்தமாகப் பிரமாணம் வாங்கியிருக்கிறார். இவ்வாறு காட்டாயப்படுத்தி வாங்கப்படும் பிரமாணம் செல்லாது'' என்று கூறி, அதற்கு ஆதாரமாக, ''வற்புறுத்தி வாங்கப்படும் 'தலாக்' செல்லாது'' என்ற ஹதீஸையும் சுட்டிக் காட்டினார்கள். உடனே, மதீனாவாசிகள் முழுமனதுடன் நப்ஸுஸ் ஜகிய்யாவை ஆதரித்து நின்றனர். ஆனால், கலீபா மன்ஸூர் அனுப்பிய பெரும் படை நப்ஸுஸ் ஜகிய்யாவின் படையை நசுக்கி அவரையும் கொன்றுவிட்டது. அவர் சகோதரர் இப்ராஹீமும் வேறு ஒரு போர்க்களத்தில் கொல்லப்பட்டார்.

இதன்பின் கலீபா மன்ஸூர் தன் ஒன்றுவிட்ட சகோதரர் ஜஃபர் என்பவரை மதீனாவில் தன்பிரதிநிதியாக நியமித்து அனுப்பியதுடன், இமாம் மாலிக் போன்ற உலமாக்களைக் கவனமாகக் கண்காணித்துவருமாறும், அவர்கள் தமது ஆட்சிக்கு விரோதமாக மேலும் இடைஞ்சல் உண்டாக்கினால் அவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்குமாறும் கூறியிருந்தார். இதனால், ஜஃபர் மதீனா வந்ததும், மக்களிடம் மீண்டும் புதிதாக விஸ்வாசப்பிரமாணம் பெறத் தொடங்கினார். அத்துடன், இவர் இமாம் மாலிக் அவர்களை அணுகி, ''வற்புறுத்தி வாங்கப்படும் தலாக்குச் செல்லாது என்ற உங்கள் தீர்ப்பை மாற்றி அது செல்லும் என்று தீர்ப்புக் கொடுங்கள்'' என வற்புறுத்தினர். இமாமவர்கள் அதற்கு இணங்க மறுத்துவிட்டார்கள்; ஹதீஸுக்கு மாற்றமாகத் தான் தீர்ப்பளிக்க முடியாது என்று கூறிவிட்டார்கள். இமாமவர்களின் இந்த பதில் இந்த ஜஃபருக்கு அதிகமும் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டது. அரசதன்மைக்கே உண்டாகும் என்ற அவருடைய மிரட்டலும் இமாமவர்களை அசைக்க முடியவில்லை. எனவே, அவர்களுக்கு எழுபது கசையடி கொடுக்கப்பட வேண்டுமென்று அவர் உத்தரவிட்டார். உடனே அவருக்குக் கீழிருந்த அதிகாரிகள் இமாமவர்களை ஒரு குதிரையின் மீதேற்றி

போல் இழுத்துச்சென்று, கசையடி கொடுப்பதற்கென்று ஏற்பட்ட இடத்தில் நிறுத்தி, அவர்களுடைய சட்டையை அகற்றிவிட்டு எழுபது அடிகள் அடித்தனர். இதனால், இமாமவர்களின் உடல் முழுவதும் இரத்தம் பெருகி ஓடலாயிற்று. இமாமவர்களின் இரண்டு கைகளும் தோள் பொறுத்தைவிட்டும் கீழே இறங்கிவிட்டன. இந்தக் கொடுமை காணுதென்று, இமாமவர்களை அதே கோலத்தில் ஒட்டகத்தின் மீது ஏற்றி வீதி வீதியாக இழுத்துச் சென்றனர். அப்போதெல்லாம் இமாமவர்கள், இரத்தக் கோறையால் இனம் காண இயலாதிருந்த தங்களை அறிமுகப்படுத்திக் கொள்வதுபோல், ''நான்தான் மாலிக்கிப்னு அனஸ்'' என்று கூறிக்கொண்டு, ''வற்புறுத்தி வாங்கப்படும் தலாக் செல்லாது என்றுதான் நான் இப்போதும் தீர்ப்பளிக்கிறேன்'' என்று பிரகடனம் செய்தார்கள். கடைசியில் அரசாங்கச் சிப்பந்திகள் அவர்களை மஸ்ஜிதுந் நபவியில் விட்டுப்போயினர். இமாமவர்கள் தங்கள் உடலைக் கழுவிவிட்டு, அங்கே இரண்டு 'ரக்அத்' நபில் தொழுதார்கள். பின்னர், ''சயீத் பின் முஸய்யிபும் சாட்டையடி வாங்கிக்கொண்டபின் இங்கே வந்து இரண்டு ரக்அத் தொழுதார்கள்'' என்று கூறினார்கள். இந்தத் தண்டனையால் இமாமவர்களின் மன உறுதியை உலகமே உணர்ந்துகொண்டது. கலீபா மன்ஸூருமே அவர்களுக்குப் பணிந்துபோக நேர்ந்தது. (இது நடந்தது ஹிஜ்ரி 147ல் என்று சொல்லப்படுகிறது.)

இந்தச் சம்பவம் நடந்த வருடம் கலீபா மன்ஸூர் ஹஜ்ஜுக்கு வந்தவர், மதீனாவிலும் வந்து தங்கினார். அவர் வருகைதந்தால் நகரின் பிரமுகர்கள் நகருக்கு வெளியிலேயே சென்று அவரை வரவேற்கவேண்டும் என்பது சம்பிரதாயம். இவ்விதம் அவரை வரவேற்கச் சென்றவர்களோடு, நகரில் முக்கியஸ்தராக விளங்கிய இமாம் மாலிக் அவர்கள் போகவில்லை. கலீபா தமது மாளிகையில் இறங்கியபின், நள்ளிரவாகிவிட்ட நிலையிலும், அதுவரை தன்னை வந்து கண்டு போகாத இமாம் மாலிக், இப்னு ஸம்ஆன், இப்னு அபீதிஃபு ஆகியோர்களைத் தம்மிடம் அழைத்துவருமாறு உத்தரவிட்டார். இமாம் மாலிக் இந்த உத்தரவைக் கேட்டதும் தங்களுக்கு இறுதிக் காலம் வந்துவிட்டதாகவே முடிவு செய்தார்கள்.

ஏனெனில், கலீபா மன்ஸூரின் வேண்டுகோள்படி. நப்ஸுஸ் ஜகிய்யா சகோதரர்களை அவர்கள் மன்ஸூரிடம் ஒப்படைக்க மறுத்திருந்தார்கள். இரண்டாவதாக, மன்ஸூரிடம் ஜனங்கள் செய்துகொடுத்த விஸ்வாசப் பிரமாணமே செல்லாது என்ற ரீதியில் தீர்ப்புக் கொடுத்துவிட்டார்கள். கலீபாவின் பிரதிநிதியான ஜஃபர் எவ்வளவோ முயன்றும் அந்த முடிவை மாற்ற மறுத்து, கசையடி தண்டனையையும் ஏற்றுக்கொண்டார்கள். இப்போதாவது கலீபா நகருக்கு வருகை தருகையில் அவரை எதிர்சென்று அழைக்கப் போயிருக்கலாம். போகவில்லை. எனவே, மன்ஸூர் தங்கள் தலையைச் சீவ உத்தரவிடத்தான் தங்களை அழைத்துள்ளார் என்று முடிவு கட்டிவிட்டார்கள். உடனே குளித்து, மையித்துக்கு அணிவிக்கும் கபனை அணிந்து கொண்டு, மரணிக்கப்படுமுன் மரணித்தவர்களாக மன்ஸூரின் சபையை நோக்கிச் சென்றார்கள்.

அங்கே மன்ஸூர் முதலில் மற்ற இரண்டு உலமாக்களையும் கண்டு பேசியபின், இமாம் மாலிக் அவர்களுக்குப் பேட்டியளிக்க அவர்களை உள்ளே அழைத்தார். அவர்கள் அவர் சபையுள் வந்தார்கள். யாவரும் செய்யும் வழக்கப்படி அவர்கள் அவர் கையை முத்தமிடவுமில்லை. அவர் அவர்களை நோக்கி, ''அபூ அப்துல்லாஹ், என்ன உங்கள் உடை ஒரு மாதிரியானதாக இருக்கிறது! ஏன் உங்கள் மீதிருந்து 'ஹனூத்தின்' (மையித்துக்கு மேலே தூவும் ஒருவகை வாசனைத் தூள்) மணம் வீசுகிறது?" என்று கேட்டார்.

''எனக்கு இப்படி நள்ளிரவில் நீங்கள் அழைப்பு விடுத்ததும், எனக்கு இது இறுதி நாளாக இருக்கலாம் என்று நானே முடிவு செய்தேன். எனவே, என் இறுதிப் பிரயாணத்துக்கான ஆயத்தங்களுடன், மையித்தின் உடையை உடுத்துக் கொண்டு வந்துவிட்டேன்" என்று இமாமவர்கள் கூறியதும் மன்ஸூர் துடிதுடித்தார். ''ஹா, ஸுப்ஹானல்லாஹ்! அபூ அப்துல்லாஹ், நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இஸ்லாத்தின் தூணை நான் என் கையாலேயா இடித்துத் தள்ளுவேன்!'' என்று கூறி மிகவும் வருந்தினார்.

இமாமவர்கள் தண்டனையடைந்ததைக் கேள்வியுற்று, தாம் மிகவும் வருந்தியதாகவும், அதற்கு நேரில் மன்னிப்புக் கேட்க விரும்பியதாகவும், அதனாலேயே வந்தவுடன் முதல் வேலையாக அவர்களை அழைத்துவர உத்தரவிட்டதாகவும் கலீபா தெரிவித்தார். மேலும், அவர்களை அடிக்க உத்தர விட்ட அதிகாரி ஜஃபரைப் பதவி நீக்கம் செய்து விட்டதாகவும், அவர்கள் எப்படி விரும்புகிறார்களோ அப்படித் தாம் அவரைத் தண்டிக்கத் தயாராக இருப்பதாகவும் மன்ஸூர் இமாமவர் களிடம் தெரிவித்தார். இமாமவர்களோ, அவர்மீது தமக்கு எந்த ஆத்திரமும் இல்லையென்றும், அவர் நபிபெருமானாரின் வமிசத்தைச் சேர்ந்தவர் என்ற ஒரு காரணத்துக்காவது, தாங்கள் அவரை மன்னித்தே தீரவேண்டியதுள்ளதென்றும், மறுமையில் இந்த மகிமைமிக்க குடும்பத்தைச் சார்ந்த ஒரு வரைத் தமது எதிரியாக நிறுத்திக்கொண்டு அவர் முகத்தில் தங்களால் விழிக்க முடியாதென்றும் தெரிவித்தார்கள்.

உடனே கலீபா மன்ஸூர், ''அபா அப்துல்லாஹ், நீங்கள், உயிரோடிருக்கும்வரை ஹாரமைன் (மக்கா, மதீனா) மக்களுக்கு நீங்கள்தான் தலைவராயும் வழிகாட்டியாயு மிருப்பீர்கள். உங்களுக்குத் (தெரியாத்தனமாக) அளிக்கப் பட்ட தண்டனை காரணமாக இங்குள்ளவர்கள் பாதுகாப்புப் பெற்றுவிட்டனர்'' என்று கூறினார். இமாமவர்களோடு நீண்ட நேரம் அளவளாவியபின் அவர் அவர்களைத் தக்க மரியாதையோடு வீட்டுக்கு அனுப்பினார்.

இமாம் அபூ ஹனீபாவை வஞ்சம் தீர்த்தவர், மதீனாவில் தான் செய்து கொடுத்த விஸ்வாசப்பிரமாணத்தைப் புறக் கணித்து, தம் ஆட்சியை நிலைநிறுத்த சகல வழிமுறைகளையும் கையாண்டவர் இமாம் மாலிக்கிடம் மனமாறுதல் கொண்டவ ராக நடந்ததற்குக் காரணமுண்டு. இமாமவர்களை ஜஃபர் துன்புறுத்தியதற்கும் மன்ஸூரின் முழு ஆதரவுமுண்டு. எனினும், வேறு காரணங்களுக்காக அவரைப் பதவிநீக்கம் செய்து விட்டு, இமாமவர்களை இம்சித்ததற்காகவே அவரை நீக்கியதாகக் கூறிவிட்டார். மக்கா மதீனாவாசிகள் தம்மை விரும்பவில்லை என்பதை அவர் அறிவார். எனவே, இமாம்

மாலிக் தமக்கெதிராக எடுத்த நடவடிக்கைகளையெல்லாம் மறந்துவிட்டது போல் காட்டி, அவர்களுக்கு மரியாதைகாட்டிய தன் மூலமும் ஹரமைன்வாசிகளின் அன்பைப் பெற்று விடவும், உலகினர்முன் தம்மை நல்லவர் என்று காட்டிக் கொள்ளவும் முயன்றார். எப்படியோ, கடைசிவரை இமாமவர் களிடம் அவர் பகிரங்கமான அன்பும் மரியாதையும் காட்டியது மட்டும் உண்மையாகும். மேலும், அவர் ஜஃபருக்குப் பதிலாக இமாம் ஹஸனின் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரையே மதீனா வின் நிர்வாக அதிகாரியாகவும் நியமித்தார்.

இந்தத் தடவை ஒரு நாள் இமாமவர்கள் மஸ்ஜிதுந் நபவி யிலிருந்தபோது மன்ஸூர் அவர்களைக் கண்டு பேசினார். அப் போது அவர் தமது குரலை உயர்த்திப் பேசவே, 'நபிபெருமான் சப்தத்துக்குமேல் அதிகமாக உங்கள் குரலை உயர்த்திப் பேச வேண்டாம்!' என்ற கருத்துள்ள வசனத்தை ஓதிக்காட்டி, அவருடைய சப்தத்தை அடக்கிவிட்டார்கள். இமாம் மாலிக் கின் கலாஞானபோதத் திறனையும், மேதையையும், நபிபெரு மானார்மீது அவர்கள் கொண்டிருந்த பவித்திரமான அன்பை யும் கண்டு, உலகிலுள்ள முஸ்லிம்களின் மார்க்க வழிகாட்டி யாக விளங்கக்கூடிய ஹதீஸ்—பிக்ஹு நூல் ஒன்றை ஆக்கித் தரும்படி இவர் கேட்டிருக்கிறார். இதை ஒட்டி வேலை தொடங்கி இமாமவர்கள் பல ஆண்டுகள் கஷ்டப்பட்டு எழுதிய நூல்தான் உலகப் புகழ் பெற்ற 'கிதாபுல் முஅத்தா' ஆகும்.

ஹஜ்ஜுக் காலத்தில் உலகின் பல பாகங்களிலுமுள்ள உலமாக்களெல்லாம் ஹஜ்ஜுக்காக மக்காவில் வந்து கூடுவர். இவர்களில் பலர் மார்க்கத் தீர்ப்பு வழங்குவதிலும் முனைந்து விடுவர். எனவே, அந்தச் சமயங்களில் இமாம் மாலிக் கும், இப்னு அபீ திஃபும் தவிர வேறு யாகும் மார்க்கத் தீர்ப்பு வழங்கக்கூடாது என்று கலீபா உத்தரவிட்டார். இமாமவர்கள் காலமாகும் வரை இதுவே அமலிலிருந்துவந்தது.

ஹிஜ்ரி 158 துல் ஹஜ்ஜு மாதம் ஆறில் கலீபா மன்ஸூர் ஹஜ்ஜுக்கு வந்துகொண்டிருந்தபோது, மக்காவுக்குக்கொஞ்ச தூரத்திலேயேயுள்ள பீர் மைமூனா என்ற இடத்தில் காலமாகி

அங்கேயே அடக்கமானார். அவருடைய மகன் முஹம்மது அல் மஹ்தி கலீபாவானார். இவர் ஹிஜ்ரி 160ல் ஹஜ்ஜுக்கு வந்தார். இவர் மதீனாவை நெருங்கியதும், இமாம் மாலிக் உட்பட நகரிலிருந்த பிரமுகர்கள் இவரை எதிர்சென்று அழைத்துவந்தனர். அவர்களிடை இமாமவர்களைக் கண்ட மஹ்தி, அவர்களுக்கு ஸலாம் சொல்லிக்கொண்டு, அவர்களைக் கட்டியணைத்துத் தமது அன்பைத் தெரிவித்துக் கொண்டார். அச்சமயம் ஹிஜாஸில் கடுமையான பஞ்சம் தலைவிரித்தாடிற்று. அதைக் கலீபாவுக்கு நினைவுபடுத்தக் கருதிய இமாமவர்கள், அவரை நோக்கி. ''அமீருல் மூமினீன், நீங்கள் இப்போது போய்க் கொண்டிருக்கும் புண்ணிய பூமியில் முஹாஜிர், அன்சார் குடும்பத்தினர் வாழுகின்றனர். இவர்கள் மஸ்ஜிதுந் நபவியின் நிழலில் தங்கியிருக்கின்றனர்'' என்று கூறி வறுமையை சமிக்ஞையாகக் காட்டினார்கள். உடனே மஹ்தி அதைப் புரிந்துகொண்டு இமாமவர்களிடம் இருபத்தைந்து லட்சம் திர்ஹம்களை ஒப்படைத்து அதை அவர்களிடம் பங்கிட்டு விடுமாறு கூறினார். அதை ஏற்றுக்கொண்ட இமாமவர்கள் தங்களுடைய நம்பிக்கைக்குரிய மாணவர்கள்மூலம் அதைப் பஞ்சத்தில் வாடியவர்களிடை வினியோகித்து விட்டார்கள்.

இதன்பின் மஹ்தி தமது சொந்தத் தூதரான ரபீஉ என்பவரிடம் மூவாயிரம் தீனார்களை அனுப்பி, அதை இமாமவர்களிடம் கொடுத்து, அவர்களைப் பக்தாதுக்கு அழைக்குமாறு கூறி அனுப்பினார். அந்தப் பணப்பையை இமாமவர்கள் முன்னர் வைத்த ரபீஉ கலீபாவின் அழைப்பை அவர்களிடம் தெரிவித்தார். ''ரபீஉ, நீர் கொணர்ந்த பணப்பையை வேண்டுமானால் திரும்ப எடுத்துச்சென்று உங்கள் எஜமானரிடம் ஒப்படைத்துவிடும். நான் மட்டும் பக்தாத் வரமுடியாது'' என்று கூறிவிட்டு, ''அவர்கள் மட்டும் மெய்யாகவே தெரிந்து கொண்டிருப்பார்களானால் மதீனாவே அவர்களுக்குச் சிறந்த புண்ணிய பூமியாகும்" என்ற ஹதீஸையும் இமாமவர்கள் ஓதிக் காட்டினார்கள்.

இந்தச் செய்தியை அறிந்த கலீபா மஹ்தி, அப்படியானால் அவர்களைத் தமது சபைக்காவது அழைத்துவர வேண்டும் என்று கூறி அவர்கள் ஏறிவருவதற்காக உயர் ஜாதிக் குதிரை ஒன்றையும் அனுப்பினார். அதில் ஏறிக்கொண்டு அவர்கள் கலீபாவின் சபைக்கு வரவேணும் என்று அந்தத் தூதர் மீண்டும் வந்து வேண்டியபோது, ''நான் மதீனாவில் எங்குமே வாகனத்தில் ஏறிப் போக மாட்டேன். ஏனெனில், இதே தெருக்களில்தான் நபி பெருமான் (ஸல்) அவர்கள் கால் நடையாகவே நடந்து சென்றுள்ளார்கள்'' என்று பதிலளித்து விட்டார்கள்.

பின்னர், கலீபா மஹ்தி இமாமவர்களின் கலாஞான வகுப்பில் வந்திருந்து அவர்கள் பாடம் நடத்துவதைக் கேட்டுச் சென்றார் என்று சொல்லப்படுகிறது. ஹிஜ்ரி 169-ல் இந்த மஹ்தி வேட்டைக்குச் சென்ற இடத்தில், விபத்துக்குள்ளாகி மாண்டு விட்டார். உடனே இவருடைய மூத்த புதல்வர் மூஸா என்றஹாதி கலீபாவாகி இரண்டாண்டுகளுக்கும்குறைவாகவே ஆட்சி செய்தார். இவருக்குப்பின் உலகப் புகழ்பெற்ற கலீபா ஹாரூனர் ரஷீது 170-ல் கலீபாவாகப் பட்டமேற்றார். இவருடைய நேர்மையும், அன்பும், ராஜதந்திரமும், அறிவாற்றலும் தான் உலகிலேயே இவருக்குத் தனியானதோர் இடத்தைப் பெற்றளித்துள்ளன. பட்டமேற்ற ஆண்டிலேயே இவர் ஹஜ்ஜு செய்வதற்காக ஹிஜாஸ் வந்தார். இவர் மதீனா வந்தபோது நகரப் பிரமுகர்கள் நகருக்கு வெளியிலும் நடந்தேசென்று, இவரை வரவேற்றனர். இமாமவர்கள் நகருக்கு வெளியில் வந்து, ஒரு வாகனத்திலேறிக் கொண்டு போய் ஹாரூனை வரவேற்றார்கள். இமாமவர்களைக் கண்டதும் ஹாரூன் மிகவும் மகிழ்ச்சியோடு அவர்களருகில் சென்று, ''இமாமவர்களே, நீங்கள் கொடுத்துவரும் விளக்கங்களெல்லாம் எழுதப்பட்டு அடிக்கடி எங்களுக்கு வருகின்றன. நாங்கள் ஆவலோடு அவற்றைப் படிக்கிறோம். எங்கள் குடும்பத்தார் யாவரையுமே அவற்றைப் படிக்கும்படி உத்தரவிட்டுள்ளோம்'' என்று கூறினார். பின்னர், ''ஆமாம், அந்த விளக்கங்களில் ஹஜ்ரத் அலீ (ரலி), ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின்

'ரிவாயத்து' ஒன்றைக்கூடக் காணவில்லையே, யாது காரணம்?'' என்று வினவினார். ''இந்த இரண்டு பெரியார்களும் எங்கள் நகரில் இருக்கவில்லையே, அதுதான் காரணம்'' என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

ஹாரூன் மதீனா வந்த சமயம் இமாமவர்களின் 'முஅத்தா' பூர்த்தியாகி விட்டது. இதைக் கேள்வியுற்ற கலீபா இமாமவர்களை அழைத்து, அதைத் தமது சபையில் விளக்கச்செய்ய வேண்டுமென்று நினைத்தார். எனவே, 'முஅத்தா'வை எடுத்துக்கொண்டு அவர்களை அங்கே வருமாறு அழைத்தார். அது கேட்ட இமாமவர்கள், ''மனிதர்கள்தான் கல்விஞானத்தைத் தேடி வரவேண்டுமே யன்றி, கல்விஞானம் மனிதர்களைத் தேடிப் போகாது" என்று கூறிவிட்டார்கள். அப்படியாயின் இமாமவர்கள் வெறுமனேயாவது தமது சபைக்கு வந்துபோக வேண்டும் என்று அவர் வேண்டுகோள் விடுத்தார். அதை மறுக்க முடியாத இமாமவர்கள் அவருடைய சபைக்குப் போனார்கள். அங்கே கலீபாவோடு வந்திருந்த இமாம் அபூ யூஸுபும், கலீபாவின் இரண்டு புதல்வர்களான அமீனும். மாமூனும் அவரோடு அமர்ந்திருந்தனர். இமாமவர்கள் வந்ததும் கலீபா, அவர்களைத் தங்கள்அருகேஅமர்த்தி அவர்களோடு அளவளாவினார். அச்சமயம், நபிபெருமானார் 'பித்ரா' அளந்த மரக்காலின் கனம் என்ன என்ற சர்ச்சை யுண்டாயிற்று. இமாம் அபூ யூஸுப் ஆறுராத்தல் என்றார்கள். இமாம் மாலிக் ஐந்து ராத்தல் என்றார்கள். நபிபெருமானார் பித்ரா அளந்த மரக்கால் அப்போது மதீனாவில் ஓரிடத்தில் இருந்தது. அதை எடுத்து நிறுத்துப் பார்க்கச் சொல்லவே, அது சரியாக ஐந்து ராத்தலே இருக்கக்கண்டனர். பின்னர், கலீபாவின் வேண்டுதல்படி, அபூ யூஸுப், இமாம் மாலிக்கிடம் ஒரு கேள்வி கேட்டார்கள். அதாவது, ''ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டியவன், தன் சட்டையணிந்த கையினால் மானுடைய சட்டிப்பல்லை அடித்து உடைத்துவிட்டால் அவன் கொடுக்கவேண்டிய அபாரதமென்ன?" என்று. ''ஓர் ஆடு அறுத்துக் கொடுக்க வேண்டும்'' என்று இமாம் மாலிக் பதிலளித்தார்கள். உடனே அபூ யூஸுப் கேட்டார்கள், ''இஹ்ராம் கட்டியவன் சட்டை

போடுவாரு? மானுக்குச் சட்டிப்பல்தான் உண்டா?" என்று, இமாம் மாலிக் பதிலளித்தார்கள். ''அமீருல் மூமினீனுடைய சபையில் நீங்கள் ஒழுங்கான கேள்வி கேட்பீர்கள் என்று எண்ணித்தான் பதிலளித்தேன். எனினும், இஹ்ராம் கட்டத் தையலில்லாத துணியே இல்லாதவன், வேறு நிவர்த்தியற்ற நிலையில், சட்டை போட்டுக்கொள்வது ஆகுமல்லவா! மனிதன் கையில் ஆருவது விரலையும், அதிகமான உறுப்புக்கள் சில வற்றையும் படைக்கும் இறைவன் மானுக்குச் சட்டிப்பல்லைப் படைப்பது பெரிய காரியமா! இவ்விதம் இவ்விரண்டும் உண்டாக இடமிருப்பதால்தான் நான் அதற்கு அப்படி விடை தந்தேன்."

இமாம் அபூ யூஸுஃப் இப்படிக் கேள்வி கேட்டதால் இமாம் மாலிக்கின் மேதையை அவர்கள் அறிந்திருக்கவில்லையோ, அவர்கள்மீது பொருமை கொண்டார்களோ என்று யாரும் எண்ணிவிடக்கூடாது. இமாம் மாலிக்கிடம் அவர்கள் அதிக மும் மதிப்பு வைத்திருந்தார்கள். அவர்களுடைய மேதையைக் கலீபாவுக்கு உணர்த்துவதற்காகவே அவர்கள் இவ்விதம் அவர்களிடம் வினு விடுத்தார்கள்.

இதன் பின்னர் கலீபா ஹாரூன் மறு நாள் இமாமவர் களின் கலாஞான வகுப்புக்குப் போய் அவர்களுடைய 'முஅத்தா'வுக்கான விளக்கத்தைக் கேட்க நாடினுர். அவர் வருவதால் மற்ற மாணவர்களும், பொதுஜனங்களும் அங்கே வராமலிருந்தால் நலமாகும் என்று அவர் தெரிவித்தார். இமா மவர்கள் அதற்கு இணங்கவில்லை. ஹதீஸ் வகுப்பு யாவருக்கும் பொதுவானது, அதில் இப்படி ஒரு நிமிடம்கூட மற்றவர்கள் வந்து அமர்வதைத் தாம் தடுக்க முடியாது என்று கூறிவிட் டார்கள். அதை ஏற்றுக்கொண்ட கலீபா, மறுநாள் குறித்த சமயம் இமாமவர்களின் ஹதீஸ் வகுப்புக்குச் செல்வதற்காகத் தம்முடைய வாகனம் முதலியவைகளை ஆயத்தம் செய்யுமாறு அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார். அதைக் கேட்ட இமாமவர் கள், ''அமீருல் மூமினீனே, ''கல்வி தேடிப் பணிவுடன் செல்பவர்களுக்கு அமரர்கள் தங்கள் இறக்கைகளைத் தாழ்த்தித்

தருகின்றனர்" என்று எம்பெருமானார் அருளிய திருமொழியை ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு உமர் அறிவித்துள்ளார்கள். எனவே, உங்கள் வாகனம் முதலிய ஆடம்பரங்களையும் கொஞ்சம் ஒதுக்கிவிட்டு நடந்தே வருவது சிறப்புடைய செய லாகும்; அதனால் உண்மையான பெருமைக்கும் உடையவர் களாவீர்கள்'' என்று கூறினார்கள். கலீபா அதையும் ஏற்றுக் கொண்டார்.

மறுநாள் இமாமவர்களின் கலாஞான மன்றத்தில் பாடம் தொடங்குமுன்னமேயே, வழக்கம்போல் தூபம் முதலிய வாசனைகள் பரிமளிக்க, யாவரும் அமர்ந்திருந்தனர். கலீபா தமது இரண்டு புதல்வர்களோடும் சபையில் நுழைந்து, இமாம வர்களுக்குப் பக்கமாக இருந்த உயரமான ஆசனம் ஒன்றில் அமரலானார். இதைக் கண்ட இமாவர்கள் அவரை வினயத் தோடு விளித்து, ''அமீருல் மூமினீன், ஜனங்கள் பணிவை யும், அடக்கத்தையும் விரும்புவார்கள்" என்று கூறவே அவர் யாவரோடும் வந்து அமர்ந்துகொண்டார்.

'மு அத்தா'வின் விளக்கமான பாடம் நடந்தது. ''இமாம வர்களே, நீங்களே அதைப் படித்து விளக்கம் தாருங்கள்'' என்று அவர் இமாமவர்களிடம் வேண்டினார். அவர்களோ, ''அது வழக்கத்துக்கு விரோதமாகும்'' என்று கூறிவிட்டு, எதிரிலிருந்த மயீன் பின் ஈசா என்ற மாணவரை சமிக்ஞை செய்ததும், அவர் படித்துக்கொண்டு போனார். இமாமவர்கள் விளக்கம் கொடுத்துக் கொண்டே வந்தார்கள். கலீபாவும், அவர்களுடைய புத்திரர்களிருவரும் அதை மிகவும் பயபக்தி யுடன் அமர்ந்து கேட்டனர்.

இக்காலையில் உலகம்முழுமையிலுமுள்ள உலமாக்கள் பலர் ஹஜ்ஜுக்கு வந்தவர்கள் மதீனாவிலும் வந்து குழுமினர். இதைப் பயன்படுத்திக் கொள்ள எண்ணிய கலீபா ஹாரூனர் ரஷீது உலமாக்கள் அனைவரையும் ஒரு சபையில் கூட்டி, அங்கே இமாம் மாலிக்கை, 'முஅத்தா'விலிருந்து பாடம் நடத்த ஏற்பாடு செய்தார். இமாமவர்களும், ஒவ்வொரு 'மஸ்அலா'வாக விளக்கிக்கொண்டு வந்தார்கள். கூடியிருந்த

உலமாக்கள் அனைவரும் எந்த ஆட்சேபமும் எழுப்பாமல், மிகுந்த மரியாதையோடு அதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். இமாமவர்கள் கொடுத்துவந்த விளக்கம் 'பிக்ஹு'க் கலையின் கடல்தான் தன் அலைகளைக் கரையில் மோதுகிறதோ என்று எண்ணும் அளவுக்கு அற்புதமானதாக இருந்தது. விளக்கம் முடிந்ததும், சபை கலைந்து இமாமவர்கள் எழுந்து தங்கள் இருப்பிடம் சென்றுவிட்டார்கள். உடனே, ஹாருனர் ரஷீது, மற்ற உலமாக்களை நோக்கி, ''ஹே ஹிஜாஸ், இராக் புகஹாக்களே, இமாம் மாலிக் அவர்கள் நம்முன் விளக்கிய 'மஸ்அலா'க்களில் உங்களுக்கு ஆட்சேபமுண்டா?" என்று கேட்டார். உலமாக்கள் அனைவரும் ஒரே ஒரு 'மஸ்அலா' வைத் தவிர மற்றவற்றில் தங்களுக்கு ஆட்சேபமில்லை—அபிப் பிராயபேதமும் இல்லை—என்று கூறிவிட்டனர். உடனே, கலீபா, இமாமவர்களை மீண்டும் சபைக்கு அழைத்துவருமாறு கூறினார். அவர்கள் வந்துசேர்ந்ததும், ''முஅத்தாவிலிருந்து நீங்கள் எடுத்து விளக்கிய மஸ்அலாக்களில் ஒன்றை மட்டும் இந்த உலமாக்கள் ஏற்க மறுக்கின்றனர். நான் அதையும் ஏற்கிறேன். எனவே, அதற்கும் திரு குர்ஆன், ஹதீஸிலிருந்து சரியான ஆதாரம் காட்டிவிடுங்கள்" என்று அவர்களிடம் கூறினார். உடனே இமாமவர்கள் அந்த 'மஸ்அலா'வுக்கும் திரு குர்ஆனிலிருந்தும், ஹதீஸிலிருந்தும் ஆதாரங்காட்டி அந்த உலமாக்களைத் திருப்திப் படுத்திவிட்டார்கள்.

இமாமவர்களின் 'முஅத்தா'வின் பெருமையைக் கண்டு கொண்ட ஹாருனர் ரஷீது, அதையே சகல பகுதிகளிலுமுள்ள முஸ்லிம்கள் ஷரீஅத்தின் சட்ட திட்டமாக ஏற்றுக் கொள்வதற் கான நூலாக ஆக்கி, கஃபத்துல்லாஹ்விலும் அதை வைப்ப துடன், உலகின் பல பகுதிகளுக்கும் அதிலிருந்து பிரதி களெடுத்து அனுப்பிவிடலாம் என்று தாம் நினைப்பதாக அவர் களிடம் தெரிவித்தார். இமாமவர்கள் அதற்கு இணங்க மறுத்துவிட்டார்கள், (ஹாரூனுக்கு முந்திய கலீபாக்கள் இவ்விதம் இமாமவர்களிடம் வேண்டுகோள் விடுத்ததாகச் சில நூற்களில் காணப்படுகிறது. ஆனால், இந்தப் பாரதூரமான

நூலை இமாமவர்கள் முடித்தது ஹாரூன் பட்டமேற்ற சமயத்தில்தான் என்பது பல சம்பவங்களால் உறுதியாகிறது.)

மதீனாவின் மஸ்ஜித் நபவியில் நபிபெருமான் (ஸல்) அவர்கள் நின்று குத்பா ஓதிய, மரத்தாலாகிய மிம்பரில் முதல் மூன்று படிகள்தாம் இருந்தன. பின்னர் முஆவியா தமது ஆட்சிகாலத்தில் அத்துடன் இன்னும் சில படிகளைச் சேர்த்துக் கட்டிவிட்டார். இதைக் கண்ட கலீபா ஹாரூனர் ரஷீது முஆவியா அதிகமாகக் கட்டிய படிகளை இடித்துத்தள்ளி விட்டு, நபிபெருமானார் காலத்திலிருந்த மூன்று படிகளைமட்டும் வைத்து விடலாம் என்று எண்ணி இமாமவர்களிடம் யோசனை கேட்டார். அதற்கு இமாமவர்கள், "அவ்வாறு செய்து விடாதீர்கள்! ஏனெனில், இந்த மிம்பரின் மரப்பகுதிகள் மிகவும் சிதிலமாகி இருக்கின்றன. இந்த நிலையில் அதை மராமத்து வேலைக்காக இப்படியும் அப்படியும் அசைத்தால் பழைய படிகள் உடைந்து போகலாம். மேலும், நபிபெருமான் (ஸல்) அவர்கள் காலமானபோது இந்த மிம்பரும், விரிப்பும், குவளையும், அசாவெனும் தடியும், பெருமானாரின் உரோமங்கள் சிலவும் இருந்தன. இன்றோ, இத்த மரப்படிகளைத் தவிர மற்ற யாவையும் இந்த மதீனா இழந்துவிட்டது. எஞ்சியுள்ள இந்த மரப் படிகள் பெரியனவாய் இருப்பதால் இங்கிருந்து இவற்றை யாரும் நகர்த்திச் செல்லவில்லை. இந்த நிலையில் நீங்கள் இவற்றை மீண்டும் சிறிதாக்கினால், சிறிது நாட்களுக்குள் இந்தப் புண்ணியமிக்க மிம்பர் மஸ்ஜித் நபவியை விட்டும் வெளியாகி எந்த ஆட்சியாளருடைய கொலுமண்டபத்தையாவது அலங்கரிக்கப் போய் விடும்" என்று விளக்கினார்கள். உடனே, கலீபா மிம்பரை மராமத்துப் பார்க்கும் தமது எண்ணத்தையே கைவிட்டுவிட்டார்.

ஹாரூனர் ரஷீது இமாமவர்களிடம் மிகுந்த மரியாதையும் மதிப்பும் வைத்திருந்ததுபோலவே, இமாமவர்களும் அவருக்கு நல்லபடியான உபதேசங்களை அருளிவந்தார்கள். பின்னர் இமாமவர்கள் பக்தாதிலிருந்த ஹாரூனுக்கு நீண்ட கடிதம் உருவில் பல உபதேசங்களை எழுதி அனுப்பினார்கள். அதில் அவர் ஸுன்னத்தைப் பின்பற்றி ஒழுகவேண்டிய அவசியத்தை

வற்புறுத்தியிருந்தார்கள். (இந்தக் கடிதம் சமீபத்தில் எகிப்தில் அச்சாகியுள்ளது. இதன் உர்து மொழிபெயர்ப்பு லாகூரில் வெளியாகியுள்ளது.)

## மறைவும், குண நலனும்

இமாமவர்கள் தங்கள் எண்பத்தோராம் வயதில் மிகவும் தளர்ச்சியடைந்தவர்களாக ஆகிவிட்டார்கள். அதனால் அவர்கள் மஸ்ஜிதுக்கு வந்து தொழவோ, சுப, அசுப காரியங்களில் கலந்துகொள்ளவோ முடியாதவர்களாக இருந்தார்கள். இது பற்றி ஜனங்களுக்குக் குறைதான். ''நீங்கள் ஏன் எதிலும் கலந்து கொள்வதில்லை?'' என்று யாரேனும் கேட்டால், ''நான் என் தள்ளாமையை யாரிடமும் சொல்லிக்கொள்வதில்லை'' என்று கூறிவிடுவார்கள். இமாமவர்களின் நெருங்கிய மாணவரான மஃன் பின் ஈஸா என்பவர் இமாமவர்களுக்குச் சேவை செய்யும் பொறுப்பைத் தாமே ஏற்று, இரவு பகலாக அவர்களைக் கவனித்து வந்தார். அவர்கள் எழுந்து நடக்க விரும்பினால், இவரைப் பற்றிப்பிடித்துக் கொண்டே நடப்பார்கள். இந்த வயதிலும் அவர்கள் பாடபோதனை செய்வதை மட்டும் விடாது செய்து வந்துள்ளார்கள்.

கடைசியில், சில நாட்கள் அவர்கள் படுத்த படுக்கையாகவே இருந்து, ஹிஜ்ரி 179 ரபீஉல் அவ்வல் மாதம் பதினான்காம் நாள் அதிகாலை வேளையில் அவர்களுடைய பரிசுத்தமான ஆவி அவர்கள் பூத உடலைவிட்டுப் பிரிந்து, தன்னைச் சிருஷ்டித்த இறைவனைச் சந்திக்கப் போய்விட்டது. அப்போது அவர்கள் வயது எண்பத்து ஆறு. சுமார் ஐம்பத்து ஆறு ஆண்டுகள் இமாமவர்கள் எம்பெருமானாரின் நடைமுறையை அடிப்படையாகக் கொண்டே போதனையை நடத்தி இஸ்லாமிய உலகுக்குச் சிறப்பான சேவை செய்துள்ளார்கள்.

இமாமவர்களின் பூத உடல் நல்லடக்கஞ் செய்யப்பட்டபோது ஒரு மாபெரும் ஜனசமுத்திரமே திரண்டு வந்திருந்தது.

மதீனாவின் நிர்வாக அதிகாரியான அப்துல்லாஹ் ஹாஷிமி என்பவரும் வெறுங் காலுடன் வந்திருந்து ஜனாஸாவைச் சுமப்பதில் தோள் கொடுத்தார். ஹஜ்ரத் ஆயிஷா நாயகி, ஹஜ்ரத் உதுமான் (ரலி), இமாம் ஹஸன் (ரலி), ஹஜ்ரத் பாத்திமா, ஹஜ்ரத் ஹப்ஸா போன்ற உத்தம சிரேஷ்டர்களின் பூத உடல் நல்லடக்கஞ் செய்யப்பட்டுள்ள ஜன்னத்துல் பகீயில் இமாமவர்களின் பூத உடலும் நல்லடக்கஞ் செய்யப்பட்டது.

இமாமவர்கள் காலமானபின்னர் பிஷ்ரிப்னு பக்ரின் என்ற பெரியார் அவர்களைக் கனவில் கண்டு, ''இமாமவர்களே, உங்களை அல்லாஹ் எவ்விதம் நடத்தினான்?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''அல்லாஹ் என் பிழைகளை மன்னித்தான்' என்று பதிலளித்தார்கள். எந்த அமலுக்காக என்று கேட்கப் பட்டபோது, ஜனாஸாவைக் காணுந்தோறெல்லசம், ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்கள் 'ஸுப்ஹானல்லாஹில் ஹையுல் கையூமில்லதீ லாயமூத்து' என்று ஓதுவார்கள். அதுபோல நானும் ஓதியதன் மகிமையால்" என்று பதிலளித்தார்கள்.

இமாமவர்கள் உயரமான உருவமும், சிகப்பும் வெண்மையும் கலந்த நிறமும், அகன்ற நெற்றியும், பெரிய கண்களும், எடுப்பான மூக்கும் உடையவர்கள். அவர்களுடைய தாடி நீண்டிருந்தது. அளவோடு வளர்த்த மீசையிருந்தது. தலை முடி குறைவாகவே இருந்தது.

இமாமவர்கள் சுத்தமான உயரிய உடையையே விரும்பி அணிவார்கள். ''நீங்கள் விலையுயர்ந்த உடைகளையே அணிகிறீர்களே!" என்று யாரேனும் வினவினால், ''ஆம், இந்த நகரத்து உலமாக்களைப்போலவே நானும் விலையுயர்ந்த உடைகளை உடுக்கிறேன்'' என்று பதிலிறுத்துவிடுவார்கள். தங்களுக்குத் தேவையான உடைகளை அவர்கள் மிகுந்த கவனமாகத் தயாரிப்பார்கள். அதன், மெர்வ் ஆகிய நகரங்களிவரும் விலை உயர்ந்த துணிகளையே அவர்கள் தேர்ந்தெடுப்பார்கள்.

இமாமவர்கள் உயர்தரமான அத்தர்களையும் அதிகமாகப் பூசிக் கொள்வார்கள். தெருவில் அவர்கள் நடந்து சென்றால், அவர்கள் போனபின்னும் நீண்ட நேரம் அந்த மணம் கமழ்ந்து கொண்டிருக்கும், அவர்கள் இருக்குமிடத்தில் வாசனை வத்தி கள் புகைந்துகொண்டிருக்கும். அவர்கள் நீண்ட குஞ்சம் விட்டுத் தலைப்பாகை கட்டுவார்கள். அந்தக் குஞ்சத்தை வலப்பக்க, அல்லது இடப்பக்கத் தோள்மீது தூக்கிப் போட்டுக் கொள்வார்கள். தைலஸான் என்ற விலை உயர்ந்த சால்வை யையும் அவர்கள் மேலே போர்த்துக்கொள்வதுண்டு. அவர் களுடைய விரலில் வெள்ளி மோதிரம் ஒன்று கிடந்தது. அதில் பதிக்கப்பட்ட கறுப்புக் கல்லில் 'வ நிஃமல் வகீல்' என்ற எழுத் துக்கள் செதுக்கப்பட்டிருந்தன.

இமாமவர்கள் பிரபல ஸஹாபியான, ஹஜ்ரத் அப்துல்லா ஹிப்னு மஸ்ஊதின் வீட்டையே விலைக்கு வாங்கி அதில் வாழும் பாக்கியம் பெற்றார்கள். மேலும், இமாமவர்கள் கலாஞான போதமளித்த தலமாக விளங்கியது ஹஜ்ரத் உமர் (ரலி) அவர் கள் வாழ்ந்த இல்லமாகும். அங்குதான் இமாமவர்களின் 'முஅத்தா' முதலிய நூற்கள் உருவாயின.

இமாமவர்கள் காலையில் ஸுப்ஹுத் தொழுதபின் சூரியோ தயம்வரை பல வஜீபாக்களையும், ஔராதுகளையும் ஓதிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் வெளியில் வந்ததும் பலரும் அவர்களைக் காண வருவார்கள். சிறிது நேரம் யாவருடைய சுக நலங்களையும் விசாரித்து அளவளாவுவார்கள். பின்னர் கலாஞானவகுப்பு நடத்த விரைவார்கள், இமாமவர்கள் கூறும் ஹதீஸ்களை எழுதிவைக்கும் பணியை இப்னு ஹபீப் செய்து வந்தார். சபையில் எழுந்து நின்று படிக்கும் பணியைப் பெரும்பாலும் மஅன் பின் ஈஸா, யஹ்யா பின் ஸலாம் ஆகிய இருவரும் செய்துவந்தனர். இரவில் பெரும் பகுதியை இமாம வர்கள் வணக்கத்திலேயே கழிப்பார்கள்; திரு குர்ஆனை ஓது வார்கள். இமாமவர்கள் வெள்ளிக்கிழமை இரவு முழுவதும் இபாதத்திலேயே மூழ்கிவிடுவார்கள் என்று அவர்களுடைய மகள் தெரிவித்துள்ளார்.

நபிபெருமான் (ஸல்) அவர்களிடம் இமாம் மாலிக் மிகுந்த பயபக்தியுடையவர்களாக இருந்தார்கள். பெருமானாரின் பெயரை உச்சரிக்கும்போதுகூட அவர்கள் குரல் கம்மும். மஸ்ஜித் நபவியில் 'ரௌலா அன்வர்' என்றோர் அறையுண்டு. அதில் அமர்ந்துகொண்டு யாரும் இரைந்து பேசுவதை அவர்கள் அனுமதிப்பதில்லை. அதனால், பெருமானாரையே அவமதிப்பதாகும் என்று சொல்வதுண்டு. அவர்களிடம் எத்தனையோ அருமையான குதிரைகளும், கோவேறு கழுதைகளும் இருந்தும், எம்பெருமானாரின் திருப்பாதம் பட்ட அந்தப் புனித நகருள் எந்த வாகனத்தின்மீதும் அவர்கள் சவாரிசெய்து போனதே இல்லை. நபிபெருமானாரின் ஹதீஸ்களைத் தகாத இடங்களிலோ, அவசர அவசரமாகவோ, இரைச்சல் போட்டோ, நடந்துகொண்டோ பாடம் நடத்தவே மாட்டார்கள். அவர்கள் நபிபெருமானாரை அடிக்கடி தங்கள் கனவில் கண்டுவந்துள்ளார்கள்.

இதுபோன்றே மதீனாமீதும் அவர்கள் அளப்பரிய அன்பு கொண்டிருந்தார்கள் ஹஜ்ஜுக்காகவன்றி அவர்கள் மதீனாவை விட்டு எங்கும் போவதே இல்லை. ஆட்சியாளர்கள் அவர்கள் எவ்வளவோ ஆசை வார்த்தை காட்டிப் பக்தாதுக்கு அழைத்தும் அவர்கள் மதீனாவை விட்டு வெளிப்பட முடியாது என்று கூறிவிட்டார்கள்.

விருந்தோம்பலில் சிறந்த அரபிகளிடை இமாமவர்களின் விருந்தோம்பல் பலவகையிலும் சிறப்பு வாய்ந்ததாகும். விருந்தினருக்கு விசேஷமான உணவு வகைகளைத் தயாரித்து வைத்துத் தங்கள் கையாலேயே பரிமாறி உபசரிப்பார்கள். இமாமவர்களின் விருந்தோம்பலைப்பற்றி இமாம் ஷாபியீ பெரிதும் புகழ்ந்து பேசியுள்ளார்கள்.

இமாம் அபூ ஹனீபாவைப் போலவே, இமாம் மாலிக்கும் பெரிய கொடை வள்ளலாக இருந்தார்கள். உலகின் பல பாகங்களிலுமிருந்து ஹஜ்ஜுக்கு வரும் ஆட்சியாளர்கள், பிரபுக்களெல்லாம் இமாமவர்களுக்குப் பெருந்தொகை அன்பளிப்

பாகக்கொடுப்பதுண்டு. அவைகளை உடலே உலமாக்களுக்கும், ஏழைகளுக்கும் பங்கிட்டு விடுவார்கள். ஒருசமயம் அவர்களுடைய லாயத்தில் நின்ற குதிரையென்றின் சிறப்பைப்பற்றி இமாம் ஷாபியீ, அவர்களிடம் புகழ்ந்து பேசியபோது அந்தக் குதிரையை அவர்களுக்கே அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டார்கள். தங்களுடைய மாணவர் பலருக்குக்கூட அவர்கள் ஆண்டுதோறும் உதவித்தொகை அனுப்பிவந்துள்ளார்கள்.

கத்திமுனையிலும் சத்தியத்தையே கூறிய அவர்களுடைய மனஉறுதியையும், எழுபது கசையடிகள் பட்ட பின்னரும் உண்மையையே பிரகடனம் செய்த இயல்பையும், கலீபா மன்ஸூர் மரண தண்டனை விதிப்பாரோ என்று எதிர்பார்த்த சமயம் கபன் துணியுடுத்து அவரின் சபைக்குச் சென்றதையும் எண்ணிபபார்த்தால் அவர்களுடைய மன உறுதி எத்தகையது என்பது விளங்கும். இத்தகைய உறுதிகொண்ட இமாமவர்கள், ஒரு நாள் ஹதீஸ் போதனு மன்றத்துக்குப் புறப்படும் போது அவர்கள் காலில் அணிந்த மேஜோடு (ஸ்டாக்கிங்ஸ்)க்குள் தேள் ஒன்று இருந்திருக்கிறது. அதைக் கவனியாமல் அவர்கள் தங்கள் பீடத்தில் அமர்ந்து பாடம் நடத்திய சமயம் அந்தத் தேள் கொட்ட ஆரம்பித்து விட்டது. சபையின் ஒழுங்கு முறையை எண்ணி அச்சமயம் தங்கள் வேதனையைக் காட்டிக் கொள்ளவோ, அவ்விடம்விட்டு எழுந்துபோகவோ முடியாதவர்களாக அங்கேயே அமர்ந்து வெகு பொறுமையுடன் பாடத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பாடம் முடிக்குமுன் அந்தத் தேள் அவர்களைப் பல தடவை கொட்டிவிட்டது, சபை கலைந்தபின்னரே, அதை அப்புறப் படுத்திவிட்டு, அங்கிருந்த அப்துல்லாஹிப்னு முபாரக் என்பவர்களிடம் அதைத் தெரிவித்தார்கள்.

இமாமவர்கள் மன்னிக்கும் பண்பிலும் சிரேஷ்டமானவர்களாகவே நடந்துகொண்டார்கள். தம்மை எழுபது கசையடி அடிக்க உத்தரவிட்டு, ஒட்டகத்தின்மீது ஏற்றி ஊர் சுற்ற வைத்த ஜஃபரையே அவர்கள் மனப்பூர்வமாக மன்னித்துவிட்டார்களன்றோ!

கற்றோரிடமும், அறிஞர்களிடமும் இமாமவர்கள் அதிக மரியாதை காட்டிவந்துள்ளார்கள். தங்கள் சபையில் உயர்ந்த பீடமொன்றில் அமர முயன்ற கலீபா ஹாரூனர் ரஷீதைக் கீழே இறங்கி அமரச் செய்த இமாமவர்கள் ஒரு சமயம் இமாம் அபூ ஹனீபா தங்கள் சபைக்கு வந்தபோது தாங்கள் மேலே போர்த்திருந்த 'தைலஸா' என்ற விலை உயர்ந்தபோர்வையை எடுத்துக் கீழே விரித்து அதன்மீது அவர்களைச் அமரச்செய்து மரியாதை காட்டினார்கள். இதுபோன்றே, தமது சபைக்கு வந்த ஸுஃப்யானுத் தௌரிக்கும் மரியாதைகாட்டி வரவேற்றார்கள். தங்கள் சீடர் முஹம்மத்திஸ் கஃனபி தமது ஊரிலிருந்து மதீனா வருகிறார் என்று தெரிந்ததும், இமாமவர்கள் தங்கள் சீடர்களையும் அழைத்துக்கொண்டு போய் அவரை எதிர் கொண்டு வரவேற்றார்கள். எகிப்திலிருந்த தமது மாணவர் அப்துர் ரஹ்மானுக்குக் கடிதம் எழுதும் போதெல்லாம் அவர் பெயரைக் குறிப்பிடாமல், 'பகீஹு மிஸ்ர்' என்றே எழுதுவார்கள்.

## தீர்ப்புகள்

இமாமவர்கள் இத்தனை பெரிய அறிவுக் கடலாக இருந்தும் ஜனங்கள் தம்மிடம் கொண்டுவரும் எந்தப் பிரச்சினைக்கும் இலகுவில் தீர்ப்பளித்துவிட மாட்டார்கள். முதலில் இமாமவர்கள், 'இது அவ்வளவாக எனக்குத் தெரியாதே!' என்றுதான் பதிலளிப்பார்கள். தங்களை விடப் பெரியவர் யாராவது தீர்ப்பளிக்கட்டும் என்று கூறுவார்கள். சொல்லித்தான் ஆகவேண்டும் என்றிருப்பின் மிகுந்த நிதானமாகவும், ஆராய்ச்சியுடனும் கூடிய தீர்ப்பை வழங்குவார்கள். "இமாமவர்கள் எனக்குத் தெரியாதே என்று கூறிய சொற்களை மட்டும் திரட்டினாலே அவை ஒரு பெரிய நூலாக ஆகிவிடும்" என்று அவர்களுடைய மாணவர் இப்னு வஹப் கூறியுள்ளார்.

வெகு தொலைவிலிருந்தெல்லாம் பல பிரச்சினைகளுக்கு ஃபத்வாக்கள் கேட்டு எழுதுவார்கள். இமாமவர்கள் அவற்றுக்குப் பதிலளிக்கப் பெரிதும் தயங்குவார்கள். ஒரு சமயம்

ஒருவர் இமாமவர்களிடம் ஒரு பிரச்சினைக்குப் பதில் நாடிய போது, ''இதற்குச் சரியான பதில் எனக்குத் தெரியாது" என்று பதிலளித்துவிட்டார்கள். ''இந்தப் பதிலைக் கேட்டுப் போகத்தானா நான் ஆறு மாதங்களாக நடந்து வந்திருக்கிறேன். நான் ஊர் சென்று என்னை அனுப்பியவர்களுக்கு என்ன பதில் சொல்வேன்?" என்று அவர் கேட்டதற்கு, ''மாலிக் தனக்குத் தெரியவில்லை என்று கூறிவிட்டார் என்றே தெரிவித்துவிடு!" என்று பதிலளித்துவிட்டார்கள்.

இமாமவர்கள் தம்மிடம் தீர்ப்புக் கேட்டுத் தொலைவிலிருந்து வருபவருக்கு இலகுவில் தீர்ப்புக் கூருத காரணம் அவர்களுடைய பேணுதல்தான். இன்று ஒரு பிரச்சினைக்கு ஒரு பதிலைக் கொடுத்தபின், நாளையே அதைவிட ஆதாரமான நல்ல பதில் புலப்படலாம். எனவே, உள்ளூராகயிருப்பின் உடனே அதை அறிவித்துத் தமது தீர்ப்பை மாற்றிக்கொள்ளலாம். தொலைவிலிருந்து வரும் தீர்ப்புகளுக்கு இவ்விதம் புதிய முடிவுகள் கிடைப்பின், போக்குவரத்தோ, கடிதம் அனுப்பும் வசதியோ சரியற்ற முறையில் அவற்றைத் தெரிவிப்பது சாத்தியமல்லவே! எனவேதான். இமாமவர்கள் வெளியூர்ப் பிரச்சினைகளில் தீர்ப்புக் கொடுக்கப் பெரிதும் தயங்கியுள்ளார்கள்,

இமாமவர்களின் தீர்ப்புக்களில், ''நபிபெருமான் [ஸல்] அவர்கள் இவ்வாறு கூறியுள்ளார்கள்" என்ற வாசகம் தான் முதல் வாசகமாக இருக்கும். அவர்கள் தீர்ப்பு வழங்கும்போது, அதற்கு மாற்றமான ஆதாரபூர்வமான ஹதீஸ்களை யாரேனும் கூறினால் அவர்கள் உடனே அதை ஏற்றுத் தங்கள் தீர்ப்பை மாற்றிக்கொள்வார்கள். ஒரு சமயம் ஒருவர் அவர்களிடம் வந்து, ''ஒலுச் செய்யும்போது கால் விரல்களைக் கோதிக்கழுவ வேண்டுமா?" என்று கேட்டார். அது அவசியமில்லை என்று அவர்கள் கூறினார்கள், அச்சமயம் அவர்கள் அருகிலிருந்த சீடர் ஒருவர், ஒலுச் செய்கையில் கால் விரல்களைக் கோதி கழுவவேண்டும் என்பதற்கு ஆதாரமான ஹதீஸ் ஒன்று தம்மிடம் கிடைத்திருப்பதாகக் கூறி அதைக் கொணர்ந்து காட்டவே, இமாமவர்கள் ஆராய்ந்து அது சரியான ஆதார

முள்ள ஹதீஸ்தான் என்று முடிவு செய்து தங்கள் தீர்ப்பை மாற்றிக் கொண்டார்கள்.

## நூற்கள்

இமாமவர்கள் தங்கள் பாரதூரமான நூலான 'முஅத்தா'வையன்றி மற்றும் பல நூற்களும் எழுதியுள்ளார்கள் என்று சொல்லப்படுகிறது. அவை ரிஸாலா மாலிக்கி, (இத்தகைய ரிஸாலாக்களே பல உள்ளன) இலர் ரஷீது, அஹ்காமுல் குர்ஆன், அல் முதவ்வஞ, கிதாபுல் மஞஸிக், தப்ஸீர் கரீபுல் குர்ஆன், கிதாபுல் மஸாயில் முதலியனவாகும்.

மன்ஞதி மன்னர்களெல்லாம் வந்திருந்து கேட்டுச் சென்ற 'முஅத்தா' இஸ்லாமிய உலகில் மிகவும் முக்கியத்துவம் பெற்றுவிட்டது. அதற்கு இருபத்தைக்கு அதிகமான வியாக்கியானங்களும், இருபது சுருக்க நூற்களும், அதிலுள்ள அரும் பதங்களை விளக்கும் நூற்கள் நான்கும் வெளிவந்துள்ளன.

மதீஞவிலுள்ள மார்க்க நடைமுறைப்படியும், எம்பெருமாஞரின் ஹதீஸ் ஆதாரத்தின்மீதும் முஸ்லிம்களின் ஷரீஅத் அனுஷ்டானங்களைத் தொகுத்து எழுதிய இமாமவர்கள் அதற்கு என்ன பெயர் கொடுப்பது என்று சிந்தித்துக் கொண்டிருந்த போது, நபிபெருமான் (ஸல்) அவர்கள் இமாமவர்களின் கனவில் தோன்றி, 'இதை மானிடருக்கு மிருதுவான பாதையாக ஆக்கும்!' என்று கூறியருளிஞர்களாம். எனவே, இந்த நூலுக்கு திரு குர்ஆன், ஹதீஸோடு இணைந்த (ஒற்றுமையான) நூல் என்ற பொருளில் 'முஅத்தா' என்று பெயர் வைக்கப்பட்டது. ஹிஜாஸிலுள்ள மார்க்க அனுஷ்டானங்கள் திரு குர்ஆன், ஹதீஸ் அடிப்படையிலிருப்பதை இந்த நூல் நன்கு எடுத்துக்காட்டுகிறது. எனவே, இது ஒரே சமயத்தில் ஹதீஸ் கிரந்தமாகவும், பிக்ஹுக் கிரந்தமாகவும் விளங்கும் சிறப்பைப் பெற்றிருந்தது. முஅத்தாவில் சகல விஷயங்களிலும் மத்திமமான முடிவு காணப்பட்டிருப்பதாலேயே அது

இத்தனை தூரம் புகழ் பெற்றது என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

## இமாமவர்களின் பெருமை

இமாமவர்கள் காலத்திலும், அதை ஒட்டியும் வாழ்ந்த பெரியார்கள் பலரும் இமாம் மாலிக்கைப் போற்றிப் பாராட்டியுள்ளனர். "கலைஞானங்களின் மாமன்னர் மாலிக்" என்பது யஹ்யப்னு மயீனின் கருத்தாகும். "நாங்கள் இமாம் மாலிக்கின் முன் ஒரு வஸ்துவே அல்ல" என்கிறார் ஸுப்யான் பின் ஐனா. "இந்தப் பூமியின் மேல்பரப்பிலேயே ஹதீஸ்களின் பாதுகாவலர் இமாம் மாலிக் தான்" என்பது அப்துர் ரஹ்மான் பின் மஹ்தியின் அபிப்பிராயமாகும். "ஹதீஸ்கள் என்ற வானத்தில் இமாம் மாலிக் மாபெரும் நட்சத்திரம்" என்பது இமாம் ஷாபியீயின் கருத்தாகும். "ஹதீஸ்களை ஆராய்ந்து சுண்டிப்பார்ப்பதில் இமாம் மாலிக்கைப்போல் புலமையுள்ள யாரையும் நான் காணவில்லை" என்பது முஹத்திஸ் இப்னு நஹீக்கின் கருத்து "நீங்கள் யார் ரிவாயத்துச் செய்த ஹதீஸ்களை அதிகமாக மனனம் செய்வீர்கள்?" என்று இமாம் அஹ்மதிப்னு ஹன்பலிடம் வினவப்பட்டபோது, "இமாம் மாலிக் ரிவாயத்துச் செய்யும் ஹதீஸ்களைத்தான்" என்று அவர்கள் பதிலளித்தார்கள். "அல்லாஹ்வின் ஆதாரங்களில் இமாம் மாலிக் ஓர் ஆதாரமாகத் திகழ்ந்தார்கள்" என்று இப்னு மயீனும், "இமாம் மாலிக் இந்த உம்மத்துக்கோர் அருள்மாரியாகும்" என்று முஹத்திஸ் யஹ்யாவும் கூறியுள்ளனர்.

இமாமவர்கள் பெயரால் இன்று நிலவிவரும் மாலிக்கி மத்ஹப், அவர்கள் பெரிதும் பெருமையும் செல்வாக்கும் பெற்றிருந்த ஹிஜாஸ் பகுதியில் அதிகமும் பரவவில்லை, ஆயினும் அவர்களிடம் கற்ற மாணவர்களும், அவர்களுடைய தீர்ப்புக்களையும், விளக்கங்களையும் எழுதித் தொகுத்தவர்களும் மேற்குப் பகுதியில் அதை வெகுவாகப் பரப்பிவிட்டனர்.

இவ்விதம் முஸ்லிம் ஸ்பெயின் முழுமையிலும் மாலிக்கி மத்ஹபே ஆட்கொண்டிருந்தது. வடமேற்கு ஆப்ரிக்காவிலுள்ள அல்ஜீரியா, தூனிஸ், மொராக்கோ முதலிய நாடுகளிலும் இந்த மத்ஹபே மிகப் பெரும்பாலானவர்களால் பின்பற்றப் பட்டது. எகிப்தின் கீழ்ப் பாதியில் ஷாபியீ மத்ஹப் வெகு வாகப் பரவியுள்ளதுபோல, எகிப்தின் மேல் பாதியில் மாலிக்கி மத்ஹபே பெரும்பாலும் ஜனங்களால் பின்பற்றப்படுவதாக இருக்கிறது.

———

# இமாம் ஷாபியீ

இணையற்ற முறையில் இஸ்லாமியச் சட்டத்தைத் தொகுத்துத்தந்த மாமேதை, ஹதீஸ் கலையில் சிறப்பான தேர்ச்சி பெற்றிருந்த பெரியார், அரபி இலக்கணத்தில், சொல்லாட்சியில் தன்னேரிலாத திறமை படைத்த பண்டிதர், இனிய கவிதைகள் எண்ணற்றவை எழுதிய ஏந்தல், நோய் நிவாரணங் கற்ற வைத்திய வல்லுனர், போர்த்திறம் யாவுமறிந்த மாவீரர், நாவன்மையில் தமக்கு ஒப்பாரும் மிக்காருமின்றிச் சொற்பெருக்காற்றிய செந்நாப்போதார், மனிதனின் தோற்றங் கொண்டே அவன் இயல்பைக் கூறும் ஆருடங் கற்ற அறிஞர், "வீரத்துக்கு ஹஜ்ரத் அலீ (ரலி), வள்ளன்மைக்கு ஹாத்திம் தாயீ, இலக்கண இலக்கியத்துக்கு இமாம் ஷாபியீ" என்று இமாம் ராஜியால் போற்றப்பட்ட பேராற்றலாளர்-இவர்கள் தாம் இன்று உலகின் பெரும் பான்மையான முஸ்லிம்களால் பின்பற்றப்படும் மத்ஹபை உண்டாக்கியளித்த பெம்மான் ஷாபியீ (ரஹ்) அவர்களாவர்.

ஏழைதான்; ஆயினும், உயர் குலத்திலுதித்தவர்கள்; பிறக்குமுன்னே தந்தையை இழந்த அனாதைதான்; ஆயினும், வாழ்க்கைப் போராட்டத்தில் மகத்தான வெற்றிகண்டவர்கள். வறுமையில் வாடியவர்கள் தாம்; ஆனால், பின்னர் அள்ளி அள்ளிக்கொடுத்துக் கைசிவந்த வள்ளலாயும் திகழ்ந்தவர்கள். கல்வி தேட எண்ணற்கரிய இன்னல்களையெல்லாம் அனுபவித்தவர்கள் தாம்; எனினும் பெற்ற ஞானத்தைப் பிறருக்குப் போதிப்பதற்காக நாடு நகரங்களிலும், காடு மலைகளிலும் கஷ்டப்பட்டு அலைந்து திரிந்தவர்கள். சத்தியத்தையே காப்பாற்றிய பான்மைக்காகத் தான்தோன்றியான அதிகார வர்க்கத்தின் அடக்குமுறைகளையே ருசித்தவர்கள் தாம்; எனினும். மாமன்னர்களும் கண்டு மகிழ்ந்து வரவேற்கும் மதிப்புடையவர்களாகவும் திகழ்ந்தவர்கள். பிற்காலத்தில்

கொடுமையான மூல நோயால் கடுந் துன்பமடைந்தவர்கள் தாம் எனினும், அப்போதும் தங்கள் சன்மார்க்கச் சேவையையோ, அற்புதமான நூற்களை எழுதும் அரும் பணியையோ சற்றும் தளர்த்தாதவர்கள். எத்தனையோ சாஸ்திரங்களைக் கற்று, அத்தனையிலும் நிபுணத்துவம் படைத்திருந்ததுடன், அறிவுத் தீட்சண்யத்திலும் நிகரற்ற மாமேதையாகத் திகழ்ந்தவர்கள்தாம்; எனினும், அடக்கத்தோடும், பணிவோடும் நடந்து கொண்ட அருமையான மகான்-இவர்கள் தாம் இமாம் ஷாபியீ (ரஹ்) அவர்களாவர்.

## பிறப்பு

இமாமர்களின் இயற்பெயர் முஹம்மது. இடுகுறிப் பெயர் அபூ அப்தில்லாஹ்; பட்டப்பெயர் நாஸிருல் ஹதீஸ். எனினும், அவர்களுடைய பாட்டனாரின் பாட்டனார் பெயரான ஷாபியீ என்பதே அவர்களுடைய உலகம் போற்றும் பெயராக நிலைத்துவிட்டது.

இமாமவர்கள் அரேபியாவிலுள்ள உயரிய குலத்தவர்கள் என்று பாராட்டப்பெற்ற குறைஷி குலத்தைச் சேர்ந்தவர்கள்; ஒரு ஸஹாபியின் வழித்தோன்றலும் கூட, அவர்களுடைய வம்சாவளி வருமாறு: முஹம்மது பின் இத்ரீஸ்-பின் அப்பாஸ் பின் உதுமான் பின் ஷாபியீ பின் ஸாயிப் பின் உபைதா பின் அப்து பின் ஹாஷிம் பின் அப்துல் முத்தலிப் பின் அப்த மனாப் ஹாஷிமி. இந்த வகையில் இவர்களுடைய பரம்பரை நபி பெருமான் (ஸல்) அவர்களுடைய குடும்பத்தோடு போய்ச் சேருகிறது. இந்த வரிசையில் உள்ள ஸாயிப் என்பவர் பத்ருப் போர்க்களத்தில் முஸ்லிம்களுக்கு எதிராகக் கொடிப் பிடித்துப் போரிட்டவர். அங்கே முஸ்லிம்களால் கைது செய்யப்பட்டார். பின்னர் முஸ்லிமாகி நபிபெருமானாரின் தோழர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். இவருடைய புதல்வர் ஷாபியீயும் நபிபெருமானாரோடு நன்கு பழகியவராவார்.

இமாமவர்களுடைய தாயாரும் எமன் நாட்டிலுள்ள பிரபலமான அஜ்து என்ற கூட்டத்தைச் சேர்ந்த உயர்குடிப்

பெண்மணியாவார். (இவர் ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் சந்ததியிலுதித்தவர் என்றும் சிலர் கூறுகின்றனர். (அது சரியன்று) இமாமவர்கள் பிறந்த ஊர் அஜ்ஜா என்பதாகும். இமாமவர்களுடைய தந்தையார் இத்ரீஸ் பின் அப்பாஸ் முதலில் மதீனாவையடுத்த தபாலா என்ற சிற்றூரில் வாழ்ந்து வந்தார். பின்னர் சில காலம் மதீனாவிலும் தங்கியிருந்தார். அதன்பின் ஜீவனோபாயத்துக்காக ஸிரியாவிலுள்ள அஸ்கலானில் குடியேறினார். அங்கே ஷாபியீ பாலப் பருவத்தினராக இருக்கும்போதே அவர் காலமாகிவிட்டார்.

இமாமுல் அஃலம் அபூ ஹனீபா (ரஹ்) காலமானது ஹிஜ்ரி 150 ஷஃபான் இரண்டாம் பிறையன்று. இமாம் ஷாபியீ தோன்றியதும் அதே வருடம் அதே மாதம் அதே தினத்தில்தான். இதை வைத்துக்கொண்டு இந்த இரண்டு மத்ஹபுகளையும் பின்பற்றும் சிலர் குதர்க்கமாகப் பேசுவதுண்டு. ''எங்கள் இமாம் மறையும் வரை உங்கள் இமாம் வெளியாகப் பயந்துகொண்டு தாயின் கர்ப்பத்திலிருந்தார்கள்" என்று ஹனபிகளில் சிலரும், ''எங்கள் இமாம் அவர்கள் பிறக்கிறார்கள் என்று தெரிந்ததுமே உங்கள் இமாம் ஓடி மறைந்துவிட்டார்கள்" என்று ஷாபியீக்களில் சிலரும் வாதாடுவதுண்டு. வாதம் மூடத்தனமானதுதான் ஆயினும், இது ஹனபி இமாமவர்கள் மறைந்த அதே தினத்தில் ஷாபியீ இமாமவர்கள் அவதரித்த அபூர்வ உண்மையை நமக்கு நினைவூட்டுகிறது.

இமாம் ஷாபியீ பிறப்பதற்கு முன்பு அவர்களின் அன்னையார் கனவொன்று கண்டார். அதில் வியாழ கிரகம் உதயமாவதையும், அதன் ஒளி எகிப்து தேசத்தை நோக்கிப் பாய்வதையும், உலகம் முழுவதும் தன் ஜோதியைப் பரப்புவதையும் அவர் கண்டார். இதை அவர் கனவுகளுக்கு விளக்கம் கூறும் ஒருவரிடம் தெரிவித்ததும் அவர், ''உங்கள் வயிற்றிலிருந்து பிறக்கப் போகும் குழந்தையின் மேதாவிலாசத்தால் முதலில் எகிப்தும், பின்னர் உலகிலுள்ள சகல நாடுகளும் உயர்வடையும்'' என்று அந்தக் கனவுக்குப் பதில் கூறினார்.

இவ்விதம் பிறந்த பாலகர் தன் தந்தையை இழந்து அநாதையானதும், அந்த அன்னை அவர்களை அழைத்துக்

கொண்டு எமன் நாட்டில் தன் சகோதரன் இருந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். இமாமவர்கள் தங்கள் எட்டு வயதுவரை இங்கேயே வளர்ந்திருக்கிறார்கள். அதற்கிடையே திருக்குர்ஆனை மனப்பாடம் செய்த ஹாபிஸ் ஆகிக்கொண்டார்கள். அங்குள்ள கிராமிய ஜனங்களிடை வழங்கும் மொழிகளையும், அவர்களுடைய நாட்டுப் பாடல்களையும் இமாமவர்கள் நிறையப் படித்துக் கொண்டார்கள்.

## கல்வியின் பாதையிலே

இளமையிலேயே அவர்கள் காட்டிய திறமையும், சாதுர்யமும் எதையும் இலகுவாக மனனம் செய்யும் இயல்பும் அவர்களுடைய அன்னையாரை மிகவும் இன்புறச் செய்தன. அவர் தம் மகனுக்கு நல்ல முறையில் கல்வி பயிற்றுவிக்க எண்ணினார். ஆனால், அதற்கேற்ற வசதிகள் எதுவுமில்லை. அதனால், கஷ்டப்பட்டேனும் அவர்கள் படிக்கவேண்டும் என்று அவர்களை அவர்களுடைய பத்தாம் வயதில் மக்காவிலிருந்த அவர்களுடைய சிறிய தந்தையாரிடம் அனுப்பினார். அவரும் போதிய வசதியுடையவரல்லர்; அதனால், ஷாபியீயைப் படிக்கவைக்க அவரும் கஷ்டப்பட்டார். அக்கால அரபிகள் பழக்கம் தமது சிறுவர்களை முதலில் பற்பல பரம்பரைகளைப்பற்றிய பாடத்தை (இல்முல் அன்ஸாபை)ப் படிக்கவைப்பதாகும். இமாமவர்கள் இந்தப்படிப்பில் சேர்ந்து வெகு விரைவிலேயே தங்கள் அபாரமான ஞாபக சக்தியால் நல்ல தேர்ச்சி பெற்று விட்டார்கள். மேலும் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஷாபியீயை உந்தித் தள்ளிக்கொண்டிருந்தது. ஆனால், அவர்களுடைய சிறிய தகப்பனாருடைய குடும்பமோ மிகவும் கஷ்டஜீவனம் நடத்திக்கொண்டிருந்தது. இதில் பொருள் கொடுத்து அவர்களைப் படிக்கவைப்பதென்பது சாத்திய மில்லாதிருந்தது. இமாமவர்கள் தங்கள் நம்பிக்கையைத் தளரவிடவில்லை. மக்காவின் சுற்றுப்புறங்களிலுள்ள பல ஊர்களுக்கும் தம் சிறிய தகப்பனாரிடும் வேலைகளுக்காக அவர்கள் சென்றுவருவதுமுண்டு. அப்போதெல்லாம் ஆங்காங்குள்ள வழக்கு மொழிகளையும், பாடல்களையும் அவர்கள் கற்றுக்கொண்டார்கள்.

முறைப்படி படிப்பகற்கு வாய்ப்பற்ற இமாமவர்கள், பல்வேறிடங்களிலும் நடக்கும் ஹதீஸ் விளக்கங்களையும், மார்க்க உபன்னியாசங்களையும் ஆவலோடு சென்று கேட்பார்கள். கடைசியில் மதரஸா ஒன்றில் ஏழை மாணவராகப் போய் ஒதுங்கிய அவர்களால் ஆசிரியருக்கு எதுவும் கொடுக்க இயலாதிருந்ததால் அவரும் அவர்களிடம் பாடம் கேளாமலும், அவர்களைக் கவனியாமலும் புறக்கணித்து விட்டார். ஆனால், கல்வி அவர்களைப் புறக்கணிக்கவில்லை. வகுப்பில் தாங்கள் கவனமாகக் கேட்டதை வீடு சென்றதும், தட்டையான, அகலமான எலும்புகளைப் பொறுக்கி, அவற்றில் எழுதி மனப்பாடம் செய்து கொள்வார்கள். எழுதுவதற்கான தாள் முதலியன வாங்க வசதியற்ற இமாமவர்கள் இப்படிக் கஷ்டப்பட்டுக் கல்வி பெறவேண்டுவதாயிற்று. நாளடைவில், இவ்விதம் தாங்கள் மனனம் செய்த பாடங்களையே ஆசிரியர் அங்கே இல்லாதசமயம் மற்ற மாணவர்களுக்குப் போதிக்கும் அளவுக்குத் திறமையுடைவர்களாகி விட்டார்கள். இதையறிந்த ஆசிரியர் இமாம் ஷாபியீயைப் பாராட்டி முன் வரிசையில் அமர்த்திக்கொண்டார். எனினும், இலவசமாகக் கல்வி பெறுவதை இமாமவர்கள் விரும்பவில்லை. தாம் பெறும் கல்விக்காக, ஈத்தம் ஓலைகளையும், மட்டைகளையும் பொறுக்கிக் கட்டி எடுத்துப்போய்த் தமது ஆசிரியர் வீட்டில் போட்டுவரலானார்கள்.

மக்காவில் பிரபல ஹதீஸ் பாடபோதனை நிபுணராகவும், சட்ட வல்லுனராகவும், முப்தியாகவும் விளங்கிய பெரியார் முஸ்லிம் பின் காலித் அவர்கள் ஹதீஸ், பிக்ஹுப்போதனையை நடத்திக்கொண்டிருந்த காலம் அது. அக்காலையில் மாணவர்கள் ஹதீஸ் விளக்கங்கள் கற்க அனுமதிக்கப்படவேண்டுமாயின் அவர்கள் இருபது வயதையாவது அடைந்திருக்கவேண்டும் என்று கட்டுப்பாடு ஒன்று இருந்து வந்தது. அதுவரை ஹதீஸ் வகுப்புகளில் மணவர்கள் அமர அனுமதிக்கப்படுவதில்லை. எனினும், இமாம் ஷாபியீ தங்கள் அறிவாற்றலாலும், நுண்மதியாலும் பெரியார் முஸ்லிமைக் கவர்ந்துவிட்டார்கள். எனவே, அவர்களிடம் அமர்ந்து பாடங்கேட்க முடிந்தது.

மூன்றாண்டுகள் இமாமவர்கள் இந்தப் பெரியாரின் கண்காணிப்பிலிருந்து படித்தார்கள். அப்போது இந்தப் பெரியார் அடிக்கடி இமாம் மாலிக்கைப்பற்றித் தங்கள் பாடபோதனைகளிடை குறிப்பிடுவதுண்டு. இதனால், இமாமவர்கள் மனத்தில் இமாம் மாலிக் அவர்களிடம் சென்றமர்ந்து கல்வி பயிலவேண்டும் என்ற ஆர்வம் உண்டாகி வளர்ந்து கொண்டிருந்தது.

இவ்விதம் அவர்கள் ஹதீஸ் கலையில் தேர்ச்சி பெற்றுக் கொண்டிருக்கும் காலையில் கனவொன்று கண்டார்கள், அவர்கள் சொல்கிறார்கள்: ''நான் என் கனவில் நபி பெருமான் (ஸல்) அவர்களைக் கண்டேன். அவர்கள் என்னை விளித்து, என் பெயரையும், கோத்திரத்தையும் விசாரித்தார்கள். பின்னர் என் வாயுள் தங்கள் உமிழ் நீரைத் துப்பி விழுங்கச் சொன்னார்கள். நான் அதை விழுங்கியதும் 'உன் மீது அல்லாஹ்வின் கிருபை உண்டாவதாக!' என்று ஆசீர்வதித்தார்கள். இந்த அற்புதமான கனவுக்குப்பின்னர் என் வார்த்தைகளிலோ, குரலிலோ எந்தப் பிழையோ, அபஸ்வரமோ நிகழவே இல்லை ''

இமாம் அவர்களின் இருபத்தோராவது வயதில் அவர்கள் கண்ட கனவு ஒன்றையும் அவர்கள் விவரித்துள்ளார்கள்: ''நபி பெருமான் (ஸல்) அவர்கள் கஃபத்துல்லாஹ்வில் தொழுதுகொண்டிருந்தார்கள். அவர்கள் தொழுது முடிந்ததும் ஜனங்களை அழைத்து ஆசி கூறிக்கொண்டிருந்தார்கள். உடனே நானும் அவர்கள் அருகில் சென்றேன். எனக்கும் ஆசியளிக்க வேண்டும் என வேண்டினேன். அவர்கள் தங்கள் அங்கியுள் கையை விட்டுத் தராசு ஒன்றைக் கையிலெடுத்து என்னிடம் தந்து, 'இது உனக்கு என் அன்பளிப்பு' என்று கூறினார்கள். இந்தக் கனவுக்குப் பயன் தெரிய ஆவல் கொண்ட நான் இதை ஒரு பெரியாரிடம் சென்று தெரிவித்தேன், அதைக் கேட்ட அந்தப் பெரியார் என்னை நோக்கி, 'நபிபெருமானாரின் முன்மாதிரியை உலகில் வளர்க்கும் ஓர் இமாமாக நீங்கள் விளங்கப் போகிறீர்கள்' என்று அவர் பதிலளித்தார்.''

## மாலிக்கின் மாணவர்

இந்தச் சம்பவம் நடந்தபின்னர் இமாமவர்கள், இமாம் மாலிக்கிடம் சென்று கல்வி பயில முடிவுகட்டித் தங்கள் ஆசான் முஸ்லிமிடம் தமது ஆசையைத் தெரிவித்தார்கள், அந்தப் பெரியார் அதற்காகத் தங்கள் ஆசியை நல்கியதுடன், இமாம் மாலிக் அவர்களுக்குச் சிபாரிசுக் கடிதம் ஒன்றும் கொடுத்தார். அந்தக் கடிதத்தில், ''இந்தக் கடிதம் கொண்டுவரும் இளைஞர் உங்களிடம் கல்வி பயில அருகதையுடையவர்தாம். இவர் அபாரமான புத்தி நுட்பமும் பணிவுமுடையவர்" என்று எழுதப் பட்டிருந்தது.

இமாம் ஷாபியீ இக்கடிதம் பெற்றதும் பெரிதும் மகிழ்ந் தார்களாயினும், பெருத்த கவலைக்கும் உள்ளானார்கள். அவர் களோ பரம ஏழையாக இருந்தார்கள். அந்த நிலையில் அவர்கள் மதீனா செல்லவும், அங்கே தங்கிப் படிக்கவும் பணம் வேண்டும். என்ன செய்வதென்று தெரியாது தத்தளித்த அவர்கள் முஸ்அப் பின் ஜுபைர் என்பவரிடம் சென்று தங்கள் தேவையைக் கூறினார்கள். அவர் இன்னொருவரிடம் சென்று சிபாரிஷ் செய்து இமாமவர்களுக்கு நூறு தீனார்கள் வாங்கிக் கொடுத்தார். அதைப் பெற்றுக்கொண்டு இமாமவர்கள் மதீனா போய்ச் சேர்ந்தார்கள்.

இமாம் மாலிக்கின் வீட்டையடைந்த இமாம் ஷாபியீ அவர்கள், பணியாளர்மூலம் அவர்களுக்குச் செய்தி சொல்லி அனுப்பினார்கள். அவர்களை வந்து கண்ட இமாம் மாலிக் மிகுந்த அன்போடு அவர்களை வரவேற்று உபசரித்தார்கள். இமாமவர்கள் தாங்கள் தங்கள் ஆசானிடமிருந்து பெற்று வந் திருந்த சிபாரிஷ்கடிதத்தை இமாமவர்களிடம் கொடுத்தார்கள். அதை வாங்கிப் படித்த இமாம் மாலிக் ஆத்திரத்தோடு அதைக் கசக்கி எறிந்தார்கள். அவர்களுடைய உதடுகள் துடித்தன. இமாம் ஷாபியீ பயந்து நடுங்கிப்போனார்கள். ''ஸுப்ஹானல்லாஹ்! நபிபெருமானார் வாய்மொழியாக வந்த புனிதப் பாடங்களை சிபாரிஷ்மூலம் படிக்குமளவுக்குக் காலம் கெட்டுப்போய்விட்டதா!'' என்று இமாம் மாலிக் கோபத் தோடு கத்தினார்கள்.

''குரு மகானே, என்னை மன்னித்தருளவேணும். எப்படி யேனும் படிக்கவேண்டும் என்று பல ஆண்டுகளாகத் தாகித்துக் கிடப்பவன் நான். அதனால்தான் இவ்வாறு சிபாரிஷ் கடிதம் வாங்கி வந்துவிட்டேன். பிழை செய்திருப்பின் பொறுத்தருள வேணும்!'' என்று இமாம் ஷாபியீ மிகவும் பணிவோடு வேண்டுதல் விடுத்தார்கள். அதன்பின்னரே அவர்களுடைய ஆத்திரம் தணிந்தது.

பின்னர் அவர்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அடக்கத் துடனும், சரியான முறையிலும் இமாம் ஷாபியீ பதிலளித் தார்கள். ஒருவரின் பேச்சைக்கொண்டே அவர் எத்தகைய இயல்பினர் என்று அறியும் திறமை இமாம் மாலிக் அவர் களுக்கு உண்டு. எனவே, ஒரு நொடிப் பொழுதில் இமாம் ஷாபியீயின் நல்லியல்பையும் ஆர்வத்தையும் அவர்கள் கண்டு கொண்டார்கள். ''முஹம்மதே, பேணுதலுடன் நடந்து கொள்! அல்லாஹ்வின்மீது பயபக்தியுள்ளவனாக ஒழுகிவா! வீணான காரியங்களில் சிந்தையைச் செலவிடாது விழிப் போடிரு! உன்னால் முஸ்லிம் சமூகமே பயனடையப்போகிறது. அதனால் நீயும் பெரும் புகழும், மகிமையும் பெறுவாய்" என்று இமாம் ஷாபியீயை ஆசீர்வதித்தார்கள்.

இமாம் மாலிக் அவர்களுடைய போதனா மன்றம் எத்துணை சிறப்பு வாய்ந்ததாக இருந்தது என்பதை அவர் களுடைய வாழ்க்கை பற்றிய பகுதியில் பார்த்தோம். அக்காலையில் மக்காவிலும் மற்றும் பல நகர்களிலும் ஆசான் ஒரு மேடைமீது அமர்ந்துகொண்டோ நின்று கொண்டோ பாடபோதனை செய்வார். மாணவர்கள் அவர் எதிரில் வரிசை வரிசையாக அமர்ந்து பாடங் கேட்பார்கள். ஹதீஸ் உபன்னி யாசமாக இருப்பின் அவர் ஹதீஸைப் படித்து விளக்கம் கொடுப்பார். பாடமாயினும் படித்துக்கொண்டே போவார்; அவர் சொல்வதை மாணவர்கள் எழுதிக்கொள்வார்கள். ஆனால், மதீனாவில் அக்காலையில் பிரசித்திப் பெற்றிருந்த மகான்களெல்லாம் ஹதீஸ்களையும், அவற்றின் விளக்கங் களையும் வீட்டிலேயே ஒழுங்காக எழுதி எடுத்துவந்து, வகுப்பில் அருமையாகப் படிக்கக்கூடிய மாணவன் ஒருவன் கையில்

கொடுத்துவிடுவார்கள். அவன் அதைப் படிக்கும்போது தேவைப்படுமிடத்தில் மட்டும் விளக்கங்களைக் கொடுப்பார்கள். இமாம் மாலிக் அவர்களும் இதே முறையைப் பின்பற்றித் தான் பாடபோதனை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

இமாமவர்களின் போதனுகூடம், பரிசுத்தமான எம் பெருமான் (ஸல்) அவர்களுடைய பேச்சையும், செயல்களையும் பற்றி விவரிப்பதற்குத் தக்க முறையில் சுத்தமாக வைக்கப் பட்டிருந்தது. வகுப்புத் தொடங்குமுன் வாசனைப்புகை போடப்பட்டு எங்கும் அருமையான நறுமணம் கமழ்ந்து கொண்டிருக்கும். மாணவர்கள் சுத்தமான உடையுடுத்து ஒழுவுடன் வந்து அமருவார்கள். எங்கும் நிசப்தம் நிலவும். மாணவர்களையன்றி மற்றும் உலமாக்களும், பிரபுக்களும் பொதுஜனங்களுங்கூட உரிய மரியாதையுடன் அங்கே வந்து கூடியிருப்பதுண்டு. இந்த நிலையில் இமாம் மாலிக் வகுப்பில் நுழைந்து பாடம் தொடங்குவார்கள். சிற்சில சமயங்களில் பாடங்களை வாசிக்கும் வேலை இமாம் ஷாபியீ அவர்களுக்கும் கிடைப்பதுண்டு. இமாம் ஷாபியீ சொல்கிருர்கள்: ''எங்கள் சபை அரச தர்பாரைப்போல் காம்பீரியத்தோடு காட்சி யளிக்கும். எங்கள் சபையில் நாங்கள் தாள்களைக்கூட மிகமிக மெதுவாகவே திருப்புவோம். மாணவர்களின் வரிசை, பொது ஜனங்கள், பிரபுக்கள், உலமாக்கள் ஆகியோருடைய கூட்டம் சபையில் அமர்ந்திருப்பது பார்ப்போருக்குப் பிரமிப்பூட்டுவ தாகும்" என்று.

மேலும், இமாம் ஷாபியீ சொல்வதாவது: ''இமாம் மாலிக்கிடம் பாடங் கேட்பவர்களெல்லாம் திறமையும் துணிவுமுடையவர்களாக விளங்கினர். ஒரு நாள் இமாமவர் கள் என்னைப் பாடம் படிக்கும்படி உத்தரவிட்டார்கள். நான் வெகு சரளமாகப் படித்துக்கொண்டே போனேன். இடை யிடையே பல இடங்களில் இமாமவர்கள் விளக்கங் கொடுத்துக் கொண்டு வந்தார்கள். ஓரிடத்தில் நான் படிப்பதை நிறுத்திய தும், 'ஏன் ஷாபியீ நிறுத்திவிட்டீர்? தொடர்ந்து படித்துக் கொண்டே செல்லும்!'' என்று என்னை அன்போடு ஊக்குவித் தார்கள்.

இத்தகைய மாண்பும், மகத்துவமுமுள்ள சபையிலே தொடர்ந்து மூன்றாண்டுக் காலம் அமர்ந்து இமாமவர்கள் பாடங் கேட்டார்கள்; அற்புதமான விளக்கங்களைத் தெரிந்து கொண்டார்கள். இமாம் ஷாபியீ இமாம் மாலிக்கிடம் வந்து சேர்ந்த சமயம்தான், மாலிக்கின் 'முஅத்தா' தயாராகி முடிந் திருந்தது. எனவே, அதை எடுத்து அதன் பெரும் பகுதியை இமாமவர்கள் மனப்பாடமிட்டுக் கொண்டார்கள். சந்தர்ப்பங் கிடைக்கும்போதெல்லாம் அதில் தங்களுக்குத் தேவையான விளக்கங்களையும் இமாமவர்களிடமிருந்து பெற்றுக்கொண் டார்கள். ஸஹாபாக்கள், தாபியீன்களின் வரலாறுகள், மார்க்கத் தீர்ப்புகள், பிக்ஹு போன்ற பாடங்களில் திறமான கல்வியடைந்தார்கள்.

இவ்விதம் அவர்கள் கல்வி தேடிக்கொண்டிருந்த காலையில் ஒரு நாள் இந்தச் சம்பவம் நடந்ததாகச் சொல்லப்படுகிறது: புறு விற்பவன் ஒருவன் இமாம் மாலிக்கிடம் வந்தான். சபை யில் பாடம் முடிந்து மாணவர்கள் வெளியாகி விட்டனர். இமாம் ஷாபியீ மட்டும் அங்கே இருந்தார்கள். அச்சமயம் மாலிக்கிடம் அந்த மனிதன் சொன்னான்: ''நான் புறுக்களைக் கூவப் பழக்கி விற்று ஜீவனம் நடத்துபவன். நான் ஒருவனுக்கு விற்ற புறு கூவவில்லை என்று அவன் என்னிடம் வந்து தகராறு செய்தான். நான் அது கூவும் என்றேன். அவன் அது கூவ வில்லை என்றும், கூவாத புறுவைக் கொடுத்து நான் அவனை ஏமாற்றிவிட்டதாகவும் என்னிடம் முரட்டுத்தனமாகப் பேசலா னான். நான் ரோஷத்தோடு, ''நான் உனக்கு விற்ற புறுக் கூவவில்லையானால் என் மனைவியைத் தலாக்குச் செய்தவனா கிறேன்'' என்று சபதம் செய்துவிட்டேன். என்னுடைய ஆத்திரம் தணிந்து நிலையை நான் சீர்தூக்கிப்பார்க்கும்போது நான் சத்தியம் செய்தது எத்துணை அபாயமானது என்பதை உணர்கிறேன். ஒருக்கால் அந்தப் புறுக் கூவாதிருந்து விட்டால், நான் என் மனைவியைக் 'தலாக்' சொல்லிவிட வேண்டியதுதானா? அல்லது, இதற்கு ஏதாவது மாற்று உண்டா? இதைத்தான் தங்களிடம் தெரிந்துபோக வந்தேன்.''

''இதற்கு மாற்றில்லை, சபதப்படி நடக்கவேண்டியது தான்'' என்று இமாம் மாலிக் கூறிவிட்டார்கள், உடனே அவன் மிகுந்த வேதனையோடும், ஏமாற்றத்தோடும் அங்கிருந்து வெளியானன். அவன் செல்லும்போது, அங்கே அமர்ந்திருந்த இமாம் ஷாபியீயும் எழுந்து அவன் பின்னுல் சென்ருர்கள். வெளியில் அவனை நிறுத்தி, ''அந்தப் புருக் கூவும் என்ருயே? அது கூவுவது அதிகமா, கூவாமலிருப்பது அதிகமா?'' என்று அவனிடம் வினவினுர்கள்.

சற்றே திகைத்த அந்த மனிதன், ''கூவுவதுதான் அதிகம்'' என்று பதிலளித்தான்.

உடனே ஷாபியீ அவனையுமழைத்துக்கொண்டு மிகுந்த பணிவோடு தங்கள் குருநாதரை அணுகி, ''நான் இவனிடம் அந்தப் புருக் கூவுவது அதிகமோ, வாய்மூடியிருப்பது அதிகமோ என்று கேட்டேன். கூவுவதுதான் அதிகம் என்ருன். அதனுல் இவன் மனைவி தலாக்காக மாட்டாள் என்று கருதுகிறேன்'' என்று கூறினுர்கள். இமாம் மாலிக் தங்களுடைய இந்த மாணவரிடம் மிகுந்த அன்பும், பிரியமும் உடையவர்களாய் இருந்தும், இப்படித் தங்கள் தீர்ப்பு ஒன்றில் அவர்கள் குறுக்கிடுவது கண்டு சற்று கோபத்தோடு, ''இது எப்படி அவன் சபதத்துக்குப் பிராயச்சித்தமாகிவிடும்? இதற்கு ஹதீஸ் ஆதாரம் வேண்டாமா? என்று கேட்டார்கள். இமாம் ஷாபியீ சொன்னுர்கள்: ''ஒரு நாள் தாங்களே சொன்ன ஹதீஸ்தான் இதற்கு ஆதாரம், அதாவது, பாத்திமா பிந்த் கைஸ் என்ற பெண்மணி நபிபெருமான் (ஸல்) அவர்களிடம் வந்து, 'தங்கள் நற்றேழர்களில் இருவரான அபூஜஹ்மின் என்பவரும், முஆவியா என்பவரும் என்னை மணக்க விரும்பிப் பெண் கேட்கிருர்கள். அவர்கள் இருவரில் நான் யாருக்கு வாழ்க்கைப்படவேண்டும்?' என்று கேட்டாள். அப்போது நபிபெருமானுர், 'முஆவியா தன் கவசத்தைக் கீழே வைக்கமாட்டாதவர் என்பதைத் தெரிந்துகொள்!' என்று கூறினுர்கள். அவர் தூங்கும் போதும், உணவுண்ணுகையிலுமாவது தமது கவசத்தை அப்புறப்படுத்தத்தான் செய்வார் என்பதை நபி பெருமானுர் அறிந்திருந்தும், இப்படிக் கூறிய

தன்னுகருத்து யாதெனில் பெரும்பாலாக அவர் அப்படியிருப் பதைத்தானல்லவா! இந்த மாதிரிச் சந்தர்ப்பத்தில் குறைந் ததைப் புறக்கணிக்கத்தானே நேரும்! எனவே, இவனுடைய புறாவும் கூவுவதுதான் அதிகம் என்றதும் நான் அந்த அடிப் படையில் அந்த மிகுதமான அம்சத்தைத்தான் கவனிக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்..."

இமாம் மாலிக் தமது மாணவர் கூறுவதிலுள்ள உண் மையை அவர்கள் இந்த ஹதீஸ் மேற்கோளைக் காட்டத் தொடங்கியதுமே விளங்கிக் கொண்டார்கள். எனினும், கடைசி வரை அவர்கள் பேசிமுடிக்க அனுமதித்தார்கள். பின்னர், ''உம்முடைய திறமையை மிகவும் மெச்சுகிறேன். அதனால், இவன் புறா ஒருக்கால் கூவாவிட்டால்கூட இவன் தன் மனைவி யைத் தலாக்குச் சொல்ல வேண்டியதில்லை என்று என் தீர்ப்பை மாற்றுகிறேன்" என்று மகிழ்ச்சியோடு கூறினார்கள். தமது மாணவரிடம் அவர்கள் வைத்திருந்த அன்பு இதனால் பன்மடங்கு அதிகமாயிற்று. ''என்னிடம் பாடங்கேட்ட மாணவர் அனைவரிலேயுமே ஷாபியீயைப் போன்ற மதிநுட்ப முடைய வேறு யாரையும் நான் காணவில்லை'' என்று அவர்கள் கூறினார்கள்.

இமாம் மாலிக்கிடம் கற்று அத்தாட்சிப்பத்திரம் பெற்ற பின்னர் பல்வேறு பெரியார்களிடமும் கற்பதற்காகவும், தாம் பெற்ற கல்வியைப் பூரணமாக்கிக் கொள்வதற்காகவும் இமாம் ஷாபியீ அவர்கள் தங்கள் ஆசிரியரிடம் சென்று விடை கேட்டார்கள். ''மகனே, அல்லாஹ் உனக்கு அருளியுள்ள ஞானம் தவறான கருமங்களால் பழுதுபடாமலிருக்குமாக!" என்று அவர்கள் ஆசீர்வதித்து அனுப்பினார்கள். (இமாம் மாலிக் இமாம் ஷாபியீயின் இருபத்தொன்பதாம் வயதில் காலமானார்கள். அதுவரை இவர்கள் அவர்களுடைய மாணவ ராகவே இருந்தார்கள் என்று வரலாற்று நூற்கள் சிலவற்றில் கூறப்பட்டுள்ளது.)

இமாமவர்கள் சுமார் எண்பது ஆசிரியர்களிடம் பாடங் கேட்டுள்ளதாக ஹாபிஸ் இப்னு ஹஜர் குறிப்பிடுகிறார்கள்.

அவர்களுள் முஸ்லிம், இமாம் மாலிக் தவிர புலேல் பின் இயால், ஸுஃப்யான் பின் ஐனு, வகீஉ, யஹ்யா பின் சயீத், முஹம்மது பின் இஸ்மாயீல், முஹம்மது ஹஸன், அப்துல்லா ஹிப்னு முபாரக், இப்ராஹீம் பின் சஅத், அப்துல்லாஹ் பின் நாபிஃ போன்ற நாதாக்களும், இமாம்களும் முக்கியமானவர் களாவர். இமாம் மாலிக்கிடத்திலிருந்து மட்டும் இமாம் ஷாபியீ அவர்கள் சுமார் பத்தாயிரம் ஹதீஸ்களேயும், மார்க்கத் தீர்ப்புக்களேயும் பயின்று மனனம் செய்துள்ளார்கள்.

## தீர்ப்பு வழங்க அனுமதி

இதன்பின் இமாமவர்கள் மக்கா சென்று, அங்கே தங்கள் உறவினர்களேப் பார்த்தார்கள். அத்துடன் அச்சமயம் அங்கே மிகவும் பிரபலமான ஹதீஸ் போதகாசிரியராக விளங்கிய இமாம் ஸுஃப்யான் பின் ஐனுவை அணுகிச் சில மாதங்கள் ஹதீஸ் விளக்கங்களேக் கேட்டார்கள். அத்துடன் தாங்கள் முப்பது வயதை அடைந்து விட்ட நிலேயிலும், தங்களுடைய தலேயாய ஆசான் இமாம் மாலிக் காலமாகிவிட்ட நிலேயிலும் தாங்களே சுயமாக மார்க்கத் தீர்ப்பு வழங்க நாடினார்கள். இவ்விதம் மார்க்கத் தீர்ப்பு வழங்குவதென்பது மிகமிகப் பொறுப்பான காரியமாதலாலும், அதனுல் பலருடைய வாழ்க்கையே பாதிக்கப்படக்கூடுமாதலாலும் இவ்விதம் மார்க்கத் தீர்ப்புகள் வழங்கும் பொறுப்பை போதிய அனுபவ முள்ள மார்க்கஞானிகளிடமே விடுவது வழக்கம். இமாம் ஸுஃப்யான் பின் ஐனுவிடம் பாடங்கேட்டபின், தாங்கள் சுயமே மார்க்கத் தீர்ப்பு வழங்க அனுமதிக்கவேண்டும் என்று அவர் களிடம் இமாம் ஷாபியீ அவர்கள் வேண்டுதல் விடுத்தார்கள். அந்தப் பெரியார் இமாம் ஷாபியீயின் மகா மேதையையும், திரு குர்ஆன், ஹதீஸ் தேர்ச்சியையும் நன்ருக அறிருந்திருந் தார்கள். ஆயினும், ஒரு சிறிய சோதனே நடத்தினுர்கள். "எம்பெருமான் (ஸல்) அவர்கள் ஒரு சமயம் தங்கள் பிராட்டியார் உம்முல் மூமினீன் ஸபிய்யாவுடன் மஸ்ஜிதி லிருந்து இறங்கித் தெருவில் போய்க் கொண்டிருக்கும் போது, இரண்டு மனிதர்கள் எதிர்ப்பட்டனர். அவர்களோடு

நபிபெருமானார் உரையாடலானார்கள். அப்போது அவர்கள் தங்கள் பிராட்டியாரைச் சுட்டிக்காட்டி, ''மனிதனுடைய இரத்தக்குழாய்களிலெல்லாம் ஷைத்தான் ஊடுருவிச் சுற்றுகிறான்" என்று அருளினார்கள். இது இமாம் ஜுஹரி ரிவாயத்துச் செய்துள்ள ஹதீஸ். இதிலுள்ள கருத்து யாது?" என்று இமாம் ஸுஃப்யான் பின் ஐனா இமாம் ஷாபியீயிடம் வினவினார்கள்.

அது கேட்ட இமாம் ஷாபியீ சற்றும் தயங்காது சொல்லலானார்கள் : ''இத்தகைய மகிமைமிக்க தூய நபி ஒரு பெண்ணைத் தங்களோடு அழைத்தேகுகிறார்களே! நபிபெருமானார்கூடவா இப்படி அன்னிய மாதொருவரோடு செல்வார்கள்" என்று அந்த இரண்டு மனிதர்கள் மனத்திலும் ஊசாட்டமுண்டாகலாம். அது மனித இயல்புதானே! அதனால் தான் அவர்களோடு பேசத் தொடங்கியதுமே நபிபெருமானார் அவர்கள், ''இவர்கள் என் மனைவியார் ஸபிய்யா" என்று தெளிவுபடுத்திவிட்டு, மேலும், ''நான் இறைவன் தூதனாய் இருப்பினும், அறியாத ஜனங்கள் என்மீது கெட்ட எண்ணங் கற்பிக்கக் கூடும். ஆகவே நீங்களும் பிறர்மீது கெட்ட எண்ணங் கொள்ளாதீர்கள்; அவர்களைப்பற்றி அவதூறாகப் பேசவோ எண்ணவோ செய்யாதீர்கள். இந்தத் தீய குணத்தைவிட்டு உங்கள் இதயத்தைப்பரிசுத்தமாக்கிக்கொள்ளுங்கள். ஏனெனில் ஷைத்தான் மனிதனுடைய இரத்தம் ஓடும் குழாய்களிலும் கூட ஊடுருவிச் சென்றுகொண்டிருக்கிறான்'' என்று எம்பெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் உம்மத்துக்களுக்கே ஓர் எச்சரிக்கை விடுக்குமுகத்தான் அவ்விதங் கூறியுள்ளார்கள்.'' இந்த விளக்கம் பெரியார் ஸுஃப்யான் பின் ஐனாவைப் பெரிதும் மகிழ்வித்துவிட்டது. அவர்கள் இமாம் ஷாபியீ பத்வாக் கொடுக்க அருகதையுடையவர்கள் என்று அத்தாட்சி வழங்கியதுடன், அவர்களுக்காக நல்துஆவும் செய்தார்கள். ''இனி நீர் சுயமே மார்க்கத் தீர்ப்புகள் வழங்கலாம்'' என்று ஆசியுமளித்தார்கள்.

## அரசாங்கப் பதவி

இச்சமயம் பக்தாதிலிருந்து கலீஃபா ஹாரூனர் ரஷீதின் தலைமையான அதிகாரியொருவர் மக்கா வந்தார். அவரிடம் இமாம் ஷாபியீ அறிமுகப்படுத்தப்பட்டார்கள். அவர்களுடைய

நேர்மையையும், அறிவின் ஆழத்தையும், ஆராய்ச்சியையும் கண்ட அந்த அதிகாரி அவர்களை எமன் பகுதியில் அரசாங்க அதிகாரியாக நியமனஞ் செய்துவிட்டார். தங்களுடைய முப்பதாம் வயதில் அவர்கள் இந்தப் பதவியை ஏற்பதற்காகத் தமது தாயாரின் இடமான எமன் சென்றார்கள். அங்கே அவர்கள் திறமையும் நாணயமுமிக்க அதிகாரியாகப் பதவி உயர்வு பெற்று, அந்த வட்டார நிர்வாகியாகவும் ஆகிவிட்டார்கள்.

இமாமவர்கள் இந்தப் பகுதிக்குப் பதவி வகிக்க வந்தது, அவர்களுடைய கல்வியை மேலும் விருத்தி செய்துகொள்ளப் பெரிதும் வசதியாக இருந்தது. பதவியிலிருந்து கொண்டே எமனில் பிரசித்திபெற்ற ஹுஜைல் கிளையாரோடு நெருங்கிப் பழகி, அரபு அகராதி, சரிதை, சொல்லிலக்கணம், யாப்பிலக்கணம் ஆகியவற்றில் திறமையான தேர்ச்சியடைய இமாமவர்களுக்கு வாய்ப்புக் கிட்டிற்று. மேலும், இந்தப் பதவியிலிருந்து கொண்டே போர்ப் பயிற்சியிலும் அவர்கள் போதிய தேர்ச்சியடையவும் முடிந்தது. குறிப்பாகக் குறிபார்த்து அம்பெய்வதில் இமாமவர்கள் தனியானதோர் தேர்ச்சியடைந்திருந்தார்கள். தாங்கள் போர்ப் பயிற்சி பெற்று, திறமையான ஒரு போர் வீரராக விளங்கியதுபற்றி அவர்கள் பெருமையோடு பேசுவதுண்டு.

இந்தக் காலத்து அரசியல் நிலையை ஓரளவு நாம் நன்கறிவோம். அதாவது, முந்திய இரண்டு இமாம்களுடைய சரிதைகளிலும் இக்கால அரசியல் நிலையை விவரித்துள்ளோம். அப்பாஸியாக் கலீபாக்கள் அபுல் அப்பாஸ், அவர் சகோதரர் மன்ஸூர், அவருடைய மகன் முஹம்மது மஹ்தி, அவருடைய முதல் புத்திரர் மூஸா அல் ஹாதி ஆகியோர் ஹிஜ்ரி 170 வரை அடுத்தடுத்து ஆட்சி செலுத்திவிட்டனர். பிரஸ்தாப ஆண்டில் கலீபா ஹாரூனர் ரஷீது பட்டமேற்றார். இவர் நேர்மையாளர் என்றும், அறிவாற்றலில் சிறந்தவர் என்றும் பெயர் பெற்றிருப்பினும், இவரும் நபிபெருமானாரின் சந்ததியார்களைக்

கொடுமைப்படுத்துவதை நிறுத்தவில்லை. அவர்கள் மீது ஐயங் கொண்டு இவரும் அவர்களை நசுக்கிவந்தார்.*

ஹஜ்ரத் அலீயின் வமிசத்தவரான ஜைது என்பவர் போரிட்டு மாண்டதையும், அவர் புத்திரர் யஹ்யா பஸராவின ருகில் ஒரு போரில் கொல்லப்பட்டதையும் முன்னமேயே குறித் துள்ளோம். அது உமைய்யாக்களின் அந்தியகால ஆட்சி நடந்துகொண்டிருந்த சமயம். அதனால், தமக்குப் போட்டி யற்ற நிலையில் அப்பாஸியாக்கள் அதிகாரத்தைக் கைப்பற்றி னர். அவர்கள் ஒரு பாவமும் அறியாத மதீனாவாழ் சாதாத்து களுக்குச் செய்த கொடுமைகளை முன்னரே பார்த்தோம். இவ் விதமான கொடுமைகளை ஹாரூனர் ரஷீதும் தொடர்ந்து நடத்தி வந்தார்.

எமனில் இந்தக் கலீபாவின் பிரதிநிதியாக அதிகாரம் வகித்த இமாம் ஷாபியீ அவர்கள் தங்கள் நேரிய நடத்தை யாலும், உயரிய ஒழுக்கத்தாலும், இனிய சுபாவத்தாலும், ஏழைகளுக்கு இரங்கும் இயல்பாலும் பொதுஜனங் களுடைய அன்பைக் கவர்ந்துவிட்டார்கள். அநியாயமான நடைமுறைகளையெல்லாம் அகற்றிவிட்டார்கள். இவ்விதம் பலருக்கு நன்மையுண்டாகும்போது சிலருக்கு இடைஞ்சல் உண்டாவதும், அந்தச் சிலரும் தங்கள் சுயநலனுக்காகவே நீதி நேர்மையை மறந்து வாழ்பவர்கள் என்பதும் மனித

---

* நேர்மையாளர், அன்பானவர், ராஜதந்திரி என்றெல் லாம் உலகப் புகழ் பெற்றிருந்த கலீபா ஹாரூனர் ரஷீதின் சரிதையை எழுதவேண்டியதிருக்க, அதை விடுத்து அவர் மகன் மாமூன் சரிதையை அல்லாமா ஷிப்லீ நுஃமானி எழுதி னார். சகல வகையிலும் சரித்திரம் எழுதப் பொருத்தமானவர் ஹாரூன்தான். ஆனால், அவர் சாதாத்துகளை வெட்டித் தள்ளிச் செய்த கொடுமைகள் காரணமாகவே அவருடைய சரிதையைத்தான் எழுதவில்லை என்று அவர் தெரிவிக்கிறார்.

சரிதை காட்டும் உண்மையன்றே! எனவே, இமாமவர்களின் நேர்மையையும், இத்தகைய சுயநலமிகள் வெறுக்கலாயினர். குறிப்பாகப் பனூ ஹாரிஸ், தகீப் என்ற இரண்டு கூட்டத்தார் அந்த வட்டாரத்தில் அதிகாரிகளாக வருபவர்களுக்குப் போதுமான அளவு லஞ்சம் கொடுத்துச் சரிக்கட்டிக் கொண்டு தங்கள் இஷ்டப்படி ஆட்டம்போட்டுவந்தனர். இந்த இரண்டு கூட்டத்தாரும் இமாமவர்களை அணுகித் தங்கள் மாமூலான லஞ்சத்தைப்பெற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினர். இமாமவர்கள் ஆத்திரமிகக் கொண்டு அவர்களைக் கடிந்ததோடு, அவர்கள் நியாய வரம்பு தவறினல் தண்டிக்கப்படுவார்கள் என்றும் எச்சரித்தார்கள். அத்துடன் அந்தப் பிரதேசத்திலுள்ள நியாயமான நபர்கள் எழுவர் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்றை அமைத்து, அன்ருட நிர்வாகங்களை இந்தக் குழுவின் பொறுப்பில் விட்டார்கள். தங்களுக்குக் கீழுள்ள அதிகாரிகளையும், ''எப்போதும் லஞ்சம் வாங்கக் கூடாது; குடி ஜனங்களைக் கொடுமைப்படுத்துவது பாவம்; நீதி வழங்குவதில் தாட்சண்யமே காட்டக்கூடாது; உயிர் போவதாயினும் நேர்மை தவறக் கூடாது." என்றெல்லாம் போதித்துத் திருத்தினர்கள். இதனல், பிரஸ்தாபக் கூட்டத்தார்கள். ஒரு சில அதிகாரிகளை சேர்த்துக் கொண்டு இமாமவர்களுக் கெதிராகச் சதி செய்யலாயினர். இவர்களுள் முத்ரிப் என்ற அதிகாரி மிகுந்த சொல்வாக்குடையவன். இவனுடைய நிருபங்கள் கலீபா ஹாரூனின் சபையில் அதிகமும் கவனிக்கப்படுவதுண்டு. இந்தச் சதிகாரர்கள் சார்பாக இவன் ஹாரூனர் ரஷீதுக்கு ரகசியமாகக் கடிதமொன்று எழுதினன். அதில், ''அமீருல் மூமினீனே, உண்மையாகவே நீங்கள் எமன் பகுதி உங்கள் ஆதிக்கத்திலிருக்கவேண்டும் என்று நாடினல் உடனே இங்குள்ள நிர்வாக அதிகாரியான முஹம்மது பின் இத்ரீஸ் ஷாபியீ என்பவரைப் பதவி நீக்கம் செய்து, அவருடைய ராஜத்துரோகமான குற்றத்தை விசாரித்து அவரைத் தக்கபடி தண்டிக்கவேண்டும்" என்று எழுதியிருந்தான்.

இச்சமயம் மதீனவின் வட பகுதியான தீலம் என்ற பிரதேசத்தில் இமாம் ஹுஸைனின் பேரரின் பேரர்களுள்

ஒருவரான யஹ்யா பின் அப்துல்லாஹ் கலீபாவுக்கெதிராகக் கலகக் கொடியைத் தூக்கினர். உடனே கலீபா ஹாரூனர் ரஷீது, தமது மதிமந்திரி யஹ்யா பர்மகீயின் புத்திரர் ஜஃபர் என்பவர் தலைமையில் அங்கே படையொன்றை அனுப்பினர். அந்தப் படை யஹ்யாவின் படைகளைச் சிதறடித்து அவரையும் கொன்றுவிட்டது.

இந்தக் கிளர்ச்சியால் கிலியடைந்த கலீபா ஹாரூனர் ரஷீது சாதாத்துகள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கலானர். இத்தகைய தருணத்தில் தான் முத்ரிபின் கடிதம் அவர் பார்வைக்கு வந்தது.

## கலீபாவின் கைதி

''யார் இந்த ஷாபியீ?" என்று கலீபா விசாரித்தார். விபரம் கொடுக்கப்பட்டது. ''ஓஹோ குறைஷி குலத்த வரா, ஹாஷிமியா சரிதான்!" என்று தமது புருவத்தை உயர்த்தினர் அவர். நபியின் உதிரம் தம் உடலில் ஓடிய அத்தனை மகான்களையுமே தமது ஆட்சியின் எதிரிகளாக எண்ணித் தொலைப்பதில் முனைந்திருந்த மன்னர்களில் ஒருவரல்லவா! சாதாத்துகள் என்றாலே அவருக்குக் குலை நடுக்கம்! அவர்கள் வமிசத்தினர் கையில் சிறு அதிகாரம் கிடைப்பினும் தமது ஆட்சியின் அஸ்திவாரமே அசைந்து சாய்ந்துவிடும் என்று அஞ்சினர். எனவே, இந்தக் குற்றச் சாட்டில் உண்மை இருக்கவேண்டும் என்று அவர் அனுமானித்தார். உடனே உத்தரவு வெகு வேகமாகப் பறந்தது. எமனிலிருக்கும் அதிகாரி முஹம்மது பின் இத்ரீஸ் ஷாபீயீயை யும், அந்த வட்டாரத்திலுள்ள சாதாத்துகள் அனைவரையும் பிடித்து விலங்கிட்டுத் தமது சபைக்கு அனுப்புமாறு அந்த உத்தரவில் கண்டிருந்தது. இது அந்தப் பகுதியில் இருந்த ராணுவ அதிகாரியான ஹம்மாத் பர்பரி என்பவருக்குக் கிடைத் தது. அவர் அதில் கண்டபடி செய்துவிட்டார்.

இவ்விதம் பக்தாதுக்குக் கொண்டுவரப்பட்ட சாதாத்து களும், இமாம் ஷாபியீ அவர்களும் சிறையிலடைக்கப்

''இத்தனை அறிவுத்திறம் படைத்த உங்களுக்கு எப்படி இந்தக் கஷ்டம் வந்தது?" என்று கலீபா அவர்களிடம் வினவினார்.

''அறிஞனுக்கு வரும் கஷ்டம் தங்கத்தை நெருப்பில் காய்ச்சுவது போன்றது; அதனால் அவன் மாற்றுத்தான் உயரும்'' என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

இப்போது கலீபா ஹாரூன் இமாமவர்களைத் தமக்கு உபதேசம் அருளும்படி கேட்டார். ''அமீருல் மூமினீன் உங்கள் முன் நான் உபதேசமருளக் காத்திருக்கிறேன். ஆனால், பெருமையை ஒதுக்கிப் பணிவுடன் காது தாழ்த்திக் கேட்க வேண்டும்; கேட்டு, இறைவன் சமுகத்தில் உங்களைத் தாழ்மையான அடியாராக ஆக்கிக்கொள்ள வேண்டும்" என்று இமாமவர்கள் கூறினார்கள். கலீபா சமிக்ஞையாலேயே அதை ஏற்றதாகக் கூறியவுடன் இமாமவர்கள் ஓர் அற்புதமான உபன்னியாசத்தை அங்கே நிகழ்த்தினார்கள். அதைக் கேட்டுக் கலீபாவே கண்ணீர் உகுத்து அழுதார்.

அவர்கள் பேசி முடித்ததும், கலீபா தமது இருக்கையி லிருந்தே துள்ளி எழுந்துநின்று, ''மெய்யாகவே, முஹம்மது பின் இத்ரீஸ், முஹம்மது பின் ஹஸனை*விடச் சிறந்த மேதை தாம்" என்று கூறினார். அத்துடன் தமது ஆலோசகர் ஹர்ஸமாவை நோக்கி, அவர்களை விடுதலை செய்வதுடன், அவர்களுக்கு அன்பளிப்புச் செய்து அரசாங்க மரியாதைகளுடன் அனுப்புமாறு உத்தரவிட்டார். அந்த ஆலோசகர் இமாமவர்களுக்கு ஆயிரம் தீனார்கள் அன்பளிப்பு நல்கி, சகல மரியாதைகளோடும் அவர்களை அனுப்பிவைத்தார் என்று சொல்லப் படுகிறது.

---

* இமாம் அபூ ஹனீபாவின் பிரதான மாணவரும், ஹனபி மத்ஹபின் சட்டதிட்டங்களை ஒழுங்குபடுத்திய இருவர்களுள் ஒருவருமான இமாம் முஹம்மதையே கலீபா குறிப்பிடுகிறார்.

## மக்காவின் முப்தி

மீண்டும் இமாம் ஷாபியீ அவர்கள் எமனில் பழைய வேலையை ஏற்பதாயின் அதில் அவர்களை அமர்த்துவதாக இந்த ஆலோசகர் அவர்களிடம் விசாரித்தார். அவர்கள் அதற்கு இணங்கவில்லை. எனவே, இமாமவர்கள் மக்கா திரும்பிய பின்னர் அவர்களை மக்காவின் முப்தியாக நியமனம் செய்திருப்பதாகக் கலீபாவிடமிருந்து உத்தரவு வந்தது. தங்களுடைய அதீதமான அறிவும், அனுபவமும் மார்க்கத் தீர்ப்பு வழங்குவதற்குப் பயன்படுமாதலாலும் ஜனங்களுக்குச் சேவை செய்ய இது வழிசெய்யுமாதலாலும் இமாவர்கள் இந்தப் பதவியை ஏற்றுக் கொண்டார்கள்.

இமாம் ஷாபியீ மக்காவின் முப்தியானதால், தங்கள் உள்ளக்கிடக்கையைச் செயலில் காட்டவும் வாய்ப்புக் கிட்டிற்று. அதாவது, அவர்கள் தாங்களே ஒரு மதரஸாவைத் தொடங்கி ஹதீஸ் பிக்ஹு ப் பாடபோதனை யளிக்கவேண்டும். மார்க்கத் தீர்ப்புகள் வழங்கவேண்டும் என்று கொண்டிருந்த ஆர்வம் இப்போது நிறைவேறலாயிற்று. இமாம் ஷாபியீயின் மதரஸாவைத் தேடி நெடுகிலிருந்தும் மாணவர்கள் வரலாயினர். ''எத்தகைய சிக்கலான பிரச்சினைக்கும் உடனடியாகத் தெளிவான விளக்கத்தோடு தீர்ப்பளிக்கும் திறமை கொண்டவர்கள் இமாம் ஷாபியீயைப்போல வேறு யாரையும் நான் காணவில்லை'' என்று பின்னர் இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் அருளியதுபோல அப்போதே இமாமவர்களின் தீர்ப்புகள் நெடுகிலும் புகழ் பரப்பலாயின.

## பக்தாதில்

ஹிஜ்ரி 195 வரை (அதாவது தங்களுடைய நாற்பத்தைந்தாவது வயதுவரை) இமாமவர்கள் மக்காவிலேயே தங்கியிருந்து மகத்தான மார்க்கச் சேவைகளைச் செய்தார்கள், அப்போது பக்தாத் இஸ்லாமிய உலகின் தலைநகராகப் பல விதத்திலும் சிறப்புப் பெற்றுக் கொண்டிருந்தது. உலகின்

அறிஞர்கள், மார்க்க வல்லுனர்கள் பலரும் அங்கே வந்து குழுமிக்கொண்டிருந்தனர். அவர்களில் சிலர் இமாம் ஷாபியீ யும் பக்தாத் வந்தால் நலம் என்றும், அதன்மூலம் அவர்கள் மேதாவிலாசத்தின் பயனை இன்னும் அதிகமானவர்கள் பெற இயலுமென்றும் அழைத்துக்கொண்டிருந்தனர். கலீபா ஹாரூனர் ரஷீதும் அத்தகைய அழைப்பு ஒன்றை விடுத்தார். எனவே, இமாமவர்கள் மக்காவைவிட்டுப் புறப்பட்டு பக்தாத் சென்றடைந்தார்கள்.

இமாம் ஷாபியீயிக்கு மகத்தான வரவேற்பு ஒன்று நடத்து வதற்காகக் கலீபா ஹாரூனர் ரஷீது பெரிய ஏற்பாடுகள் செய்தார். நகரிலிருந்த சகல அறிஞர்களும், பெரியார்களும் அந்த வரவேற்பில் கலக்கவேண்டும் என்று அழைப்பு விடுத்தார். அவருடைய ஆஸ்தான மண்டபத்தில் அறிஞர்கள் கூட்டம் பொங்கிப் பெருகிக் கொண்டிருந்தது. இமாம் ஷாபியீ அவர்கள் உரிய மரியாதையோடு உள்ளே அழைத்து வரப்பட் டார்கள். தங்களுக்குத் தரப்பட்ட வரவேற்புக்குப் பதிலளித்து அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு யாவரையும் பரவசப்படுத்தி விட்டது. இவ்வளவு அற்புதமான உபன்னியாசத்தையும் நிகழ்த்த முடியுமா என்று யாவரும் திகைத்துவிட்டனர். ஹாரூனர் ரஷீது உணர்ச்சி வசமாகிக் கண்ணீர் சிந்தினார். பேச்சு முடிந்ததும், இமாமவர்களைத் தமது அருகிலமர்த்தி, ஐம்பதாயிரம் தீர்ஹம் வைக்கப்பட்ட ஒரு தட்டைத் தமது கையாலேயே இமாமவர்களிடம் அவர் நல்கினர்.

இமாமவர்கள் வெளியில் வந்ததும், அந்த ஐம்பதாயிரம் திர்ஹங்களில் நாற்பதாயிரத்தை உலமாக்களுக்கும், துறவி களுக்கும் ஏழை, அனாதை, திக்கற்ற விதவைகள் ஆகியோருக் கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார்கள். இதைக் கண்ட ஒருவர், "கலீபா தங்களுக்கு அன்பளிப்பாகத் தந்ததை நீங்கள் ஏன் இவ்வாறு பங்கிட வேண்டும்?" என்று வினவினர். அது கேட்ட இமாமவர்கள், "அவர்களின் செல்வத்தில் யாசிப்போர் களுக்கும் பங்கு இருக்கிறது" என்ற திரு குர்ஆன் வசனத்தை ஓதிக்காட்டி, "இதனால்தான் இவர்களுக்குரிய பங்கைக்

கொடுத்தேன். மேலும், இந்தச் செல்வம் இவர்களிடமிருந்து கலீபாவிடம் போனதுதான். இது மீண்டும் இவர்களிடம் போய்ச்சேர என்னையும் இறைவன் ஒரு சிறிய கருவியாக ஆக்கிவிட்டான். அதனால்தான், இப்படி வாங்கி அப்படிக் கொடுத்துவிட்டேன். மேலும், மறுமையில் இறைவன் இந்தக் கடமையை நான் சரிவரச் செய்தேனா என்று வினவும்போது திருப்திகரமாகப் பதிலளிக்க வேண்டுமல்லவா!'' என்று பதி லளித்தார்கள்.

இமாமவர்களிடம் கலீபா ஹாரூனுக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டாகிவிட்டது. எனவே, அவர்கள் விரும்பும் எந்தப் பகுதியிலும் அவர்களை நீதிபதியாக நியமிப்ப தாகத் தெரிவித்தார். இத்தகைய அரசாங்கப் பதவிகளின் பலாபலனை இமாமவர்கள் நன்கு அறிவார்கள். இதே நீதிபதிப் பதவியின் சாக்கில்தான் இமாமுல் அஃலம் அபூ ஹனீபாவின் உயிர் குடிக்கப்பட்டது என்பதையும் அறிவார்கள். எனவே, அதற்கு அவர்கள் இணங்கவில்லை. அவர்களுடைய நோக்கம் முஸ்லிம் சமூகம் முழுவதற்கும் சேவை செய்வதாகும். அதற் கான வழிமுறைகளில் ஈடுபடவேண்டும் என்று அவர்கள் தீர் மானித்திருந்தார்கள். அதனால், அரசாங்கத்தோடு தங்களைக் கட்டிப்போடும் இந்த வேலையை ஏற்க அவர்கள் தயாரா யில்லை. அவர்கள் மனநிலையைப் புரிந்துகொண்ட கலீபா ஹாரூன் அவர்களை வற்புறுத்தாது விட்டு விட்டார்.

பக்தாதில் இரண்டாண்டுகள் தங்கி, மார்க்கத் தீர்ப்புகள் வழங்கவும், மார்க்க உபன்னியாசங்கள் புரியவுமாக அவர்கள் வாழ்ந்திருந்தார்கள். எண்ணற்றவர்கள் அவர்களுடைய போதனைகளால் பயனடைந்தார்கள். இமாமவர்கள் பக்தாத் வருமுன் பக்தாதிலுள்ள ஜாமிவுல் கர்பிய்யி என்ற மஸ்ஜிதில் இருபது அறிஞர்கள் தனித்தனியே பாடம் நடத்திவந்தனர். இமாமவர்கள் பாடபோதனை தொடங்கியபின் அவர்களில் பதினறு பேர் வேறு இடங்களுக்குச் செல்லவேண்டியதாயிற்று. யாவரும் கலாஞான போதத்துக்கு இமாமவர்களிடமே வரலாயினர்.

பக்தாதில் இமாமவர்கள் முதலில் பிஷ்ருல் மரீஸீ என்பாருடைய வீட்டில் தங்கியிருந்தார்கள், அந்த வீட்டில் மாடி முழுமையையும் இமாமவர்களின் உபயோகத்துக்காக அவர் ஒதுக்கிக் கொடுத்தார். சில நாட்களுக்குப் பின்னர் அவருடைய தாயார் இமாமவர்களிடம் வந்து, ''நீங்கள் ஏன் இந்த 'ஜிந்தீக்' (சமுதாயத்துக்கே ஆபத்து விளைக்கும் மார்க்க முரணான காரியங்களைச் செய்யும் புற ஒழுக்கவாதி) வீட்டில் தங்கியிருக்கிறீர்கள்?" என்று வினவினாள். அதாவது, இந்த பிஷ்ர் ஒரு முஃதஜிலாவாக இருந்ததையே அவள் இவ்விதம் சுட்டிக்காட்டினாள். உடனே இமாமவர்கள் அவருடைய வீட்டைக் காலிசெய்துகொண்டு அபூஹஸ்ஸான் என்பாருடைய வீட்டில் போய்த் தங்கிக் கொண்டார்கள். அவர் இமாமவர்களுக்கு மிகுந்த மரியாதை செய்து வந்தார். அங்கே ஓர் ஆண்டுவரை தங்கியிருந்து, பின்னர் ஸஃபரானீ என்பாருடைய வீட்டில் போய்த் தங்குவதற்குப் புறப்பட்டார்கள். அவர்கள் தமது வீட்டை விட்டுப் போவது குறித்துப் பெரிதும் வருந்திய அபூஹஸ்ஸான் அவர்களுக்குப் பல காணிக்கைகளையும் கொணர்ந்து கொடுத்து வழியனுப்பினார். கடைசியில் மக்காதிரும்பும்வரை ஸஃபரானீயின் வீட்டிலேயே அவர்கள் தங்கியதாகச் சொல்லப்படுகிறது.

பக்தாதிலும்—அதன் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட பல்வேறு நகரங்களிலும்—இமாம் அபூ ஹனீபா அறிவித்துத்தந்த பிக்ஹு 'மஸ்அலா'க்களை ஒட்டிய தீர்ப்பே இச்சமயம் வழங்கப்பட்டுவந்தது. காரணம், கலீபா ஹாரூனர் ரஷீதின் பிரதான சட்ட ஆலோசகரும், பிரதம நீதிபதியுமான இமாம் அபூ யூஸுப், இமாம் முஹம்மது இப்னு ஹஸன் ஷைபானியியுடன் சேர்ந்து ஹனபி மத்ஹபின் சட்டதிட்டங்களை ஒழுங்குபடுத்தியதுடன், நாடு முழுவதிலுமுள்ள நீதிமன்றங்கள் அந்த அடிப்படையிலேயே தீர்ப்புகள் அளிக்கவேண்டும் என்று உத்தரவிட்டுவிட்டார்கள். இதைக் கலீபா ஹாரூனர் ரஷீதும் ஆதரித்தார். இதன்மூலம் குழப்பங்கள் தவிர்க்கப்படவேண்டும். ஒரேவிதமான சட்ட அடிப்படையில் தீர்ப்புக்கள் வழங்கப்படவேண்டும் என்று அவர் கருதினார். இமாம் ஷாபியீயோ

இமாம் அபூ ஹனீபாவிலிருந்து பல விஷயங்களில் அபிப்பிராய பேதமுள்ளவர்களாக இருந்தார்கள். எனினும், அவர்களுடைய மேதையையும், அவர்கள் திரு குர்ஆன், ஹதீஸ் அடிப்படையிலேயே தமது முடிவை வெளியிட்டதால், அந்தத் தீர்ப்புக் களின் மாண்பையும் கலீபாவும், இமாம் அபூ யூஸுஃபும் மதித்தார்கள். கலீபாவின் அவையில் இமாமவர்களுக்கு முக்கிய மான ஸ்தானமளிக்கப்பட்டு, மரியாதை செய்யப்பட்டு வந்தது. கலீபாவின் பிரதமர் உட்படப் பலரும் அவர்களிடம் விசேஷ அன்பு பாராட்டி வந்தனர். உண்மையான—அறிஞன்—பய பக்தியுள்ளவன்—எங்கு சென்றாலும் மதிக்கப்படுவான் என்பதற்கு இமாமவர்கள் நற்சான்றாக விளங்கினார்கள்.

ஆனால், ஹிஜ்ரி 193-ல் (ஜமாதுல் ஆகிர், பிறை நான்கு, சனிக்கிழமையன்று) கலீபா ஹாரூனர் ரஷீது காலமானதுடன் அரச சபையின் நிலையில் பல மாறுதல்கள் உண்டாகிவிட்டன. ஹாரூனின் மூத்த மகன் அமீன் நான்கு வருஷம் எட்டு மாதம் ஆட்சி செய்தார். அரைக் கிறுக்கன்போல் காரியம் செய்த இந்தக் கலீபா கேளிக்கைப் பிரியனாகப் போகத்தில் மூழ்கவே, இவருடைய சபையில் நல்லவர்கள் போகவரவே மார்க்கமற்று விட்டது. இதனால்தான், இமாமவர்கள் அரசவைத் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டு தங்கள் பாடபோதனை, மார்க்கத் தீர்ப்பு வழங்கல் ஆகியவற்றில் கவனஞ் செலுத்திக் கொண்டிருந்தார்கள். ஹிஜ்ரி 197 கடைசியில் அமீன் ஆட்சியில்குழப்பம் மிஞ்சிய சமயம் அங்கிருந்து புறப்பட்டு மக்காவுக்கு ஹஜ் செய்வதற்காகப் போய்விட்டார்கள். அவர்கள் பக்தாத் திரும்பு முன் ஹிஜ்ரி 198 முஹர்ரம் மாதம் கலீபா அமீன் கொலை செய்யப்பட்டு, மாமூன் கலீபாவானார். இவர் உலகின் சிறந்த ஆட்சியாளர்கள் சிலருள் ஒருவராகக் கணிக்கப்படுவராவார். ஆனால், இவருடைய ஆட்சியில் முஃதஜிலாக்களின் ஆதிக்கம் ஓங்கிவிட்டது. இமாமவர்கள் மக்கா போய் ஹஜ்ஜை முடித்துக் கொண்டு பக்தாத் திரும்பியபோது இமாம் அபூ யூஸுஃப் போன்ற மேதைகள் இருந்து மார்க்கச் சட்டம் வளர்த்த அதே நகரில் இன்று முஃதஜிலாக்களே கொட்டமடிக்கக் கண்டார்

கள். நகரப் பிரதம நீதிபதியாகக்கூட அவர்களுள் ஒருவரே நியமனமாகியிருந்தார். இதுகண்டு மனக் கசப்படைந்த அவர் கள் பக்தாதை விட்டுக் கிளம்பி எகிப்து சென்றுவிட முடிவு செய்து ஹிஜ்ரி 198 ஷவ்வாலில் அங்கே போய்விட்டார்கள்.

இமாமவர்கள் பக்தாதைவிட்டுப் புறப்படுவது அங்கிருந்த அவர்களுடைய மாணவர்களுக்குப் பெருத்த வேதனையை அளித்தது. அவர்களுள் தலையாயவர்களான இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் இமாமவர்களை நெருங்கி, "நீங்கள் எங்கு புறப்படுகிறீர்கள்?" என வினவினார்கள். அதற்குப் பதிலாக இமாமவர்கள்,

"என் நப்ஸ் (மனம்)
எகிப்துமீது ஆசையானதாகக் கண்டேன்;
அதற்கிடையே காடு, வனாந்தரமெல்லாம்
நடந்தாக வேண்டும்.
அல்லாஹ்வின் ஆணை,
நான் எகிப்தின்பக்கல் ஈர்க்கப்படுவது
சுகமும், வாழ்வும் பெறுவதற்கா
புதைகுழியைத் தேடி அடைவதற்கா
என்பதை நான் அறியேன்."

என்ற கருத்துள்ள ஒரு பாடலிலேயே பதிலளித்துவிட்டார்கள்.

## எகிப்தில்

இமாம் மாலிக்கின் மத்ஹபைப் பின்பற்றியவர்கள் எகிப்தில் அதிகமிருந்தனர். எனவே, இமாம் மாலிக்கின் தலையாய மாணவரும், அச்சமயம் பிரபலமடைந்து விட்டவர் களுமான இமாம் ஷாபியீ அவர்களைத் தங்களிடையே வர வேற்க அந்தக் கூட்டத்தார் ஆவல் கொண்டிருந்தனர். இதனால், இமாமவர்கள் கெய்ரோ சென்ற சமயம் அங்கே உற்சாகமான வரவேற்பு நல்கினர்; இமாமவர்களுக்கு ஆதரவு அளித்தனர். அவர்களுடைய உபன்னியாசங்களையும் தீர்ப்புக் களையும் கேட்க ஆயிரக்கணக்கில் வந்து கூடினர். ஆனால்,

விரைவிலேயே மாலிக்கி மத்ஹபைப் பின்பற்றியவர்களில் பெரும்பாலோருக்கு இமாமவர்களிடம் ஆத்திரமுண்டாக லாயிற்று. தங்களுடைய ஆசிரியரான இமாம் மாலிக் அவர் கள் ஒவ்வொரு பிரச்சினையும் பற்றி எவ்விதம் அபிப்பிராயப பட்டுள்ளார்களோ அதுபோன்றே இமாம் ஷாபியீயும் அபிப் பிராயப்படவேண்டும் என்று அந்த ஜனங்கள் எதிர்பார்த்தார் கள். இமாம் ஷாபியீ தங்கள் சுயமான அபிப்பிராயங்களை வெளியிட்டபோது, அவற்றில் சில இமாம் மாலிக்கின் அபிப் பிராயத்துக்கு முற்றுமே மாறுபட்டவையாக இருக்கக்கண்டு அவர்கள்மீது கோபங் கொள்ளலாயினர் இமாம் ஷாபியீ பேசும் கூட்டங்களைப் பகிஷ்கரித்தனர். அவர்களை அதிகமாகப் பொருட்படுத்தாது ஒதுக்கலாயினர்.

இதையெல்லாம் கண்ட இமாம் ஷாபியீ அவர்கள் தங்க ளுக்குள்ளேயே நகைத்துக் கொண்டார்கள். கலாஞானத்தின் பெருமையை அறிய முடியாதபடி துவேஷத்தால் அறிவு மறைக்கப்பட்ட மக்களைக் கண்டு அவர்கள் அனுதாபப்பட்டார் கள். அத்துடன், கவிதைகள் எழுதுவதில் கைதேர்ந்தவர் களான இமாமவர்கள் ஒரு பாடலில் இதுபற்றி இந்தக் கருத் துப்படப் பாடினுர்கள் :

**என் (கல்வியறிவெனும்) நன் முத்துமாலையை**
**ஒட்டகம் மேய்ப்பவர்களுக்கா கொடுப்பேன்?**
**இறைவன் நல்லருளால் உரிய ரசிகன் கிட்டும்போது**
**அவனிடம் அன்புகொண்டவனுக**
**என் முத்தாரத்தை அவனுக்களிப்பேன்.**
**இன்றேல், இது வீணுகவன்றேபோகும்!**
**அறிய மறுக்கும் மூடன்முன் கலாஞானத்தை**
**உதிர்ப்பவன் அதை விரயமாக்கியவனுவான்;**
**அறிவை விழைபவனுக்கு அதைத் தர மறுப்பவன்**
**அநியாயக்காரனேயாவான்,**

ஒரு கூட்டத்தார் தங்களை வெறுக்கின்றனர் என்பதற்காக இமாமவர்கள் தங்கள் சேவையை நிறுத்திவிடத் தயாரா யில்லை. மேலும், இமாமவர்களின் தாய் வழியைச் சேர்ந்த

அஜ்து இனத்தார் சிலர் கெய்ரோவிலும் இருந்தனர். இமாமவர்கள் அவர்களோடுதான் தங்கியிருந்தார்கள். அவர்கள் இமாமவர்களுக்கு பெருத்த மதிப்பு காட்டிவந்தனர். எனவே, கெய்ரோவிலும் மதரஸா ஒன்று தொடங்கி, ஹதீஸ், பிக்ஹு வகுப்புகளை நடத்தலானுர்கள்; மார்க்க சம்பந்தமான தீர்ப்புகளை வழங்கலானுர்கள். மேலும், அறிவு முதிர்ச்சியடைந்து விட்ட இந்த நிலையில் பல அருமையான நூற்களை எழுதவும் அவர்களுக்கு வாய்ப்பிருந்தது. இவ்விதம் சுமார் ஆறு ஆண்டுகள் இமாமவர்கள் அங்கே தங்கி மாபெரும் மார்க்கச் சேவை செய்தார்கள்.

## மரணம்

இச்சமயம் அவர்களுக்கு மூலவியாதி வந்துவிட்டது. இதனுல் ஆசனத்திலிருந்து இரத்தம் விழலாயிற்று. இதற்கிடையிலும் அவர்கள் தங்கள் வேலைகளை ஒழுங்காகவே செய்து கொண்டுவந்தார்கள். அற்புதமான நூற்கள் சிலவற்றை இந்த வேதனையிடையிலும் அவர்கள் எழுதி முடித்தார்கள். இரண்டு மூன்று ஆண்டுகளாகக் கஷ்டப்படுத்திய மூலவியாதி பின்னர் அதிகமாகிவிட்டது. இதனுல், அவர்கள் வாகனத்தின் மீது அமர்ந்தால் இரத்தம் பீரிட்டு வாகனத்தின்மீது போடப்பட்டிருக்கும் துணியையெல்லாம் நனைத்து விடும் என்று ஹாபிஸ் இப்னு ஹஜர் கூறுகிருர்கள். இவ்விதம் அவர்கள் துயரப்பட்டுக்கொண்டிருக்கும் போதே கயவன் ஒருவனின் சம்மட்டியடியால் அவர்களுக்கு மரணம் சம்பவித்தது என்று சொல்லப்படுகிறது.

மாலிக்கி மத்ஹபைச் சேர்ந்த வக்கிர மனம் படைத்தவர்கள் சிலர் இமாமவர்களிடம் கடுமையான துவேஷங் கொண்டு அவர்கள் மாண்டுபோனுல் எவ்வளவோ நலமாகுமே என்று கூட எண்ணத் தலைப்பட்டுவிட்டனர். தங்களுக்கு மத்ஹபை வழங்கிய மகானின் அபிமான மாணவரை, உலகம் கண்டிராத பேராற்றல் பெற்ற பெரியாரை மிகவும் இழிவாக ஏசிப் பேசலாயினர். இவர்களுள் ஒருவனை அஷ்ஹப் என்பவன் ''இறைவா,

இந்த ஷாபியீயைச் சாகடித்துவிடு! இன்றேல், மாலிக்கி மத்ஹபே அழித்துவிடும்'' என்று அடிக்கடி பிரார்த்திப்பதைக் கண்ட முஹம்மது பின் அப்துல்லாஹ் என்பவர். இதை இமாமவர்களிடம் போய்த் தெரிவித்தார். இதைக் கேட்ட இமாமவர்கள், ''நான் மரித்து விடவேண்டும் என்று பலர் விரும்புகின்றனர். ஆனால், நான் இறந்து இவர்கள் மட்டும் சிரஞ்சீவிகளாக இருந்து விட முடியுமா என்ன?'' என்று கூறிவிட்டார்கள். (இதுபோன்றே இமாமவர்கள் காலமான பதினெட்டாம் நாள் இந்த அஷ்ஹபும் காலமாகிவிட்டான்,)

இச்சமயத்தில் இமாமவர்கள் கொடுத்த மார்க்கத் தீர்ப்பு ஒன்று மாலிக்கிகளையே ஆத்திரம் கொள்ள வைத்தது. அப்போது கெய்ரோவில் மாலிக் மத்ஹபின் தலைவர்களுள் ஒருவனாக இருந்த பீத்தான் பின் அபிஸ் ஸம்உ என்பவன் வெறி தலைக்கேறியவனாக இமாமவர்களின் முன்னர் போய் நின்று, அவர்களை மிகவும் கேவலமாகத் திட்டலானான். இதனால், அவன் காவலதிகாரிகளால் கைதுசெய்யப்பட்டு, விசாரணை நடந்து, தண்டிக்கப்பட்டான். உடனே அவனுடைய ஆத்திரம் அணை கடந்துவிட்டது. இமாமவர்களைப் பழிவாங்கச் சந்தர்ப்பம் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் இரவில் இமாமவர்கள் இருளில் தனியே போய்க் கொண்டிருந்தார்கள். இதைக் கவனித்த பீத்தான், அவர்களின் பின்னால் பதுங்கிப் போய், ஒரு சம்மட்டியால் இமாமவர்களின் தலையிலடித்து விட்டான். அதனால் இமாமவர்கள் மண்டை உடைந்து, ரத்தம் பீரிடக் கீழே விழுந்துவிட்டார்கள். மரணப்பிணி அவர்களைப் பற்றிக் கொண்டுவிட்டது. கட்டுகளுடன் இமாமவர்கள் படுக்கையில் கிடத்தப்பட்டிருந்தார்கள். அவர்களுடைய உணர்வு மாறவில்லை; நினைவு பிசகவில்லை. அல்லாஹ்வின் நினைவிலேயே தங்கள் மரணவேதனையை அவர்கள் மறக்க முயன்று கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் இமாம் முஜ்னி என்பவர்கள் அவர்களை அணுகி, ''குரு மகானே, தங்கள் உடல்நிலை எப்படியிருக்கிறது?'' என்று வினவினார்கள். ''இன்று நான் என் சகோத

ரர்களையும், இவ்வுலகையும் விட்டு விடைபெற்று என்] அமல் களுக்காக இறைவனிடம் கூலிபெறப் போய்க் கொண்டிருக் கிறேன். என் ஆவி சொர்க்கம் சென்று]இன்பமடையுமா, இல்லை, நரகம் சென்று வேதனைப்படுமா என்பது எனக்குத் தெரியாது" என்று பதிலளித்தார்கள். மக்ரிப் நேரத்தில் சமிக்ஞையாலேயே தொழுகையை நிறைவேற்றினார்கள். அவர் களுடைய நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அருகிலிருந்த வர்களிடம், ''இந்த நகரிலுள்ள உத்தமரான இத்ரீஸ் அவர்களை எனக்காகப் பிரார்த்திக்குமாறு கூறுங்கள்" என்று தெரிவித்தார்கள். அதன்பின் ஹீனமான ஆனால், தெளிவான குரலில் அவர்கள் கீழ்க்காணுமாறு பிரார்த்தித்தார்கள்: ''கிருபையாளனான இறைவா, நான் குற்றங்குறைகள் நிறைந்தவன். எனவேதான், உன் சந்நிதியில் அருள் பிச்சையை யாசிக்கிறேன். என் நிலை நெருக்கடியானதாகி, வேறு போக்கற்ற நிலையில் என்நம்பிக்கையை உன் திருச்சமுகத் துக்குக் கொணர்ந்துள்ளேன். அடியார்களின் குற்றங்குறை களனைத்தையும் மன்னித்து, அவர்களுக்கு மகத்தான அருட் பேறுகளை வழங்குபவன் நீயேயன்றோ! எங்களுடைய அவல நிலையிலே உன் மன்னிப்பும் கருணையும் மட்டும் இல்லாது போயின் ஷைத்தானின் ஏமாற்றத்துக்கு முன்பு எந்த வணக்க வாளியோ, பயபக்தியாளனோகூடத் தப்பவே முடியாது. ஹஜ்ரத் ஆதம் நபி (அலை) அவர்களையே வஞ்சித்து ஏமாற்றிய ஷைத்தானின்முன் அற்பசக்திபடைத்த அடியார்களான எங்க ளால் யாது செய்ய இயலும்! இறைவா, இந்த ஓர்அடியானை நீ பிழை பொறுத்து மன்னிப்பதன் மூலம், பெரிய குறை நிறைந்த ஒருவனையே மன்னித்தவனாவாய். இந்த அடியானான நானோ இரவும் பகலும் தவறிழைத்துக் கொண்டிருந்தவன். என்னை நீ நரகில் தள்ளித் தண்டித்தாலும், அப்போதும் நான் உன்மீது கொண்டுள்ள நம்பிக்கையை கைவிடமாட்டேன். நான் சதாவுமே தவறுகள் செய்தவன்; பல பெருங் குறைகள் என்னிடமிருந்துள்ளன. ஆனால், 'அவற்றைவிட உன் கிருபை யும், கருணையும் மகத்தானவையன்றோ! என் தவறுகளையும், குறைகளையும் பெரிதாக எண்ணினேன்; ஆனால், உன்

காருண்யத்துக்கு முன்பு அவை அற்பமானவையாகி விட்டன.'

இதன்பின் இஷாத் தொழுகை நேரம் நெருங்கியதும், அந்தத் தொழுகையையும் சமிக்ஞையாகவே தொழுதார்கள். அதே நிலையில் இறைவனிடம் பிரார்த்தித்தவாறே அவர்களுடைய புனித ஆத்மா அவர்களுடைய உடலை விட்டுப்பிரிந்து விட்டது. (இன்னாலில்லாஹி-வ-இன்னா இலைஹி ராஜிஊன்).

இமாமவர்கள் ஹிஜ்ரி 204 ரஜப் மாதம் பிறை முப்பது (கி. பி 720 ஜனவரி 20) வெள்ளிக்கிழமை இரவில் காலமானார்கள். அப்போது அவர்களுடைய வயது ஐம்பத்து ஐந்து ஆகியிருந்தது.

அந்த வெள்ளிக்கிழமை இரவிலேயே அவர்களை நல்லடக்கம் செய்துவிட அவர்களுடைய அன்பர்கள் கருதினார்கள். ஆனால், கெய்ரோ நகரில் வாழ்ந்த பொதுஜனங்கள் மாபெரும் இமாமாயும் மேதையாயும் விளங்கிய அவர்களுடைய ஜனாஸாத் தொழுகையில் கலந்துகொள்ள அவாவுவதை அறிந்து, மறுநாள் ஜும்ஆ குத்பாவுக்குப் பிறகு அடக்குவதென முடிவு செய்யப்பட்டது.

இமாம் முஜ்னி அவர்கள் இமாமவர்களின் சடலத்தைக் குளிப்பாட்டினார்கள். ஜும்ஆத் தொழுகை முடிந்ததும் ஜனாஸாத் தொழுகை நடத்தப்பட்டது.

பின்னர், இமாமர்களுடைய பூத உடல் கெய்ரோ நகருக்கு வெளியில் மக்தம் மலையடிவாரத்திலிருந்த புஸ்தாத் என்ற இடத்திலுள்ள காராபத்துஸ் ஸுக்ரா என்ற அடக்கஸ்தலத்தில் அஸ்ருத் தொழுகைக்குமுன்பே நல்லடக்கம் செய்யப்பட்டது.

அன்று தொட்டு இன்றுவரை அங்கே தினமும் ஏராளமான முஸ்லிம்கள் வந்துகூடி இமாமவர்களுக்காக 'துஆ'ச் செய்து செல்கின்றனர்.

இந்த அடக்கஸ்தலத்தையொட்டி பலஸ்தீனில் சிலுவை ஏந்திவந்த ஐரோப்பியர்களைக் கலங்க அடித்த ஸுல்தான் ஸலாஹுத்தீன் மதரஸா ஒன்றை நிர்மாணித்துள்ளார். இன்று இமாமவர்களின் அடக்கஸ்தலத்தின்மீது காணப் படும் 'குப்பா'வோ ஐயூபி அரசர் மலிக்குல் காமில் என்பவ ரால் கட்டப்பட்டதாகும்.

அபூ அப்துல்லாஹில் முதவ்வியி என்ற பெரியார் சொல்கிறார்: ''இமாம் ஷாபியீ மரணித்தபின் அவர்களை நான் கனவில் கண்டு, 'அல்லாஹ் உங்களை எவ்விதம் நடத்தினன்?' என்று கேட்டேன். அப்போது அவர்கள், 'அவன் என் பிழை பொறுத்தான்' என்று பதிலளித்தார்கள். 'எந்த அமல்களுக்காக?' என்று நான் வினவியதற்கு, 'நான் இந்த ஐந்து ஸலவாத்துக்களை நியமமாக ஓதி வந்தேன். அதன் பரக்கத்தால்' என்று பதிலளித்து, இந்த ஸலவாத்துக் களைக் கூறினர்கள்: அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் பி அததி மன் ஸல்லா அலைஹி, ஸல்லி அலா முஹம்மதின் பி அததி மன் லம் யுஸல்லி அலைஹி, வ ஸல்லி அலா முஹம்மதின் கமா துஹிப்பு வத்தருலா அன் துஸல்லிய அலைஹி, வ ஸல்லி அலா முஹம்மதின் கமா அமர்த்த பிஸ்ஸலாத்தி அலைஹி, வ ஸல்லி அலா முஹம்மதின் கமா யன்பகிஸ் ஸலாத்து அலைஹி, வ ஸல்லிம் அலைஹி வ ஆலிஹி வ ஸஹ்பிஹி அஜ்மஈன்.''

## தோற்றமும், குடும்பமும்

இமாம் அவர்கள் செக்கச் சிவந்த நிறத்தினர். நடுத்தர மான உயரமுடையவர்கள். கைகள் நீண்டவையாய் இருந்தன. அவர்களுடைய நெற்றி விரிந்து பெரிதா யிருந்தது. அவர்களுடைய வதனம் புன்னகை தவழ்வ தாக விளங்கிற்று. பார்வை கம்பீரமானதாக இருந்தது. அவர்களுக்கு முத்துப்போன்ற வரிசையான பற்களிருந்தன. அடர்ந்த நடுத்தர அளவோடு கூடிய தாடியும் வைத்திருந் தார்கள். பிற்காலத்தில் அந்தத் தாடிமீது மருதோன்றி

இலையின் சாயம் பூசப்பட்டுச் சிவந்திருந்தது. அம்மை வடுக்கள் போன்ற சில தழும்புகளுடன் கூடிய நீண்ட மூக்கு அவர்களுடையது.

இமாமவர்கள் மிருதுவான உடையையும், கித்தான் உடையையும் உடுப்பார்கள். பருத்திப் போர்வையைப் போர்த்துக்கொள்வார்கள். நடுத்தரமான தொப்பியும், தலைப் பாகையும், காலுக்கு மேஜோடும் (ஸ்டாக்கிங்ஸ்) விரும்பி அணிவார்கள்.

இமாமவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை மணந்திருந்தார்களா என்பது சரியாகத் தெரியவில்லை. அவர்கள் தங்கள் இளமைப் பருவத்தில் மக்காவிலிருக்கும் போதே மணம் புரிந்து கொண்டிருக்கிறார்கள். அந்தப் பெண்மணியின் பெயர் ஹமதா என்பது. அவர் ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்களுடைய சந்ததியாராவார்.

இமாமவர்கள் தாங்கள் மக்காவில் குறைஷி மாது ஒருவரை மணந்துகொண்டதாக ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டுள்ளார்கள். இந்த மனைவிதான் ஹமதா என்று கூறப்படுகிறது. இமாமவர்கள் சொல்கிறார்கள்: "நான் அந்தக் குறைஷிப் பெண்ணை மணந்தபின்னர் அவரும் கவிபாடக் கூடியவர் என்று அறிந்தேன். இதனால் நாங்களிருவரும் எங்கள் வாலிபமான அக்காலையில் புதிது புதிதாகக் கவிதைகளைப் புனைந்து ரசித்துக்கொண்டிருப்போம். ஒருநாள் நான் என் மனைவியை நோக்கி,



'அவன் அவளைப் புகழ்ந்து, அவளிடம் அன்புகாட்டி
அவளைப் போற்றி உள்ளன்புடன் நேசித்தாலும்,
அந்தக் காதலி அவனை நேசிப்பதுமில்லை;
அவன் காதல் கண்டு மனமிரங்குவதுமில்லை.
இது அவனுக்கு மாபெரும் வேதனையளிப்பதல்லவா!'

என்று பாடிக்கொண்டிருந்தேன். இந்த இடத்தில் என் மனைவி என்னை இடைமறித்து,

'காதலி பணிவோடும், தாழ்மையோடும்
அவனை விரும்புகிறாள்.
தவறியாவது அவன் பார்வை தன்பக்கம் வரும்போது
அவன் தன்னைப் பார்க்கமாட்டானா என்று
ஏங்கித் தவிக்கிறாள்.
அவனோ, அவளைப் பொருட்படுத்தாது
வேறு எங்கேயோ பார்த்துக்கொண்டிருக்கிறான்.
இது அவளுக்கு மாபெரும் வேதனையளிப்பதல்லவா!

என்று (நான் பாடிய சந்தத்தில், அதே பாணியில்) திருப்பிப் பாடிவிட்டார்.''

இமாமவர்களுடைய மனைவியான ஹமதாவுக்கு மூன்று ஆண்களும், இரண்டு பெண்களும் பிறந்திருந்தனர். ஆண்களில் இருவர் சிறுவயதிலேயே காலமாகி விட்டனர். அபூ உதுமான் முஹம்மது என்ற ஒரு புதல்வர் மட்டுமே ஜீவித்திருந்தார்கள். பெண் குழந்தைகளின் பெயர்கள் பாத்திமா, ஜைனப் என்பனவாகும். இமாமவர்களுடைய குடும்பத்தில் தகராறுகள் உண்டானதேயில்லை. அவர்கள் தங்கள் குடும்பத்தாரிடம் அன்போடும், அந்நியோன்யமாகவும் பழகினார்கள். தங்களுடைய குடும்பத்தினர் வளமான செல்வருடைய வீட்டாரைப்போலவே வாழ்வதற்கான வசதிகளை இமாமவர்கள் அளித்தார்கள்.

இமாம் ஷாபியீயின் புத்திரர் அபூ உதுமான் முஹம்மது, இமாம் அஹ்மதிப்னு ஹன்பலிடமே கல்வி பயின்றார்கள். இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் இமாம் ஷாபியீ அவர்களுடைய அபிமான மாணவராதலால் தமது குரு நாதரின் மகனிடம் மிகுந்த அன்போடு நடந்து கொண்டார்கள். அபூ உதுமான் நன்கு கற்ற அறிவாளியாகவே விளங்கினார்கள். இமாமவர்கள் கெய்ரோவில் காலமான சமயம், இந்தப் புத்திரர் மக்காவிலிருந்தார்கள், இவர்களிடம் இவர்களுடைய ஆசிரியரான இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் அதிக அன்பு செலுத்தினார்கள். ''நீங்கள் என் குருநாதரின் புதல்வர். மேலும், குறைஷி குலத்தவர்; நபிபெருமானாரின் ஸுன்னத்தைப் பின்பற்றி நடப்பவர்கள். இந்த மூன்று காரணங்களாலும் நான் உங்களை மனமு

வந்து நேசிக்கிறேன்'' என்று இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் அபூ உதுமானிடம் கூறியுள்ளார்கள். இந்த அபூ உதுமான் ஹலபு, ஜஸாயிர் ஆகிய நகர்களில் காஜியாகப் பதவி வகித்துப் பின் ஹிஜ்ரி 240ல் காலமானார்கள்.

இமாமவர்கள் இளமையிலே ஓர் அனாதையின் துயரம் என்ன என்பதை நன்கறிந்திருந்தார்கள்: அத்துடன் வறுமையின் கொடுமை எப்படிப்பட்டது என்பதையும் அனுபவித்திருந்தார்கள். தங்கள் இருபத்து நான்கு வயதுவரை இமாமவர்கள் ஒரு வேளையாவது வயிறு நிறைய உணவு உண்டதில்லை என்று அவர்களே தெரிவித்துள்ளார்கள். பின்னர், அவர்கள் கல்வி கற்றபின் அவர்களுடைய நிலையில் மாறுதலுண்டாயிற்று இறைவன் நல்லருளால் தேவைக்கு அதிகமான செல்வம் அவர்களிடம் குவியலாயிற்று. ஆனால், அப்போதும் சமயங்களில் அவர்கள் வீட்டில் அவசியச் செலவுக்குக் கூட எதுவுமில்லாது போவதுண்டு. காரணம், வறுமையின் கொடுமையை அறிந்திருந்த இமாமவர்கள் வறியவர்களுக்கு வாரி வழங்கும் வள்ளலாக இருந்ததுதான்.

## வள்ளன்மை

இமாமவர்களுக்குக் கலீபாவும் மந்திரிகளும், பிரபுக்களும், தங்கள் அன்புக் காணிக்கைகளை அனுப்பி அவற்றை ஏற்குமாறு வற்புறுத்துவதுண்டு. ஒரு தடவை கலீபா ஹாரூனர் ரஷிது இமாமவர்களுக்கு ஐம்பதாயிரம் திர்ஹம் காணிக்கையாகக் கொடுத்ததையும், உடனேயே அதில் நாற்பதாயிரத்தை அவர்கள் ஏழை வறியவர்களுக்குப் பங்கிட்டுவிட்டதையும் முன்னமேயே குறிப்பிட்டுள்ளோம். இதுபோன்றே கலீபா ஹாரூனர் ரஷீதின் பிரதம மந்திரியாக இருந்த யஹ்யா பர்மகீயின் புத்திரர் ஜஃபர் என்பவர் ஆயிரம் தீனார்கள் அன்பளிப்பு அனுப்பினார். மற்றொரு சமயம் அபூ ஹிஸான் என்பவர் ஆயிரம் தீனார்கள் அனுப்பினார். கலீபா ஹாருனர் ரஷீது வேறு பல தடவைகளில் பண முடிப்புகள் அனுப்பினார். இவற்றிலெல்லாம் இமாமவர்கள் கால் பகுதியை மட்டும் தங்களுக்காக வைத்துக்கொண்டு முக்கால் பகுதியை

மறு நாள் வருமுன்பே உடனுக்குடன் வறியவர்கள், கஷ்ட நிலையிலுள்ள உலமாக்கள், மாணவர்கள், அனாதைகள் ஆகியோர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார்கள். அத்துடன், ''இறைவா, இந்த அடியானை இம்மையின் பாசங்கள் பற்றாமல் காத்தருள்!" என்று அவர்கள் பிரார்த்திப்பதுமுண்டு.

இமாம் முஜ்னி கூறுகிறார்கள்: ''வள்ளன்மையில் இமாம் ஷாபியீயைவிடச் சிறந்தவர்களையோ, பிறரை அன்புடன் ஆதரித்தவர்களையோ யாரையும் நான் கண்டதில்லை. ஒரு சமயம் ஒரு நாள் இரவு மார்க்கப் பிரச்சினை ஒன்றைப்பற்றி இமாமவர்களுடன் விவாதித்தபடி அவர்கள் வீடுவரை நடந்து சென்றேன். அங்கே வாயிலில் பணியாள் ஒருவன் நின்றிருந்தான். அவன் கையில் ஒரு தட்டில் பணமுடிப்பிருந்தது. அவன் இமாமவர்களுக்கு ஸலாம் சொல்லிவிட்டு, ''இந்தக், காணிக்கையை என் எஜமானர் தங்களுக்கு அனுப்பினார். இதைத் தாங்கள் ஏற்றருளவேண்டும்'' என்று வேண்டினான். இமாமவர்களும் அதை ஏற்றுக்கொண்டு, அவனுடைய எஜமானனுக்கு நன்றிகூறி அனுப்பினார்கள். அந்தப் பணியாள் தலைமறையுமுன், இமாமவர்கள் முன் இன்னொருவர் வந்து அவர்களை நோக்கி, ''இமாமவர்களே, என் வீட்டில் குழந்தை பிறந்திருக்கிறது. செலவுக்கு ஒரு காசுமில்லை" என்று முறையிட்டு நின்றார். உடனே இமாமவர்கள் தங்கள் கையிலிருந்த பிரஸ்தாபப் பணமுடிப்பைப் புன்னகையோடு அந்த மனிதரிடம் கொடுத்து விட்டுத் தங்கள் வீட்டினுள் போய்விட்டார்கள்''

இமாமவர்கள் பக்தாதிலிருக்கும்போது பெருநாளுக்கு முதல் நாள் இமாமவர்களின் வீட்டிலேயே செலவுக்குப் பணமில்லாது போய்விட்டது. இதனால் இமாமவர்களுடைய மனைவி அவர்களை அணுகி, ''நீங்கள் உங்கள் கற்றத்தாரை நல்லமுறையில் ஆதரித்து அவர்கள் நல்வாழ்வு வாழ வகை செய்துள்ளீர்கள், நமக்குக் கஷ்டமான இந்த நேரத்தில் அவர்களில் யாரிடமாவது சிறிது பணம் கடன் வாங்கக் கூடாதா? பெருநாள் செலவுக்கு என்ன செய்வது?'' என்று வருத்தப்பட்டு யோசனை கூறினார். உடனே இமாமவர்கள் வெளியில் சென்று நண்பர் ஒருவரிடம் போய் எழுபது தீனார்கள்

கடன் வாங்கிவந்தார்கள், வரும் வழியில் ஏழைகளும், அநாதைகளும் சூழ்ந்துகொள்ளவே அவர்களுக்கு ஐம்பது தீனார் களைத் தருமஞ் செய்துவிட்டார்கள். பாக்கி இருபது தீனார்க ளோடு அவர்கள் வீட்டில் நுழைந்தசமயம், அங்கே குறைஷி குலத்தைச்சேர்ந்த வறியவர் ஒருவர் வந்து அவர்களிடம் தமது குறைகளைச் சொல்லி முறையிட்டார். உடனே இமாமவர்கள் தங்கள் கையிலிருந்த இருபது தீனார்களையும் கீழே வைத்து, ''நண்பரே, என்னிடமிருக்கும் ரொக்கமெல்லாம் இதுதான். இதில் உமக்குத் தேவையானதை எடுத்துக் கொள்ளும்'' என்று கூறினார்கள். அந்த மனிதர் தமக்குப் பல செலவுகளி ருப்பதால் இருபது தீனாருமே தேவைதான் என்று கூறி அனைத் தையும் எடுத்துப்போய் விட்டார்,

-

இந்தச் செய்தியை இமாமவர்கள் தங்கள் மனைவியாரிடம் தெரிவித்தபோது அந்த அம்மாள் அதிகமான வேதனையடைந் தார்கள். ''எப்போதுமா இந்தப் பழக்கப்படி நடக்க வேண்டும்? பெருநாளை எப்படிக் கொண்டாடுவோம்?" என்று வருந்திவிட்டுத் தூங்கப் போய் விட்டார்கள். மறுநாள் அதிகாலையில் ஹாரூனர் ரஷீதின் பிரதமரான யஃஹ்யா பர்மகீயின் பணியாள் வந்து, இமாமவர்களை மந்திரி உடனே அழைத்துவரச் சொன்னதாகக் கூறினான். இமாமவர்கள் மந்திரியின் வீட்டுக்குப் போனார்கள். அவர்களைக் கண்டதும் அவர் அவர்களை எதிர்கொண்டழைத்து, ''இமாமவர்களே, உங்களைப்பற்றி இன்றிரவு நான் கனவொன்று கண்டேன் அதில் நீங்கள் யாரிடமோ கடன் வாங்கியதாகவும், பின்பு அதையும் தருமங் கொடுத்துவிட்டதாகவும் தெரிந்தது. அப்படி ஏதாவது நடந்ததுண்டா?" என்று வினவினார். இமாமவர்கள் முதல் நாள் நடந்ததைச் சுருக்கமாகக் கூறினார்கள். உடனே மந்திரி யஹ்யா வீட்டினுள் சென்று ஆயிரம் தீனார்கள் அடங்கிய பணப்பை ஒன்றைக் கொணர்ந்து இமாமவர்களிடம் கொடுத்து, அவர்களை ஏற்றுக்கொள்ளச் செய்தார். இமாமவர் கள் அதைக் கொணர்ந்து தங்கள் மனைவியாரிடம் ஒப்படைத் தார்கள்.

இமாமவர்களிடம் யாரேனும் வந்து தருமங்கேட்டு, அவர்களிடம் எதுவுமில்லாவிடின், அவரை வெறுங் கையோடு அனுப்பப் பெரிதும் மனக் கஷ்டப்படுவார்கள். அவரைத் திருப்திப்படுத்த ஏதேனும் மார்க்கங் கிடைத்தால்தான் அவர் களுக்கு மனம் சரியாகும். ஒருசமயம் அவர்கள் தங்கள் வாகனத்தில் சென்று கொண்டிருக்கும் போது ஒருவர் அவர் களிடம் வந்து தருமங் கேட்டார். அவர்களிடம் அச்சமயம் கைவசம் எதுவுமில்லை. உடனே அவர் இருக்கும் இடத்தை விசாரித்து அறிந்துகொண்டு தங்கள் வேலையை நாடிப் போய் விட்டார்கள். அவர்கள் வீடு திரும்பியதும், சிறிது பணத்தை எடுத்துக்கொண்டு போய் அந்த மனிதர் இருந்த இடத்தைத் தேடி, அவரிடம் கொடுத்து வந்தார்கள்.

இமாமவர்கள் பக்தாதிலிருந்து கெய்ரோ சென்றடைந்த பின்னர் கலீபா ஹாரூனின் மனைவியான ஜுபைதா அம்மை யார் (அச்சமயம் விதவையாக இருந்தார்) வகை வகையான துணிமணிகளை ஏராளமாக இமாமவர்களுக்கு அனுப்பினார்கள். இமாமவர்கள் அத்தனையையும் ஏழைகளுக்குப் பங்கிட்டு விட்டார்கள்.

இமாமவர்கள் மிருகங்களிடங்கூடப் பேரன்பு கொண்டவர் களாக இருந்தார்கள். ஒருசமயம் கடும் வெயிலில் அவர்கள் தங்கள் வாகனத்தின்மீது சவாரி போய்க்கொண்டிருந்தார்கள். அச்சமயம் ஜன சஞ்சாரமற்ற இடமொன்றில் நாயொன்று தாகத்தால் வேதனையுற்றதாகத் தன் நாக்கை வெளியில் தொங்கப்போட்டுக் கொண்டு ஒரு கிணற்றைச் சுற்றி வந்தது. இதைக் கண்ட இமாமவர்கள் தங்கள் வாகனத்தை விட்டுக் கீழே இறங்கி, அங்கே தண்ணீர் எடுக்கத் தாம்புக்கயிறோ, பாத்திரமோ இல்லாத நிலையில் தங்கள் நீளமான தலைப் பாகையை உலைத்துக் கிணற்றுள் அதன் ஒரு தலைப்பை விட்டுத் தண்ணீருள் முக்கி வெளியிலெடுத்து நாயின் வாயில் பிழிந்து அதன் தாகத்தைத் தீர்த்தார்கள்.

வள்ளன்மையால் கைசிவந்த வள்ளலான இமாம் ஷாபியீ அவர்கள் வள்ளன்மை பற்றிக் கூறும் கருத்து

சிந்திக்கற்பாலதாகும். அவர்கள் சொல்கிறார்கள்: ''உண்மையான வள்ளன்மை (சகாவத்) என்பது யாதெனின் தனக்கு அவசியமாகப் பயன்படும் ஒரு பொருளை யாருடைய வற்புறுத்தலுக்காகவோ, பிரதிபிரயோஜனங் கருதியோ இன்றித் தானே மனமுவந்து பிறருக்கு வழங்குவதுதான். தன் தேவையைவிடப் பிறர் தேவையைப் பூர்த்தி செய்வதற்கே முதலிடம் தரவேண்டும். பிறருக்காகத் தன் கல்வி, புகழ், பொருள், ஆவி யாவையுமே அர்ப்பணிக்கத் தயங்கக்கூடாது. பழுதான, பயன்படாத எந்தப் பொருளையும் யாருக்கும் தானமளிக்கக்கூடாது. இப்படிப் பயனற்ற பொருளை வழங்குபவன் தன் மனிதத் தன்மையை இழந்து ஈனத்தனம் மிகைத்தவனாக ஆகிவிடுவான், 'மெய்விசுவாசிகளே, நீங்கள் (உழைத்துச்) சேகரிந்த செல்வங்களிலிருந்தும், உங்களுக்காகப் பூமியிலிருந்து வெளியாக்கிக் கொடுத்தவற்றிலிருந்தும் நல்லவைகளைத் தானமாகச் செலவிடுங்கள். மேலும், அவைகளிலிருக்கும் தீய பொருள்களை (பிறருக்குக்) கொடுக்க நாடவேண்டாம். (ஏனெனில், கெட்டுப்போன பொருள்களை உங்களுக்கு ஒருவர் கொடுத்தால்) அவைகளை நீங்கள் (வெறுப்புடன்) கண்மூடியவர்களாக அன்றி எடுக்க மாட்டீர்களல்லவா!' என்ற திரு குர்ஆன் எச்சரிக்கையைச் சிந்தித்துச் செயல்படுங்கள்.''

## குண ஒழுக்கம்

இமாமவர்களின் விருந்துபசாரம் விசேஷமானதாகும். தங்கள் மாணவர்களுக்கும், தங்களோடு பழகியவர்களுக்கும் அவர்கள் அடிக்கடி விருந்தளிப்பார்கள். விருந்தில் ஹல்வா, பலூதாபோன்ற இனிப்புப் பதார்த்தங்களிலும் இமாமவர்களுக்கு விருப்பமதிகம். இதனால், உயரிய ஹல்வாத் தயாரிப்பதற்கென்றே ஓர் ஆளைத் தேர்ந்து வைத்திருந்தார்கள்.

அவர்களுடைய அன்பு அளப்பரியதாக இருந்தது. ''அன்பும் பணிவுமே மானிட வாழ்வில் இன்பமளிப்பவை'' என்பது இமாமவர்களின் பொன்மொழி. ''மனிதன் தன் பலத்தாலும் அகந்தையாலும், ஏழை எளியவர்களை வதைத்து அதனால்

சீரழிந்து போகாமலிருக்கவே நாம் அன்பும் பணிவும் காட்ட வேண்டும் என்று நமக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது'' என்று கூறும் அவர்கள், ''யாரும் யாருக்கும் கொடுமை புரியாமலிருக்கவும், யாரும் யாரைப் பார்த்தும் தற்பெருமையடித்து அழிந்து போகாமலிருக்கவும் (நபியே,) நீர் பணிவையும், அன்பையும் ஏற்று (பிறருக்கு முன்மாதிரியாக) விளங்கும்' என்று இறைவன் எனக்கு வஹியறிவித்துள்ளான்" என்ற ஹதீஸையும் அடிக்கடி கூறுவதுண்டு.

இமாமவர்களுடைய பணிவு குறிப்பிடத்தக்கதாக இருந்தது, அவர்கள் தாங்கள் ஒரு பெரிய இமாம், தாங்களே யாவரையும்விடப் பெரிய அறிவாளி என்று காட்டிக் கொண்டதே இல்லை. அவர்கள் சொல்கிறார்கள்: ''மனிதனுக்கு அறிவும், ஞானமும் சித்தியாகியுள்ள அளவுக்குத் தான் அவனிடம் பணிவையும், தாழ்மையையும் எதிர்பார்க்க முடியும். ஏனெனில், மனிதனுக்குப் புதிய அறிவும், அனுபவமும் உண்டாக உண்டாகத்தான் (அதற்கு முன்) தான் எந்த அளவுக்கு அறிவிலியாயும், மூடனாயும் இருந்தான் என்ற தன்னறிவு உண்டாகிறது. எனவே, எனக்கும் காலம் அறிவையூட்டியபிறகுதான் என்னிடமிருந்த குறைகளை நான் உணரத் தொடங்கினேன். மேலும், என் அறிவும் அனுபவமும் வளர வளரத்தான் என் அறியாமையும் எனக்குப் புலனாயிற்று.''

இமாமவர்களுக்கு யாரேனும் ஒரு சிறிய உதவி புரியினும், அதற்காகப் பெரிதும் நன்றி பாராட்டுவார்கள். தமக்குச் சிறிய பணி செய்தவருக்கும் அதற்குரியதுபோல் இரண்டு மடங்கு சம்மானத்தைக் கொடுப்பார்கள். ஒருவர் ஏதேனும் ஒரு சாஸ்திரத்தில் தேர்ந்தவராக இருக்கக் கண்டால் அவருக்குப் பெரிதும் ஊக்கமூட்டுவார்கள். ஒரு நாள் அவர்கள் வெளியில் சென்றபோது வழியில் ஒருவன் அம்பெய்யப் பழகிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். அவனருகே சென்று அவனைப் பலவிதமாக வெல்லாம் அம்பெய்யுமாறு சொல்லிக்கொடுத்தார்கள். அவர்களின் சொல்படி அவன் செய்யவே, அவனைப் பாராட்டித் தங்களிடமிருந்த

மூன்று தீனர்களை அவனுக்குக் கொடுத்தார்கள். ''இன்னும் அதிகமிருந்திருப்பினும் அத்தனையையும் உனக்கே தந்திருப்பேன். நீ இந்த வித்தையை விடாமுயற்சியுடன் கற்றால் சிறந்த வில் வல்லவன் ஆகலாம்'' என்றும் கூறினார்கள்.

இமாமவர்கள் எப்போதுமே உண்மையையே விரும்புவார்கள். அவர்களுடைய பொழுதில் பெரும் பகுதி வாதப் பிரதிவாதங்களில் கழிவதுண்டு. எதிரிகள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் அவர்கள் அன்போடும், பொறுமையோடும் பதிலளிப்பார்கள். உண்மை மக்களுக்கு விளங்க வேண்டும் என்பதுதான் அவர்களுடைய குறிக்கோளாய் இருந்தது. அவர்கள் பொய்யை விஷமாக வெறுத்தார்கள். ''என் வாழ் நாள் முழுவதிலுமே நான் ஒரு பொய்கூடச் சொன்னதில்லை. மேலும், ஒரு சத்தியங்கூடச் செய்தறியேன்'' என்று அவர்கள் கூறியுள்ளார்கள்.

இமாமவர்கள் தாங்கள் செய்யாததை மற்றவர்களைச் செய்யுமாறு உபதேசிப்பதில்லை. இதில் சிறிய விஷயங்களில் கூட அவர்கள் மிகவும் எச்சரிக்கையோடு நடந்து கொண்டார்கள். ஒரு சமயம் பெண்மணி யொருத்தி சிறுவனை தன் மகனை அவர்களிடம் அழைத்துவந்து, ''இவன் அதிகமாக இனிப்புப் பண்டங்களைத் தின்னுகிறான்; அப்படித் தின்னக் கூடாது என்று நான் சொல்லும் புத்திமதிகள் இவன் காதில் ஏறவில்லை; நீங்கள் தான் புத்தி சொல்லித் திருத்தவேண்டும்'' என்று வேண்டினாளாம். இமாமவர்கள் அவளை அடுத்த வாரம் அவள் மகனை அழைத்துவரும்படி கூறி அனுப்பிவிட்டார்களாம். அதன்படி அவள் அடுத்த வாரம் தன் மகனுடன் வரவே. இமாமவர்கள் அந்தச் சிறுவனுக்கு அதிகமான இனிப்புத் தின்பதால் உண்டாகக்கூடிய கெடுதல்களையெல்லாம் எடுத்து விளக்கி, ''இனி அதிகமாக இனிப்புத் தின்னாதே!'' என்று போதித்து அனுப்பினார்களாம். இது அந்தப் பெண்மணிக்கு வியப்பாக இருந்ததாம். ''நான் சென்ற தடவை வந்திருந்த போதே இமாமவர்கள் இந்தப் புத்திமதியைக் கூறியிருக்கலாமே, அதற்கு ஒரு வாரம் தவணை போடுவானேன்?'' என்று அவள் எண்ணலானாளாம். இதை அவள் இமாமவர்களிடம்

கேட்டும்விட்டாளாம். ஹல்வாத்தயாரிக்க விசேஷமான வேலைக் காரனைத் தயாரில் வைத்திருந்த இமாமவர்கள், ''எனக்கு இனிப்பின் மீது பிரியமதிகம். நானே இனிப்பைத் தின்று கொண்டிருக்கும் நிலையில், இந்தச் சிறுவனை எப்படி இனிப்புத் தின்னுதே என்று போதிப்பது? நான் செய்யாததைப் பிறர் செய்ய வேண்டும் என்று நான் கூற முடியுமா? அதனால் தான், நான் முதலில் இனிப்புத் தின்பதை நிறுத்திக்கொள்வதற்காக ஒரு வாரம் அவகாசம் கேட்டேன். இப்போது இவனுக்கு உபதேசிக்க நான் அருகதையுடையவனுகிவிட்டேன்'' என்று புன்னகையுடன் விளக்கினுர்களாம்.

நபிபெருமானுரிமும், நபிபெருமானுர் குடும்பத்தாரிடமும் இமாமவர்கள் மிகவும் அன்பு கொண்டிருந்தார்கள். பெருமானுரின் ஹதீஸ்களை விளக்குவதில் பெரிதும் பயபக்தி மரியாதை கட்டினுர்கள். ஒரு சமயம் ஒருவர் அவர்களிடம் வந்து மார்க்கப் பிரச்சினை யொன்றுச்குத் தீர்ப்புக் கேட்டார். இமாமவர்கள் அந்தத் தீர்ப்பைக் கூறும்போது அதற்கு ஆதாரமான ஹதீஸையும் கூறினுர்கள். உடனே அந்த மனிதர், ''நீங்கள் இந்த ஹதீஸில் சொல்லப்பட்டபடி நடக்கிறீர்களா?'' என்று இமாமவர்களை நோக்கி வினவிவிட்டார். இமாமவர்கள் வழக்கம் போல தங்கள் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, ''என்னை என்ன விக்ரஹ வணக்கம் நடக்கும் கோயிலிலிருந்து வெளிவந்தவன் என்ரு எண்ணிக் கொண்டீர்? என்கழுத்தில் பூணூலா தரித்திருக்கிறேன்?'' என்று வினவினுர்கள். மேலும், ''ஆதாரப்பூர்வமான ஹதீஸ் ஒன்று என் கையிலகப்பட்டால் அதுவே என் மத்ஹபு'' என்றும் தெரிவித்தார்கள். இந்த விபரம் இமாமவர்களின் மாணவராக விளங்கிய இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் அவர்களே தெரிவித்துள்ளதாகும்.

இமாம் ஷாபியீ அவர்கள் தாங்கள் அளித்த தீர்ப்புக்கு மாற்றமான ஆதாரபூர்வமான ஒரு ஹதீஸ் கிடைத்துவிட்டால் உடனே தங்கள் தீர்ப்பை வாபஸ் பெற்றுக்கொண்டு, அந்த ஹதீஸின் தீர்ப்புப்படி நடக்குமாறு ஜனங்களை ஏவுவதுண்டு.

''நான் எழுதிய நூற்கள் அனைத்திலும், நான் தந்துள்ள விளக்கங்களில் மிகுந்த பேணுதலுடனும், பயபக்தியுடனும், ஆதாரங்களைத் தேடித் திரட்டித் தந்துள்ளேன். நானும் ஒரு மனிதன்தான். ஆதலால், மனிதர்களிடம் உண்டாகக்கூடிய தவறுகளும், பிழைகளும் என்னிடமும் உண்டாகவே செய்யும். அல்லாஹ் ஒருவனே மிகத் தூய்மையானவனாவான். இதனால், என் 'ஃபிக்ஹு'க் கிரந்தங்களில் எந்தத் தீர்ப்பேனும் திருக்குர்ஆன், ஹதீஸுக்கு மாற்றமானதாகக் காணப்பட்டால் என் தீர்ப்புச் சரியல்ல என்று முடிவு செய்து கொள்ளுங்கள். மேலும், எனக்கு ஆதாரப்பூர்வமான ஹதீஸ் எதுவும் கிடைத்து, அதன்படி நான் அமல் செய்யாமலிருந்துவிட்டால் என் அறிவில் ஏதோ குறையுண்டாகிவிட்டதாக முடிவுசெய்து கொள்ளுங்கள்" என்று இமாமவர்கள் கூறுவதுண்டு.

இமாமவர்கள் தங்கள் முடிவையும், அபிப்பிராயத்தையும் ஏற்றுக்கொள்ளும்படி யாரையும் எப்போதும் வற்புறுத்தியதில்லை. தங்கள் தீர்ப்பில் எப்போதேனும் தவறு நேர்ந்துவிட்டால் உடனே மன்னிப்போடு, தவறைத் திருத்திக் கொள்வார்கள். ''என் தீர்ப்பைவிடச் சரியான ஹதீஸையே நீங்கள் பிரதானமானதாகக் கருதுகிறீர்கள். எனவே, ஆதாரப் பூர்வமான ஹதீஸ்கள் ஏதேனும் உங்களுக்குக் கிடைத்தால் அவற்றை எனக்கும் தெரிவித்து விடுங்கள். அதனால், நானும் என் தவறைத் திருத்திக் கொண்டு அதன்படி நடக்க ஹேதுவாகும்" என்று அவர்கள் தங்கள் அன்பர்களிடம் கூறுவதுண்டு.

''எந்தப் பெரிய மனிதனின் வார்த்தைக்காகவும் நபி பெருமானாரின் ஹதீஸைப் புறக்கணிக்கக்கூடாது'' என்பது இமாமவர்களின் நல்லுபதேசமாகும்.

## வகுப்பும், வணக்கமும்

இமாம் ஷாபியீ அவர்கள் ஸுப்ஹுத் தொழுகைக்குப்பின் சூரியோதயம்வரை ஃபிக்ஹு வகுப்பு நடத்துவார்கள். பின்னர் ஹதீஸ் வகுப்புக்கள் தொடங்கும். அதற்குப் பின்னர் மார்க்க உபன்னியாசங்கள் நடைபெறும். அதன்பின் பல்வேறு

மார்க்கத் தீர்ப்புகள் வழங்கப்படும். லுஹர் தொழுகைக்குப் பின் இலக்கியம், கவிதை, யாப்பிலக்கணம், சொல்லிலக்கணம் குறித்துப் பாடங்கள் நடைபெறும். அஸருத் தொழுதபின் இமாமவர்கள் சிறிது நேரம் ஓய்வெடுத்துக்கொண்டு, மக்ரிபு வரை 'திக்ரு இலாஹி' (இறைவன் நாமதியானம்) நடத்து வார்கள். இஷாத் தொழுததும் படுக்கப் போய்விடுவார்கள் இமாமவர்கள் இரவை மூன்று பகுதிகளாகப் பிரித்து, முற் பகுதியில் தூங்கிவிட்டு, இரண்டாம் பகுதியில் எழுந்து ஹதீஸ் ஃபிக்ஹூகளை எழுதிவிட்டு, மூன்றும் பகுதியில் ஸுப்ஹூவரை திருக்குர்ஆன் ஓதுதல், நபில் தொழுகை தொழுதல் போன்ற நல் வணக்கங்களில் ஈடுபட்டிருப்பார்கள்.

இமாமவர்கள் தினமும் ஒரு தடவை திருக்குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்துவிடுவார்கள். ஹூஸைன் கராமீஸி என்பவர் சொல்கிறூர்: ''நான் மூன்று மாதங்கள் இமாமவர்களுடன் தங்கியிருக்கும் பாக்கியம் பெற்றேன், அப்போதெல்லாம் இரவில் மூன்றிலொரு பாகத்தைத் திரு குர்ஆன் பாராயணத்திலும், நபில் தொழுவதிலும் ஈடுபடுத் தியதைக் கண்டேன்."

இமாமவர்கள் திரு குர்ஆன் பாராயண முறையை மக்கா வின் ஷைகாக இருந்த இஸ்மாயீல் என்பவர்களிடம் ஓதித் தேர்ந்திருந்தார்கள், இந்த இஸ்மாயீலோ நபி பெருமானூரி லிருந்தே தலைமுறையாய் வந்த கிராஅத் முறையை பயின்றி ருந்தவர் ஆவார், இவர் அலீ ஷிப்லீயிடமும், மஃரூப் மஷ் கானிடமும் திரு குர்ஆன் ஓதக் கற்ருர். இவ்விருவரும் அலீ அப்துல்லாஹ்விடமும், அவர்கள் அப்துல்லாஹிப்னு அப்பாஸி டமும், அவர்கள் காரீ உபை பின் கஃபிடமும், அவர்கள் நபி பெருமானூர் (ஸல்) அவர்களிடமும் திரு குர்ஆனின் 'கிராஅத்' முறையை ஓதியுள்ளதாக 'கிராஅத்துல் குர்ஆன்' என்ற நூலில் இமாம் ராஜி குறிப்பிட்டுள்ளார்கள்.

இமாமவர்கள் திருகுர்ஆனே அரபிகள் ஓதும் சகல பாணி களிலும் ஓதுவார்கள். அவர்களுடைய தொனியும் இனிமை யானதாக இருந்ததால் அவர்களுடைய 'கிராஅத்' யாவரை

யும் கவர்வதாக இருந்தது. சில சமயம் இமாமவர்கள், முன் நின்று தொழுகையை நடத்தும்போது ஓதும் கிராஅத்தைக் கேட்டுப் பின்னால் நின்று தொழுபவர்கள் அழுதும்விடுவார்கள். அந்தச் சமயம் இமாமவர்கள் 'ருகூஉ'க்குப் போய்விடுவார்கள். பெரிய கூட்டங்களில் இமாமவர்கள் எழுந்து திருகுர்ஆனை ஓதத் தொடங்கியதும் கூச்சலும், குழப்பமும் தணிந்து எங்கும் நிசப்தம் நிலவி விடும். சில சமயம் இவர்களுடைய உருக்க மான கிராஅத்தால் ஜனங்கள் அழுதுகொண்டே தரையில் சாய்ந்துவிடுவதுமுண்டு.

இமாமவர்கள் ரமலான் இரவுகளில் கண் விழித்துத் தனிமையில் தொழும்போது திருக்குர்ஆனை ஓதிக் கொண்டே போவார்கள். அப்போது ஃபிக்ஹு சம்பந்தமான பிரச்சினை களுக்குப் பதில் வரும் ஆயத்துக்கள் குறுக்கிட்டால் அங்கே தொழுகையை முடித்துக்கொண்டு, உடனே அந்த ஆயத்துக் களைக் குறித்துக்கொள்வார்கள். பின்னர் மீண்டும் தொழு வார்கள்.

''மெய்வணக்கத்திலும், பயபக்தியிலும், புனிதத் துறவு நிலையிலும் இமாம் ஷாபியீ அவர்களைவிடச் சிறந்த யாரை நாம் காண இயலும்!'' என்று அம்ரு பின் பதாதா கூறுகிறார்கள். ஒரு சமயம், ஷைத்தான் மனித உருவில் வந்து இமாமவர்களை வழிகெடுக்க முயன்றதாக ஒரு சம்பவம் காணப்படுகிறது. அதன் விபரமாவது:

மனித உருவில் அவர்கள் முன் வந்த ஷைத்தான். ''இமாமே, நான் உங்களிடம் ஒரு பிரச்சினைக்குத் தீர்ப்பு வேண்டி வந்துள்ளேன்'' என்றான். என்ன என்று இமாமவர் கள் கேட்டதும், அவன் சொன்னான்: ''ஒருவன் தான் நாடிய செயல்களுக்காக என்னைப் படைத்துத் தான் நாடிய செயல் களில் நீண்ட நாட்களாக வேலைவாங்கிக் கொண்டு, பின்னர் மனமிருந்தால் என்னைச் சுவர்க்கத்துள் புகச் செய்கிறான்; மன மில்லையேல் நரகத்தில் புகச்செய்கிறான். எனவே, இப்படிச் செய்பவன் நேர்மையானவனா நேர்மையற்றவனா? நீதியாளனா அநீதியாளனா?''

இமாமவர்கள் பதிலளித்தார்கள்: ''உன் சித்தப்படி நீ நடப்பதற்காக அவன் உன்னைப் படைத்திருப்பின் உனக்கு அவன் அநீதியிழைத்தவன்தான். ஆனால், அப்படியின்றி அவன் தன் சித்தப்படி நீ செயலாற்ற வேண்டும் என்பதற்காக உன்னைப் படைத்திருப்பின் அவன் செயல்பற்றி அவனை வினவக்கூடாது. அடிமைகள் செய்யும் செயல்பற்றி அவர்களிடம் விவரம் கேட்கப்படும்''

இதுகேட்ட இப்லீஸ் வாயடைத்தவனாகிப் பின் அவர்களைப் பார்த்து, ''இமாமவர்களே, இந்தக் கேள்வியை விடுத்தே நான் எத்தனையோ வணக்கவாளிகளை வழி கெடுத்துள்ளேன், நீங்கள்தான் என்னை மடக்கிவிட்டீர்கள்" என்று கூறினான்.

## பெரியார்களிடம் அன்பு

இமாமவர்கள் மற்றப் பெரியார்களிடம் மிகவும் அதிகமான மதிப்பும் மரியாதையும் காட்டினார்கள். தங்களிடம் யாராவது இமாம் மாலிக் அவர்கள் கொடுத்த தீர்ப்பைக் கொணர்ந்தால், ''இது என் குருநாதர் இமாம் மாலிக்கின் தீர்ப்பல்லவா!" என்று மிகவும் மரியாதையோடு பேசுவார்கள். ஒரு சமயம் அவர்களை நோக்கி, "இமாம் மாலிக் எத்தகையவர்கள்?" என்று வினவியதற்கு, ''நம்மைவிடக் கலை, கலாச்சார ஞானத்திலும், மெய்வணக்கங்களிலும் ஒப்பற்ற வகையில் சிறப்பாக விளங்கியவர்களைப்பற்றி நாம் என்ன சொல்லக்கிடக்கிறது?'' என்று கூறினார்கள். ''இமாம் மாலிக்கைப்போல் சிறந்த மேதாவியை நான் பார்த்ததில்லை'' என்றும் அவர்கள் தெரிவித்துள்ளார்கள். மேலும், ''இமாம் மாலிக்கும், ஸுஃப்யான் பின் ஐனாவும் இல்லாவிடின் ஹதீஸ் கலையே ஹிஜாஸில் இல்லாதுபோயிருக்கலாம்" என்றும் கூறியுள்ளார்கள். ஸஹாபாக்களைப்பற்றி இமாமவர்கள் மிகவும் பயபக்தி மரியாதையுடன் பேசுவார்கள். ''சர்வ கலாஞானங்களிலும், பேணுதலிலும், சுய முடிவுகளிலும், அறிவிலும் மகா மேதைகள்" என்று பூரிப்போடும், கண்ணியத்தோடும் அவர்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஒரு சமயம் ஒருவர் இமாம் ஷாபியீ அவர்களை அணுகி ''ஒரு மனிதன் (சத்தியம் செய்வது போல) 'நான் கஃபத் துல்லாஹ்வரை நடந்தே செல்லுவேன்' என்று சபதமிட்டு விட்டான். ஆனால், அவனால் அந்தச் சபதத்தை நிறைவேற்ற முடியவில்லை. இத்தகையவன் ஷரீஅத்தின் ஆணைப்படி என்ன செய்யவேண்டும்?" என்று வினவினார். அதற்கு இமாவர்கள், ''அவன் தான் செய்த சபதத்துக்கான தண்டனையை (கப்பாரா) கொடுத்தே யாகவேண்டும். நம்மைவிடச் சிறந்த மேதையான ஸஹாபி அதா பின் அபீ ரியாத் கூட இவ்வாறே தீர்ப்பளித்துள்ளார்கள்" என்று பதிலளித்தார்கள்.

ஸுன்னத் வல் ஜமாஅத்துக்குட்பட்ட நான்கு மத்ஹபு களிலும் இமாம் அபூ ஹனீபா அவர்கள் உண்டாக்கித் தந்த மத்ஹபுக்கும், இமாம் ஷாபியீ அவர்கள் உண்டாக்கித் தந்த மத்ஹபுக்கும் இடையில் தான் அதிக வித்தியாசங்களுண்டு. இமாம் அபூ ஹனீபாவிலிருந்து இவ்விதம் பல விஷயங்களில் இமாம் ஷாபியீ அபிப்பிராயபேதம் கொண்டவர்களாக இருப்பினும், அவர்களை மதித்துப் போற்றவும், அவர்களுக்கு மரியாதை காட்டவுமட்டும் பின்வாங்கியதில்லை. ஒரு சமயம் அவர்களிடம் இமாம் அபூஹனீபாவைப் பற்றி வினவப்பட்ட போது, ''கேள், பிக்ஹு சம்பந்தப்பட்டவரையில் ஜனங்கள் யாவருமே அபூ ஹனீபாவின் குழந்தைகள்தாம்" என்று கூறி யுள்ளார்கள். இன்னொரு சமயம் அவர்கள் இமாம் அபூ ஹனீபா வின் அடக்கஸ்தலத்துக்கு ஜியாரத்துக்காகச் சென்றிருந்தார் கள். அன்று இரவில் அந்த இடத்திலேயே அவர்கள் தங்கியு மிருந்தார்கள். அங்கே இஷாவிலும், மறு நாள் ஸுப்ஹிலும் இமாமவர்கள் தொழுகையை முன்நின்று நடத்தினார்கள் ஆனால், தாங்கள் உண்டாக்கிக்கொடுத்த முறைப்படி தொழாமல், இமாம் அபூ ஹபனீா உண்டாக்கித்தந்த முறைப் படியே அவர்கள் தொழுகையை நடத்தினார்கள். 'பிஸ்மி'யைச் சப்தமிட்டு ஓதவில்லை; ஸுப்ஹில் 'குனூத்' ஓதவில்லை. இதைக் கண்ட சிலர் மறுநாள், ஏன் அவர்கள் தாங்கள் உண்டாக்கித் தந்த முறையைப் பின்பற்றவில்லை என்று வினவினர். ''இது

இமாம் அபூ ஹனீபாவின் சமுகம். அவர்களுக்கு நான் மரியாதை காட்டுவதற்காக, அவர்கள் போதித்த முறைப்படி தொழுதேன்" என்று பதிலளித்தார்கள். இமாமவர்களின் தாராள மனப்பான்மைக்கு இது மகத்தான சான்றாகும்.

## பெரியார்களின் பாராட்டு

இமாமவர்களின் மேதைமையையும், மரியாதையையும், கலாஞானத்தையும் அவர்கள் கால அறிஞர்கள் பலரும் போற்றிப் பாராட்டியுள்ளனர். "இமாம் ஷாபியீ அவர்களை விடச் சர்வ கலைகளிலும் தேர்ந்த யாரையும் நான் காணவே இல்லை. அவர்கள் கலா ஞானத்தின் சிகரமாகவே விளங்கினார்கள்" என்று காஸிம் பின் ஸலாம் கூறியுள்ளார்கள். இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் அவர்களும் தங்கள் குருநாதரான இமாம் ஷாபியீயைப் பற்றி மிகவும் மரியாதையாகப் பேசுவார்கள். அவர்கள் தொழுது முடிந்ததும், "இறைவா, எனக்கும், என் உற்றார், உறவினர்களுக்கும், முஹம்மதிப்னு இத்ரீஸ் அவர்களுக்கும் நல்லருள் புரிவாயாக!" என்று பிரார்த்திப்பதுண்டு. இதைக்கண்ட அவர்களுடைய புத்திரர் தம் தந்தையை அணுகி, "இமாம் ஷாபியீ அவர்களுக்காகவும் நீங்கள் பிரார்த்திப்பானேன்?" என்று வினவினார். அதுகேட்ட அஹ்மதிப்னு ஹன்பல், "இமாம் ஷாபியீ இப்பூவுலகில் தன்னேரிலாத அறிவுச் சூரியனவார்கள். மனிதனுக்கு உடல் நலம் அவசியமானதாயிருப்பது போலவே, இந்தச் சமூகத்துக்கு இமாம் ஷாபியீயும் இன்றியமையாதவர்களாவார்கள். அவர்களைப் போன்ற இன்னொருவர் கிடைப்பது அரிது. இத்தகைய பெரியாருக்காக நான் எப்படிப் பிரார்த்திக்காமலிருப்பேன்? கடந்த முப்பது ஆண்டுகளாக நான் அவர்களுக்காகப் பிரார்த்திக்காமல் தூங்கியதில்லை" என்று பதிலளித்தார்கள்.

ஒரு சமயம் இமாம் ஷாபியீ அவர்கள், இமாம் அஹ்மதிப்னு ஹன்பலின் வீட்டுக்கு வந்து, உடல்நலமற்றிருந்த அவர்களை வினவிவிட்டுச் சென்றார்கள். அப்போது தங்கள் உடல்நிலை சரியில்லாதிருந்தும், இமாம் அஹ்மது

அவர்கள் அவர்களோடு வெளியில் வந்து, அவர்கள் தங்கள் வாகனத்தில் அமர்ந்த பின்னும், அவர்களைத் தொடர்ந்து சிறிது தூரம் நடந்து சென்று வழியனுப்பினார்கள். இதைக்கண்ட ஒருவர் இமாம் அஹ்மதிப்னு ஹன்பலை நோக்கி, ''ஏன் நீங்கள் உடல்நிலை சரியில்லாதிருந்தும் இவர்களைக் கண்டு இத்தனை கஷ்டம் எடுத்துக் கொள்கிறீர்கள்?" என்று வினவினார். ''இமாம் ஷாபியீ அவர்களுக்கு நான் செய்ய வேண்டிய மரியாதையில் இது எம்மாத்திரம்! அவர்கள் ஏறிச்செல்லும் வாகனத்தின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு போனால்கூட எனக்கு ஏதாவது பயனுள்ள அறிவு உண்டாகவே செய்யும்'' என்று அஹ்மதிப்னு ஹன்பல் பதிலளித்தார்கள்.

இமாம் அபூ ஹனீபாவின் தலையான மாணவரும், ஹனபி மத்ஹபை ஒழுங்குபடுத்திய இருவர்களுள் ஒருவருமான இமாம் முஹம்மது பின் ஹஸன் ஷைபானிய்யியும் இமாம் ஷாபியீயிடம் மிகுந்த மரியாதை கொண்டிருந்தார்கள். கலீபா ஹாரூனிடம் அவர்களைப் பற்றி இவர்கள் வெகுவாகப் பாராட்டிப் பேசியுள்ளார்கள். ஒரு சமயம் அவர்கள் ஓர் அவசர வேலையாக வெளியில் புறப்பட ஆயத்தமாகித் தங்கள் வாகனத்திலேறப் போனார்கள். அப்போது, இமாம் ஷாபியீ தங்கள் வீட்டுக்கு வருவதாகச் செய்தி கிடைத்தது. உடனே அவர்கள் தங்கள் பிரயாணத்தை நிறுத்திவிட்டு,இமாமவர்களை வரவேற்கத் தயாராகிவிட்டார்கள். இமாமவர்கள் வந்ததும், அவர்களை எதிர்கொண்டு வீட்டினுள் அழைத்து வந்து மரியாதை செய்தார்கள். அங்கேயிருந்த யாவரையும் வெளியிலனுப்பிவிட்டு, இமாமவர்களுடன் அமர்ந்து ஓர் இரவும் ஒரு பகலும் தொடர்ந்து அளவளாவினார்கள். இமாமவர்கள் தங்கள் வீட்டில் தங்கியிருக்கும்வரை யாரையும் அங்கே வரவிடவே இல்லை.

இமாமவர்களிடம் கற்ற மாணவர்களில், இமாம் அஹ்மதிப்னு ஹன்பலையன்றி, மேலும் பல பிரபலஸ்தர்களுண்டு. இமாமவர்களோடு தொடர்புகொண்டு அவர்

களோடேயே தங்கியிருந்து கல்வி பெற்ற மாணவர்களில் இந்தகைய சுமார் நூற்றி அறுபது பெயர்களை ஹாபிஸ் இப்னு ஹஜர் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்களுள், ஹதீஸ் கிரந்தத்தைத் தொகுத்த இமாம் புகாரியின் குருநாதரான இமாம் ஹுமைதி, அபூ முஹம்மது, ஹர்மலா, அபூ இப்ராஹீம், இஸ்மாயீல் பின் யஹ்யா, அபூ தௌர், ரபீஉ சுலைமான், அபூ யஃகூப், இமாம் பைஹகி, இப்னு ஹஜர் ஆகியோர் இஸ்லாமிய உலகில் புகழ் பெற்றுள்ளவர்களாவர்.

''இமாமவர்களின் வீட்டு முன்னால் சுமார் எழுநூறு வாகனங்கள்வரை நிற்கக் கண்டிருக்கிறேன். அவை இமாமவர்களிடம் பிக்ஹு, ஹதீஸ் பாடங்களைக் கற்றுப் போகவரும் மாணவருடையவையே'' என்றும் ஹாபிஸ் இப்னு ஹஜர் குறிப்பிடுகிறார்கள்.

## இமாமவர்களின் கவிதைகள்

கவிதைகளியற்றுவதில் இமாமவர்கள் தனியானதோர் சிறப்புப் பெற்றிருந்தார்கள். அவர்கள் அந்தத்துறையில் மட்டுமே கவனஞ் செலுத்தியிருந்தால் கூட அவர்களை ஒரு மாபெரும் கவிஞர் என்று உலகம் போற்றித் தான் இருக்கும். ஆனால், மார்க்கத்துக்குத் தாங்கள் ஆற்றவேண்டிய சேவையை உணர்ந்த இமாமவர்கள் மற்ற வேலைகளை ஒதுக்கிவிட்டார்கள். அதில் இந்தக் கவிதைகளும் சேர்ந்து விட்டன. எப்போதேனும் நினைத்துக் கொண்டால் திடீரென்று பாட்டெழுதுவதுண்டு. மார்க்கச் சேவையில் புகுமுன் தங்கள் வாலிப வயதில் கவிதைகள் பல எழுதியுள்ளார்கள்.

கவிதை எழுதுவது நல்லதுதான் என்று
மார்க்கப் பெரியார்கள் அனுமதித்திருப்பின்
நான் லபீதைவிட அழகும் பொருளும் நிறைந்த
கவிதைகள் பலவற்றை ஆக்கியிருப்பேன்

என்று பாடலொன்றிலேயே இமாமவர்கள் தங்கள் கவிதை இயற்றும் திறம்பற்றியும், அதில் தாங்கள் அதிகக் கவனஞ் செலுத்தாத காரணம் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்கள்.

இளமையில் அவர்கள் கவிதைகள் இயற்றுவதிலேயே பொழுதுபோக்கிக்கொண்டிருந்தார்களென்றும், அச்சமயம் ஒரு நாள் அவர்கள் கஃபத்துல்லாஹ் சுவரில் சாய்ந்துகொண்டிருந்த போது, ''முஹம்மதே, கவிதைகள் புனைவதைக் கைவிட்டு பிக்ஹுச் சட்ட விளக்கங்களில் கவனஞ் செலுத்து!'' என்று ஒரு சப்தம் கேட்டது என்றும், அதுமுதல் பாட்டெழுது வதைக் குறைத்துக் கொண்டார்களென்றும் சொல்லப் படுகிறது.

இமாமவர்கள் நபி பெருமானார் மீதும், அவர்களுடைய சந்ததியார்மீதும் கொண்டிருந்த அன்பைப் பாடல்களிலும் எழுதினார்கள். அவ்விதம் அவர்கள் பாடல்கள் எழுதுவதைக் கண்ட காரிஜிகள் அவர்களுக்கு 'ஷீயாக்காரர்' என்று பட்டஞ் சூட்டினர். அதனால் அவர்கள் மனந்தளராமல், மேலும் மேலும் இத்தகைய பாடல்கள் பலவற்றை எழுதினார்கள். காரிஜிகள் தங்களை 'ஷீயாக்காரர்' என்றழைத்ததைப் பொருட்படுத்தாத துடன், அதையும் கூட அவர்கள் ஒரு பாடலில் சொல்லிக் காட்டியுள்ளார்கள். ஒரு பாடலின் கருத்தாவது:

மகிமைமிக்க நபிபிரான் குடும்பத்தவர்களே,
உங்களை உவந்து நேசிக்கவேண்டுமென்று
இறைவனே எங்களுக்குக் கட்டளையிட்டுள்ளான்.
நபிமீது 'ஸலவாத்துக்' கூறுதவன் தொழுகை
அங்கீகரிக்கப்படமாட்டாது என்று இறைவன்
அருளியுள்ளது ஒன்றே போதுமே
உங்கள் மகிமைக்கும், பெருமைக்கும் சான்று!

இன்னொரு கவிதையின் கருத்தாவது;

ஹே ஒட்டகத்தின்மீது சவாரி செல்பவர்களே.
நீங்கள் மினாவில் மஸ்ஹப் என்ற இடத்தில் நின்றவாறு
காலைத் தொழுகைக்காக புராத் நதியின் வெள்ளமென
வரும் ஹஜ்ஜாஜிகளிடமும்,
கைப், நாஹில்வாழ் மக்களிடமும் கூறுங்கள் ;
எம்பெருமானாரையும். அவர்களின் குடும்பத்தாரையும்
போற்றிப் புகழ்வதால்மட்டும் ஒருவன்

'ராபிஜி'யாவானுயின்
தானே தலையாய ராபிஜி என்று

நான் ஹஜ்ரத் அலீயைப் போற்றியதும்
மூடர்கள் என்னை
'மேன்மை தங்கிய ராபிஜி' என்கின்றனர்.
நான் ஹஜ்ரத் அபூபக்கரைப் போற்றினுலோ
இந்த அறிவிலிகள் அதே வாயால் நான்
'நாஸிபி' என்கின்றனர்.

எனவே, நான் இவர்கள் முடிவுப்படி
'ராபிஜி'யாயுமுள்ளேன்; 'நாஸிபி'யாயுமுள்வேன்!
எனவே, இந்த அறிவிலிகள் எதை நினைப்பினும்
அதுபற்றிப் பாதகமில்லை,
இந்த இரண்டு நிலைகளையும் என்னில்
அமர்ந்தியவனுகவே
நான் ஒரு நாள் புதைகுழியில் புகுவேன்.

இமாமவர்கள் தங்கள் கவிதைகளில் பல அருமையான கருத்துக்களை அள்ளித் தெளித்துள்ளார்கள். அத்தகைய கவிதையொன்றின் பொருளாவது :

சுகபோகத்தில் மூழ்கித் திளைப்பவர்கள்
அதற்காக நன்றிசெலுத்துவதில்லையே!
நன்றி செலுத்தவேண்டும் என்ற எண்ணம்கூட
அவர்களுக்கு உண்டாவதில்லையே!

எத்தகைய கடினமான காரியத்தையும்
மனிதன் தன் ஆற்றலால் முடிக்கிருன்
கையெட்டாத தொலையிலுள்ள பொருளைக்கூட
இடைருது முயன்று தனக்கு அருகிலாக்கிவிடுகிருன்.

நல்லதிர்ஷ்டமென்ற ஆதி ஏற்பாடு
மனிதனுக்குச் சாதகமானதும்
எத்தகைய உறுதியான கதவும்
தானுகவே திறந்துகொள்கிறது
நல்லதிர்ஷ்டமுடையவனெருவன்,

''நான் காய்ந்த குச்சியொன்றைக் கையிலெடுத்தேன்
அது பூத்துக் காய்த்துப் பழம் தந்தது' என்றாலும்
அதைக்கூட நம்பலாம்.

நல்லதிர்ஷ்டமற்றவனொருவன்,
'நான் தாகவிடாய் தீர ஓர்ஆற்றின்கரை யேகினேன்;
என்னைக் கண்டதும்
ஆறு வற்றி வரண்டுவிட்டது' என்றாலும்
அதையும் நம்பலாம்.
இது வியப்புக்குரிய விஷயமல்ல.

மானிடனுடைய அறிவாற்றலால் மட்டும்
யாவும் ஆகிவிடுமெனின்,
இன்று நானே வானவிதானத்திலே சென்று
அங்குள்ள தாரகைகளிடையே அமர்ந்துவிடுவேன்.
(அந்தோ, என் செய்வது!)

நல்லதிர்ஷ்டமும், செல்வமும் வாய்ப்பவருக்கு
அறிவு, ஞானங்கள் என்ற
ஒப்பற்ற செல்வங்கள் வாய்ப்பதே இல்லை.
அறிவும் செல்வமும் ஒன்றுக்கொன்று எதிரிகள்;
அவை என்றுமே ஓரிடத்தில் சேர்ந்திருக்கமாட்டா.

அறிஞர்கள் சதாவும் வறுமையாலும்,
கவலையாலும் வாடுவதும்,
மூடர்களும், தகுதியற்றவர்களும்
சுகபோகங்களில் திளைப்பதும்
மெய்யாகவே 'ஆதிஏற்பாடு' ஒன்று உண்டு
என்பதற்கு மறுக்கவியலாத சான்றுகளல்லவா!

இமாமவர்கள் எழுதியுள்ள வேறு சில கவிதைகளின் கருத்தாவது:

கொடிய (தொத்து) நோய் பீடித்தவனை
நெருங்காமல் மக்கள் ஒதுங்குவதுபோல,
அறிஞர்களையும், பேணுதலாளர்களையும் கண்டும்
மக்கள் குறைகூறுது ஒதுங்கிக்கொள்வார்கள்.

(ஆனால்) பொறுமையுடையவர்கள்
எனக்குப் புறம்பே என்மீது குறைகூறுகின்றனர்;
எனக்கு நேரிலோ என்னைப் புகழ்கின்றனர்.
உன்கண்ணியம்பற்றி உனக்கு அக்கறையில்லாவிடின்
இறைவனைப்பற்றிய பயமில்லாவிடின்
நீயும்கூட உன் மனம் போனபடி நடக்கலாம்.

———

என்னோடு ஒத்த கருத்துள்ளவர்களையே
நான் விரும்புகிறேன்.
என் குற்றங்குறைகளை மன்னிப்பவர்களையும்,
என் சேவையில் பக்கபலமாக நிற்பவர்களையும்,
என் லட்சியங்களைப் பேணுபவர்களையும்,
என் மரணத்துக்குப்பின்னர் என்னை நினைப்பவர்களையும்,
எனக்குச் சகோதரர்களாகத் தேடினேன்.
அவர்கள் நிறையக் கிடைத்தனர்.
(ஆனால்) அவர்களை நான் சோதித்தபோது
அவர்கள் எண்ணிக்கையில் சிலராகிவிட்டனர்!
எனது இந்தக் இறையைப் போக்குவார் யார்?
என் லட்சிய சகோதரர்கள் கிடைத்துவிடின்
என் செல்வமனைத்தையும் அவர்களுக்குப்
பங்கிட்டுக் கொடுத்து விடுவேன்.

———

நல்லதிர்ஷ்ட முடையவனே,
நீயொன்றும் எனக்காகக் கவலைப்படவேண்டாம்!
என்னிடம் ஒரு நாள் உணவு இருப்பினும் போதும்,
நாளையைப்பற்றிய கவலை எனக்கில்லை.
இறைவன் தருவதை நான் ஏற்கிறேன்;
அவனை நம்பியே முயற்சியிலிறங்குகிறேன்.

———

நல்ல செயலின் முடிவு நல்லதாகவே இருக்கும்;
சஞ்சல நாட்கள் நீடிக்கமாட்டா;
உலகில் சுகமோ துக்கமோ
எப்போதும் ஒரே மாதிரியாய் இருப்பதில்லே;
இரவுக்குப்பின் பகல் வந்துதான் தீரும்.

---

உன் உடலில் சொறிசிரங்கு உண்டானல்,
அதன் நமைச்சலேப் போக்க,
உன் நகத்தைப் பிரயோகிக்கிருய்.
எனவே, உன் வேலேயை நீயே கவனி!
(பிறரை நாடாதே!)
(ஒருக்கால்) உனக்குப் பிறர் உதவி தேவையாயின்,
உன் கண்ணியத்துக்குத்தக்கபடி உதவும் மனிதனிடம்
உதவி தேடு!

---

இம்மையையும், அதன் புற அழகையும்
மோகிப்பவர்களே, எச்சரிக்கை!
(எத்தனேயோ) மாடமாளிகைகளேயும்,
அவற்றை நிர்மாணித்தவர்களேயும்
காலம் உண்டு ஏப்பமிட்டுவிட்டது.
இம்மையின் மாட்சியையும், செல்வத்தையும் விழைபவர்
அவற்றின் அழியும் இயல்பை உணரவேண்டும்.
எச்சரிகை! இம்மையின் நிலவறைகள்
தங்கள், வெள்ளியாலேயே நிரம்பியுள்ளன!
உங்கள் பொக்கிஷத்தை நற்செயல்களாலும்,
மெய்விஸ்வாசத்தாலுமே நிரப்புங்கள்!

இம்மை நாற்றமெடுத்த மாமிசத் துண்டையொக்கும்;
அதைப் பற்றியிழுக்க நாய்கள் பல போட்டியிடுகின்றன.
ஹே மனிதா, நீ இந்த இம்மையெனும்
நாற்றப் புலாலேவிட்டு ஒதுங்கிக்கொள்வாயாயின்

இவ்வுலகில் வாழ்பவர்கள் யாவருக்கும் நல்லவனுவாய்
அந்த மாமிசத் துண்டைக் கடிப்பாயாயின்
அந்த மனித நாய்களோடு சச்சரவிடும்
நாயாகவே நீயும் ஆகிவிடுவாய்

---

## இலக்கியம், சொல்லகராதியில்

இமாம் ஷாபியீ அவர்கள் கவிதையைவிடவும், வசன நடையிலும், அரபு மொழி அகராதிப் பயிற்சியிலும், அரபி இலக்கியத்திலும் சிறப்பான தேர்ச்சியுடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் ஹுதைல் இனத்தாரின் பத்தாயிரம் பாடல்களேயும், சொல்வழக்கற்றுப்போன அகராதியின் பதங்களேயும் மனப்பாடமாக்கியிருந்தார்கள். ''இமாமவர்களின் வாசகமே அகராதிக்கு மூலமாகும்'' என்று அக்காலேயில் புகழ் பெற்றிருந்த இலக்கிய, அகராதித் தொகுப்பு நிபுணரான மப்ரத் கூறுகிருர். மேலும், இமாமவர்களுடைய வசன நடை பலவகையில் சிறப்புடையதாக இருந்தது, யாவருக்கும் புரியும்படியான எளிய நடையில் எழுதவேண்டுமாயினும் எழுதுவார்கள்; மிகக் கஷ்டமான நடையிலும் எழுதுவார்கள். ''இமாமவர்களின் இலக்கியக் கட்டுரைகளேவிட அதிகமாக என்னே யாருடைய கட்டுரைகளும் கவரவில்லே. அவர்கள் எழுதுவது வசன நடையா, அல்லது முத்துக்களேத்தான் அப்படி அழகாகக் கோத்துத் தருகிருர்களா என்று போற்றும் வண்ணம் எழுதியுள்ளார்கள்" என்று பிரபல அரபி இலக்கிய மேதை ஜாஹிஜ் கூறுகிருர், ''இமாமவர்களின் நெஞ்சையள்ளும் வசன நடையை, இனிய சொற் பிரயோகங்களே, அற்புதமான பாணியை வேறு யாருடைய நடையிலும் நான் காணவில்லே" என்று இமாமவர்களின் மாணவர்களுள் ஒருவரும், அக்காலேயில் சொல்லகராதியில் 'மாபெரும் தூண்' என்று மக்களால் போற்றப்பட்டவர்களுமான இமாம் அபூ ஸுலேமான் கூறுகிருர்கள். ''மாபெரும் ஆலிமும், இமாமும், முஜ்தஹிதுமான ஷாபியீ அவர்களின் ஒவ்வொருவார்த்தையும்

சிந்தனையைத் தூண்டக்கூடியதாகும்; அரபி இலக்கியம், அகராதி போன்றவற்றில் அவர்கள் ஒப்பற்ற மேதையாக விளங்கினார்கள்" என்று அல்லாமா ஜமக்ஷரீ கூறுகிறார்கள்.

மேலும், சொல்லகராதியில் அவர்களுக்கிருந்த தேர்ச்சியையும் பலர் பாராட்டியுள்ளனர். ''அகராதிக் கலைக்கே இமாமவர்கள் ஒரு புதையலாக விளங்கினார்கள். மேலும், சொற்களின் பொருள்களையும், மூலாதாரமான கருத்துக்களையும் அவர்களிடம் கேட்பதில்தான் எவ்வளவு ஆனந்தம்!" என்று அபுல் அப்பாஸ் போற்றியுள்ளார். ''இமாம் ஷாபியீ சொல்லகராதிக் கலையில் மாபெரும் கடல்போன்றவர்கள்'' என்று இலக்கிய மேதை அபூமன்ஸூர் கூறுகிறார். மேலும், இவர் இமாமவர்கள் விளக்கியுள்ள வழக்குச் சொற்களையெல்லாம் திரட்டி அவற்றுக்கு விரிவுரையொன்றும் எழுதியுள்ளார். அந்த விரிவுரையின் முகவுரையில், ''இமாமவர்கள் சான்றாகக் கொடுக்கும் இலக்கியப் பழமொழிகளையும், வழக்கற்றுப் போன அகராதிச் சொற்களையும் முற்கால அரபிக் கவிதைகளைக் கற்றுள்ள அறிஞர்கள்கூட அனேகமாகத் தெரிந்திருக்ககாட்டார்கள்" என்று குறிப்பிட்டுள்ளார்.

## வரலாற்றுத் தேர்ச்சி

அரபி இலக்கியத்திலேயே பண்டைய அரபிகளின் உயர்வு, வீழ்ச்சிபற்றிய சரித்திரங்களுக்கு முக்கியமான இடமிருந்தது. இதை நன்கு அறிந்தவர் அக்காலையில் சரித்திரப் பேராசிரியர் என்றே போற்றப்படுவார். இந்த வரலாற்றுப் பாடங்களில் இமாம் ஷாபியீ நன்கு தேர்ந்திருந்தார்கள். ''இமாம் ஷாபியீ வரலாற்றுப் பாடத்தில் தன்னேரிலாதவர்களாகத் திகழ்ந்தார்கள்" என்று 'மிர்அதுல் ஜினான்' என்ற வரலாற்று நூலின் ஆசிரியர் கூறுகிறார். இமாமவர்கள் கலீபா ஹாரூனர் ரஷீதின் முன் பல்வேறு சாஸ்திரங்களையும் பற்றி விளக்கங் கொடுத்த போது, கடைசியில் இலக்கியம், அகராதி பற்றியெல்லாம் அவர் வினவினார். அப்போது இமாமவர்கள், ''நான் அரபி மண்ணில் பிறந்தவன்; அரபி

மொழியே என் நரம்புகளில் ஓடிக்கொண்டிருக்கிறது; இதுவே என் தாய் மொழி" என்று பதிலளித்தார்கள்.

## வான நூல்

வானநூல், ஜோதிடம் முதலியவற்றிலும் இமாமவர்கள் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார்கள். சூரியன், சந்திரன் போன்ற கிரஹங்களின் சஞ்சாரம், அதனால் உண்டாகும் பலாபலன்கள், பருவங்களாலுண்டாகும் சீதோஷ்ண மாறுதல்கள் முதலிய விஷயங்களை வானசாஸ்திர நிபுணர்களிடம் அவர்கள் பயின்றுள்ளார்கள். இப்னு ஹஜர் 'தவாலியத் தாஸீஸ்' என்ற நூலில் கீழ்க்கண்ட சம்பவத்தைக் குறிப்பிட்டுள்ளார்: "ஷாபியீ இமாமவர்கள் தங்களுடைய நண்பர் ஒருவரிடமிருந்த ஜாதகம் ஒன்றை வாங்கிப் பார்த்தார்கள். அதைக் கூர்ந்து கவனித்த அவர்கள், 'இது பெண்ணுடைய ஜாதகம். இவளுக்கு இன்றிலிருந்து பதினேழாம் நாள் குழந்தையொன்று பிறக்கும். அதன் இடப்பக்கத் தொடையில் கருப்பு மச்சமொன்றிருக்கும். மேலும், அந்தக் குழந்தை இருபத்து நான்கு நாட்களே உயிரோடிருக்கும். பிறகு இறந்து விடும்' என்று கூறினார்கள். அதுபோன்றே குழந்தை பிறந்து இருபத்து நான்காம் நாள் இறந்துபோய்விட்டது. இதைக் கேள்வியுற்ற இமாமவர்கள் தங்களிடமிருந்து வானசாஸ்திர நூற்களையெல்லாம் எரித்துச் சாம்பலாக்கிவிட்டதோடு, பிறகு யாரிடமும், என்றுமே ஜாதகம் பற்றிப் பேசியதே இல்லை."

## வைத்தியப் பயிற்சி

இமாமவர்கள் கைதேர்ந்த வைத்தியராகவும் விளங்கினார்கள். உடற்கூறு நுட்பங்களையும், மருந்துகளின் தன்மையையும் அறிவதற்காக அவர்கள் கிரேக்க வைத்திய நிபுணர்களான கேலன் (ஜாலினூஸ்), அரிஸ்டாட்டில், (அரஸ்தூ) பிளேட்டோ (அஃப்லாத்தூன்) முதலியவர்களின் நூற்களையும் விரிவாகக் கற்றுள்ளார்கள். "மனிதனுக்கு உடலும் ஜீவனும் அவசியமானவையாய் இருப்பதுபோல, வைத்தியக் கலையும், சன்மார்க்கக் கலையும் அவசியமானவையாகும்" என்று அவர்

கள் கூறியுள்ளார்கள். ''அந்தோ, முஸ்லிம்கள் வைத்திய சாஸ்திரத்தைக் கற்காமல் பின்தங்கி விட்டார்களே! இறைவன் தந்த அறிவின் இந்தப் பகுதியைக் கிறிஸ்தவர்களும், யூதர்களும் எடுத்துக்கொள்ள விட்டுவிட்டார்களே!" என்றும் அவர்கள் வருந்தியுள்ளார்கள். மேலும், ''கருணையுள்ள ஒரு வைத்தியனும், நேர்மையாளன் ஒருவனும், ஓடும் தண்ணீரும் இல்லாத ஊரில் குடி இருக்க வேண்டாம்!" என்றும் ''முஸ்லிம்கள் வைத்திய சாஸ்திர ஆராய்ச்சி நடத்தாமலும், அதன் நுட்பங்களை அறியாமலும் இருக்கிறார்களே!'' என்றும் அவர்கள்அடிக்கடி கூறுவார்கள். இமாமவர்களை அவர்கள் கால மக்கள் ஒரு சிறந்த உடற்கூறு, வைத்திய சாஸ்திர நிபுணராகவும் கருதிப் போற்றியுள்ளனர்.

''மொச்சைக்கொட்டை மூளையைப் பலப்படுத்தும் மூளை அறிவை அதிகரிக்கச் செய்யும். மொச்சைக் கொட்டை தின்பதால் மறதியுண்டாகும் என்று சொல்வது சரியல்ல'' என்று இமாமவர்கள் தெரிவித்துள்ளார்கள். மேலும், ''காலரா (வபா) நோய் கண்டால் 'பனபுஸஜு' என்ற (உர்துவில் பனபுஷா அல்லது பனப்ஷா என்ற) பூவை அரைத்து உடலில் பூசுவதுடன், உள்ளேயும் குடிக்கக் கொடுக்கவேண்டும். இந்த நோய்க்கு இது மிகவும் கைகண்ட மருந்தாகும்" என்று இமாமவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

இமாமவர்கள் தங்களுக்கு (உஷ்ண) ஜுரம் வந்தால் கொம்மட்டி மாதுளம் பழச் சாற்றைப் பிழிந்து குடிப்பார்கள் என்று சொல்லப்படுகிறது. இரவில் கத்திரிக்காயையும், முட்டையையும் உண்ணாது ஒதுக்கவேண்டும் என்று அவர்கள் கூறியுள்ளார்கள். முகம் மஞ்சணித்திருப்பின் தேனையும், வெந்தயத்தையும் சேர்த்துச் சாப்பிடச் சொல்லியுள்ளார்கள். ''பசித்திருந்து குளித்தபின் உணவுண்ணாமல் இருப்பவனும், உடலில் இரத்தம் குத்தி எடுத்தபின் உணவுண்ணாமல் இருப்பவனும் உடனே மரணிக்காதிருப்பின் ஆச்சரியந்தான்" என்றும் அவர்கள் எச்சரித்துள்ளார்கள்.

மேலும், ''கொழுத்தவர்கள், முஹம்மது இப்னு ஹஸனைப்போல் இருந்தாலன்றி ஈடேற்றம் பெறுவது கஷ்டம்"

என்று அவர்கள் கூறியபோது, அதன் கருத்தென்ன என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. ''அறிவாளியானவன் இம்மை அல்லது மறுமைபற்றிய ஏதேனும் ஒரு கவலையால் பீடிக்கப் பட்டவனாய் இருப்பான். இவ்விதம் இரண்டில் ஒரு கவலையும், பராக்கும் மிகைப்பதால் அவன் உடலில் ஊறும் கொழுப்பு உருகிக் கொண்டேபோகும், இந்த இரண்டு விதக் கவலையு மில்லாதவனுடைய உடலில் கொழுப்பு ஊறஊற உறைந்து கொண்டேவரும். அதனால், அவன் மிருகங்களைப் போன்ற குணமுள்ளவனாகிவிடுவான்" என்று அவர்கள் விளக்கினார்கள்

இதற்கு உதாரணமாக அவர்கள் கதையொன்று சொல்லிக்காட்டினார்கள். அதன் சாரமாவது: ஓர் அரசன் உடல் கொழுத்தவனாக, எவ்வளவோ வைத்தியஞ் செய்தும் அதை மெலியவைக்க இயலாதவனாக இருந்தான். அவனிடம் வந்த வைத்தியர் ஒருவர் அவனை நன்றாகப் பார்த்துவிட்டு, நட்சத்திரக் கணக்கைப் போட்டுப் பார்த்தார். பின்னர் உதட்டைப் பிதுக்கியவராக, ''அரசே, உங்களுக்கு மருந்து கொடுப்பதால் எந்தப் பயனுமில்லை, இன்னும் சரியாக முப்பது நாட்களில் உங்களுக்குத் திடீர் மரணம் சம்பவிக்கப்போகிறது" என்று கூறினார். உடனே அரசன் அவர்மீது ஆத்திரங் கொண்டு அவரைச் சிறையிலடைத்துவிட்டான். ஆனால், அவர் சொன்ன விஷயம் அவன் மனத்தை அறுக்க ஆரம்பித்து விட்டது. உணவு செல்லவில்லை; தூக்கம் வரவில்லை. முப்பது நாட்களில் அவன் உடம்பு துரும்பாக இளைத்துவிட்டது, ஆனால் வைத்தியர் சொன்னபடி மரணம் சம்பவிக்கவில்லை, உடனே, அவரை விடுதலை செய்து வினவியபோது, அதுதான் அரசன் உடல் மெலிய அவர் கொடுத்த கவலை மருந்து என்று அறிந்து அரசன் அவரைப் போற்றினான்,

இமாமவர்கள் மரண வியாதியாகப் படுத்திருக்கும் போது கிறிஸ்தவ வைத்தியன் ஒருவன் வந்து அவர்களுடைய நாடியைப் பிடித்துப் பார்த்தான். அதே சமயம் அவனிடம் பேசிக்கொண்டே இமாமவர்கள் அவன் நாடியைப் பரி சோதித்துவிட்டார்கள், அவன் சென்ற பின், வெகு விரைவி

லேயே அவன் மரணித்துவிடுவான் என்று கூறினர்கள். அதன் படியே இமாமவர்களுக்கு முன்னரே அவன் மரணமடைந்து விட்டான்.

''மருந்தில்லாத சகல நோய்களுக்கும் இந்த மூன்று பொருள்கள் நற்பயன் தரலாம். அவை, கொடி முந்திரிப் பழமும், பசு (அல்லது ஒட்டகைப்) பாலும், கரும்பு மாகும்'' என்றும் இமாமவர்கள் கூறியுள்ளார்கள். ''உங்கள் ஊரில் கரும்பு இல்லாவிடின் நான் அங்கே வந்து தங்கவே மாட்டேன்'' என்று கூறியுள்ளார்கள். பார்வைக் குறைவானவனுக்கு ஆட்டு ஈரலை உலர்த்திப்பொடி செய்து, வஸ்திரகாயஞ்செய்து கண்ணில் போட்டால் பார்வை சரியாகும் என்பதும் அவர்கள் சொல்லியுள்ள ஒரு மருந்தாகும்.

இமாமவர்களிடம் கலீபா ஹாரூனர் ரஷீது ஒரு சமயம் கேட்டார், ''முஹம்மதே, நீர் அதிகாலையிலேயே உணவுண்ப தாய்க் கேள்விப்பட்டேனே, அதன் காரணமென்ன?'' என்று. இமாமவர்கள் சொன்னார்கள், ''நான்கு காரியங்களுக்காக அப்படிச் செய்கிறேன். அப்போது இரவு முழுவதும் குளிர்ந்த தண்ணீர் கிடைக்கிறது; காற்று மணமானதாக இருக்கிறது; ஈக்களும் குறைவு; என் மனம் மற்றவர்களின் உணவின் மீது ஆசைகொள்ளாமல் இருக்க அது உதவியாகவும் இருக்கிறது'' என்று. இதை ஹாரூனர் ரஷீது பாராட்டி ஏற்றுக் கொண்டார்.

இமாமவர்கள் கெய்ரோவிலிருந்த சமயம் அவர்களிடம் வந்து வைத்திய சாஸ்திரம்பற்றி உரையாடிக் கொண்டிருந்த வைத்தியர் ஒருவர், இமாமவர்களுக்கு வைத்திய சாஸ்திரத் திலுள்ள தேர்ச்சியைக் கண்டு அவர்களிடம் வைத்திய நூற்கள் சிலவற்றைத் தாம் கற்க விரும்புவதாகத் தெரிவித்தார். இமாமவர்கள் புன்னகையுடன், தாங்கள் ஓதிக்கொடுக்கும் மாணவர்களைச் சுட்டிக்காட்டி, ''இந்த ஜாமிஉ அஸ்ஹரில் ஓதும் மாணவர்கள் உமக்கு அதைக் கற்றுத்தர என்னை விட மாட்டார்கள்" என்று பதிலளித்தார்கள்.

## ஆரூடத்தில்

மனிதனுடைய முகச் சாயல், அங்க அமைப்பு ஆகியவற்றை வைத்து மனிதனுடைய இயல்பைக் கூறும் ஆரூடத்தில் (இல்மு பிராஸத்) இமாமவர்கள் சிறப்பான தேர்ச்சி பெற்றிருந்தார்கள். இமாமவர்களுடைய இந்தத் திறமையை நிரூபிக்கும் சம்பவமொன்றை இமாம் புகாரியின் குருநாதரான ஹுமைதி தெரிவித்துள்ளார்கள். அது வருமாறு: ''இமாமவர்களும் நானும் மக்காவின் எல்லையில் உலவிக்கொண்டு போனோம் அங்கே ஒரு மனிதனைக் கண்டோம். நான் உடனே இமாமவர்களை நோக்கி, ''உங்கள் ஆரூட ஞானத்தால் இந்த மனிதன் எப்படிப்பட்டவன் என்று கூறுங்கள், பார்க்கலாம்!'' என்று கேட்டேன். உடனே இமாமவர்கள் அவனைக் கவனித்துப் பார்த்துவிட்டு, ''இவன் ஒன்று, தச்சுவேலை செய்பவனாய் இருப்பான்; அல்லது, தையல்வேலை செய்பவனாய் இருப்பான்'' என்றார்கள். உடனே நான் அந்த மனிதனை அணுகி, ''உன் தொழில் என்ன?'' என்று கேட்டேன். அவன், ''நான் முதலில் தச்சுவேலை செய்துகொண்டிருந்தேன்; இப்போது தையல்வேலை செய்து வருகிறேன்'' என்று தெரிவித்தான்.''

இமாமவர்கள் இந்த ஆரூட சாஸ்திரத்தை யமனிலிருக்கும் போது கற்றதாகத் தெரிவிக்கிறார்கள். அவர்கள் இதைக் கற்ற புதிதில், வெளியூர் ஒன்றுக்குச் செல்ல நேர்ந்தது. அது மிகவும் சிறிய ஊர். அங்கே இரவில் தங்கநேரவே, தங்குவதற்கு வசதியான இடத்தைத் தேடினார்கள், அச்சமயம் அவர்கள் முன்னால் ஒரு மனிதன் வந்தான். அவனை ஆரூடத்தால் பார்த்த இமாமவர்கள் அவன் அற்பமான குணமும், கீழான இயல்புமுடையவனாக இருக்கவேண்டும் என்று முடிவு கட்டினார்கள். எனினும், வேறு வழியற்று, இரவு தங்குவதற்கு எங்காவது ஜாகை வசதி கிடைக்குமா என்று அவனிடம் விசாரித்தார்கள். அவன் அவர்களோடு மிகவும் அன்பாகப் பேசினான். தன் வீட்டிலேயே அவர்கள் தங்கலாம் என்றான். அவர்களுக்காக ஓர் அறையைச்

சித்தப்படுத்திக் கொடுத்தான். அங்கே வாசனைப் புகை மணங் கக்கிற்று. நல்ல உணவு கொடுத்தான். மெத்தைகள் போட்ட சுத்தமான படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. இமாமவர்களின் குதிரைக்கும் வயிறு நிறைய உணவளித்தான். அந்த மனிதனுடைய பரிவையும், உபசரிப்பையும் கண்டு இமாமவர்கள் அந்த மனிதனைப்பற்றி மிகவும் உயர்வாக எண்ணலானார்கள். தங்களுடைய ஆருட ஞானம் சரியானதல்லவோ என்றும் ஐயுறலானார்கள்.

மறுநாள் காலையில் இமாமவர்கள் பிரயாணத்துக்கு ஆயத்தம் செய்தார்கள். அப்போது வீட்டுக்காரனிடம் சென்று, அவன் செய்துகொடுத்த வசதிகளுக்காக நன்றி தெரிவித்தார்கள். அவன் அவசியம் தன் வீட்டுக்கு வர வேண்டும் என்றும் அழைத்தார்கள். அவனோ, சுற்றி வளைத்துக்கொண்டு, தான் அவர்களுக்கு இரவில் செய்து கொடுத்த வசதிகளுக்காக ஒரு பெருந் தொகையைத் தர வேண்டும் என்றான். இமாமவர்கள் ஒன்றும் பேசாமல் அவன் கேட்ட தொகையைக் கொடுத்து விட்டார்கள். அதன் பின்னரும் அந்த மனிதன் ஒரு மாதிரியாக நிற்பதைக் கண்ட அவர்கள், ஏன், இன்னும் ஏதாவது பாக்கியுள்ளதா?'' என்று வினவினார்கள். அவன், ''ஆமாம், நீங்கள் தங்கிய அறைக்கு வாடகை இதில் சேர்க்கப்படவில்லை'' என்றான். அது எவ்வளவு என்று கேட்டு அவன் சொன்னதைக் கொடுத்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்கள். இந்த விபரங்களை இமாமவர்களே கூறிவிட்டுக் கடைசியில், ''இல்முல் பிராஸத் ஓர் உண்மையான சாஸ்திரம்தான் என்று எனக்கு அப்போது முடிவு உண்டாயிற்று'' என்று தெரிவிக்கிறார்கள்.

## இமாமவர்களின் கூர்த்தமதி

இமாம் அபூ ஹனீபா, இமாம் மாலிக் ஆகிய இருவரும் தோன்றவிருந்ததுபற்றி எம்பெருமானார் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்ததுபோல, இமாம் ஷாபியீயின் தோற்றம் பற்றியும் பெருமானார் முன்னறிவிப்புச் செய்துள்

ளார்கள். ஆதாரபூர்வமான ஹதீஸ் கிரந்தங்களில் எம்பெருமான் அருளிய இந்தத் திருமொழி காணப்படுகிறது: ''குறைஷி குலத்தைச் சேர்ந்த ஆலிம் ஒருவர் பூமியின் பல பாகங்களிலும் அறிவை-மார்க்க ஞானத்தை-நிரப்புவார்'' என்று எம்பெருமான் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள். இவ்விதம் 'குறைஷி குலத்தைச் சேர்ந்த ஆலிம்' என்று பெருமானார் குறிப்பிட்டுள்ளது இமாம் ஷாபியீ அவர்களைத் தாம் என்பது இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் போன்ற பல இமாம்களுடைய கருத்தாகும். உலகின் பல்வேறு பாகங் களிலும் இமாமவர்கள் அருளிய மார்க்கஞானம் பரவியுள்ள துடன், இன்று உலக முஸ்லிம்களில் பெரும்பாலோர்-கிழக்கே இந்தோனேஷியா, மலாயா தொட்டு, மேற்கே எகிப்துவரை பல நாடுகளிலும்-அவர்கள் உண்டாக்கிய மார்க்கச் சட்டத் தையே ஏற்று அனுஷ்டானம் புரிந்து வருகின்றனர்.

இத்தகைய பெருமைக்குரிய மகான் ஆன இமாமவர்களின் பயபக்தியையும், வணக்கத்தையும், மன இயல்பையும் பற்றி ஓரளவு கண்டோம். இனி அவர்களுடைய கூர்த்தமதி எத்தகையது, அவர்கள் வழங்கிய பதில்கள், தீர்ப்புக்கள் எத்துணை அற்புதமானவை என்பதையும் காணலாம்.

இமாமவர்களின் அபாரமான ஞாபகசக்தியைப்பற்றி பல்வேறு இடங்களிலும் குறிப்பிட்டுள்ளோம், தங்கள் ஆசிரியர்கள் கூறும் பாடங்களை அவர்கள் உடனுக்குடன் மனப்பாடமிட்டுக் கொண்டதையும், அரபிப் பாடல்கள் பதினாயிரம்வரை மனப்பாடமாகச் சொல்லியதையும் பற்றியெல்லாம் நாம் அறிவோம். இதுபோன்றே எத்தனையோ நூற்களை அவர்கள் மனனம் செய் துள்ளார்கள். அவர்கள் இமாம் முஹம்மது பின் ஹஸனின் வீட்டுக்குச் சென்றசமயம், அங்கே இமாம் அபூ ஹனீபாவின் நூலான 'ஔஸத்' என்பதைக் கண்டு, அதைப் படித்துவிட்டுத் தருவதாக வாங்கிச் சென்றார்கள். அதை ஒரே இரவில் மனப் பாடமாக்கிக்கொண்டு திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

இதுபோன்றே இமாம் ஷாபியீயின் மதிநுட்பமும் உன்னதமானதாக இருந்தது. ''இமாம் ஷாபியீ அவர்களைவிட மதிநுட்ப மிக்கவரையும், மேதையையும் நான் காணவில்லை" என்று காஜி யஹ்யா பின் அக்ஹம் கூறுகிறார்.

ஒரு சமயம் இமாம் அஹ்மதிப்னு ஹன்பலும், இமாம் இஸ்ஹாக்கும், இமாம் யஹ்யாவும் சேர்ந்துகொண்டு மக்காவில் அப்போது பிரபலமாக விளங்கிய முஹத்திஸ் அப்துர் ரஜ்ஜாக் அவர்களின் ஹதீஸ் வகுப்பைப் பார்க்கப் போயிருந்தனர். இவர்கள் மூவரும் ஹரம் ஷரீபுக்குள் நுழைந்ததும், அங்கே ஓரிடத்தில் பெருங் கூட்டம் கூடியிருப்பதையும், அதன் நடுவில் வாலிப வயதினரான ஒருவர் அமர்ந்து ஹதீஸ் விளக்கங்கள் கொடுப்பதையும் கண்டனர். உடனே இமாம் இஸ்ஹாக் அருகிலிருந்த ஒருவரிடம், அந்த வாலிபர் யார் என்று வினவினார். அவருடைய பெயர் முஹம்மது பின் இத்ரீஸ் ஷாபியீ என்று அறிவிக்கப்பட்டது. உடனே அவர் ஹன்பலை நோக்கி, ''பறவைகளை அவற்றின் கூடுகளில் அமைதியாக இருக்க விடுங்கள்!" என்ற ஹதீஸுக்கு இவரிடம் விளக்கம் கேட்கலாமே!" என்று வினவினார். உடனே அஹ்மதிப்னு ஹன்பல், ''இதற்கு விளக்கம் எதற்கு? பறவைகளைத் தொந்தரவு செய்யாதீர்கள்; அவைகளை அவைகளின் கூடுகளில் நிம்மதியாக இருக்கவிடுங்கள்" என்றுதான் அதன் பொருள் தெளிவாக இருக்கிறதே!" என்று தெரிவித்தார்கள். ''இல்லை, இவரிடம் கேட்டுப்பார்ப்போம்!'' என்று கூறிய இஸ்ஹாக் கூட்டத்துள் நுழைந்து, இமாம் ஷாபியீ அவர்களை அணுகி, இந்த ஹதீஸைக் கூறி இதற்கு விளக்கம் யாது என வினவினார். உடனே, இமாம் ஷாபியீ பதிலளித்ததாவது:

''வழி தவறிய காலத்து அரபிகள் இரவில் வெளியூர் புறப்பட நாடினால், முதலில் பறவைகள் கூடுகளுள்ள இடம் சென்று ஒரு கல்லை எடுத்துக் கூடுகளின்மீது எறிவார்கள். பறவைகள் கலைந்து வெளியில் ஓடும். அப்படி ஓடுகையில் அவை வலப்புறம் பறந்தால் நல்ல சகுனம் என்று முடிவுசெய்து பிரயாணப்படுவார்கள். இல்லாது, மற்றத் திசைகளில் அவை பறந்தால் சகுனம் சரியில்லை என்று பயணத்தை நிறுத்திவிடுவார்கள்.

இதுதான் அவர்களுடைய பழக்கமாக இருந்தது. பிறகு நபிபெருமான் (ஸல்) அவர்கள் இஸ்லாத்தைப் பிரச்சாரம் செய்துகொண்டிருந்த சமயத்தில் இந்தப் பழக்கத்தை அவர்கள் கண்டித்து, ''பறவைகளை அவற்றின் கூடுகளில் அமைதியாகத் தூங்கவிட்டு, இறைவன்மீது நம்பிக்கைவைத்துப் பயணப்படுங் கள்'' என்று போதித்தார்கள்," இவ்வாறு இமாமவர்கள் கொடுத்த விளக்கம் யாவரையும் வியப்பிலாழ்ந்திற்று. இமாம் அஹ்மதிப்னு ஹன்பலுக்கு அப்பொழுதுதான் இமாமவர் களிடம் தனியானதோர் மதிப்பும் மரியாதையும் உண்டா யிற்று. அதனால், அவர்கள் மற்றப் பெரியார்களுடைய கலா ஞான வகுப்புக்களையெல்லாம்விட, இவர்களுடைய கலாஞான வகுப்பையே சிறந்ததாகக் கருதி அங்குச் சென்று அமர்ந்து அவர்களுடைய உபன்னியாசங்களைக் கேட்டார்கள்.

ஒரு சமயம் அவர்கள் இவ்விதம் இமாமவர்கள் சபையில் அமர்ந்திருப்பதைக் கண்ட அவர்களுடைய நண்பரான பஜ்லு என்பவர், ''ஹஜ்ரத் ஸுப்யான் பின் ஐனு நடத்தும் ஹதீஸ் வகுப்புகளுக்குக்கூடப் போகாமல், வயதில் இளையவரான இந்த மனிதருடைய சபையில் வந்து அமர்ந்திருக்கிறீர்களே!'' என்று ஹன்பலவர்களிடம் வினவினர். உடனே அவர்கள், ''நீங்கள் சும்மா இருங்கள்! இந்த அறிவுக் களஞ்சியத்தி லிருந்து நான் கலாஞானங்களை இப்போது அள்ளிப் பருகா விட்டால் பிறகு எனக்கு இறுதிநாள் வரை அந்தப் பாக்கியம் கிடைக்காமல்போகுமோ என்று அஞ்சுகிறேன். மேலும், திரு குர்ஆனின் அந்தரார்த்தங்களையெல்லாம் அறிந்து போதிக்கும் அறிஞர் இந்த மனிதரைவிட வேறு யாரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்று பதிலளித்தார்கள்.

இமாமவர்கள் பக்தாதிலிருந்த காலத்தில் இந்தச் சம்பவம் நடந்ததாகச் சொல்லப்படுகிறது: கலீபா ஹாரூனர் ரஷீதுக்கும், அவர் மனைவி ஜுபைதாவுக்கும் ஒருநாள் சண்டை மூண்டு அது பெரிதாகிவிட்டது. உடனே அந்த அம்மாள் தம் கணவரை நோக்கி, ''நீர் நரகவாதி'' என்று கூறிவிட்டார். உடனே ஆத்திரத்தோடு கலீபா, ''நான் நரகவாதியானல்

உன்னைத் தலாக் சொல்லிவிடுகிறேன்'' என்று சத்தியம் செய்து விட்டார். இதனால் இருவரும் பிரிந்திருக்க நேர்ந்தது. எனினும், மீண்டும் சேரவேண்டும் என்ற பிரியாமை வேட்கை இருவரையும் வாட்டலாயிற்று. ஆனால், அவர்கள் சேர்வதாயின் அதற்கு, ''ஹாரூனர் ரஷீது நரகவாதியல்ல'' என்று தீர்ப்புப் பெறவேண்டும். அவருடைய சட்ட ஆலோசகர் முதல், உலமாக்கள் பலரும் இவ்விதம் அவருக்கு அத்தாட்சிப்பத்திரம் வழங்கத் தயாராயில்லை. ''மறுமையில் அல்லாஹ் அவருக்கு என்ன கதியை வைத்துள்ளானோ!'' என்று எண்ணித் தயங்கினர். கடைசியில் அவர் இமாம் ஷாபியீயை அழைத்து அவர்களிடம் தமது வழக்கைச் சொல்லி ஒரு நல்ல முடிவு தரும்படி கேட்டார். ''நீங்கள் நரகவாதியா அல்லவா என்பதுதானே இப்போதுள்ள பிரச்சினை! சரி, நான் கேட்கும் கேள்விக்கு நீங்கள் ஒழுங்காகப் பதில் சொல்லுங்கள் : நீங்கள் என்றாவது ஒரு பாவஞ் செய்ய நினைத்துப் பின் அல்லாஹ்வுக்காக அதை விட்டு விலகிக் கொண்டதுண்டா?'' என்று இமாமவர்கள் வினவினார்கள். கலீபா சொன்னார் : ''ஆமாம். ஒரு நாள் நான் வேட்டைக்குப் போனசமயம் வழியில் கட்டழகுமிக்கதோர் காரிகையைக் கண்டேன். அவள்மீது ஆசை தலைக்கேறியவனானேன். அவளை அழைத்துவரச் செய்தேன். அவள் வந்துவிட்டாள். ஆனால், என் மனக் கண்முன் மறுமையின் காட்சி தென்பட்டது. இறைவன்முன் 'விபசாரம் செய்தவன்' என்று நான் அழைக்கப்படுவதையும், மற்றும் நபிமார்கள், மகான்களின்முன் நான் வெட்கித் தலைகுனிவதையும் கண்டேன். என் உடல் குன்றியது. இப்படிப் பாவ நெருப்பில் விழுவதை அல்லாஹ்வுக்காக விலக்கிக்கொள்ள வேண்டும் என்று எண்ணினேன். உடனே அந்தப் பெண்ணை அவள் வீட்டுக்கு அனுப்பிவிட்டேன்."

உடனே, இமாமவர்கள், ''நீர் சுவர்க்கவாதிதான்" என்று கூறி, 'வலிமன் ஃகாஃப மகாம ரப்பிஹி ஜன்னத்தான்' (தன்) இறைவனின் சந்நிதிக்கு அஞ்சுபவர்களுக்கு (சொர்க்கத்தில் இரண்டு பூங்காக்களுண்டு) என்ற திரு குர்ஆன் வசனத்தை ஓதிக் காட்டினார்கள். அவர்கள் தீர்ப்பின்படி கலீபா மீண்டும் தமது மனைவி ஜுபைதாவுடன் சேர்ந்து வாழ முடிந்ததாம்.

இதுபோன்ற ஹாரூன்—ஜுபைதா தகராறுகள் பலவற்றில் இமாமவர்கள் தலையிட்டுத் தீர்ப்பு வழங்கியதாகச் சொல்லப்படுவதுண்டு. ஒரு சமயம் ஹாரூனே தம் மனைவி ஸுன்னத்துத் தொழக்கூடாதென்றும், தொழுதால் அவரை முத்தலாக்கும் கொடுத்துவிட்டதாகும் என்றும் சபதமிட்டாராம். அதைப் பொருட்படுத்தாமல் ஜுபைதா ஸுன்னத் தொழுதுவிட்டாராம். எனவே, தலாக்குப் பூர்த்தியாகிப் போய்விட்டதோ என்று ஹாரூன் கவலையுற்றாராம். இதில் தங்களிடம் தீர்ப்புக் கோரப்பட்டபோது, இமாமவர்கள் திரைக்கு அப்பாலிருந்து ஜுபைதாவை இரண்டு 'ரகஅத்' ஸுன்னா பாத்திஹாவைச் சப்தமிட்டு ஓதித் தொழச் சொன்னார்களாம். அவ்விதம் ஓதுகையில் அவர் ஒரு பிழைவிட்டு ஓதினாராம். திருப்பியும் ஓதச் சொல்லியும் இதுபோல் பிழைவிட்டு ஓதவே, "இந்த அம்மாளின் தொழுகை சரியல்ல, அதனால் தலாக்குச் செல்லாது" என்று தீர்ப்புக் கூறினார்களாம்.

இமாமவர்களிடம் ஒரு சமயம், "ஒருவனுடைய தீக்கோழி இன்னொருவனுடைய விலைமதிப்பற்ற இரத்தினம் ஒன்றைக் கொத்தி விழுங்கிவிட்டால், அதனால் உண்டாகும் பிரச்சினையை எப்படித் தீர்ப்பது?" என்று கேட்கப்பட்டதாம். "இரத்தினத்தின் சொந்தக்காரன் புத்திசாலியானால், அந்தத் தீக்கோழியைப் பிடித்துத் 'தக்பீர்' சொல்லி அறுத்து, அது விழுங்கிய ரத்தினத்தை எடுத்துக்கொள்வான். பின்னர், அதன் சொந்தக்காரனுக்கு நஷ்டஈடு கொடுப்பதற்காக, அது உயிரோடிருக்கும்போது அது பெறுமான விலையையும், அதைத் தக்பீர் சொன்னபின் அது பெறுமான விலையையும் ஒன்றாகக் கூட்டி, அந்தத் தொகையில் பாதியைக் கொடுக்கச் சொல்வேன்" என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

இமாமவர்கள் மக்காவில் முப்தியாக இருந்தபோது ஒரு சமயம் இளைஞன் ஒருவன் இமாமவர்களிடம் துண்டுத் தாள் ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்தான். அதில் எழுதியிருந்தைப் படித்துவிட்டு, இமாமவர்கள் அதற்குக் கீழ் சில வரிகள் எழுதிக்கொடுத்து அனுப்பினார்கள். அதன் விபரத்தை அறிய நாடிய ரபீஉ என்பவர் அந்த வாலிபனைத் தொடர்ந்துபோய்,

அவனிடமிருந்த பிரஸ்தாபத் துண்டுத்தாளை வாங்கிப்பார்த்தார். அதில் பாட்டாக,

மக்காவின் முப்தியிடம் கேளுங்கள்,
மனத்திலே இச்சை கொண்டவன்
ஆலிங்கனம் நாடி (மனைவியை) வருடுவதால்மட்டும்
அவன் நோன்புக்குப் பங்கமுண்டோ என்பதை

என்று அந்த வாலிபன் எழுதியிருந்தான். அதற்கு இமாமவர்கள் பாட்டாகவே,

மனத்தகத்தில் ஆசையுறும் புண்ணுண்டாகி
அதனால் ஈரல்கள் ஒன்றோடொன்று ஒட்டுவதால்
இளைஞரின் நோன்பு முறிவதைவிட்டும்
அல்லாஹ்விடம் காவல் தேடுகிறேன்

என்று பதிலளித்திருந்தார்கள். இதைக் கண்ட அந்த ரபீஉ என்பவருக்கு ஆத்திரம்கூட உண்டாயிற்று. இத்தகைய இளைஞனுக்கு இமாமவர்கள் இப்படிப் பதில் கொடுக்கலாமா என்று ஐயுற்று, இதுபற்றி அவர்களிடம் வினவினர். அவர்கள் சொன்னதாவது : ''இந்த இளைஞர் ஹாஷிமிக் குலத்தைச் சேர்ந்தவர், இவருக்கு இந்த ரமலானில்தான் திருமணம் முடிந்தது. வாலிபரான இவருடைய ஆசையின் கொடுமையால் ரமலான் பகலில் வீடுகூடல்அற்ற சேர்மானமாக இவர் தம் மனைவியைத் தழுவிக்கொண்டார். அதனால், நோன்பு முறிந்துபோயிருக்குமோ என்று சந்தேகப்பட்டு என்னிடம் அந்நக் கேள்வியைக் கேட்டுவந்தார்.

இமாமவர்களின் மேதையைக் காட்டும் பல அற்புதமான பதில்களுண்டு. அவர்கள் ஹாரூனர் ரஷீதின் சபைக்கு வந்தபோது அங்கே அவர்களிடம் பல கேள்விகள் கேட்கப்பட்டன. அவற்றுக்கு அவர்கள் சொன்ன பதில்கள் நாம் படித்து இன்புறத்தக்கவையாகும். அவற்றுள் சில கேள்வி—பதில்களை இங்கே தரலாம்.

1. கேள்வி : ஒருவன் தன் வீட்டில் ஓர் ஆட்டை அறுத்தான். அதன்பின் அவன் வெளியில் போய்விட்டு வீட்டுள்

நுழைந்தவன், தன் மனைவி மக்களை நோக்கி, ''எனக்கு அந்த ஆடு 'ஹராம்' ஆகிவிட்டது. நீங்கள் சாப்பிடுங்கள்" என்று கூறினான். அவர்கள் உடனே, ''அது எங்களுக்கும் 'ஹராம்' ஆகிவிட்டது" என்று கூறினர்.

இமாமவர்கள் சொன்ன பதிலாவது : அவன் இணைவைப் பவனாக வீட்டைவிட்டுப் புறப்பட்டான் அல்லாஹ் அவனை இஸ்லாத்திலாக்கிவிட்டான். பின்னர் வீட்டிலுள்ளவர்கள் இதை அறிந்தவுடன் தாங்களும் முஸ்லிமாகிவிட்டனர். எனவே, இணைவைப்பவனாக இருந்தபோது அவன் ஆட்டை அறுத்ததால் அது முஸ்லிமான அவர்களுக்கும் 'ஹராம்' ஆகி விட்டது.

2. கேள்வி : ஓர் அடிமை ஓடிப்போய்விட்டான். அவனுடைய எஜமானன், ''நான் அவனைக் கண்டு பிடியாது உணவுண்டால் அவனை உரிமை விட்டவனாவேன்'' என்று சபதம் செய்கிறான். அவன் உணவுண்ணவும்வேண்டும். அந்த அடிமையை விடுதலை செய்யாதிருக்கவும் வேண்டும். எப்படி?

பதில் : அந்த எஜமானன் அந்த அடிமையைத் தன் புத்திரர்களுள் ஒருவருக்குச் சம்மானமாக அளித்துவிட்டு உணவுண்ணலாம். பிறகு இஷ்டப்பட்டபோது தன்கொடையை மீட்டுக் கொள்ளலாம்.

3. கேள்வி : முஸ்லிமான, சுயபுத்தியுள்ள இருவர் மதுக் குடித்தனர். ஒருவனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டு, மற்றவனுக்குத் தண்டனை விதிக்கப்படவில்லை, ஏன்?

பதில் : அவர்கள் இருவரில் ஒருவன் யுக்த வயதை அடைந்துவிட்டவனாவான். மற்றவன் சிறுவன். அவன் மீது இதற்குத் தண்டனை விதிக்க முடியாது.

4. கேள்வி : ஒருவன் தன் மகனை விளித்து, ''நான் மரணித்தால், உனக்கு என் சொத்திலிருந்து இரண்டாயிரம் திர்ஹம் கிடைக்கும். நீ என் சிறிய தகப்பன் மகனாக இருந்

திருப்பின் உனக்குப் பதினுயிரம் திர்ஹம் கிடைத்திருக்கும்" என்று கூறுகிருன். எப்படி?

பதில் : அவனுக்கு முப்பதினுயிரம் திர்ஹம் ஆஸ்தி இருக்கிறது. அவனுக்கு இருபத்தெட்டுப் பெண்களும், இந்த ஒரே மகனும் உண்டு. எனவே, அவன் சொத்தில் இந்தப் பெண்கள் ஒவ்வொருவரும் ஆயிரம் ஆயிரம் திர்ஹமும், மகன் இரண்டாயிரம் திர்ஹமும் அடைவர். அந்த மகன்மட்டும், அவன் மகனுகவன்றி, அவன் சிறிய தகப்பன் மகனுக இருப் பின், அந்தப் பெண்கள் அனைவருக்குமாக அவன் ஆஸ்தியில் மூன்றில் இரண்டு பங்கு (இருபதினுயிரம் திர்ஹம்) போக மீதி யுள்ள பதினுயிரமும் அவன் சிறிய தகப்பன் மகனுக்கே கிடைக்கும்.

5. ஒருவன் ஒரு கலயத்தில் தண்ணீரெடுத்துக் குடிக் கும்போது, ஓரளவு குடிக்கும்வரை அது 'ஹலால்' ஆக இருந்தது; பின்னர், மீதித் தண்ணீர் 'ஹராம்' ஆகிவிட்டது. எப்படி?

பதில் : அவன் தண்ணீர் குடிக்கும்போது அவனுடைய பொன்னிமூக்கு உடைந்து, அந்த மீதித் தண்ணீரில் இரத்தம் விழுந்து கலந்ததால் அந்தத் தண்ணீர் அசுத்தமானதாகி 'ஹராம்' ஆகிவிட்டது.

6. கேள்வி : ஓர் ஆணும், பெண்ணும் நடந்து சென்ற போது இரண்டு சிறுவர்களைச் சந்தித்தார்கள். உடனே அவர் களை இருவரும் முத்தமிட்டனர். பின்னர் ஆண் சொன்னுன், "என் தகப்பனை இவர்கள் இருவருக்கும் பாட்டனுக்கினேன்; என் தம்பியை இவர்களுக்குச் சிற்றப்பனுக்கினேன்; என் மனைவியை இவர்களுடைய தகப்பனுக்கு மனைவியாக்கினேன்" என்று. உடனே அந்தப் பெண் சொன்னுள், "என் தாயாரை இவர்களுக்குப் பாட்டியாக்கினேன்; என் சகோதரியை இவர் கள் சிறிய தாயாராக்கினேன்; என் கணவரை இவர்களுடைய தாய்க்குக் கணவராக்கினேன்" என்று. எப்படி?

பதில் : அந்த ஆணும் பெண்ணும் கணவனும் மனைவியு மாவர்; அந்த இரண்டு சிறுவர்களும் அவர்களுடைய குழந்தை களாவர்.

7. கேள்வி : ஒருவன் ஒரு பையில் ஒரு பொருளையிட்டு நிரப்பிக்கட்டி, அந்தக் கட்டின்மீது முத்திரைபோட்டுத் தன் மனைவியிடம் கொணர்ந்து கொடுத்து, "இந்தப் பையைத் திறந்தாலும், கிழித்தாலும், முத்திரையை உடைத்தாலும் நீ தலாக் ஆவாய். இந்தப் பையிலுள்ளதை நீ வெளியாக்கி, இந்தப் பையைக் காலியாக்சா விட்டாலும் நீ தலாக் ஆவாய்" என்றான். அவள் தலாக் ஆகாமலிருப்பதெப்படி?

பதில் : அந்தப் பையில் உப்பு அல்லது சீனிபோன்ற கரையும் பொருளை அவன் நிரப்பினான். அந்தப் பையைச் சூடான தண்ணீருள் முக்கினால் அதனுள் இருக்கும் பொருள் உருகி வெளியாகிவிடும். முத்திரையை உடையாமலும், பையைத் திறவாமலும், இவ்விதம் அதனுள் இருப்பதைக் காலிசெய்து பையை அவள் அவனிடம் ஒப்படைத்துவிட முடியும்

8. கேள்வி : ஐந்து பேர்கள் ஒரு பெண்ணிடம் விபச் சாரம் செய்துவிட்டார்கள். ஒருவனுக்கு மரண தண்டனையும். ஒருவனுக்கு நாட்டிவைத்துக் கல்லெறியும் தண்டனையும் விதிக் கப்பட்டது. மூன்றாமவனுக்கு நூறு கசையடியும், நான்காம வனுக்கு ஐம்பது கசையடியும் அடிக்க உத்தரவிடப்பட்டது. ஐந்தாவது நபர் எந்தத் தண்டனையுமின்றி விடுதலை செய்யப் பட்டான். எப்படி?

பதில் : விபசாரம் செய்வது ஆகுமானதுதான் என்று கூறி அதில் ஈடுபட்டவனுக்கு மரண தண்டனையும், மண முடித்தவனைநிலையில் அதில் ஈடுபட்டவனுக்கு நாட்டிவைத் துக் கல்லெறியும் தண்டனையும் விதிக்கப்பட்டன, மூன்றாவ தானவன் மணமுடியாதவன்; நூறு அடி பெற்றான். நான்கா மவன் அடிமை; எனவே, ஐம்பது அடி அளிக்கப்பட்டது. ஐந்தாவது நபர் பைத்தியக்காரன்; எனவே, சும்மாவிடப் பட்டான்.

9. கேள்வி : ஒருவன் சிலருக்கு இமாமாக முன்நின்று தொழுகையை நடத்தினான். அவன் வலப்பக்கம் ஸலாம் கொடுத்த உடன் அவனுடைய மனைவி அவனை விட்டும் 'தலாக்' ஆனாள். அவன் இடப்பக்கம் ஸலாம் கொடுத்த போது அவன் தொழுகையே முறிந்து போய்விட்டது. அப்போது வானத்தைப் பார்த்தான். அப்போதே அவன் ஆயிரம் திர்ஹம் கொடுக்க வேண்டியதாயிற்று. எப்படி?

பதில் : இவனுடைய மனைவியின் கணவன் தலைமறைவாகப் போய்விட்ட நிலையில், அவனோடு அவளுக்குள்ள தொடர்பு அறுபட்டுப் போனதாகக் கூறி அவளை இவன் மணந்துகொண்டிருந்தான். இந்த நிலையில் இவன் வலப்பக்கம் ஸலாம் கொடுத்தபோது தன் மனைவியின் (தலைமறைவான) அந்தக் கணவனை இவன் கண்டான். எனவே, அப்போதே அந்தப் பெண் இவனை விட்டும் தலாக்கானவளாகிறாள். இவன் இடப்பக்கம் ஸலாம் கொடுத்தசமயம் தன் உடையில் அதிகமான இரத்தத்தைக் கண்டான். அதனால் தொழுகை கூடாமல் போய்விட்டது. இவன் வானத்தை நோக்கியபோது அங்கே பிறையைக் கண்டான். இவன் கொடுக்கவேண்டிய கடனுக்குக் குறித்த தவணை வந்துவிட்டதை அது நினைவு படுத்திற்று.

10. கேள்வி : ஒருத்தி மூன்று குழந்தைகள் பெற்றாள், அவற்றுள் ஒன்று அடிமையாயிற்று. ஒன்று ஹராமில் பிறந்த தாயிற்று. மூன்றாவது குழந்தை அரசனாயிற்று; அந்த அரசனின் பெயர் குத்பாக்களில் ஓதப்படும் புகழைப் பெற்றது. இந்த முன்று குழந்தைகளுக்கும் தாயும் தகப்பனும் ஒரே நபர்கள் தாம்.

பதில் : அவள் ஓர் அடிமைப் பெண்ணாவாள். அவளை ஹாஷிமிய்யி குலத்தைச் சேர்ந்த ஒருவன் மணமுடித்தான். அதில் அவள் ஒரு குழந்தை பெற்றாள். அந்தக் குழந்தை அவள் யாருக்கு அடிமையாயிருந்தாளோ அந்த எஜமானனுக்கு அடிமையாயிற்று. பின்னர் அந்த ஹாஷிமிய்யி குலத்து மனிதன் அவளை விவாகரத்துச் செய்துவிட்டு, அவளோடு விபசாரம் புரிந்தான். அதில் ஒரு குழந்தை பிறந்தது.

தான். அந்த வாரிஸ்தாரர்களுள் ஒரு சகோதரியும் இருக்கிருள். அவளுக்கு ஒரு திர்ஹம் மட்டுமே பங்கு கிடைக்கிறது. இதைப் பங்கிடும் விதம் எப்படி?

2. ஒரு மனிதன் ஒரு பெண்ணை மணமுடித்தான்! அவன் மகன் அந்தப் பெண்ணின் தாயை மணமுடித்துக் கொண்டான். அந்த இருவரும் இரண்டு ஆண் குழந்தைகளைப் பெற்ருர்கள். அந்த இரண்டு குழந்தைகளிடையேயும் உள்ள உறவு முறை யாது?

இவ்விரண்டு கேள்விகளும் கேட்கப்பட்டபோது அந்தச் சபையில் இமாம் அபூ யூஸுஃப் அவர்களும் இருந்தார்கள் என்றும், அவர்கள் உட்பட யாராலும் இவற்றுக்குப் பதில் கூற இயலாது போகவே, ஹாரூனர் ரஷீது கேட்டுக்கொண்ட தன்பேரில் இமாம் ஷாபியீ அவர்களே பதிலளிக்கலானுர்கள் என்றும் சொல்லப்படுகிறது :

1. இதில் சொல்லப்பட்டது போன்ற பிரச்சினை ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் ஆட்சியில் நேர்ந்தது. அவர்கள் பிரயாணம் போவதற்காகத் தங்கள் கோவேறு கழுதைமீது ஏற ஒரு காலை அதன் அங்கவடியின்மீது வைத்துவிட்டார்கள், அச்சமயம் பெண்ணொருத்தி அவர்களிடம் வந்து, ''அமீருல் மூமினீனே, என் சகோதரன் மரணமாகி அறுநூறு திர்ஹம் சொத்து விட்டுப் போயிருக்க, அதில் ஒரு திர்ஹம்தானு எனக்குரிய பங்கு கிடைக்கவேண்டும்?" என்று வினவினுள். உடனே ஹஜ்ரத் அலீ (ரலி) சொன்னுர்கள் : ''உன் சகோதரன் அறுநூறு திர்ஹத்தையும், இரண்டு பெண் மக்களையும், தன் தாயையும், மனைவியையும், பன்னிரண்டு சகோதரர்களையும், உன்னையும் விட்டுப்போனுன். அந்த அறுநூறு திர்ஹத்தில் இரண்டு பெண் மக்களுக்கும் அல்லாஹ் சொல்லியபடி நானூறும், தாய்க்கு நூறும், மனைவிக்கு எழுபத்தைந்தும், சகோதரர்கள் பன்னிருவருக்கும் தலா இருபத்து நான்கும், உனக்கு ஒன்றும் விட்டுச் சென்ருன்" என்று கூறியவர்களாகச் சவாரியைத் தொடங்கினுர்கள்.

2. தாயின் மகன் மகளுடைய மகனுக்கு மாமாவாயினன். மகளுடைய மகன் தாயின் மகனுக்குச் சிறிய தகப்பனாயினன்.

இமாமவர்கள் சாதுரியமாகப் பேசுவதிலும் தேர்ந்தவர்களாக இருந்தார்கள், அவர்களுடைய உரையாடலில் நகைச்சுவையும் மிளிரும். அத்தகைய சம்பவம் ஒன்றை மட்டும் இங்கே குறிப்பிடலாம் : இமாமவர்கள் எகிப்து செல்லுமுன், அச்சமயம் கலீபாவாகியிருந்த மாமூனின் சபைக்கும் சில தடவை சென்றுவந்துள்ளார்கள். மாமூன் முஃதஜிலாக்களின் ஆதிக்கத்தில் அகப்பட்டிருப்பதைக் கண்டு அவர்கள் அவரை விட்டுப் பெரும்பாலும் ஒதுங்கியே வந்தார்கள். ஒரு சமயம் இமாமவர்கள் தமது சபைக்கு வந்திருந்தபோது மாமூன் அவர்களை நோக்கி, ''அல்லாஹ் இந்த ஈயை ஏன் படைத்தான்?'' என்று வினவினர். உடனே இமாமவர்கள் ''ஆட்சியாளர்களைத் தாழ்மையாக்குவதற்காகத்தான்'' என்று பதிலளித்தார்கள். உடனே கலீபா சிரித்தவராக, ''இல்லை, என் கன்னத்தில் ஈ ஒன்று வந்து அமர்ந்தது, அதனால் கேட்டேன்'' என்று கூறினர். ''நீங்கள் இதைக் கேட்டதும் என் உடல் திடுக்கத்தால் ஒரு குலுங்குக் குலுங்கிவிட்டது'' என்று இமாமவர்கள் சொல்லவே, ஏன் என்று அவர் வினவினர், இமாமவர்கள், ''உங்கள் கன்னத்தைப் பதினாயிரம் வாள் வீரரும், பதினாயிரம் ஈட்டி வீரரும், அவர்களின் தளபதிகளும் தொடமுடியாதிருக்கக் கேவலம், கடுகளவுள்ள ஈயொன்று அதில் வந்து அமர்ந்து உங்களைத் தாழ்மையாக்கும்படி செய்த அல்லாஹ்வை எண்ணியவுடன்தான் என் உடலில் திடுக்கமுண்டாயிற்று'' என்று விளக்கினார்கள்.

இமாமவர்கள் தீர்ப்பின் மாண்பைக் காட்டும் ஒரு சம்பவம் வருமாறு : இமாமவர்கள் பக்தாதிலிருந்த சமயம் விதண்டாவாதமாகக் கேள்வி கேட்கும் நபர் ஒருவன் இமாமவர்களிடம் வந்தான், அவன், ''நான் தங்களிடம் மூன்று கேள்விகள் கேட்பேன், அவற்றுக்குத் தாங்கள் திருப்திகரமாகப் பதில் சொல்லவேண்டும்'' என்று கூறினன். இமாமவர்கள் இசையவே, அவன் தன் கேள்விகளை விடுத்தான் :

1. அல்லாஹ்வை நான் நம்பவேண்டுமானால் அவனை எனக்கு ஸ்பஷ்டமாக நேரில் பார்க்கவேண்டும், முடியுமா?

2. அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்று இருப்பது உண்மையானால் நாம் செய்யும் நன்மை தீமைகள் யாவும் அவனால் உண்டாகுபவைதாமே! அவற்றில் தீமையான வற்றுக்காக அவன் நம்மைத் தண்டிப்பது சரியா?

3. இப்லீஸை அல்லாஹ் வேதனை செய்வதாகவும், தண்டிப்பதாகவும் சொல்கிறானே, இப்லீஸோ நெருப்பாலான வனாயிற்றே! அவனை நரக நெருப்பு வாட்டுவது எப்படி?

இந்த மூன்று கேள்விகளையும் அந்த விதண்டாவாதி சொல்லி முடித்த உடனே இமாமவர்கள் எழுந்து கீழே கிடந்த ஒரு கல்லை எடுத்து அவன் மீது வீசிவிட்டார்கள். அது அவனுக்கு அதிகமான நோவையும், கோபத்தையும் உண்டாக்கி விட்டது. ''கேள்வி கேட்டால் கல்லால் அடிப்பதுதான் முறையோ! பதில் சொல்ல முடியாவிட்டால் சும்மா இருப்பது தானே!" என்று கூறிக் கொண்டே அவன், ''இவ்வளவு பெரிய அறிவாளி என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது என்னை அடித்து விட்டார்'' என்று நகர நீதிபதி (காஜி)யிடம் முறையிட்டான். உடனே, சட்டம் தன் வேலையைத் தொடங்கிற்று. இமாமவர்கள் அவனுடைய குற்றச்சாட்டுக்கு நீதிமன்றத்தில் வந்து ஆஜராகி பதில் சொல்லவேண்டும் என்று நீதிபதி உத்தரவிட்டார். உடனே, இமாமவர்கள் இதில் சில முக்கியமான விஷயங்கள் தெளிவுபட வேண்டியதிருப்பதால் இதைக் கலீபா ஹாருனர் ரஷீதின் சபையில் விசாரிக்க உத்தர விடவேணுமாய்க் கேட்டார்கள். நீதிபதியும் அதற்கு ஏற்பாடு செய்தார். கலீபாவின் சபையில் இமாமவர்கள் விஷமத்தனமான ஒருசெயல்செய்ததாகக் குற்றஞ்சாட்டப்பட்டு நின்றார்கள். கலீபா கேட்டார் ''ஏன் இவனைக் கல்லால் அடித்தீர்கள்?'' என்று. ''அவன் என்னிடம் என்ன கேள்விகள் கேட்டான் என்று திருப்பிச் சொல்ல உத்தரவிடுங்கள்'' என்று இமாமவர்கள் கேட்டார்கள். அவன் தன் வினாக்களை அங்கே எடுத்தோதினான். உடனே இமாமவர்கள், ''நீ கேட்ட கேள்வி

களுக்குப் பதில்தானே இது! அப்படியிருக்க நீ முறையிட வேண்டிய அவசியமென்ன?" என்று கேட்டார்கள். அவர்கள் சொல்வதை விளக்குமாறு கலீபா உத்தரவிட்டார். இமாமவர்கள் சொன்னார்கள்: ''முதலாவதாக, நீ என்னிடம் கேட்டாய், அல்லாஹ்வை நேரில் ஸ்பஷ்டமாகப் பார்க்க வேண்டும் என்று. இப்பொழுது நான் உன்னைக் கல்லால் அடித்தால் வேதனையுண்டானதாக முறையிடுகிறாயே, எங்கே அந்த வேதனையை நீ என்னிடம் ஸ்பஷ்டமாகக் காட்டு, இல்லாவிட்டால் அதை நான் நம்புவதெப்படி? இப்படி உன் முதல் கேள்விக்குப் பதில் தரும் முகத்தான் உன்னைக் கல்லால் அடித்தேன்.

இரண்டாவதாக, நீ கேட்டாய், அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்றிருக்கும்போது நீ செய்யும் தீமைகளுக்கு அவன் உன்னைத் தண்டிப்பது எப்படி என்று. சரி, இப்போது மட்டும், நான் கல்லால் அடித்ததாக முறையிடுகிறாயே, அது ஏன்? அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்றிருக்கும் போது நீ கல்லால் அடிப்பட்டதும் அவனால் உண்டான சம்பவம்தானே! அதற்கு நீ அவன் மீதல்லவா வழக்குத் தொடர்ந்திருக்கவேண்டும்! என்மீது வழக்குத் தொடரலாமா? இதுவே உன் இரண்டாவது கேள்விக்கு அந்தக் கல் மூலம் நான் தந்த பதிலாகும்.

மூன்றாவதாக நீ கேட்டாய், நெருப்பாலான ஷைத்தானை நரக நெருப்பு துன்புறுத்துவதெப்படி என்று. ஆமாம். மண்ணால் படைக்கப்பட்ட உன்னை மட்டும் நான் அடித்தேனே அந்தக் கல் துன்புறுத்திய தெப்படி? நீ மண்ணினால் படைக்கப்பட்டுள்ளாய்; அதுவும் மண். அப்படியிருக்க அது உன்னைத் துன்புறுத்தியிருப்பது சாத்தியமா!—இதுவே உன் மூன்றாவது கேள்விக்கு அந்தக் கல்மூலம் நான் தந்த பதிலாகும்."

இமாமவர்கள் பதில்களைக் கேட்டுக் குற்றஞ் சாட்டியவன் தலை கவிழ்ந்தான். இப்படி ஓர் அருமையான வழக்கு தமது முன் நடந்ததற்காகக் கலீபாவும் மகிழ்ச்சியில் திளைத்தார்.

# இமாமவர்கள் நூற்கள்

எண்ணற்ற நூற்களை எழுதி எல்லையற்ற மார்க்கச் சேவை செய்த மகான் இமாம் ஷாபியீயாவார்கள், அவர்கள் மொத்தம் நூற்றுப் பதிமூன்று நூற்கள் எழுதியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவற்றுள் ஷரீஅத்தின் சட்ட திட்டங் களின் மூலங்களாக விளங்கும் மகத்தான நூற்கள் மட்டும் பதினன்கு ஆகும். மத்ஹபின் பிரிவுகளைப்பற்றியும், மற்றும் பல விஷயங்களைப்பற்றியும் தங்களுடைய மற்ற நூற்களில் பேசுகிறார்கள்.

இமாம் ஷாபியீயின் போக்கு நடுவுநிலையானது. அவர்கள் பூரணமான பழைய சம்பிரதாயத்துக்கும், சுதந்திரமான முடிபுகளுக்கும் இடையிலுள்ள பாதையை வகுத்துத்தந்தார் கள். 'உஸுலுல் பிக்ஹு' என்ற பிக்ஹின் சட்டமுறையை வகுத்துத்தந்து உதவியவர்கள் அவர்கள் தாம். இவர்கள் 'கியாஸ் (அனுமானம்) சம்பந்தப் பட்டவரை வெகு கடுமை யான கட்டுப்பாடுகளை விதித்தார்கள். அத்துடன், ஹனபி இமாமவர்களின் விசேஷமான வழிமுறைகளில் ஒன்றான-நாம் உரிய இடத்தில் குறிப்பிட்டுள்ள-'இஸ்திஹ்ஸான்' ஐ ஷாபியீ இமாமவர்கள் முற்றும் ஒதுக்கிவிட்டார்கள்.

இமாமவர்களின் நூற்கள் பெரும்பாலும் பக்தாதிலும், கெய்ரோவிலும் இருக்கும்போதே எழுதப்பட்டன. அவர்கள் பக்தாதிலிருந்த சமயம் ஆக்கிய நூற்களை அவர்களுடைய மாணவர்களான இமாம் அஹ்மதிப்னு ஹன்பல், ஜபரானீ, அபூ தௌர், கராபீஸீ ஆகியோர்கள் தொகுத்ததாகவும், கெய்ரோவிலிருந்த சமயம் ஆக்கிய நூற்களை முஜ்னீ, ரபீஉ பின் ஸுலைமானுல் ஜீஸி, ராபிஉ பின் ஸுலைமானுல் முராதீ, புவைதி, ஹர்மலா, யூனுஸ் பின் அப்துல் அஃலா ஆகிய ஆறு பேர்களும் தொகுத்ததாகவும் தெரிய வருகிறது,

இந்த நூற்களில் அவர்கள் கையாண்டுள்ள வசன நடை பலவகைகளில் சிறப்புடையது. சில நூற்கள் யாவரும் படிக்கத் தக்க எளிமையுடனும், இன்னும் சில, அரபிமொழி வல்லுனர்

களேகூடப் புரிந்துகொள்ள முடியாத கடுமையான நடையிலும் அமைந்துள்ளன. இமாமவர்கள் தங்கள் நூற்களில் அரபிகளின் வழக்குச் சொற்களேயும், பழமொழிகளேவும் அள்ளித் தெளித்து தனியானதோர் இலக்கிய விருந்தையே பரிமாறியுள்ளார்கள். தங்களோடு கொள்கை மாறுபட்டவர்களின் வாதங்களேயும், தங்கள் வாதங்களேயும் அவர்கள் சமர்ப்பிக்கும் முறை மிகவும் அருமையானதாகும்.

இமாமவர்களின் நூற்களில் மிகவும் பெரியது 'கிதாபுல் உம்மு' என்பதாகும். இது சுமார் நாலாயிரம் பக்கங்களே யுடையது, பைஹக்கியால், இமாமவர்களின் தனி நூற்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ள பல, உண்மையில் இந்த 'கிதாபுல் உம்மு'விலுள்ள பகுதிகள் தாம் என்றும், அவை தனி நூற்க ளல்ல வென்றும் ''என்ஸைக்ளோபீடியா ஆப் இஸ்லாமில்" குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விதம், ஜிமாஉல் உலூம், கிதாப் இப்தாலுல் இஸ்திஹ்ஸான், கிதாப் பயானுல் பர்லு, கிதாப் ஸிபத்துல் அம்ரி வந்நஹ்யி, கிதாப்-இக்திலாபுல் மாலிக்கி வஷ் ஷாபியீ, கிதாப் இக்திலாபுல் இராகீன், கிதாப் இக்திலாப் மஅ முஹம்மது பின் ஹஸன், கிதாப் இக்திலாப் அலீ வ அப்துல்லா ஹிப்னு மஸ்வூது ஆகியவை இவ்விதம் அதன் பகுதியாக உள்ளவையே என்று தெரியவருகிறது. இவை தனித்தனி நூற்களாகச் சமீபத்தில் எகிப்திலிருந்து வெளிவந்துள்ளதாக வும் தெரிகிறது. இந்த மாபெரும் கிரந்தம் ஒன்றுல் மட்டுமே கூட இமாம் ஷாபியீயின் பெயர் என்றும் நிலேத்து நிற்கக் கூடியதாகும். இமாமவர்களின் மற்றக் கிரந்தங்களில் ரிஸா லா கதீம் (முந்தைய முடிவு), ரிஸாலா ஜதீத் (பிற்காலத் தீர்ப்பு), இக்திலாபுல் ஹதீஸ் (மாறுபட்ட ஹதீஸ்களின் கருத் துக்கள்), பலாயிலு குறைஷ், கிதாபுஸ் ஸுனன், மப்ஸூத், இம்லா ஸகீர் முதலியன முக்கியமானவையாகும்.

அப்துர் ரஹ்மான் பின் மஹ்தி என்பவர், ''திரு குர்ஆனின் வசனங்களுக்கு ஹதீஸ்களிலிருந்தே ஆதாரம் தருவதுடன் கூடிய ஓர் உரையை ஆக்கித்தரவேண்டும், அதை முஹத் திஸ்களும் ஏகமனதாக ஒப்புக்கொள்ள வேண்டும்" என்று

கேட்டுக் கொண்டதற்கிணங்க, 'கிதாபுர் ரிஸாலத்' என்ற நூலை இமாமவர்கள் எழுதிக் கொடுத்திருக்கிறார்கள். 'கிதாபுல் மப்ஸூத் பில் பிக்ஹ்' என்பது இமாமவர்கள் பிக்ஹுச் சட்டம் சம்பந்தமாக எழுதிய பெரிய நூலாக இருந்தது என்றும் தெரியவருகிறது. மேலும், அஹ்காமுல் குர்ஆன், வஸீயத்துஷ் ஷாபியீ, பிக்ஹுல் அக்பர் (இதே பெயரில் ஹனபி மத்ஹபின் பெரிய கிதாபு ஒன்று உண்டு. இமாம் அபூ ஹனீபாவின் தொலைந்துபோன நூலின் பெயரும் இதுவே. இந்தப் பெயரில் இமாம் ஷாபியீ எழுதியுள்ளது பிக்ஹு சம்பந்தமான சிறிய நூல்) ஆகியவை அடிக்கடி பிரஸ்தாபிக்கப்படுபவையாகும்.

## ஷாபியீ மத்ஹப்

இமாம் ஷாபியீ அவர்கள் போதித்த அனுஷ்டான முறையும், இமாம் அபூ ஹனீபாவின் அனுஷ்டான முறையைப் போல எம்பெருமான் (ஸல்) அவர்களுடைய அத்தாட்சியை (கனவுமூலம்) பெற்றதாகும். அவர்களுடைய காலத்தில் ஈராக் பகுதியில் ஹனபி மத்ஹப் ஆதிக்கஞ் செலுத்திவந்தது. எகிப்தில் மாலிக் மத்ஹபுக்காரர்கள் அதிகமாயிருந்தனர். எனினும், இமாமவர்களின் போதனை, அவர்களுடைய மத்ஹபின் பிரச்சாரம் முதலில் பக்தாதிலிருந்து தொடங்கிப் பின்னர் கெய்ரோவில் தான் நடந்துகொண்டிருந்தது. அவர்களைத் தொடர்ந்து முன்னர் நாம் பெயர் பிரஸ்தாபித்துள்ள அவர்களுடைய தலையாய சீடர்கள் இந்த மத்ஹபை உலகெங்கணும் பிரசாரம் செய்தனர். இவ்விதமாக இருநூறு வருஷங்களில் எகிப்தும், மக்கா மதீனாவும் ஷாபியீ மத்ஹபின் முக்கியமான இடங்களாக ஆகிவிட்டன. பத்தாம் நூற்றாண்டில் இராக், ஈரான், ஸிரியா, குராஸான் போன்ற நாடுகளில் ஷாபியீ மத்ஹப் பரவலாயிற்று. ஸுல்தான் ஸலாஹுத்தீன் இந்த மத்ஹபைப் பின்பற்றியதுடன், எகிப்தில் இதை அரசாங்க மத்ஹப் ஆகவும் ஆக்கினார். நாளடைவில் இஸ்லாமிய உலகின் பல நகர்களில் நான்கு மத்ஹபின் நீதிபதிகளும் நியமிக்கப்பட்டு நீதி வழங்கப்பட்டது. பல இடங்களில் கால மாறுதலு

டன், ஆட்சி மாறுதலுடன் மத்ஹபுகளின் விஷயத்திலும் பல மாறுதல்கள் ஏற்பட்டிருப்பினும், இன்றுவரை கெய்ரோவிலுள்ள அல் அஸ்ஹர் சர்வகலாசாலை அதிபர்மட்டும் ஷாபியீ மத்ஹபைச் சேர்ந்தவராகவே இருந்துவருகிறார். இன்று தென் அரேபியா, பஹ்ரைன், தென் இந்தியா, இலங்கை, மலாயா, இந்தோனேஷியா. திஜிஸ்தான், மத்திய ஆசியாவின் பெரும் பகுதி ஆகியவற்றில் பெரும்பாலான முஸ்லிம்கள் ஷாபியீக்களாகவே இருக்கின்றனர். எனவே, உலகில் பெரும்பாலான வர்களால் பின்பற்றப்படும் மத்ஹப் இது என்றால் வியப்பில்லை.

## இமாமவர்களின் பொன்மொழிகள்

இமாம் ஷாபியீ அவர்களின் எழுத்துக்களில் எத்தனையோ அருமையான வாசகங்களைக் காணமுடிகிறது. அவற்றுள் ஒரு சிலவற்றைமட்டும் இங்கே தொகுத்துத் தரலாம்.

கல்வி தேடுவது ஸுன்னத்துத் தொழுவதைவிடவும் சிறப்பானதாகும்.

ஓர் ஊரில் ஒருவராவது கல்வி பெறாதவராகிவிடின், ஆட்சியாளர்கள் அந்த ஊராரைப் பிடித்துப்போய்க் கட்டாயமாகக் கல்வி கற்பிக்கவேண்டுவது அவர்கள் கடமையாகும்.

நல்ல செயலை (அமலை) நாடிக் கல்வி கற்காதவனுக்கு அவனுடைய கல்வி பயன்தராது.

அறிஞனுக்கு பயபக்தியே அலங்காரமாகும்; சற்குணமே அணிமணிகளாகும்; மனத் தயாளமே அழகாகும்.

கல்வி யாவையும் விடச் சிறந்தது என்பதற்கு இரண்டு அத்தாட்சிகளே போதுமானவையாயிருக்கின்றன. சரியான கல்வி பெறாதவனைப் பார்த்து இவன் நல்ல அறிஞன் என்றால் உடனே அவன் மகிழ்ச்சியால் குதூகலிக்கிறான். இதுபோல் மடையன் ஒருவனை மடையன் என்றதுமே அவன் அதை ஏற்காது கோபத்தால் கொதிக்கிறான்.

புனிதமான கல்விஞானங்களை அடையப்பெருதவர்கள் மறுமையில் இறைவனின் நேயர்களாக எழமாட்டார்கள்.

கல்வியை விரும்பாதவனிடம் எந்தச் சிறப்புமிருக்காது. அவனோடு நீ நட்புறவு கொள்ளாதே!

உண்மையான அறிஞன் எளிமையை உவப்புடன் ஏற்பான். அறிவிலி (ஜாஹில்) தான் அதைக் கண்டு மிரளுவான்.

தான் கற்ற கல்வியின்படி ஒழுகாத அறிஞனும் (ஆலிமும்) வைத்தானும் ஒன்றுதான்.

எளிமையும், போதும் என்ற மனமுமே அறிஞர்களுக்குச் சிறந்த அணிமணிகளாகும். அத்துடன், அவர்களிடம் பொறுமையும் சேர்ந்துவிடுமாயின் அது அந்த அணிமணிகளை யும் பிரகாசிக்கச் செய்துவிடும்.

போதும் என்று திருப்தியடைபவர்கள் மூடர்களிடம் பணியத் தேவையில்லை;

தீய செயல்களைச் செய்யவிடாது தடுக்கும் அறிவே உயர்ந்த அறிவாகும். நான் குளிர்ந்த தண்ணீரைக் குடிப்ப தால் எனக்குக் கெடுதலுண்டாகும் என்று தெரிந்தால்கூடக் குளிர்ந்த தண்ணீரைக் குடிக்கமாட்டேன்.

கலாஞானம் எஜமானனாகும்; அதைத் தேடிப் படிப்பவர் பணியாளராகும். பணியாள் சரிவரப் பணிசெய்தால் தான் எஜமானனின் அன்பைப் பெறலாம். பணியாளே பெருமை யடித்துக்கொள்வதாயின், எஜமானன் எந்த அளவு பெருமை யடிக்க முடியும் என்பதை எண்ணிப் பாருங்கள்!

பேசுவதும், விவாதிப்பதும் அறிவுக்கு விழிப்பாகும்; மௌனமாக இருப்பது அதற்குத் தூக்கமாகும். எனவே, விழிப்பு நல்லதா, தூக்கம் நல்லதா என்பதை எண்ணிப் பாருங்கள்.

நன்மை தீமை இரண்டிலும் சோதிக்கப்படும்போது நல்வழி தெரிந்து நடப்புவனே அறிவாளியாவான்.

நான் சொல்லும் உபதேசங்களை ஏற்று நடப்பவன் மீது என் அன்பு திரும்புகிறது. தெரிந்தோ தெரியாமலோ கூட நல்ல விஷயங்களை எதிர்ப்பவனை என் மனம் விரும்ப மறுக்கிறது.

உன் நண்பனாய் இருக்கும்போது உன்னிடமில்லாத நற்குணங்களையெல்லாம் உன்னிடமிருப்பதாகப் புகழ்பவன் உனக்குப் பகைவனானதும் உன்னிடமில்லாத குறைகளெல்லாம் உன்னிடமிருப்பதாகக் கூறித்திரிவான்.

பிறர் குறைகளை உன்முன்னர் பேசுபவன் நிச்சயம் உன் குறைகளையும் பிறரிடம் பேசுவான்.

நண்பனின் நண்பனையும் உண்மையாக நேசிப்பதே நட்புக்குரிய நற்பண்பாகும்.

அரைகுறைவான கல்வி கற்பவன் இரவில் சுள்ளி பொறுக்குபவன் போலாவான். ஏனெனில், அவன் சுள்ளி பொறுக்குகிறானா, பாம்பைப் பொறுக்குகிறானா என்பதை அவன் அறிய முடியாது, மரணிக்கவும் நேருமல்லவா!

நன்கு சிந்தித்துச் செயலாற்றுவது, சிபாரிஷ் தேடுவதை விடச் சிறந்ததாகும்.

தன் தவறைக் கண்டு சிரிப்பவன், அதைக் களைந்து கொள்ளவும் முயலுவான்.

தன் அனுபவம் காட்டும் எச்சரிக்கையால் பாடம் பெறாதவன் மனிதத் தன்மையைவிட்டே புறம்பானவனாவான்.

அவசரப்பட்டு ஒரு காரியத்தைச் செய்தால் அதனால் நல்லதைவிடத் தீயதே பெரிதும் விளையும். நன்கு சிந்தித்துச் செயலாற்றுவதால் நாடிய பயனைப் பெறலாம்.

மனிதக் கடமையை உணர்ந்து நடப்பவர்களின் குறைகள் அப்பாலாகிவிடும். மேலும், அவர்களுடைய குற்றங்குறைகளும் மன்னிக்கப்படும். ஏனெனில், அவர்களே தங்களுடைய குறைகளை நினைத்து வருந்திச் சீர்பட்டுவிடுகின்றனர்.

தன் இனத்தாரைப் புறக்கணித்துவிட்டுப் பிற இனத்தாரைப் போற்றிக் கொண்டாடுபவன் முட்டாளாவான். ஏனெனில், அத்தகைய நயவஞ்சகன் தன் நயவஞ்சகத்தால் பிறரைப் போற்றிப் புகழ்ந்து அவர்களுக்கு நாலவனாகிவிட நினைக்கிறான். இது ஒருக்காலும் நடவாத காரியமாகும்.

இறைவனே உன்னைச் சுதந்திரப் புருஷனாகப் படைத்திருக்கும்போது நீயும் ஏன் அவ்வாறு சுதந்திரமானவனாக நடந்துகொள்ளக்கூடாது?

உன் நண்பன் தனித்திருக்கும்போது அவனுக்கு நீ புத்திமதி கூறுவதே சாலச் சிறந்ததாகும். மேலும், அவன் சீர்படவும் அது பயன்படும். பிறர் இருக்குமிடத்தில் நண்பனுக்குப் புத்திமதி கூறுவதால் அவன் உன்மீது ஆத்திரமடைவதோடு, உன் பெயரும் கெட்டுப்போகும்.

அன்பும், பணிவுமே மேன்மக்களின் பண்பாகும். அகந்தையும், இழிவும் ஈனர்களின் குணமாம்.

ஒருவருடைய பொருள்களை அமானிதமாக வலிய வந்து ஏற்க ஆவல்காட்டுபவன் ஒன்று மடையனாய் இருக்கவேண்டும் அல்லது திருடனாக இருக்கவேண்டும்.

நீ முடித்தாக வேண்டிய வேலைகள் பல இருப்பின் அவற்றுள் மிகவும் முக்கியமானவைகளை முதலில் செய்து முடித்துவிடு!

இம்மையை அதிகமாக நேசிப்பவர்கள்தாம் அதிகமாக நாசமடைகின்றனர்.

இறைவனின் மெய்ஞ்ஞானமென்ற ஜோதியை (நூரை) விரும்புபவர்கள், மூடர்களைநெருங்கியிருப்பதைவிட்டுதம்மைப் பேணிக்கொள்ளவேண்டும்; குறைவாக உணவுண்ண வேண்டும்; தனிமையை நாடவேண்டும்.

திரு குர்ஆனின் சத்திய போதனைகளைத் தெரிந்து, அதன்படி ஒழுகுவதால் மனிதனின் படித்தர உயர்வும், மார்க்கச் சட்டத்தை (ஃபிக்ஹை) தெரிந்து கொள்வதால் அவன் கண்ணியமும், ஹதீஸின் போதனையைத் தெரிந்து கொள்வதால்

இறைவன்மீது உறுதியும், அகராதிக் கலையைப் பயில்வதால் முடிவான யோசனையும் உண்டாகும்.

வறுமையான சமயத்தில் தருமம் கொடுப்பதும், தனிமையில் பூரணமாகப் பயபக்தியைக் கைக்கொள்வதும் அச்சமுண்டாகிவிட்ட பெரிய இடத்தில் உண்மை பேசுவதும் கடினமான காரியங்களாம்.

உணர்ச்சி யூட்டப்பட்டும் உணர்ச்சி பெருதவன் கழுதைக்குச் சமமாவான். சமாதானப்படுத்தியும் சமாதானமடையாதவன் மெய்யான ஷைந்தாளுவான்.

வறுமையில் உழல்பவனிடம் எதற்கும் யோசனை கேட்காதே!

பேராசையின்மை, பிறருக்குத் தீங்கிழைக்காமை, பேணுதலுடன் ஒழுகுதல், ஆகுமான (ஹலால் ஆன) செல்வத்தையே விழைதல், சகல சந்தர்ப்பங்களிலும் இறைவன்மீது நம்பிக்கை கொள்ளுதல் ஆகிய இந்த ஐந்து இயல்புகளும் இம்மை, மறுமை ஆகிய இரண்டு உலகங்களிலும் நன்மை பயப்பனவாம்.

சகலரையும் திருப்திப்படுத்திவிடலாம் என்பது ஒருக்காலும் சாத்தியமல்ல. எனவே, மனிதன் இறைவன்மீது நம்பிக்கைவைத்துத் தன்னைச் சீர் செய்து கொள்ள முயல்வதே நலமாகும்.

மனித இயல்பு பொதுவாக விரும்பப்படக்கூடியதா எனின், இல்லை என்றே கூறவேண்டுவதாகிறது. ஏனெனில், இந்த இயல்பல்லவா தன்னை வெறுப்பவன் பின்னுல் ஓடவும், தன்னை நேசிப்பவனைக் கண்டு வெறுக்கவும் தூண்டுகிறது!

மனிதனைத் திருத்துவதைவிடப் பகுத்தறிவற்ற மிருகத்தைத் திருத்துதல் எளிது. அறிவு சூன்யமான மூடன் ஒருவன் தனக்கு எல்லாம் தெரியும் என்பதுபோல் நடித்து, யாருடைய உபதேசத்தையும் ஏற்றுச் சீர்படாமல் நாசமாகிறன்.

கண் பார்வைக்கு ஓர் அளவு (தூரம்) இருப்பதுபோல, அறிவுக்கும் ஓர் எல்லையுண்டு. அந்த எல்லைவரைதான் பகுத்தறிவு செல்லும்.

சிறந்த நல்லியல்பு, தயாளம், பணிவு, நன்றியறிதல் ஆகிய நான்கும்தாம் மனிதனுக்கு மிகவும் அவசியமானவையாகும்.

நம்பிக்கைக்குரியவனாக இருத்தல், அடைக்கலப் பொருள்களைப் பாதுகாத்தல், தெய்வ நம்பிக்கை, ஆழ்ந்த நோக்கு ஆகிய நான்கு மின்றேல் மனிதன் பூரணத்துவமடைய முடியாது.

இம்மையின் வாழ்விலேயே மூழ்கிவிடுவது தீய நண்பர்களைத் தேடிக்கொள்ளவே உதவும்; ஜனங்களோடு பழகாமல் ஒதுங்கிவிடுவதும் பகைமையைத்தான் உண்டாக்கும்.

அளவுக்கதிகமாக ஒருவனை நான் சங்கைசெய்து கொண்டிருந்தால் அந்த அளவுக்கு என் கண்ணியம் குறைந்துவிடுகிறது.

கருமியிடம் நல்லெண்ணம் வைப்பவனுக்கு அவன் வெறுங்கையுடன் திரும்புவதே அவன் பெறவேண்டிய குறைந்த தண்டனையாகும்.

வெட்கத்தை விற்றுவிட்டவனுடன் நட்புக்கொள்பவன் மறுமையில் வெட்கப்பட நேரும்.

தன்னை மதித்துக் கண்ணியப்படுத்தாதவனையும், தன்னைப் புரிந்துகொள்ளாதவனையும் நேசித்துப் புகழ்ந்து கண்ணியப் படுத்துபவன் தன் ஆத்மாவுக்கே அளவற்றுத் தீமை செய்து கொண்டவனாவான்.

காகிதமும், பேனாவுமின்றிப் பாடபோதனை நடக்குமிடம் செல்பவன், கோதுமையின்றி கோதுமை அரைத்துத்தரும் இடத்துக்குச் செல்பவன்போன்றவனாவான்.

## சில அபிப்பிராய பேதங்கள்

ஸுன்னத்-வல்-ஜமாஅத்துக்கு உட்பட்ட நான்கு மத்ஹபு களிலும் இமாம் ஷாபியீ அவர்களுக்கும், அவர்களுடைய சீடரான இமாம் ஹன்பல் அவர்களுக்கும்தான் எண்ணிக்கை யில் குறைந்த அபிப்பிராயபேதங்கள் காணப்படுகின்றன. இமாம் மாலிக்குக்கும், இமாம் ஷாபியீக்கு மிடையில் நூறு விஷயங்களில் இருபது விஷயங்களில் அபிப்பிராயபேதமுண்டு. அதிலும் வணக்கம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் இதை விடவும் குறைவான அபிப்பிராயபேதங்களே உண்டு. இமாம் அபூ ஹனீபாவுக்கும், இமாம் ஷாபியீ அவர்ளுக்கும் இடையில் தான் அதிகமான அபிப்பிராயபேதங்களுண்டு. நூறு விஷயங் களில் எழுபதில் இருவருக்குமிடையில் அபிப்பிராயபேதம் காணப்படுகிறது. அபிப்பிராயபேதமுள்ள தீர்ப்புக்களைக் காட்டக் கீழே சில உதாரணங்களைத் தரலாம் :



| | இமாம் அபூ ஹனீபா | இமாம் ஷாபியீ |
|---|---|---|
| 1. | ஒலுவுக்கு நிய்யத்தில்லாமலும், வரிசைக்கிரமமின்றியும் ஒலுச்செய்தாலும் கூடும் (ஜாயில்). | நிய்யத்தின்றியும், வரிசைக்கிரமமின்றியும் (தர்தீப்) ஒலுச்செய்தால் கூடாது (ஜாயிஸல்ல). |
| 2. | ஜுனுபத்துக்காகக் குளிப்பதில் (குஸ்லில்) வாய்கொப்பளிப்பதும், மூக்கினுள் தண்ணீர் செலுத்துவதும் பர்லாகும். | இவையிரண்டும் பர்லில்லை. |
| 3. | தொழுகையில் சப்தமிட்டுச் சிரித்தால் ஒலுவும் முறிந்துவிடும்; தொழுகையும் கூடாது. | ஒலு முறியாது; தொழுகை மட்டுமே முறியும். |
| 4. | நோன்பாளி ஒலுச் செய்யும் போது வாய் கொப்பளிக்கையில் மறதியாக, அல்லது தன் இஷ்டமின்றித் தொண்டைக்குள் தண்ணீர் புகுந்துவிட்டால் நோன்பு முறிந்துவிடும். | நோன்பு முறியாது. |
| 5. | காபிராகவிருக்கும் அடிமைக்காகவும் எஜமானன் சதகா, பித்ராக் கொடுக்க வேண்டும். | கொடுக்க வேண்டிய கடமையில்லை. |
| 6. | நபில் நோன்பின் 'கலா' (திரும்ப வைக்கவேண்டும் என்பதில்) பர்லான நோன்பின் 'கலா'வைப் போன்றதுதான். (திரும்பவும் நோற்கவே வேண்டும்.) | நபில் நோன்பு, தவறிவிட்டால் 'கலா' செய்வது கடமை (லாஜிம்) இல்லை. |
| 7. | அணிந்துள்ள நகைகளுக்கும் ஜக்காத் கொடுப்பது கடமையாகும். | அணிந்து கொண்டிருக்கும் நகைகளுக்கு ஜக்காத் கொடுப்பது கடமை (லாஜிம்) இல்லை. |

| இமாம் அபூ ஹனீபா | இமாம் ஷாபியீ |
|---|---|
| 8. வற்புறுத்தி வாங்கப்படும் 'தலாக்' செல்லுபடியாகும். | இவ்வாறான 'தலாக்' தலாக்கல்ல. |
| 9. நகரமாயிருக்க வேண்டும்; அல்லது, நாட்டுக்கு அரசன் இருக்கவேண்டும். அத்தகைய இடங்களில் ஜும்ஆத் தொழுவது கூடும். | அவசியமில்லை. நாற்பது பேர்கள் இருந்தால் போதும் ஜும்ஆத் தொழலாம். |
| 10. வியாதியுற்றுள்ள நிலையிலோ, பிரயாணத்திலிருக்கும்போதோ இரண்டு வக்துத் தொழுகைகளைச் சேர்த்துத் தொழக் கூடாது. (ஹஜ்ஜின் போது முஸ்தலிபாவில் மக்ரிபு-இஷாத் தொழுகைகளைச் சேர்த்துத் தொழுவது மட்டும் இதற்கு விதிவிலக்காகும். அங்கு இவ்விரண்டு நேரத் தொழுகைகளையும் சேர்த்தே தொழ வேண்டும்.) | கூடும். இதற்கு 'ஜம்உ' என்று பெயர். |
| 11. குதிரை மாமிசம் தின்பது ஜாயிஸல்ல (ஆகாது). | தின்னலாம். ஜாயிஸ் (ஆகும்.) |
| 12. தொழுகையில் இமாமுக்குப் பின்னால் 'முக்ததிகள்' ஸூரத்துல் பாத்திஹா ஓதக்கூடாது. | அவசியம் ஓதியே தீர வேண்டும். |
| 13. மைனர்களின் சொத்துமீது ஜக்காத் பர்லில்லை. | மைனர்கள் சொத்தின் மீதும் ஜக்காத் பர்லு தான். |
| 14. தக்க வயதை அடைந்துவிட்ட (மேஜர் ஆன) பெண் தன் கார்டியன் (வலி) சம்மதமின்றியே தன் இஷ்டப்படி நிக்காஹ் செய்து கொள்ளலாம். | செய்து கொள்ளக் கூடாது. |

# இமாம் ஹன்பல்

''இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் பனீ இஸ்ராயீல்களிடை தோன்றியிருப்பின், நிச்சயமாக ஒரு நபியாகப் பிறந்திருப் பார்கள்" என்கிறார் ஒரு பெரியார். உலகிலேயே மிகமிகத் தூய்மையான மனிதர்களில் ஆறுவது உத்தமர் அஹ்மதிப்னு ஹன்பல்; மற்ற ஐவரும் முறையே ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி), ஹஜ்ரத் உமர் (ரலி), ஹஜ்ரத் உதுமான் (ரலி), ஹஜ்ரத் அலீ (ரலி), உமர் இப்னு அப்துல் அஜீஸ் ஆகியோராவர் என்கிறார் பிரதம நூலாசிரியர் இமாம் பைஹகி.

இத்தகைய மகா புருஷரான ஷைகுல் இஸ்லாம், இமா முல் முஸ்லிமீன் அபூ அப்தில்லாஹ் அஹ்மதிப்னு ஹன்பல், இப்ராஹீம் (அலை) அவர்களுடைய வமிசத்தைச் சேர்ந்தவர்க ளாவார்கள். அதனால்தானோ என்னவோ, இமாமவர்கள் சத்தியசோதனையொன்றுக்கு ஆளாகி மகத்தான வெற்றி கண்டார்கள்; சோதனைகளிடையில் பொறுமை காட்டி சத்தியத் துக்கு மாறுசெய்ய மறுத்து சகல கஷ்டங்களையும் பொறுமை யோடு ஏற்றார்கள். பின்னர் சத்தியம் வெற்றிபெற்று, அசத்தி யம் அழிந்துபட்டபோது, செல்வநிலை தங்களைத் தேடி ஓடிவந்த போதும், அதைவிட்டும் அப்பால் ஓடிய மகாத்துறவி அவர்கள். ஸுன்னத்-வல்-ஜமாஅத்தில் சேர்ந்த மத்ஹபு ஒன்றை உண் டாக்கித் தந்ததுடன், தங்கள் எண்ணற்ற நூற்களிடை, அற் புதமான ஹதீஸ் தொகுப்பு ஒன்றையும் ஆக்கித்தந்தார்கள்.

## பிறப்பு

இமாம் அஹ்மதிப்னு ஹன்பலின் தந்தையார் பெயர் முஹம்மது. அவர் தந்தை பெயர் ஹன்பல். அவர் தந்தை யார் பெயர் பிலால். அவர் தந்தை அஸத். அவர் தந்தை இத்ரீஸ். எனவே, இவர்களும் தங்கள் பாட்டனாரின் பெயரையே தங்கள் பெயரின் கடைசியில் ஹன்பல் என்று

இணைத்துக்கொண்டுள்ளார்கள். இவர்களுடைய தந்தையார் முஹம்மது அரசாங்கப் படையில் ஒரு சாதாரணப் போர் வீரராக வேலை செய்தார். அப்பாஸியாக் கலீபாக்கள் பதவியைக் கைப்பற்றுமுன், அவர்களுக்காகப் பிரசாரம் செய்த வர்களுள் இவரும் ஒருவர். இவர் நடுத்தரமான வயதானவ ராக இருக்கும்போதே மரணமடைந்து விட்டார். இமாமவர் கள் தாய் வயிற்றிலிருக்கும்போதே, இவர்களுடைய தாயாரும், தகப்பனாரும் மர்வ் என்ற ஊரிலிருந்து பக்தாதில் வந்து குடி யேறினார்கள். அங்கே ஹிஜ்ரி 164 ரபீவுல் அவ்வல் மாதம் பிறை 12-ல் (கி. பி. 780 நவம்பரில்) இமாமவர்கள் பிறந்தார் கள். இமாமவர்களின் தகப்பனார் இறந்த சமயம் இமாமவர்கள் இரண்டு வயதே நிரம்பிய பாலகராக இருந்தார்கள். வசதி யற்ற நிலையிலிருந்த இமாமவர்களின் அன்னையார் அவர்களை வெகு கஷ்டப்பட்டு வளர்த்தார்கள். பக்தாதிலேயே கல்வி பயிலவும் தம்மால் இயன்றவரை ஏற்பாடு செய்தார்கள்.

## ஹஜ்ஜும் கலாஞானப் பயிற்சியும்

இமாமவர்கள் தங்கள் பதினைந்தாம் வயதில் (ஹிஜ்ரி 179-ல்) ஹதீஸ் பாடபோதனையைப் பயிலத் தொடங்கினார்கள். அக்காலையிவ் பக்தாதில் இமாம் அபூ ஹனீபாவின் தலையாய இரண்டு மாணவர்களில் ஒருவரும், பிரதான நீதிபதியாக இருந்தவர்களுமான இமாம் அபூ யூஸுப் அவர்களின் போதனை வகுப்புக்களில் சென்றமர்ந்து பாடங்கேட்டார்கள். அத்துடன், பக்தாதில், மற்றும்பல பெரியார்கள் நடத்திய கலா ஞான வகுப்புக்களுக்கும் சென்று பாடம் கேட்டார்கள். இவ் விதம் ஒரளவுக்குத் தங்களுடைய ஹதீஸ் ஞானத்தை வளர்த் துக்கொண்ட இமாமவர்கள் தங்கள் இருபத்து மூன்றும் வயதில் முதல் ஹஜ்ஜுக்காக மக்கா சென்றுவந்தார்கள். அத்துடன் தொடர்ந்து பெரியார்கள் பலரின் கலாஞான சபைகளி லும் அமர்ந்து பாடங்கேட்டார்கள். பின்னர், ஹிஜ்ரி 191-ல் இரண்டாம் முறையாக அவர்கள் ஹஜ்ஜுக்குப் போனார்கள். அப்போதுதான் அவர்கள் இமாம் ஷாபியீயைப் பற்றி அறிந்துகொண்டு அவர்களோடு பழக முடிந்தது. இமாம்

ஹன்பலோடு வந்திருந்த நண்பர் வாலிப வயதினராகவும், மக்காவின் முப்தியாகவும் விளங்கிய இமாம் ஷாபியீயிடம், ''பறவைகளை அவைகளின் கூடுகளில் தூங்கவிடுங்கள்" என்ற ஹதீஸுக்கு விளக்கம் கேட்டதையும், அதற்கு அவர்கள் கொடுத்த விளக்கத்தால் அவர்கள் பால் ஹன்பலவர்கள் ஈடு பாடுகொண்டதையும் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அடிக்கடி சந்தர்ப்பங் கிடைத்தபோதெல்லாம், மற்றப்பெரியார்களுடைய கலாஞான வகுப்புக்களைவிடவும், இமாம் ஷாபியீயின் போதனுமன்றத்தையே விரும்பி அவர்கள் அங்குச் சென்று பாடங்கேட்டார்கள். ஆனால், போதிய வசதியற்ற முறையில் ஹஜ்ஜுக்குப் போயிருந்த அவர்கள், இமாம் ஷாபியீயிடம் தொடர்ந்து அமர்ந்து பாடங்கேட்கவேண்டும் என்ற ஆவலிடை யிலும் அவ்விதம் செய்ய இயலாது ஊர் திரும்ப நேரிட்டது.

இமாம் ஹன்பலவர்கள் மீண்டும் ஹிஜ்ரி 196-ல் ஹஜ்ஜுக்குப் போய், மூன்றாண்டுகள் அங்கேயே தங்கி யிருந்து மூன்று ஹஜ்ஜுகளை முடித்துக்கொண்டார்கள். அத்துடன், மக்காவில் நடந்த பல ஹதீஸ் வகுப்புக்களில் கலந்து ஏராளமான ஹதீஸ்களையும், அவற்றுக்கான விளக்கங் களையும் சேகரித்துக்கொண்டார்கள். ஹிஜ்ரி 199-ன் ஆரம் பத்தில் அவர்கள் ஹிஜாஸைவிட்டு எமன் சென்றூர்கள். அங்கே அக்காலையில் புகழ் பெற்றிருந்த பெரியார் முஹத்திஸ் அப்துர் ரஸ்ஸாக் அவர்களிடம் ஹதீஸ் பாடபோதனை பெற்றூர்கள்.

இமாமவர்கள் தங்களுடைய மிகவும் ஏழ்மையான நிலை யிலும், வெகு கஷ்டப்பட்டு இந்த ஐந்து ஹஜ்ஜுகளையும் நிறைவேற்றியிருக்கிறூர்கள். அதுபற்றி அவர்கள் குறிப்பிடு கையில், ''நான் ஐந்து தடவை ஹஜ்ஜு செய்துள்ளேன். அதில் மூன்று தடவைகள் நடந்தே சென்றேன். ஒவ்வொரு தடவையும் நான் ஹஜ்ஜுக்குப்போகச் செய்த செலவு இருபது திர்ஹங்கள் தாம். ஒரு சமயம் நான் நடந்து போகும்போது வழி தவறிவிட்டது. உடனே, ''இறைவனின் நல்லடியார் களே, எங்களுக்குச் சரியான பாதையை விளக்குங்கள்!'' என்று தொடங்கும் ஹதீஸ் ஒன்று நினைவுக்குவந்தது. அதைப் படித்

தமே சரியான வழியைக் கண்டுபிடித்து இலகுவாக மக்கா போய்ச் சேர்ந்துவிட்டேன்'' என்று தெரிவித்துள்ளார்கள்.

இமாமவர்கள் தங்கள் பிரயாணத்தில் ஒரு தலையணையைக் கூடத் தங்களோடு கொண்டுபோவதில்லை. ஏதாவது கல்லை எடுத்துத் தலையணையாக உபயோகித்துக் கொள்வார்கள். இவ்விதம் அவர்கள் அக்காலையில் இஸ்லாமியக் கலாஞானங்கள் செழித்து வளர்ந்தோங்கியிருந்த பல்வேறு நகர்களுக்கும் கால் நடையாகவே சென்று, ஹதீஸ்களைக் கேட்டுச் சேகரித்துள்ளார்கள்.

## ஷாபியீயின் மாணவர்

கடைசியில் அவர்கள் தங்கள் சொந்த ஊரான பக்தாதுக்கே திரும்பினார்கள், அங்கே அப்போது இமாம் ஷாபியீயின் ஹதீஸ், பிக்ஹு பாடபோதங்கள் நடந்து கொண்டிருந்தன. அவற்றில் சென்றமர்ந்து, இமாம் ஷாபியீயின் தலையாய சீடராக அவர்கள் ஆகிக்கொண்டார்கள். கேட்கும் பாடங்களையெல்லாம் மனப்பாடமிட்டுக் கொண்டு எந்தச் சமயத்திலும் அதை வெளியிடக் கூடிய திறமை அவர்களிடமிருந்ததால் அவர்கள் மற்றவர்களைவிடவும் ஒளிவிட்டுப் பிரகாசிக்க முடிந்தது. இமாம் ஷாபியீயிடம் அவர்கள் பெற்ற கல்வி அவர்களுக்குப் பல வகைகளில் பயனுடையதாக இருந்தது. அதற்குமுன் அவர்கள் எத்தனையோ பெரியார்களிடம் பாடங்கேட்டிருக்கிறார்கள். எனினும், ''நான் இமாம் ஷாபியீ அவர்களிடம் பயிற்சி பெறும்வரை ஹதீஸ்களில் நாஸிக், மன்ஸூக், ஃகாஸ், ஆம், முஜ்மல், முபஸ்ஸல் ஆகியவைபற்றி எதுவுமே அறியாதவனாக இருந்தேன்; இமாம் ஷாபியீ தான் இவற்றை எனக்குச் சரியாக விளக்கினார்கள்'' என்று இமாம் ஹன்பலே தெரிவித்துள்ளார்கள். இவ்விதம் மூன்று ஆண்டுகள் கடுமையான பொருளாதார நெருக்கடியிடையிலும், அவர்கள் இமாமவர்களின் பாடபோதனைகளைக் கேட்டுப் பயனடைந்து கொண்டார்கள்.

பின்னர், இமாம் ஷாபியீ மக்காசென்று, மீண்டும் பக்தாத் திரும்பி, எகிப்துக்குச் சென்றசமயம் இமாம் ஹன்பலேயும் தங்களோடு அழைத்தேக எவ்வளவோ முயன்ருர்கள். வறுமையால் வாடிய ஹன்பல் தங்கள் ஆசானேடு செல்ல இயலாத நிலேயிலிருந்தார்கள். எனினும், இமாம் ஷாபியீ தங்கள் அபிமான மாணவரிடம் மிகுந்த அன்பும், மதிப்பும் வைத்திருந்தார்கள். அதனுல், அவர்கள் பக்தாதைவிட்டுப் புறப்படும்போது, இமாம் ஹன்பலேக் குறிப்பிட்டு, ''நிகரற்ற பகீஹுைம், ஒப்பற்ற முஹத்திஸுமான ஒரு கலேக்குன்றை பக்தாதில் விட்டுப்போகிறேன்" என்று கூறியுள்ளார்கள். மேலும், அச்சமயம் அவர்கள் தமது மாணவரை நோக்கி, ''ஹிஜாஸோ, ஷாமோ, இராக்கோ-நீங்கள் எங்குச்சென்ருலும் சரியான ஹதீஸ்கள் உங்களுக்குக் கிடைக்குமாஞல் அவற்றை உடனே எனக்கும் தெரிவித்துவிடுங்கள். அப்போதுதான் நானும் அவற்றின்படி ஒழுகிச் சீர்பட ஹேதுவாகும்" என்று கேட்டுக்கொண்டார்கள்.

இமாம் ஹன்பலவர்கள் தங்களுடைய மகத்தான ஹதீஸ் கிரந்தமான முஸ்னதில் பல இடங்களில் தாங்கள் இமாம் ஷாபியீயிடம் பாடங்கேட்டதை மரியாதையோடு குறிப்பிட்டுள் ளார்கள். அத்துடன் அவர்கள் இமாம் ஷாபியீயிடமிருந்து கேட்ட ஹதீஸ்களேயே ஒரு தொகுப்பாகத் திரட்டியும் நூலுரு வில் எழுதிவைத்திருந்தார்கள்.

இமாம் ஷாபியீயையன்றி மற்றும், பஷர், இஸ்மாயீல், ஸுப்யான் பின் ஐனு, ஜரீர், யஹ்யா, அபூ தாவூதுத் தாயீ, அப்துல்லாஹ், அப்துர் ரஜாக், அலீ பின் ஐயாஷ், ஷாபியீ கந்தர், முஸ்தமிர், வகீவு ஆகிய பெரியார்களிடமும் இமாம் ஹன்பல் பாடங்கேட்டிருக்கிருர்கள்.

இவ்விதமாக இமாம் ஹன்பலவர்கள் கல்விபெற்ற பின்னர்,-இமாம் ஷாபியீ எகிப்துக்குச் சென்றபின்னர்-தங்களு டைய முப்பத்து ஐந்தாம் வயதில் பக்தாதிலேயே பாட போதனேயைத் தொடங்கிஞர்கள். வெகு விரைவில் அவர் களுடைய ஆழ்ந்த ஞானமும் ஹதீஸ்களே விவரிப்பதில் அவர்

கள் காட்டிய பேணுதலும், ஆடம்பரமற்ற முறையில் அவர்கள் நடத்திய பாடபோதனையும் நெடுகிலும் அவர்களுடைய புகழைப் பரப்பிவிட்டது. கலைகொழிக்கும் நகரமாக விளங்கிய பக்தாதில் பல நாடுகளிலுமிருந்து மாணவர்களும், அறிஞர் களும் வந்து குழுமினர். இவர்களில் இமாமவர்களுடைய புகழைக் கேள்வியுற்றவர்கள் அவர்களுடைய வகுப்புக்களில் வந்தமர்ந்து கல்வி பெற்றனர். ஹதீஸ் பாடபோதனையே இங்கு தலையாக நடத்தப்பட்டதாயினும், பிக்ஹு சம்பந்தமாக மாணவர்கள் கொண்டுவரும் பிரச்சினைகளுக்கும் அவர்கள் தீர்ப்புக்கொடுக்கவேண்டியதாக இருந்தது. தங்களிடம் கல்வி பயிலவரும் மாணவர்கள் தரும் சொற்பக் காணிக்கையைக் கொண்டே இமாமவர்கள் தங்கள் குடும்பத்தை நடத்திவந்தார் கள். ஆடம்பரமற்ற முறையில் பல ஆண்டுகள் அவர்கள் இந்தச் சேவையை அமைதியாகச் செய்து கொண்டிருக்கும் போதுதான் அவர்களுடைய வாழ்க்கையில் சோதனைப் புயல் வீசலாயிற்று.

## மாமூனின் 'பகுத்தறிவு'

கலீபா ஹாரூனர் ரஷீது தூஸ் நகருக்கு அருகிலுள்ள சனு பாத் என்ற சிற்றூரில் ஹிஜ்ரி 193-ல் காலமானார். கிரேக்க நாட்டு எல்லையில் கிரேக்கர்கள் கொடுத்து வந்த தொல்லையில் அவர்களை நேரில் அடக்கச்சென்றவர்தான் ஹாரூனர் ரஷீது. உடல் நலமின்றித் திரும்பி வரும்போது, வழியிலேயே கால மாகிவிட்டார். கலீபா ஹாரூனுக்கும் ஜுபைதாவுக்கும் பிறந்த முஹம்மதுல் அமீன் கலீபாவானார். இவர் வீண் டம்பங் களிலும், கேளிக்கைகளிலும் பொழுது போக்கியதாலும், தமது சகோதரரும், கலீபா ஹாரூனுக்கும் அவருடைய பாரஸீக மனைவிக்கும் பிறந்தவருமான மாமூனைப் பகைத்துக் கொண்ட தாலும் செல்வாக்கிழந்து, கடைசியில் மாமூனின் பாரஸீக வீரர் களால் வெட்டிக் கொல்லப்பட்டார். ஹிஜ்ரி 198-ல் கலீபா மாமூன் பட்டமேற்றார். இவருடைய ஆட்சி திறமையானதாக வும், பலவகையில் சிறப்புடையதாகவும் இருந்தது, உலகிலேயே சிறந்த மாபெரும் முஸ்லிம் ஆட்சியாளர் இவர்தான் என்று

கூறும் சரித்திராசிரியர்களுமுண்டு. எனினும், இவர் கிரேக்க பாஷையிலிருந்த இலக்கிய, தத்துவ நூற்களை அரபியில் மொழிபெயர்க்கச் செய்து அவற்றைக் கற்றதால் எதையும் அந்த அடிப்படையிலும் ஆராயத் தொடங்கினார். இதனால், இவர் முஃதஜிலாக்கள் விரித்த வலையில் விழ நேர்ந்தது. முஃதஜிலாக்கள் தங்கள் கொள்கையை ஆதரிக்காதவர்களைக் காபிர்கள் என்றும், அவர்களை வெட்டுவது குற்றமில்லை யென்றும் நம்புபவர்கள் என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளோம். இவர்களைச் சேர்ந்த உலமாக்களும் பலருண்டு. இவர்கள் அடிக்கடி மாமூனைச் சந்தித்துப் பேசினர். இதனால் இவர்கள் அவரைத் தங்கள் கொள்கை பகுத்தறிவு அடிப்படையிலமைந் ததுதான் என்று நம்பவைத்துவிட்டனர். எனவே, கலீபா மார்க்கத்தையே பகுத்தறிவு அடிப்படையில் அமைத்துவிட வேண்டும் என்று எண்ணிக்கொண்டு சில காரியங்களைச் செய்ய லானார். அதில் முக்கியமானதுதான் "திரு குர்ஆன் சிருஷ்டிக் கப்பட்டதுதான்" என்ற கூற்றாகும்.

திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டது என்ற நம்பிக்கை முஃதஜிலாக்களுடையதாகும். இப்போது அதுவே கலீபாவின் நம்பிக்கையாக ஆகிவிட்டது. முஃதஜிலாக்கள் அரசாங்க அவையில் அதிகச் செல்வாக்குப் பெற்றார்கள். அரச அவையையே அவர்கள் தங்கள் இஷ்டப்படி ஆட்டிப்படைத் தார்கள். தங்கள் கொள்கைப்படி தங்களோடு ஒத்துவராத வர்களையெல்லாம் வெட்டிவிடவேண்டும் என்ற முடிபைக் கலீபா வும் பின்பற்றும்படி செய்தார்கள். நேர்மையாளரான, நபி பெருமானாரின் சந்ததியார்களிடம் கூட—மற்ற கலீபாக்களைப் போலின்றி—அன்புகாட்டி மதிப்புக்கொடுத்தவரான, கலகங் களையெல்லாம் வெகு திறமையாக அடக்கியவரான மாமூன் இந்த விஷயத்தில் முஃதஜிலாக்களின் முடிபை ஏற்றுக் கொண்டார்.

மாமூனின் காலத்திலும் கிரேக்கர்களுடைய தொல்லை அதிகமானதாக இருந்தது. எனவே, அவர்களை அடக்கப் படையெடுத்துச் சென்ற அவர், கிரேக்க எல்லையிலுள்ள தரஸூஸ் என்ற பட்டணத்திலிருந்து எழுபத்தைந்தாவது

மைலில் தியாஹு என்ற இடத்தில் தமது படைகளை வைத்திருப் பதற்கான பலமான கோட்டை ஒன்றைக் கட்டினுர். அந்த வேலையில் ஈடுபட்டவராக அவர் அங்கேயே தங்க நேர்ந்தது.

பக்தாதில் இச்சமயம் பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட் டிருந்த அஹ்மது இப்னு அபீ துவாத் என்பவர் ஒரு வெறிப் பிடித்த முஃதஜிலியாவார். இவர் யோசனையை ஏற்று, மாமூன் ஒரு பிரகடனம் தயாரித்தார். அதில் திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதுதான் என்பதற்கான ஆதா ரங்களைக் காட்டி அவர் எழுதியதாவது: ''அல்லாஹ் அனுதி யானவனுக இருப்பதால், அவன் உண்டாக்கிய திருகுர்ஆனும் அனுதியானதுதான், படைக்கப்பட்டதல்ல என்று சிலர் கூறுகின்றனர். அது மூடத்தனமாது. திருகுர்ஆனிலேயே, 'திண்ணமாக, நாம் அதை அரபி மொழியில் குர்ஆனுக ஆக்கினேம்' என்றே கூறப்பட்டுள்ளது. அதாவது, தன்னுல் சிருஷ்டிக்கப்பட்டது திருகுர்ஆன் என்பதையே இறைவன் இப்படித் தெரிவித்துள்ளான். 'இருளையும் வெளிச்சத்தையும் ஆக்கினுன்' என்றுள்ள திரு வசனத்திலும் ஆக்கினுன் என்பதில் தானே சிருஷ்டித்தான் என்பது கருத்தாயுள்ளது! மேலும், ''அத்தகைய முன்னுல் நடந்த கருமங்களையுடைய வேதங்களி லுள்ள விஷயங்களையும் நாம் உமக்குக் கூறினேம்'' என்று பேசும் திருகுர்ஆன், சில கருமங்களைப்பறிப் பேசும் வேதம் தான். எனவே, அந்தக் கருமங்கள் முன்னும், திருகுர்ஆன் பின்னும் புதிதாக உண்டாக்கப்பட்டு அந்தக் கருமங்களைப் பற்றிப் பேசுமாறு செய்யப்பட்டுள்ளது. மேலும், திரு குர்ஆன் வசனங்களைக் கெட்டியாக்கி, உத்தரவுகள், ஆக்ஞைகள், உபதேசங்கள் ஆகியவைகளை அந்த வசனங்களில் விவரித்துள் ளோம்'' என்றும் இறைவன் அருளியுள்ளான். எனவே, திரு குர்ஆனைக் கெட்டிப்படுத்தும், விபரப்படுத்தும் இறைவன் அதைப் புதிதாகப் படைத்தான் என்பது தெளிவாகிறது.

''இதனுல் திருகுர்ஆன் அனுதியானது, படைக்கப்படாதது என்று கூறுபவர்கள் அனைவரும் மூடர்களும், அறிவீனர்களு மேயாவர். இவர்களை வன்மையாகத் தண்டிக்கவேண்டும்.

இத்தகையவர்களின் சாட்சியங்களைக்கூட ஏற்கக்கூடாது. அல்லாஹ்வின் வெளிப்பாட்டை (வஹியை)ப் பொய்யாக்கி, அவனை அறியவேண்டியபடி அறியாதவனே மனிதரில் மிகவும் பொய்யனுவான்.''

இவ்விதம் தாம் எழுதிய உத்தரவை, கிரேக்க நாட்டு எல்லையிலிருந்த கலீபா மாமூன் அச்சமயம் பக்தாதில் தன் பிரதிநிதியாக இருந்து அரசங்க நிர்வாகத்தை நடத்தி வந்த இஸ்ஹாக் இப்னு இப்ராஹீமுல் கஜாமி என்பவருக்கு அனுப்பி அத்துடன், ''பக்தாதிலும், அதன் சுற்றுப்புறத்திலுமுள்ள மார்க்கஞானியர்கள் அனைவரையும் ஒரு சபையில் கூட்டி, அவர்களிடம் என் உத்தரவைப் படித்துக்காட்டி, இதன் மீது விஸ்வாசப்பிரமாணம் செய்யுமாறு செய்யவேண்டும். இந்தப் பிரகடனத்தில் கண்ட விஷயங்களை ஒப்புக்கொள்ள மறுப்பவர் களை மார்க்கத் தீர்ப்பளிக்கவோ, உபன்னியாசம் நிகழ்த்தவோ, திரு குர்ஆன் விரிவுரை நிகழ்த்தவோ அனுமதிக்கவும்கூடாது. அவர்களை எம் சமுகத்துக்கே அனுப்பவேண்டும். நாம் அவர் களை விசாரித்துத் தக்க முறையில் தண்டிப்போம்'' என்ற உத்தரவையும் சேர்த்திருந்தார்.

## இமாமவர்கள் கைதியாதல்

இதன்படி பக்தாதிலுள்ள உலமாக்கள் அனைவரையும் வந்து கூடுமாறு இஸ்ஹாக் இப்னு இப்ராஹீம் சுற்றறிக்கை அனுப்பினர். அவ்விதம் யாவரும் வந்து கூடிய சபையில் அவர்களிடம் கலீபா மாமூனின் பிரகடனத்தைப் படித்துக் காட்டினர். அவர்களில் பெரும்பாலோர் கலீபாவின் வாளுக்கு அஞ்சியும், அவர் தரும் உபகாரச் சம்பளம், மானியம் முதலியன பறிபோகலாம் என்று பயந்தும் அந்தப் பிரகடனத்தை ஒப்புக்கொண்டு அதன் மீது விஸ்வாசப் பிரமாணம் செய்து கொடுத்துவிட்டனர். கடைசியில், இமாம் அஹ்மது இப்னு ஹன்பலும், முஹம்மதிப்னு நூஹு என்பவரும் தான் இதில் விட்டுக்கொடுக்காமல், ''திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதல்ல; அநாதியானது; அது இறைவனின் திருவசனம்'' என்று கூறினர். உடனே, அந்த நிர்வாக

அதிகாரி அவர்கள் இருவரின் கால்களுக்கும் விலங்கிட்டு, கிரேக்க எல்லையில் தியாஞு என்ற இடத்தில் முகாமிட்டிருந்த கலீபா மாமூனிடம் அனுப்பிவிட்டார். அப்படிப் போகும் வழியில் இமாமவர்களுடன் கைதியாகச் சென்ற முஹம்மதிப்னு நூஹு காலமாகிவிட்டார்.

இமாமவர்கள் மட்டும் கைதியாக அழைத்துச் செல்லப் பட்ட சமயம், கலீபாவின் அவையைச் சேர்ந்த, ஆனல் இமாம வர்களின் மேதாவிலாசத்தை மதித்துப் போற்றிய ஒருவர் அவர்களிடம் வந்து, ''இமாமவர்களே, அமீருல் முமினீன் என்றுமில்லாதவிதமாக இன்று வாளையுருவிவிட்டார். உங்களைத் தண்டித்தேயாக வேண்டும் என்று கோபக் கனல் பொங்கக் குமுறுகிருர். இதிலிருந்து நீங்கள் எப்படித்தான் தப்புவீர்களோ!" என்ருர். உடனே இமாமவர்கள், ''எல்லாம் அல்லாஹ்வின் சித்தப்படியே நடக்கும்" என்று கூறிவிட் டார்கள்.

## காராக்கிரஹவாசம்

அவர்கள் மேலும் ஒரு நாள் பயணம்போய் தியாஞுவை அடைந்த சமயம் கலீபா மாமூன் காலமாகிவிட்டார் என்ற செய்தியைத்தான் கேட்கமுடிந்தது. அவர் இறந்ததும் அவரோடிருந்த அவர் சகோதரர் அபூ இஸ்ஹாக் முஹம்மது என்பவர் மாமூனின் மரண சாஸனப்படி ஹிஜ்ரி 218-ல் தியாஞுவிலேயே முஃதஸிம்பில்லாஹ் என்ற பட்டத்துடன் கலீபாவானுர். அவர் உடனடியாகக் கவனிக்கவேண்டிய அவசர காரியங்கள் பல இருந்ததால், இமாமவர்களைப் பின்னர் விசாரிக்கலாம் என்றும், அதுவரை அவர்களைப் பக்தாதிலேயே கொண்டுபோய்ச் சிறை வைக்குமாறும் உத்தரவிட்டுவிட்டார். இதனுல், இமாம் ஹன்பலவர்கள் படகொன்றில் ஏற்றப்பட்டு மீண்டும் பக்தாதுக்கே கொண்டுவரப்பட்டுச் சிறையிலடைக்கப் பட்டார்கள். ஒருக்கால் இமாமவர்கள் அறிவாளியான கலீபா மாமூனைச் சந்தித்துத் தங்கள் கட்சியை எடுத்துக்கூறியிருப்பின் அநேகமாக அவரை மனம் மாற்றித் தங்கள் பக்கம் திருப்பி

மிருக்கக் கூடும். என்ன செய்வது, எல்லாம் இறைவன் நாட்டப்படிதானே நடக்க முடியும்!

கலீபா முஃதஸிம் தமது தமையனார் கிரேக்கர்களை அடக்கி ஒடுக்குவதற்காகத் தியானுவில் கட்டிவந்த கோட்டையை விட்டுவிட்டுப் பக்தாதுக்குத் திரும்பிவிட்டார். அவர் ஆட்சியைத் தொடர்ந்த குழப்பங்களைக் கவனிப்பதில் அவருடைய முழுக் கவனமும் சென்றுவிட்டது. அவருடைய பிரதம மந்திரியாக இருந்த அபூதாவூது என்பவர் முஃதஜிலாக்களிலொருவராவார். எனவே, திருக்குர்ஆனைப் பற்றிய மாமூனின் கொள்கையை இவரும் தொடர்ந்து அமல் நடத்த வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். அதன் பயனாய் மீண்டும் உலமாக்களை விசாரணை செய்து அவர்களுடைய விஸ்வாசத்தை அறியும் வேலை தொடங்கிவிட்டது.

இமாம் ஹன்பலவர்கள் கால் விலங்குடனேயே சிறையிலடைக்கப்பட்டு பலவிதமாகவும் கஷ்டப்பட்டார்கள். அவர்கள் மீண்டும் கலீபா முஃதஸிமின் முன் விசாரணைக்குக் கொண்டு வரப்படுவதற்குள் ஓராண்டுக்கு அதிகமாகச் சிறைவாசத்தை அனுபவித்துவிட்டார்கள். அவர்கள் சிறையிலிருந்த காலம் பதினெட்டு மாதங்கள் என்றும், இருபத்தெட்டு மாதங்கள் என்றும் இரண்டு வகையாகக் கூறப்படுகிறது.

## சத்திய சோதனை

இமாமவர்கள் விசாரணைக்காகக் கால் விலங்குகளுடன் முஃதஸிமின் அவைக்குக் கொண்டுபோகப்பட்ட சமயம், வழியில் அவர்களைக் கண்ட அவர்களுடைய சிறிய தகப்பனார் மகன் ஜமீல் என்பவர் அவர்களிடம் வந்து, "அஹ்மதே, மற்ற உலமாக்கள் திருக்குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதுதான் என்று கருத்துப்படப் பேசிக் கலீபாவிடமிருந்து தப்பிவிட்டனர். அதுபோன்று நீரும் தப்பிப்பதுதான் நல்லது" என்றார். இந்த ஜமீலும் ஓர் ஆலிம்தான். இவர் கலீபாவிடம் சென்று திருக்குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதுதான் என்று கூறிச் சம்மானம் பெற்றார். இவரை நோக்கி இமாமவர்கள், "சகோதரா,

திருக்குர்ஆனேயும் ஹதீஸையும் என் நன்மைக்காகத் திரித்துக் கூறச் சொல்கிருயா? ஒருக்காலும் நான் அதைச் செய்யமாட்டேன். சத்தியம் இறந்து, நான் உயிரோடிருப்பதைவிட, நான் இறந்து சத்தியம் உயிரோடிருப்பது சிரேஷ்டமல்லவா!" என்று கூறிவிட்டு மேலே நடந்தார்கள்.

கலீபா முஃதஸிமின் அவையில் முஃதஜிலாக்களான ஆலிம்கள் பலர் கூடியிருந்தனர். முஃதஜிலா அதிகாரிகளும் நிறைந்திருந்தனர். அங்கே இமாம் அஹ்மதிப்னு ஹன்பலை கொண்டுவந்து நிறுத்தப்பட்டார்கள். அவர்களைக் கண்ட அபூதாவூது கலிபாவை நோக்கி, ''அமீருல் மூமினீன், அஹ்மது ஓர் இளைஞராக இருப்பார் என்றல்லவா எண்ணினேம்! இவர் முதியவராகவல்லவா இருக்கிருர்!'' என்று கூறினர். இமாமவர்கள் கலீபாவுக்கு ஸலாம் கூறவே அவர் அவர்களை அருகில் வருமாறு அழைத்தார். கால் விலங்கு வேதனைசெய்ய அவர்கள் நடந்து சென்ருர்கள். அருகே போனதும், ''அமீருல் மூமினீன், உங்கள் திருப்பாட்டனுரான நபிபெருமான் (ஸல்) அவர்கள் உங்களை எதன் பக்கல் அழைத்தார்கள்?'' என்று வினவினர்கள்.

"லாஇலாஹ இல்லல்லாஹ்வின் பக்கல்" என்று கலீபா பதிலளித்துக்கொண்டிருக்கும்போதே, அவருடைய பிரதமரான அபூதாவூது இமாமவர்களை நோக்கி, ''திருக்குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதுதான் என்பதை நீர் ஒப்புக்கொள்கிறீரா?" என்று வினவினர்.

''இல்லை. அது அல்லாஹ்வின் கலாம்—அனுதியானது" என்று இமாமவர்கள் மொழிந்தார்கள்.

அபூதாவூதின் கையாளும், முஃதஜிலா உலமாக்களின் தலைவருமான பிஷ்ர் இடையில் வினவலானர். அவர் கேட்டார், ''அல்லாஹ் இரண்டு உருப்புக்களால் பேசினன் என்பதையாவது நீர் ஒப்புக்கொள்கிறீரா?''

''இல்லை. நீர் சொல்வது தவறு. அதை நான் ஒப்புக்கொள்ள முடியாது'' என்று இமாமவர்கள் உறுதியோடு பதிலுரைத்தார்கள்.

அபூதாவூது கேட்டார்: ''அல்லாஹ் நாவாலும், உதட்டாலும், பேசினரு, வேறு அவயவங்களாலும் பேசினரு?''

இமாமவர்கள்: ''அல்லாஹ் வானத்தையும் பூமியையும் நோக்கி, 'நீங்கள் வழிபட்டவர்களாக, அல்லது வழிபடாதவர்களாக வாருங்கள்'' என்று கூறியபோது, 'நாங்கள் வழிபட்டவர்களாகவே வந்தோம்' என்று அவை பதிலளித்ததாகப் படிக்கிறோமே, அவை நாவாலும், உதட்டாலும் அவ்விதம் கூறினவா, அல்லது அவையல்லாதவற்ருல் அவ்விதம் கூறினவா?''

இமாமவர்கள் கேட்ட இந்தக் கேள்விக்கு அவரால் பதில் சொல்ல முடியவில்லே. உடனே இமாமவர்கள் தொடர்ந்து, ''கேவலம், உங்களேப் போன்ற சிருஷ்டிகளான அவை எப்படிப் பேசின என்று அறியமுடியாத நீங்கள் உங்களேயும், அவைகளேயும், பிரபஞ்சம் முழுவதையுமே சிருஷ்டித்த அல்லாஹ் இன்னவிதம்தான் பேசியிருப்பான் என்று எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?'' என வினவினுர்கள்.

பிஷர் கேட்டார்: ''அஹ்மதே, இந்த வாதமெல்லாம் தேவையில்லே, நீர் சாதுர்யமிக்கவர். மற்ற உலமாக்கள் ஒப்புக்கொண்டுள்ளதை நீரும் ஒப்புகொள்வீராயின் உம்முடைய பேச்சுக்கு இந்த நாட்டிலேயே அதிக மதிப்புக் கிடைக்கும்படியாகச் செய்யலாம்.''

இமாமவர்கள்: ''அவர்கள் எதை ஒப்புக்கொண்டார்கள்?''

''திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டது என்பதை.''

இமாமவர்கள் : ''சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களுக்கு மூன்று இயல்புகள் உண்டு. முதலாவதாக அவை ஒரு பொருளிலிருந்து வெளியாகின்றன. இரண்டாவதாக, அவை படிப்படியாக வளர்ச்சியடைகின்றன. மூன்ருவதாக, அவை மூப்படைந்து மாண்டுபோகின்றன. அவை காலத்தாலும், பருவங்களின் மாற்றங்களாலும் பேதலிக்கப் படுபவையாகும். இந்தக் குணங்களில் எதுவேனும் திருகுர்ஆனுக்கு உண்டா?''

பிஷ்ர்: ''திருகுர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதல்ல என்றால், அது என்ன?''

இமாமவர்கள்: ''திரு குர்ஆன் பூமியில் அல்லாஹ்வின் இரகசியப் பொருள் (ஸிர்ரு); மறைவில் (கைபில்) அவனுடைய ஞானம் (இல்மு); அவனுடைய சிருஷ்டியில் அது அவனுடைய மகத்தான சக்தி (குத்ரத்).''

பிஷ்ர் : ''இதற்கு ஆதாரம் யாது?''

இமாமவர்கள்: ''திருகுர்ஆன் முன் உண்டானதை உமக்குத் தெரிவிக்கிறது; இனி உண்டாகவிருப்பதை, அது உண்டாவதற்கு முன்னமேயே முன்னறிவிப்புச் செய்கிறது.''

பிஷ்ர்: ''எப்படி?''

இமாமவர்கள்: ''உதாரணமாக, நிராகரிப்பவர்கள் தண்ணீர் தேடினார்கள்: அவர்களுக்குத் தண்ணீர் புகட்டப்பட வில்லை' என்று முன்னுள்ள செய்தியொன்றை நமக்குத் தெரி விக்கின்றது. ''அல்லாஹ் உங்களுக்கு அருளிய தண்ணீரி லிருந்து (சிறிதை) எங்கள் மீது சொரியுங்கள்'' என்று நரக வாதிகவ சுவர்க்கவாதிகளைப் பார்த்துக் கூறுவதாகவும், சுவர்க்க வாதிகள் சுவர்க்கத்தில் நுழைந்ததும், ''நம் குறை நீக்கிய அல்லாஹ்வுக்கே சகல புகழும்! திண்ணமாக, அவன் நம் பாவங்களை மன்னிப்பவனாக இருக்கிறான். நம் அமலை ஏற்கிறான்' என்று அல்லாஹ்வைத் துதிப்பதாகவும் வரும் வசனங்கள் வரவிருக்கும் சம்பவங்களை முன்னறிவிப்புச் செய்பவையாகும். எனவே, இனி வரவிருக்கும் காரியங் களையும் அது முன்னமேயே அறிவித்துத்தருகிறது என்பது பெறப்டுகிறது.''

இது இப்படித்தானா என்று இமாம் ஹன்பலவர்கள் பிஷ்ரிடம் வினவவே அவர், 'ஆம்' என்று தலையை அசைத் தார். உடனே இமாமவர்கள், ''திரு குர்ஆனிலுள்ள குல்ஹுவல்லாஹு அஹது' சிருஷ்டிக்கப்பட்டதா?'' என்று கேட்டார்கள். அவர் 'இல்லை' என்றார்.

''ஷஹிதல்லாஹு அன்னஹு லாஇலாஹ இல்லாஹுவ வல் மலாஇகத்து வ உலுல் இல்மி காயிமன் பில்கிஸ்தி

லா இலாஹ இல்லா ஹுவல் அஜீஸுல் ஹக்கீம்" "நிச்சயமாக, அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்று நீதியாளனாகிய அல்லாஹ் சாட்சி பகர்கிறான், அவ்வாறே, அமரர்களும், அறிஞர்களும் அவனைத் தவிர வேறு இறைவனில்லை, (அவன் யாவையும்) மிகைத்தோன், ஞானமுடையோன் என்று (சாட்சிபகர்கின்றனர்)" (அத் 3: ஆயத்18) என்ற திருவசனம் சிருஷ்டிக்கப்பட்டதா?" என்று வினவினார்கள். அவர் இல்லை என்றார். பின்னர், "ஜுலைகா யூஸுபை நாடினார்; யூஸுபு ஜுலைகாவை நாடினார்" என்ற திருவசனம் சிருஷ்டிக்கப்பட்டதா" என்றுகேட்டார்கள். அவர் 'ஆம், என்றார்;

"அப்படியானால் திருகுர்ஆனிலுள்ள சில வசனங்கள் அனாதியானவை என்று விஸ்வாசம் கொள்கிறீர்; சிலவற்றில் மாற்றமான அபிப்பிராயம் கொண்டுள்ளீர். இது சரியா?" என இமாமவர்கள் வினவினார்கள்.

இமாமவர்களின் கேள்விக்கு யாரும் பதிலளிக்க இயலாது போன உடனே கலீபா அவர்களை நோக்கி, "அஹ்மதே, நீர் திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதுதான் என்று ஒப்புக்கொள்ளா விட்டால் என்ன தண்டனை அனுபவிக்க நேரும் என்பதை அறிவீரா?" என்று வினவினார்.

இமாமவர்கள் : "அமீருல் மூமினீன், நான் திருகுர்ஆன் வாக்கியங்களைப்பற்றி உங்கள் கருத்தை அறியலாமா? முதலாவதாக, 'வ இன் அஹதுன் மினல் முஷ்ரிகீனஸ்தஜாரக பஅஜ்ரு ஹத்தா யஸ்மஅ ஃகல்கல்லாஹு..."

கலீபா : "நீர் ஓதுவது சரியன்று, இந்த வசனத்தின் கடைசியில் 'கல்கல்லாஹு' (அல்லாஹ்வின் சிருஷ்டி) என்று ஓதக்கூடாது; அது தவறு. 'ஹத்தா யஸ்மஅ கலாமல்லாஹு (அல்லாஹ்வின் கலாம்) என்றுதான் ஓதவேண்டும்."

இமாமவர்கள் : "நீங்கள் திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டது என்கிறீர்கள்; ஆனால், இப்போது அது அல்லாஹ்வின் கலாம் என்கிறீர்கள். அதிருக்கட்டும், இந்த வசனம்பற்றி உங்கள் கருத்தென்ன? 'அர்ரஹ்மானு ஃகலக்கல் குர்ஆன..."

கலீபா : ''இதையும் நீர் பிழைபடவே ஓதுகிறீர். நீர் சொல்வதுபோல் 'கலக்கல் குர்ஆன்' (திரு குர்ஆனைப் படைத்தான்) என்று சொல்வது சரியல்ல. 'அர்ரஹ்மானு அல்லமல் குர்ஆன்' (திரு குர்ஆனைக் கற்றுத்தந்தவன்) என்றுதான் சொல்லவேண்டும்.

இமாமவர்கள் : ''திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டது என்று வாதாடும் நீங்கள், இப்போது அது சிருஷ்டிக்கப்பட்டதல்ல என்று ஒப்புக்கொள்கிறீர்கள். நான் கேட்பது சரிதானு அமீருல் மூமினீன்?''

கலீபாவால் பதிலேதும் பேசமுடியவில்லை. உடனே பிஷ்ர் என்பவர் கலீபாவை நோக்கி, ''நீங்கள் இவரோடு விவாதிக்க வேண்டாம்! இவர் குதர்க்கவாதத்தில் தேர்ந்தவர்; சாதுரியமான பேச்சாலேயே எதிரியை மடக்குபவர்'' என்று கூறினுர்.

இமாமவர்கள் : ''பிஷ்ரே, நீர் சொல்வது சரியன்று, அல்லாஹ்வின்மீது ஆணையாக நான் அல்லாஹ்வின் வேதத்தையும், எம்பெருமான் (ஸல்) அவர்களின் ஹதீஸையும்தான் அடிப்படையாகச் கொண்டு பேசுகிறேன். என் சொந்த யுக்தியால் எதுவும் பேசவில்லை.''

அபூதாவூது : ''நீர் அமீருல் மூமினீன் சொல்வதை ஒப்புக்கொள்ளவேண்டும்."

இமாமவர்கள் : அவர் என்ன சொல்கிருர்?''

பிஷ்ர் : ''திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டது என்கிருர்,"

இதற்கிடையே சபையின் நேர வரம்பு கடந்து விட்டது. கலீபாவுக்கு வேறு அலுவல்கள் காத்திருந்தன, அதனுல், அவர் அதற்கு மூன்ரும் நாள் விசாரணையை ஒத்திவைத்தார். மூன்ரும் நாள் மீண்டும் விசாரணை தொடர்ந்தது. இமாம் அஹ்மதிப்னு ஹன்பலவர்கள் மிகுந்த வேதனையோடும் வருத்தத்தோடும் சபையில் வந்து நின்ருர்கள். அவர்கள் வருந்துவதன் காரணம் என்னவென்று கலீபா விசாரித்தார்.

''அமீருல் மூமினீன், நேற்று முன் தினம் என்னிடம் 'குல்ஹுவல்லாஹு அஹது' என்ற அத்தியாயம் பிணியுற்

றிருந்தது. அது சுகமடைவதற்காக நான் சிகிச்சை செய்தேன்; பயனில்லை, அது இறந்துவிட்டது. இன்று நான் அதை நல்லடக்கம் செய்துவிட்டு வருகிறேன்'' என்று இமாமவர்கள் கூறினார்கள்.

இதுகேட்ட கலீபாவும், சபையினரும் நகைக்கலாயினர். ''திரு குர்ஆன் வசனம் சாவதெப்படி? உமக்கென்னகோளாறு" என்று கலீபா வினவலானார்.

இமாமவர்கள் : ''அல்லாஹ்மீது சத்தியமாக திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதல்லவாதலின் அது சாகாது. நான் நேற்று முன்தினம் கூறியதுபோல, பிறப்பு—வளர்ச்சி—மூப்பு—மரணம் யாவும் சிருஷ்டிக்கப்பட்டவைகளுக்குத்தான் உண்டு. நீங்கள் சொல்வதுபோல திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதாயின் அது மரணமடையுமல்லவா!''

இந்த வினாவுக்குக் கலீபாவால் பதில் எதுவுமே கூற முடியவில்லை. இமாமவர்களின் பேச்சிலுள்ள உண்மையை அவர் மனம் உணரலாயிற்று, ஆனால், அவரைச் சுற்றி இருந்தவர்கள் அவர் அந்தக் கொள்கையைவிட்டு நழுவி விடாதபடி தாங்கிப்பிடிக்க எப்போதும் ஆயத்தமாக விருந்தனர். எனவே, இச்சமயம் பிஷர் என்பவர் குறுக்கிட்டு, ''அஹ்மதே, இந்த வாதமெல்லாம் வேண்டாம்! நீர் கலீபா சொன்னபடி செய்யும். அவருக்கு மாறுசெய்ய வேண்டாம்!'' என்றார்.

இமாமவர்கள் : ''சிருஷ்டிக்கப்பட்டவன் தன்னைச் சிருஷ்டித்தவனுக்கே மாறுசெய்யலாமா?"

பிஷர் : ''உம்மைத் தவிர மற்ற உலமாக்கள் யாவரும் திரு குர்ஆன் சிஷ்டிக்கப்பட்டதுதான் என்று ஒப்புக்கொண்டுள்ளனர். (அவர்களை சமிக்ஞைசெய்து அருகில் வரச்செய்து) என் காதிலாவது சொல்லிவிடும்!''

இமாமவர்கள் : ''என்ன சொல்ல வேண்டும்?''

பிஷர் : ''திரு குர்ஆன் படைக்கப்பட்டதென்று. இதை நீர் என் காதினுள் சொன்னால் போதும், நான் உம்மைக் கலீபாவின் தண்டனையிலிருந்தும் காப்பாற்றி விடுகிறேன்."

இமாமவர்கள் : ''நீர் என் காதினுள் சொல்லும் திரு குர்ஆன் அல்லாஹ்வின் கலாம்தான், படைக்கப்பட்டதல்ல என்று. கூலி கொடுக்கப்படும் நாளில் நான் உம்மைக் கூலி கொடுப்பவனுடைய தண்டனையிலிருந்து காப்பாற்ற மன்றுடு கிறேன்.''

பிஷர் இமாமவர்களிடம் அதிகமாகச்சமாதானம்பேசலானார். இமாவர்களின் வாதமே சரி என்பதைத் தாம் உணர்வது போலும், ஆனால், கலீபாவின் மனப்பான்மையோ தம்மை எதிர்ப்பவர்களேயே தலையைச் சீவுவதாய் இருப்பதால் அதிலி ருந்து தப்புவதற்காக அவர் போக்கில் நடக்க வேண்டியதாய் இருக்கிறது என்று கூறுபவர் போலும் அவர் இமாமவர்களிடம் ரகசியமாக, ''நீங்கள் அமீருல் மூமினீனோடு ஒத்துப்போவ தைத்தான் நான் விரும்புகிறேன்'' என்றார். உடனே இமாம வர்கள் கலீபாவைச் சுட்டிக்காட்டியவர்களாக, ''சிருஷ்டிதான்" என்றார்கள். உடனே பிஷரும், மற்றும் இமாமவர்களிடம் அனு தாபங்கொண்டவர்களும், ''அமீருல் மூமினீன், அஹ்மது நீங்கள் சொல்வதை ஒப்புக்கொண்டுவிட்டார். அவரை விடுதலை செய்யலாம்'' என்றனர். கலீபா அதற்கு இணங்கியு மிருக்கலாம். ஆனால், கலீபாவின் பிரதம மந்திரியான இப்னு அபூதாவூது குறிக்கிட்டு, ''இவரைப் போன்ற பிரபலமான ஓர் அறிஞன் அதை ஜனங்களிடையே சொன்னால்தான் நல்லது" என்றார். உடனே கலீபா அவர் சொன்னதை ஒப்புக்கொண்டு, அரண்மனை முற்றத்தில் பொதுக்கூட்டத்துக்கு ஏற்பாடு செய்து விட்டார்.

## கயவர்கள் தந்த கசையடி

பல மாதங்களாகச் சிறையில் கிடத்து வாடிய மாமேதை இமாம் ஹன்பல் அவர்கள் பேசப் போகிறார்கள் என்ற செய்தி பக்தாதில் ஒரு பரபரப்பை உண்டாக்கி விட்டது. அன்று மாலையில் நடந்த கூட்டத்துக்குப் பல்லாயிரவர் வந்திருந் தனர். சொற்பொழிவு மேடையின் (மிம்பரின்) அருகே கலீபா வுக்கு விசேஷ ஆசனம் அமைக்கப்பட்டிருந்தது. அதில் அவர் வந்து அமர்ந்தார். அவருடைய மந்திரி, தளபதி மற்றும்

அதிகாரிகளும், உலமாக்களும் சுற்றி அமர்ந்திருந்தனர். முதுமையில் சிறைவாசத்தால் மெலிந்து நலிந்துபோயிருந்த இமாம் ஹன்பலர்கள் முதன் முறையாகத் தங்கள் கால் விலங்குகள் அகற்றப்பட்டவர்களாக அங்கே வந்திருந்தார்கள். அவர்கள் மேடைமீது ஏறிநின்று கம்பீரமான குரலில் பேசினார்கள் :

''மஹாஜனங்களே, என்னை அறிந்துள்ளவர்களுக்கு என்னைப்பற்றி எதுவும் சொல்லத் தேவையில்லை. என்னை அறியாதவர்களுக்கு மட்டும் என்னை நான் அறிமுகப்படுத்துகிறேன். நான் ஷைபான் கிளையைச் சேர்ந்த ஹன்பலின் மகன் முஹம்மதின் மகன் அஹ்மது ஆவேன். என் வாய்மொழியைக் கேட்டுப் பாடமிட்டுக் கொள்பவருக்கு அல்லாஹ் நல்லருள்புரிவான். எனக்கு அப்துர் ரஜாக் சொன்னார்—அவருக்கு மஃமர் சொன்னார்—அவருக்கு அப்துல்லாஹ் சொன்னார்—அவருக்கு நபி பெருமான் (ஸல்) அவர்கள் அருளினார்கள் : 'குர்ஆனன் அரபிய்யன் கைரிமன் இவஜ' என்பதில் 'கோணலல்லாத குர்ஆன்' என்று அல்லாஹ் சொன்னதன் தாத்பரியம் சிருஷ்டிக்கப்படாத குர்ஆன் என்பதாகும்.' இதை நபி பெருமான் (ஸல்) அவர்கள் மீண்டும் மீண்டும் மூன்று தடவை கூறிவிட்டு, 'திரு குர்ஆன் அல்லாஹ்விலிருந்தே வெளியாயிற்று, அவனிடமே மீளும்' என்று அருளினார்கள்."

இவ்விதம் இமாமவர்கள் பேசியதும் நெடுகிலும் பரபரப்பு உண்டாயிற்று. பலர் அவர்கள் சொன்னதை ஒரு வார்த்தை விடாமல் எழுதி மனனம் செய்துகொண்டார்கள். கலீபாவுக்கு இது பெருத்த ஏமாற்றமாக ஆகிவிட்டது. அவருடைய மந்திரி கோபத்தால் கொதித்தார். ''அல்லாஹ்விலிருந்து வெளிப்பட்டது. அவனிடம் மீளுவதெப்படி?" என்று அவர் வினவினார். ''இறங்குதலால் அல்லாஹ்விலிருந்து வெளியாயிற்று; கட்டளையால் அவனிடம் மீளும்" என்று இமாமவர்கள் சாந்தமாகவே பதிலளித்தார்கள்.

இமாமவர்கள் சொன்ன ஹதீஸ் உண்மையானதாக இருக்கும் என்று கலீபா உணர்ந்ததால் அவரால் எதுவும் பேச

இயலவில்லை. ''நீர் பெரிய பிடிவாதக்காரராகவல்லவா இருக்கிறீர்!'' என்றார் அவர்.

இமாமவர்கள் அவரை நோக்கி, ''அமீருல் மூமினீன், நான் என் சுய யுக்தியால் பேசவில்லை. நான் மக்கா, மதீனா, கூபா, பஸ்ரா, குராஸான், தமாஸ்கஸ் போன்ற நகரங்களுக்கெல்லாம் சென்று, ஆங்காங்கேயுள்ள உலமாக்களிடம் இது பற்றி விசாரித்துத் தெரிந்ததுதான் இது" என்று கூறவே, ''சரி, இவரை இவர் போக்கில் விட்டுவிடலாம்'' என்று கலீபா எண்ணியவராகத் தமது மந்திரியிடம் யோசனை கலந்தார். அவரோ, ''இவரை இப்படி விட்டுவிட்டால், இவரைப் போன்று 'அராஜகமான' கருத்துக்களுடையவர்கள் துணிவடைந்து அரசாங்கத்தையே எதிர்க்க ஆரம்பித்துவிடுவார்கள். மேலும், முந்திய கலீபா மாமூனுக்குத் தாங்கள் கொடுத்த வாக்கையும் மீறுவதாகும்" என்று கூறவே, ''சரி, இலகுவான தண்டனை எதையும் அளியுங்கள்!'' என்று கூறிவிட்டு, கலீபா அங்கிருந்து போய்விட்டார்.

மறுநாள் இமாம் அஹ்மதுக்கு நூறு கசையடிகள் கொடுப்பது என்று மந்திரியும் அவர் கூட்டாளிகளும் முடிவு செய்துவிட்டனர்.

மறுநாள் முற்பகலில் பொதுவான ஓரிடத்தில் இமாமவர்கள் கொணர்ந்து நிறுத்தப்பட்டார்கள், அவர்களுடைய இரண்டு கைகளும் இரண்டு பக்கங்களிலும் வளையங்களுள் திணிக்கப்பட்டுக் கட்டப்பட்டிருந்தன. அவர்கள்மீது அணிந்திருந்த சட்டையும் அகற்றப்பட்டிருந்தது. அவர்கள் வெறும் பைஜாமாவுடன் நிறுத்தப் பட்டிருந்தார்கள். சவுக்கடி கொடுப்பவன் வந்து நின்றான். இமாமவர்கள் அடிபடுவதைப் பதைபதைக்கும் மனத்துடன் பலர் கூடிநின்று பார்த்தனர். ''அஹ்மது இப்னு ஹன்பல் வழிதவறிய சித்தாந்தமுடையவராய் இருப்பதால் கசையடிபடப்போகிறார், இது மற்றவர்களுக்கு எச்ச

ரிக்கையாகட்டும்'' எனச் சேவகன் ஒருவன் கத்தினுன். உடனே சவுக்கைப் பிடித்தவன் முதல் அடியை அடித்தான்.

இமாமவர்கள் சொல்கிருர்கள்: ''முதல் அடி என்மீது விழுந்ததும், 'பிஸ்மில்லாஹி' என்றேன். இரண்டாம் அடி விழுந்தசமயம், ''லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹி" (தடுக்கும் சக்தியோ, ஏற்கும் சக்தியோ அல்லாஹ்விடமிருந்தன்றி வேறில்லை) என்றேன். மூன்ருவது அடி விழுந்ததும், ''திரு குர்ஆன் அல்லாஹ்வின் கலாமாகும்" என்றேன். நான்காவது அடி விழும்போது, ''இறைவன் எங்களுக்கு விதிக்காதது எங்களைத் தொடாது என்று கூறுவீராக!" என்ற திருவசனத்தை ஓதினேன்...''

அடிப்பவன் வேகமாகச் சவுக்கைச் சுழற்றி வீசலாஞன். எட்டாவது அடி அவர்கள் மேனியில் விழுந்தபோது அவர்களின் இடுப்பில் கட்டப்பட்டிருந்த பைஜாமாவின் கயிறு திரிந்து அறுந்துபோய்விட்டது, அவர்களுடைய பைஜாமா தன் யதாஸ்தானத்தைவிட்டு நழுவிக் கீழே விழுந்துவிடலாம் என்ற நிலையை அடைந்துவிட்டது. அவர்களுடைய கைகளோ மேலே கட்டப்பட்டுள்ளன! கூட்டம் வேறு அலைமோதுகிறது. இமாமவர்கள் கண்களில் உருக்கம் தோன்ற, முகத்தை வானை நோக்கித் தூக்கி உதட்டை உசுப்பினுர்கள்.* அவ்வளவுதான், அவர்களுடைய பைஜாமாக் கயிறு இறுக்கிக் கட்டப்பட்டது

---

* ''பைஜாமா அவிழ்ந்தபோது உதட்டை உசுப்பி நீங்கள் என்ன சொன்னீர்கள்?" என்று பின்னர் இமாமவர்கள் வினவப்பட்டபோது அவர்கள் சொன்னதாவது: ''யா கியாதல் முஸ்தகீதீன் - யா இலாஹல் ஆலமீன் - அந்த தஃலமு - அன்னீ காயிமுன் லிக பிஹக்கின் ஃபலா தஃதிக்லி ஔரத்தன்'' (அடைக்கலம் தேடுவோருக்குப் புகலிடமானவனே. உலகினரின் ரக்ஷகனே, நான் உனக்காகச் சத்தியத்தைக் கொண்டு போராடுகிறேன் என்பதை நீ அறிவாய். எனவே, என் மானத்தைக் காப்பாற்று!) என்று நான் ஓதினேன்,"

போல, தன் யதாஸ்தானத்தை விட்டு இறங்காமல் நின்று விட்டது! கூடியிருந்த அத்தனை ஜனங்களும் இந்த அதிசயத்தைக் கண்கொண்டு பார்த்தனர்.

## விடுதலை

பார்த்தவர்களில் சிலர் விரைந்தோடிப்போய்க் கலீபா வாசஞ்செய்யும் மாளிகையின் வாயில்காப்போனிடம் இதைத் தெரிவித்தனர். அவன் அதைக் கலீபாவின் காதுகளுக்கு எட்டவிட்டான். உடனே, அவர் இமாம் அஹ்மதை விடுதலை செய்யுமாறு உத்தரவு அனுப்பினர். உத்தரவுடன் சேவகன் வருவதற்குள் இமாமவர்கள்மீது இருபத்தைந்து அடிகள் அடிக்கப்பட்டுவிட்டன. இமாமவர்கள் மயங்கிவிட்டார்கள், அவர்களுடைய கைக் கட்டுகள் அவிழ்க்கப்பட்டன. மூர்ச்சை தெளிவிக்கப்பட்டது. இந்தச் சம்பவம் நடந்தது ஹிஜ்ரி 221 ரமலான் மாதம் 25-ந் தேதி என்று இமாமவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

இமாமவர்கள் வீடு திரும்பும் வழியில், மாமூன் காலத்திலிருந்தே பக்தாத் நகரின் நிர்வாகியாக இருந்துவரும் இஸ்ஹாக் இப்னு இப்ராஹீமுல் கஜாயி என்பவர் வீட்டில் இமாமவர்களைத் தங்கவைத்தனர். இமாமவர்கள் சிறைவாசத்திடையிலும் நோன்பு பிடிப்பதை விடவில்லை. இத்தனை கஷ்டப்பட்டும், கசையடிகளை வாங்கியும் நோன்பையும் விடவில்லை. அவர்கள் இருந்த நிலையைப் பார்த்து, அவர்களை நோன்பை விட்டுவிட்டுச் சிறிது பானம் அருந்துமாறு கேட்டதற்கு அவர்கள் மறுத்துவிட்டார்கள். மாலையில் நோன்பு திறக்கும் நேரம் வந்தபின்னர்தான் நோன்பு திறந்தார்கள், அடிப்பது நிறுத்தப்பட்டு அவர்கள் வந்த உடனேயே, மாலையில் அஸருத் தொழுகையை ஜமாஅத்துடன் நின்று தொழுதுமிருக்கிறார்கள். அவர்களுடைய உடம்பிலிருந்து இரத்தம் கசிந்துகொண்டிருந்தது. இதைக் கண்ட காஜி இப்னு ஸமாஆ என்பவர் அவர்களை நோக்கி, ''இரத்தம் சிந்தும் நிலையில் தொழுகிறீர்களே!" என்று வினவினர். அதற்கு இமாமவர்கள் மிகவும்

அமைதியாக, ''ஆம், ஹஜ்ரத் உமர் (ரலி) கூடத் தங்கள் உடலிலிருந்து இரத்தம் பீரிட்டுக்கொண்டிருந்த நிலையில்தொழு திருக்கிறார்களே!'' என்று பதிலளித்தார்கள்.

இமாமவர்கள் தங்கள் வீட்டை அடைந்ததும், வைத்தியர் ஒருவர் வந்து பார்த்து, அவர்களுடைய உடலிலிருந்த ரணங் களில் மருந்து வைத்துக் கட்டிவிட்டுப் போனார். இந்தக் கண்டத்திலிருந்து வெகு கஷ்டப்பட்டு அவர்கள் உயிர் தப்பி னார்கள். ஆயினும், இமாமவர்களின் கை, கால், உதடு முதலியவற்றில் குளிமை தங்கி அவர்களுடைய மரணபரி யந்தம் அவர்களுக்குத் தொல்லை கொடுத்துக்கொண்டே இருந்தது.

இந்தச் சத்தியசோதனையில் இமாமவர்கள் காட்டிய உறுதியையும், நிதானத்தையும் போற்றுத பெரியார்கள் இல்லை எனலாம். இமாமவர்களின் இந்தப் போராட்டத்தைப் பற்றிக் குறிப்பிடும் இமாம் முஜ்னி, ''ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) முர்தத்துகளோடும், ஹஜ்ரத் உமர் (ரலி) பனீ ஸகீபாக்க ளோடும், ஹஜ்ரத் உதுமான் (ரலி) தாங்கள் முற்றுகையிடப் பட்டபோதும், ஹஜ்ரத் அலீ (ரலி) ஸிப்பீன் போராட்டத் திலும் காட்டிய நிகரற்ற உறுதியையும் தியாகத்தையும் இதில் இமாமவர்கள் காட்டியுள்ளார்கள்" என்று குறிப்பிட்டுள்ளார் கள். இதைப்பற்றி எழுதும் இப்னு மதனி என்ற பெரியார், ''முர்தத்துகளோடு போராடுவதற்கு ஹஜ்ரத் அபூ பக்கர் (ரலி) அவர்களுக்கு அன்ஸார்களும், முஹாஜிர்களும் பக்கபலமாக நின்றார்கள். ஆனால், இமாமவர்களின் இந்தப் போராட்டத் தில் அவர்கள் தன்னந்தனியராக நின்றே போராடினார்கள்'' என்று கூறுகிறார்.

கலீபா முஃதஸிம் தம்மால் இமாமவர்களுக்கு உண்டான கஷ்டங்களை உணர்ந்து அடிக்கடி தமது தூதுவர் ஒருவரை அவர்கள் வீட்டுக்கு அனுப்பி, அவர்களுடைய உடல்நலனை விசாரித்தறிந்து வந்தார். இந்த நிகழ்ச்சிகளுக்குப் பின்னர் இமாமவர்கள் வெளியில் செல்வதே இல்லை, ஜும்ஆ, ஜமா

அத் எதற்கும் வெளியே போவதில்லே. வீட்டிலேயே தொழுது கொள்வார்கள். ஹதீஸ் விளக்க வகுப்புக்களேயும் அவர்கள் நிறுத்திவிட்டார்கள். அவர்களிடமிருந்த சொற்பமான நிலத்திலிருந்து பதினேழு தீனர்தான் வருவாய் வந்தது. அதைக் கொண்டு அவர்கள் வெகு சிக்கனமாகக் குடும்பச் செலவை நடத்தி வந்தார்கள்.

கலீபா முஃதஸிமுக்கு இருப்பில் பிளவை வந்து வெகு கஷ்டப்பட்டார். அதனல் உடலில் பெரும் பகுதியான சதை வெட்டியெடுக்கப்பட்டது, கடைசியில் ஹிஜ்ரி 227-ல் அவர் காலமானர். அப்போது, அவர் ''என் இறைவா, இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் அவர்கள் விஷயத்தில் நான் செய்ததை மன்னித்தருள்! பிறர் சொல்லே நம்பி மதிமோசம் போனேன்" என்று பிரார்த்தித்தார் என்று ஹஜ்ரத் கௌதுல் அஃலமே தெரிவிக்கிருர்கள். அவர் காலமான செய்தி கேட்ட இமாமவர்கள், ''நான் இம்மையிலும் மறுமையிலும் அவர் பிழையை மன்னித்தேன், அவர்மீது எனக்கு எந்தக் குற்றச்சாட்டு மில்லே" என்று கூறிவிட்டார்மள். ''அவர் உங்களுக்குச் செய்த அநீதி என்ன, செய்த கொடுமைகள் என்ன, அப்படியிருக்க நீங்கள் ஏன் அவரை மன்னிக்கவேண்டும்?" என்று சிலர் அவர்களிடம் வினவினர். இமாமவர்கள் சொன்னர்கள்: ''அல்லாஹ் தூயவன், எனக்கு அவர் செய்த ஒரு கொடுமைக்காக நான் அல்லாஹ்வின் சமுகத்தில் எம்பெருமான் (ஸல்) அவர்களுடைய சிறிய தகப்பனர் புத்திரர் (ஹஜ்ரத் அலீ) அருகில் நிற்கும் மாண்பை அல்லாஹ் எனக்களித்துவிட்டான். அப்படியிருக்க நான் அவர்மீது கோபங் கொள்வதெப்படி!"

இதுபோன்றே அவர்கள் தங்களுக்குக் கொடுமைகள் இழைத்த முஃதஜிலாக்களேயும்கூட மன்னித்துவிட்டார்கள். இதுபற்றித் தங்களிடம் வினவியவர்களுக்கு, ''உங்களே அல்லாஹ் மன்னிப்பதை நீங்கள் விரும்பவில்லேயா?" ''அல்லாஹ் மிகமிக மன்னிப்போனும் அன்புடையோனுமாவான்" என்ற திரு குர்ஆன் வசனங்களேயும், ''பிறரை மன்னித்தோர்க்கு இறுதிநாளில் இறைவன் முதன் முதலாகத் தன்

நற்கூலியை அருளுவான்" என்ற ஹதீஸையும் அவர்கள் ஓதிக்காட்டினார்கள்.

## சத்தியம் வென்றது

கலீபா முஃதஸிம் காலமானதும், அவருடைய புத்திரர் அபூ ஜஅபர் ஹாரூன் என்பவர் வாஸிக்பில்லாஹ் என்றபட்டத்தோடு கலீபாவானார். இவருடைய ஆட்சியிலும் திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதுதான் என்ற கொள்கை வலியுறுத்தப் பட்டுப் பலர் தலைசீவப்பட்டனர். இவருடைய ஆட்சிகாலம் நடந்த ஐந்து ஆண்டுகளிலும் இமாம் அஹ்மதவர்கள் வெளியில் எங்கும் போகவில்லை. ஹிஜ்ரி 232-ல் கலீபா வாஸிக் காலமானார். உடனே, இவருடைய சகோதரர் அபுல் பஜ்லு ஜஅபர் என்பவர் முதவக்கிலு அலல்லாஹ் என்ற பட்டத்தோடு கலீபாவானார். இவர் பதவி ஏற்றதும் முதல் காரியமாக, "திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதல்ல; அனாதியானதுதான்" என்று பிரகடனம் செய்தார். அத்துடன், "திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டது என்றே யாரும் பிரசாரம் செய்யக்கூடாது" என்றும் தடை விதிக்கப்பட்டது. ஏற்கனவே, "திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதல்ல என்று கூறிச் சிறை சென்றவர்கள் விடுதலை செய்யப்பட்டனர். முஃதஜிலாக்களான அதிகாரிகளெல்லாம் பதவி நீக்கம் செய்யப்பட்டனர். தமது தமைய னின் பிரதம மந்திரியாயிருந்த அபூ தாவூதையே இந்தக் கலீபா அவருடைய முஃதஜிலாக் கொள்கைகளுக்காக அவருடைய புத்திரருடன் சேர்த்துச் சிறையில் போட்டார். அவர்களுடைய சொத்துக்களை பறிமுதல் செய்தார்.

இந்தக் கலீபாவின் தந்தையும், மாமூனின் சகோதரருமான கலீபா முஃதஸிம் பக்தாத் நகரில் திடீரென உண்டாகும் கலகங்களால் தமக்கு ஆபத்து நேரலாம் என்று எண்ணியவராகப் பக்தாத் நகரத்துக்கு வடமேற்கில் சில நாட்கள் பயணஞ் செய்யவேண்டிய தூரத்திலுள்ள சமர்ரா என்ற இடத்தில் தமது தலைநகரை அமைத்திருந்தார். அதிலிருந்து கிலாபத்தின் தலைமைப்பீடம் அங்கேதான் இருந்து வந்தது, கலீபா ஜஅபர்

முதவக்கிலு அலல்லாஹ்வும் அங்கேயே தங்கியிருந்தார். இவர் தமது தந்தையின் ஆட்சியில் இமாம் ஹன்பலவர்களுக்குச் செய்யப்பட்ட கொடுமைகளையெல்லாம் நன்கு அறிவார். எனவே, அதற்கு மாற்ருக இமாமவர்களுக்கு மரியாதை செய்ய நாடினூர். உடனே, தமது பக்தாத் பிரதிநிதியான இஸ்ஹாக்கு இப்னு இப்ராஹீமுல் கஜாயிக்கு ஒரு கடிதம் எழுதினூர். அதில் அவர் இமாமவர்களை மிகுந்த மரியாதையோடும், கண்ணியத்தோடும் தமது அவைக்கு அழைத்துவருமாறு கேட்டிருந்தார். அவ்விதம் இஸ்ஹாக், இமாமவர்களுக்குச் செய்தி அனுப்பிய போது, அதற்கு அவர்கள் இணங்க மறுத்து விட்டார்கள்,

இதேசமயம், பதவி வர்க்கத்தைச்சேர்ந்த இப்னு ஸல்ஜி என்பவன் கலீபாவுக்குக் கடிதமொன்று எழுதினூன். அதில், இமாமவர்கள் ஹஜ்ரத் அலீயின் பரம்பரையினரோடு கூடிச் சதி செய்வதாகவும், ஆட்சியைத் தமக்காகக் கைப்பற்ற முயலுவதாகவும், அதற்காகப் பொது ஜனங்களிடமிருந்து ஆதரவு தேடிவருவதாகவும் குறிப்பிட்டிருந்தான். அந்தக் கடிதம் கலீபாவிடம் கிடைத்த சமயம், அவர் பல காரணங்களால் அலவிகள்மீது கடுமையான நடவடிக்கைகளை எடுத்திருந்தார், எனவே, இப்படியும் இருக்கலாமோ என்று அவருக்கு ஐயமுண்டாகி, தமது பக்தாத் பிரதிநிதிக்கு எழுதி, இமாமவர்களின் வீட்டைச் சோதனையிடுமாறு உத்தரவிட்டார்.

ஒரு நாள் நள்ளிரவில் கலீபாவின் படைவீரர்கள் வறுமையை உவந்து ஏற்றுக்கொண்ட இமாமவர்களின் வீட்டைச் சுற்றிலும் வளைந்துகொண்டனர். அவர்கள் வீட்டைச் சோதனையிட வந்திருப்பதாக அதிகாரி கூறினூர். "நான் அந்தரங்கசுத்தியோடு முதவக்கிலைக் கலீபாவாக ஏற்றவன். அவருக்காகத் தினமும் பிரார்த்திக்கிறேன். எனக்கு ஏன் இப்படித் தொல்லை தருகிறீர்கள்?" என்று இமாமவர்கள் கேட்டும், விடாது அவர்களின் வீட்டைச் சோதனையிட்டனர். ஆனூல், அங்கே சந்தேகந்தரும் பொருள் எதுவுமில்லை,

இந்தச் செய்தியைக் கேட்ட கலீபா முதவக்கில், ''இத்தகைய துறவு வாழ்வு வாழும் இவர்களைப் பற்றியுமா இத்தனை அவதூறு!" என்று எண்ணி வருந்தலானார். உடனே யாகூப் பின் இப்ராஹீம் என்ற தமது விசேஷத் தூதுவரிடம் பத்தாயிரம் திர்ஹங்களைக் கொடுத்து அதை இமாவர்களிடம் அன்பளிப்பாகச் சேர்ப்பிக்கச் சொன்னார்.

## பண உதவி மறுத்தல்

அவர் பக்தாத் வந்து இமாம் அஹ்மதிடம் அந்தப் பண முடிப்பைக் கொடுத்தபோது அவர்கள் அதை ஏற்க மறுத்து விட்டார்கள். வந்த தூதுவரோ, ''இமாமவர்களே, நீங்கள் இதை ஏற்றுத்தானாகவேண்டும்! இன்றேல், கலீபாவுக்கு உங்கள்மீது மீண்டும் ஐயமுண்டாக்கப்படலாம்'' என்று கூறவே, இமாமவர்கள் அதைப் பெற்றுக் கொண்டார்கள். ஆனால், அந்தத் தூதுவர் போனதுமே, தங்கள் நண்பர்களை அழைத்து, அந்தப் பத்தாயிரம் திர்ஹங்களையும் அவர்களிடம் ஒப்படைத்து, பக்தாத், பஸரா மற்றும் அதன் சுற்றுப்புறங்களி லுள்ள ஏழைகளான முஹாஜிர்கள், பகீர்களுகள் ஆகியோ ரிடை அதை விநியோகித்துவிடவேண்டும் என்று கூறினார்கள். ''அதையும் இருட்டுமுன் செய்யவேண்டும், இன்றேல், இன்று இரவு தூக்கத்தை எனக்கு ஹராமாக்கிக் கொள்ளு வேன்" என்று கூறிவிட்டார்கள். அதேவிதம் அவர்களுடைய நண்பர்கள் அந்தப் பணத்தை உடனேயே விநியோகம் செய்து விட்டனர்.

தாம் அன்பளிப்பாகக் கொடுத்த பணத்தை இமாமவர்கள் பலருக்கும் தானமளித்துவிட்டதைக் கேள்வியுற்ற கலீபா மிகவும் வருந்தினார். இதற்கிடையே பக்தாதில் கலீபாவின் பிரதிநிதியாகவிருந்த இஸ்ஹாக்கும், அவருக்குப்பின் அவர் மூத்த மகன் முஹம்மதும் காலமாகி, அவருடைய இளைய மகன் அப்துல்லாஹ் கலீபாவின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருந் தார். அவருக்குக் கலீபா ஒரு கடிதம் எழுதினார். அதில் இமாமவர்களைச் சகல மரியாதைகளோடும் தமது அவைக்கு

அனுப்புமாறு கேட்டிருந்தார், அதன்படி அப்துல்லாஹ் அவர்களை அணுகி சமர்ராவுக்குப் புறப்படும்படி வேண்டினர். இமாமவர்கள், ''நான் முதியவன்; பலஹீனத்தால் கஷ்டப்படுபவன்; அவ்வளவு தூரம் என்னால் பிரயாணஞ் செய்ய முடியாது. என்னை வற்புறுத்தவேண்டாம்'' என்று கூறினர்கள். அப்துல்லாஹ் பலவிதமாக வற்புறுத்திக் கடைசியில் அவர்களைக் குடும்ப சகிதம் சமர்ராவுக்குப் புறப்படச் செய்தார்.

அவர்கள் கலீபாவின் தலைநகரை அடைந்ததும் அவர்களுக்கு அரச மாளிகை ஒன்றிலேயே இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால், அந்த இடத்தில் தங்குவதை இமாமவர்கள் விரும்பாமல், ஒரு சிறு விடுதியை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அதில் தங்கள் குடும்பத்தாரோடு தங்கினார்கள். உடனே, அவ்வூரிலிருந்த ஆலிம்களும், அதிகாரிகளும் இமாமவர்களிடம் வந்து அவர்களுக்குத் தங்கள் மரியாதையைச் செலுத்திப் போகலாயினர்.

இமாமவர்கள் தங்கியிருந்த இடத்தை அலங்கரிப்பதற்காகக் கலீபா உயர்தரமான பொருள்களை அனுப்பினர். பல சுவையான உணவுகளையும், கனிகளையும், பனிக்கட்டியில் தயாரான பானங்களையும் அனுப்பினர். ஆனால், இமாமவர்களோ அவை எதையும் புசிக்காமல் நோன்பு நோற்றுக்கொண்டிருந்தார்கள். ஒரு சமயம், தொடர்ந்து மூன்று நாட்கள் எதுவும் உட்கொள்ளாது அவர்கள் நோன்பு பிடிப்பதைக் கண்ட அவர்களுடைய புத்திரர், அவர்களை மிகவும் வற்புறுத்தியதன் பேரில் அன்று மாலை சிறிது மாவைக்கரைத்து உண்டு நோன்பு திறந்தார்கள்,

கலீபா ஒரு சமயம் இமாமவர்களுக்குப் பெருந் தொகையொன்றை அன்பளிப்பாக அனுப்பினர். அதை அவர்கள் பிடிவாதமாக ஏற்க மறுத்துவிட்டார்கள். அதைக் கொணர்ந்தவர் அதை ரகசியமாக இமாமவர்களின் புத்திரர்களுக்கு பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். இதை அறிந்த கலீபா இமாமவர்களின் புத்திரர்களுக்கு நாலாயிரம் திர்ஹங்களை மானியமாக ஏற்படுத்தினர். இது பற்றி இமாமவர்கள் கேள்விப்பட்ட

போது மிகவும் வேதனைப்பட்டார்கள். தங்கள் புதல்வர்களை அழைத்து, ''நான் இன்னும் சில நாட்களே உயிரோடிருப் பேன்; அதற்குள்ளேயே நீங்கள் கலீபாவிடம் மானியங்களை ஏற்றுக்கொண்டு விட்டீர்களே! இதனால் அல்லாஹ்வின் சமு கத்தில் என்நிலை யாதாகுமோ என மிகவும் அஞ்சுகிறேன்" என்று வருத்தத்தோடு கூறினார்கள்.

இமாமவர்களுடைய உடல்நிலை சீர்கெட்டுவருவதையும் பல் வலியால் அவர்கள் கஷ்டப்படுவதையும் கேள்வியுற்ற கலீபா தமது ஆஸ்தான வைத்தியரான இப்னு மாஸுவி யாவையே அவர்களைக் கவனிக்க அனுப்பினார். அவர் அவர் களைப் பரிசோதித்துவிட்டுக் கலீபாவிடம் சென்று, ''இமாமவர் கள் தொடர்படியாகப் பட்டினி நோன்பு பிடிப்பதாலும், இரவி லும் பகலிலும் விழித்து நீண்டநேரம் வணக்கத்தில் ஈடுபட்டிருப் பதாலும்தான் பலஹீனமாக இருக்கிறார்களேயன்றி, மற்றப்படி அவர்களுக்கு உடல் கோளாறு எதுவுமில்லை" என்று கூறினார். இதை அறிந்த கலீபா மேலும் அதுபற்றி எதுவும் செய்ய இயலாது என்று கண்டு சும்மா இருந்துவிட்டார்.

---

* கலீபாவிடமிருந்து மட்டுமல்ல, வேறு எந்தச் செல்வ ரிடமிருந்தும் இமாமவர்கள் அன்பளிப்புக்களை ஏற்றதில்லை. ஒரு சமயம் எகிப்திலிருந்து ஹஸன் பின் அஜீஸ் என்ற பெரியா ருக்கு அவருடைய குடும்பச் சொத்தின் பாகமாக ஒரு லட்சம் தீனார்கள் பக்தாத் வந்தன. உடனே, அவர் அதிலிருந்து மூவாயிரம் தீனார்களை ஒரு பையில் போட்டுக் கட்டி எடுத்துக் கொண்டு இமாம் அஹ்மதிடம் வந்தார். இமாமவர்களை நோக்கி, 'இவை எனக்கு ஆகுமான (ஹலாலான) வழியில் பாகமாகக் கிடைத்த சொத்திலிருந்து எடுக்கப்பட்டவை. இவற்றை ஏற்று உங்கள் குடும்பப் பராமரிப்புக்குச் செலவிட வேண்டும்" என்று வேண்டினார். இமாமவர்களோ அவற்றையும் தங்களுக்குத் தேவையில்லை என்று கூறிக் கண்டிப்பாக ஏற்க மறுத்து விட்டார்கள்.

அத்துடன், அவர்கள் தமது சபைக்கு வர விரும்பாததை அறிந்து அவர் அவர்களை வற்புறுத்தாமலே விட்டு விட்டார். ஆனால், அவருடைய தாய் எப்படியும் அவர்களைக் காணவேண்டும் என்று ஆவல் காட்டினார். எனவே கலீபாவின் சபைக்கு வராவிட்டாலும், கலீபாவின் சகோதரரான இளவரசருக்குத் தனி மாளிகை ஒன்றுண்டு; அதற்காவது அவர்கள் வரவேண்டும் என்று கலீபா இமாமவர்களுக்கு அழைப்பு விடுத்தார். அதைத் தட்ட முடியாதபடியால் இமாமவர்கள் அங்கே சென்றார்கள். ஒரு திரைக்குப்பின்னால் கலீபாவின் தாயார் மறைந்து அமர்ந்திருந்தார். அந்த மாளிகைக்குக் கலீபா வந்திருந்து, தம் தம்பியுடன் சேர்ந்து அவர்களை வரவேற்றார். இமாமவர்கள் யாவருக்கும் பொதுவாக ''அஸ்ஸலாமு அலைக்கும்" என்று கூறிவிட்டு ஓர் ஆசனத்தில் அமர்ந்தார்கள். அவர்களைக் கண்ணுற்ற கலீபாவின் தாயார் தமது மகனை அழைத்துவரச்செய்து, ''இந்த மகானையா சதிகாரர் என்று சந்தேகப்பட்டாய்! அல்லாஹ் உன்னைக்காப்பாற்றினான். இவர்களை உடனே பக்தாதுக்கு அனுப்பிவிடு!" என்று கூறினார். அவரும் அதற்கு இணங்கிவிட்டார். அத்துடன், தமது தம்பிக்கு இமாமவர்களை ஆசானாக நியமித்திருப்பதாகவும் கலீபா அவர்களிடம் கூறினார், இச்சமயம் பணியாள் ஒருவர் கலீபாவின் தாயாருடைய அன்பளிப்பு என்று விலையுயர்ந்த சால்வையொன்றை அவர்கள்மீது போர்த்தினார். அவர்கள் அதை அப்பால் எடுக்காமல் போட்டுக் கொண்டார்கள். அதன்பின் அவர்கள் மிகுந்த மரியாதையோடு அனுப்பப்பட்டார்கள். இமாமவர்கள் இஸ்திக்பார் ஓதிக்கொண்டே ஜாகை சென்றடைந்தார்கள். அவர்கள் பக்தாத் செல்லவும் துரிதமாக ஏற்பாடு செய்யப்பட்டது.

இமாமவர்கள் பக்தாத் சென்றடைந்ததும், தங்களுக்குக் கலீபாவின் தாயார் சம்மான மளித்த சால்வையை விற்று ஏழைகளிடை வினியோகிக்க ஏற்பாடு செய்துவிட்டார்கள். ''நான் (ஆட்சியாளர்களான) இவர்களுடைய சகவாசமே வேண்டாம் என்று ஒதுங்கிப் போகிறேன்; அப்படியும் எப்படியோ கலீபாவோடு பழகும் படியாகிவிட்டது" என்று கூறி

ணர்கள். மேலும், ''முன்னர் இவர்கள்மூலம் கஷ்டங்களை அனுப்பி அல்லாஹ் என்னைச் சோதித்தான்; இப்போது என் கடைசிக் காலத்தில் இவர்களுடைய செல்வங்கள் மூலம் என்னைச் சோதிக்கிருன்'' என்றும் கூறிப் பேணுதலுடனேயே கடைசிவரை வாழ்ந்திருந்தார்கள்.

இதன்பின்னர் ஒரு சமயம் பக்தாத் வந்த கலீபா தம் தூதர் ஒருவர் மூலம் இமாமவர்களுக்கு ஆயிரம் தீனர்களை அனுப்பினர். அதை இமாமவர்கள் ஏற்க மறுத்ததுடன், ''கலீபா எனக்கு மனமில்லாததை நான் செய்யாதிருக்க எனக்கு அனுமதியளித்துள்ளார். இதில் எனக்குப் பிரியமில்லை. நான் அன்பளிப்பை ஏற்காததற்காக ஏதும் தவருக எண்ண வேண்டாம்!'' என்று கூறிவிட்டார்கள், இமாமவர்களுடைய புத்திரர் அப்துல்லாஹ் சொல்கிருர்: ''எங்கள் உறவினரில் பலர் ஏதாவதொரு வகையில் உபகாரச்சம்பளம் பெற்று வந்தனர். எனவே, அவர்களுடைய வீடுகளில் நாங்கள் வெறும் தண்ணீர்கூடக் குடிக்கக்கூடாது என்று தந்தையார் அவர்கள் எங்களைத் தடுத்திருந்தார்கள்."

எனினும், கலீபாவின் ஒரேயொரு வேண்டுகோளை மட்டும் இமாமவர்கள் நிறைவேற்றியுள்ளார்கள். அதுதான், திருகுர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதல்ல, அனுதியானது என்பதைப் பற்றி விளக்கமான நூல் ஒன்று எழுதித் தரும்படி அவர் கேட்டதாகும். அவ்விதம் இமாமவர்கள் எழுதிக் கொடுத்துள்ளார்கள்.

## அந்தியகாலம்

ஹிஜ்ரி 241 ரபீயுல் அவ்வல் தொடக்கத்திலேயே இமாமவர்கள் மரணப் படுக்கையில் விழுந்துவிட்டார்கள். அவர்கள் எதையும் சரிவர உட்கொள்வதில்லை அப்போது, உலமாக்களும், அதிகாரிகளும் வந்து தங்களைப் பார்த்துச் செல்வது பற்றி அவர்கள் மகிழ்ச்சியடையவர்கள்.

இமாவர்கள் தங்கள் குழந்தைகளையெல்லாம் அருகிலழைத்துவைத்து அவர்களுக்காக இறைவனிடம் துஆக் கேட்டார்கள்.

இமாமவர்கள் காலமாவதற்கு ஐம்பது நாட்களுக்கு முன்னர் கூட அவர்களுக்குக் குழந்தையொன்று பிறந்தது. அதற்குமுன் பிறந்த குழந்தை அச்சமயம் நடக்கும் பருவத்தை எய்தியிருந்தது. அவ்விரு குழந்தைகளையும் அவர்கள் தங்கள் அருகில் வரவழைத்துப் பரிவுடன் தடவிக்கொடுத்து, ''இந்தக் குழந்தைகளால் இப்போது நான் என்ன பயனடையப்போகி றேன்?" என்று ஏக்கத்தோடு வினவினார்கள். அப்போது அங்கிருந்தவர்கள், ''இமாமவர்களே, நீங்கள் ஏன் ஏக்க மடையவேண்டும்? இவ்விரண்டு குழந்தைகளும் பெரியவர் களானால் உங்களுக்காக நல்துஆச் செய்வார்களல்லவா!'' என்று ஆறுதல் கூறவும் அவர்கள், ''அப்படியானால் மகிழ்ச் சியே!" என்று கூறிச் சமாதானமடைந்தார்கள்.

உயிர் பிரியவிருந்த இறுதி நாட்களிலொன்றில் இமாம வர்கள் திடீரென்று, ''தூர விலகு! தூர விலகிப்போ!" என்று கூச்சலிட்டார்கள். அருகிலிருந்தவர்கள், ''நீங்கள் யாரை விலகிப்போகச் சொல்கிறீர்கள்?" என்று வினவினர். ''அதோ, வீட்டு மூலையில் இப்லீஸ் வந்து அமர்ந்து தன் விரலைக்கடித்துக் கொண்டிருக்கிறான். 'இப்போதாவது என்னை விரட்டாமலிருங் கள்!' என்று சொல்கிறான். அதற்கு நான், முடியாது என்று கூறி அவனை விரட்டுகிறேன்'' என்று பதிலளித்தார்கள்.

பிறகு தங்களுக்கு ஒலுச் செய்துவைக்கும்படி கூறியதோடு, உடலையும், கை கால் விரல்களின் இடுக்குகளையும் நன்குகத் தேய்த்துக் கழுவும்படியும் வற்புறுத்தினார்கள். அவ்விதம் தேய்த்துக் கழுவப்படுகையில் திக்றுச் செய்து கொண்டே இருந்தார்கள். குளிப்பாட்டி முடிந்ததும், அவர்களுடைய பரிசுத்த ஆத்மா இறைவன் திருவடியை நாடிச்சென்றுவிட்டது. (இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்).

ஹிஜ்ரி 241 ரபீயுல் அவ்வல் பிறை 12 வெள்ளிக்கிழமைப் பகலில் (கி. பி. 855 ஜூலை 31-ல்) இமாமவர்கள் காலமானார் கள்.

இமாமவர்களின் மரணங் கேட்டு பக்தாத் நகரமே திரண்டு வரலாயிற்று. பக்தாதில் கலீபாவின் பிரதிநிதியாக

இருந்தவர், இமாமவர்களின் சடலத்தைப் போர்த்துவதற்காகக் கபன் துணியை அனுப்பி, அது கலீபாவின் ஆணைப்படி அனுப்பப்பட்டுள்ளதாகவும், எனவே, அதை ஏற்குமாறும் கூறி அனுப்பினுர். ஆனுல், உயிருடன் இருக்கும்வரை ஆட்சியாளர்களின் உதவியை ஏற்காத இமாமவர்களுக்காக இப்போது அவற்றை ஏற்க இயலாது என்று அவர்களுடைய புத்திரர்கள் அந்தத் துணியைத்திருப்பி அனுப்பிவிட்டனர். சிறுவர்கள் கையால் நெய்யப்பட்ட துணிகளை விலைக்கு வாங்கிக் கபனுக உபயோகித்தனர். மேலும், தண்ணீர் உட்பட நல்லடக்கத்துக்கு வேண்டிய சகல சாமான்களையும் விலை கொடுத்தே வாங்கினர்.

தலை நகரிலிருந்து இமாமவர்களை குளிப்பாட்டுவதற்கென்றே எழுபத்திரண்டு பனூ ஹாஷிம்கள் வந்திருந்து அந்தப் பணியைச் செய்தனர். ஜும்ஆ குத்பாவுக்கு முன்னர் புறப்பட்ட மையித், அஸர் தொழுகைக்கே அடக்குமிடத்தை அடைய முடிந்தது. இந்த அடக்கம் சரித்திர முக்கியத்துவம்பெற்ற ஒரு சம்பவமாகவே நடந்துவிட்டது. பல தடவை ஜனுஸாத் தொழுகை நடத்தப்பட்டு, ஒவ்வொரு தடவையும் எண்ணற்றவர்கள் அதில் கலந்துகொண்டிருக்கின்றனர். முதல் தடவை நடந்த ஜனுஸாத் தொழுகையைப் பக்தாதில் கலீபாவின் பிரதிநிதியாக விருந்த முஹம்மது பின் அப்துல்லாஹ்வே முன்நின்று நடத்தினுர். பல லட்சம் பேர்கள் அதில் கலந்து கொண்டனர். ''வேறு எந்த முஸ்லிம், அல்லது முஸ்லிமல்லாதாரின் பிரேத அடக்கத்துக்கும் இத்தகைய பெருங் கூட்டம் திரண்டதில்லை" என்பது பைஹகியின் அபிப்பிராயமாகும், பக்தாதிலுள்ள மகா பிருஷ் ஷுஹதா என்ற வீரத் தியாகிகளின் அடக்க ஸ்தலத்துள் இமாமவர்களின் சடலம் நல்லடக்கம் செய்யப்பட்டது. ஹிஜ்ரி ஏழாம் நூற்ருண்டில் திகிரிஸ் நதியில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கில் இமாமவர்களின் அடக்கஸ்தலம் அழிக்கப் பட்டுப்போனதாகச் சொல்லப்படுகிறது.

''இமாமவர்கள் இறந்த சில நாட்களுக்கெல்லாம் நான் அவர்களைக் கனவில் கண்டேன். 'அல்லாஹ் உங்களை எப்படி

நடத்தினன்?' என்று வினவினேன். 'அவன் என் பாவங்களை மன்னித்தான், மேலும், என்னை நோக்கி, 'அஹ்மதே, நீர் எனக்காக அடிபட்டீரா?'' என்று கேட்டான். நான் 'ஆம், இறைவா!' என்றேன். அப்படியானால் சதாவும் என் வதனத்தைப் பார்த்திருக்கும் பேற்றை உமக்கு அருளினேன்' என்றான் என்று இமாமவர்கள் தெரிவித்தார்கள்" என்று கந்தீ என்ற பெரியார் கூறுகிறார்.

## மகான்கள் சொன்னவை

''ஸுஃப்யானுத் தெளரியின் மரணத்தால் பயபக்தியே மறைந்துவிட்டது: இமாம் ஷாபியீயின் மறைவால் புனித ஸுன்னத்தே மறைந்துவிட்டது; இமாம் அஹ்மதிப்னு ஹன்பலின் மரணத்தால் சன்மார்க்கத்தின் அடிப்படையே ஆட்டங் கண்டு, புதுமையான காரியங்கள் மிகைத்துவிடுமோ என்று அஞ்சுகிறேன்" என்று இமாம் புகாரியின் ஆசானும், இமாம் அஹ்மதிப்னு ஹன்பலின் மாணவருமான குதபா கூறியுள்ளார்கள்.

''இறைவனே இமாமவர்களுக்குத் தன் ஒப்பற்ற நல்லாசியை அருளவேண்டும். ஸஹாபாக்கவ, தாபியீன்களின் தூய வாழ்க்கைமுறையை இமாமவர்களும் வாழ்ந்துகாட்டினார்கள். புனித இஸ்லாம் தங்களுக்கு எதிரில் களங்கப்படுத்திக் காட்டப்பட்டபோது அதை அவர்கள் ஏற்காமல், மகத்தான தீரத்தோடு அதை எதிர்த்துநின்று போராடி, இஸ்லாத்தின் பரிசுத்தத்தைக் காத்துநின்றார்கள்'' என்று அபூ உமர் கூறுகிறார்.

முஸ்லிமா பின் முஸய்யிர் கூறுகிறார்: ''ஒரு சமயம் நான் இமாம் அஹ்மதிப்னு ஹன்பலின் சபையில் அமர்ந்திருந்தேன். அப்போது முதியவர் ஒருவர் அங்கு வந்து, 'உங்களில் அஹ்மது என்பவர் யார்?' என வினவினார். இமாமவர்கள், 'இந்த அடியேன் பெயர்தான் அஹ்மது' என்று பணிவோடு பதிலளித்தார்கள். 'உங்களுக்கு

இவனால் எதுவும் ஊழியம் ஆகவேண்டுமோ?' என்றும் கேட்டார்கள். அவர் சொன்னார். 'நான் ஆயிரத்து நானூறு மைல்கள் கடந்து வந்துள்ளேன். அவ்விதம் வந்தது ஒரு விஷயத்தை உங்களிடம் தெரிவித்துவிட்டுப் போவதற்காகத்தான். அதாவது, நான் என் கனவில் ஆதம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் என்னை நோக்கி, 'நீ அஹ்மதிடம் சென்று, அர்ஷிலிருப்பவர்களும், மற்றும் அமரர்களும் உங்களை நேசிக்கின்றனர். நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் உறுதியோடு நின்றதற்காக உங்கள் விஷயத்தில் அமரர்கள் அதிக மகிழ்ச்சி கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்று தெரிவிக்கவேண்டும்' என்று கூறினார்கள். அதனால்தான் நான் இங்கு வந்தேன்' என்றார்.

''ஹதீஸ்களை மனனஞ் செய்வதில் இமாம் அஹ்மதிப்னு ஹன்பலை மிஞ்சிய யாரையும் நான் பார்க்கவில்லை'' என்கிறார்கள் அஹ்மதுஸயீது தாரமீ. ''ஹன்பலவர்களின் சகவாசத்தில் அமர்ந்திருப்பது உண்மையிலேயே மறுமையின் சிந்தனையைத் தான் தூண்டும். இம்மைக்கான எந்தப் பேச்சையும் அவர்கள் பேசமாட்டார்கள். அவர்களுக்கு உலக சம்பந்தமான எந்தக் காரியமுமில்லையோ என்று தான் அருகிலிருப்பவர்கள் எண்ணத் தோன்றும். அவர்கள் வேண்டுமென்றே எளிமையை உவந்தேற்று, எழுபது ஆண்டுகள் அதற்கு மாற்றமின்றி வாழ்ந்து விட்டார்கள்'' என்றும், ''நான் இருநூற்றுக்கதிகமான முஹத்திஸ்களைச் சந்தித்து அளவளாவும் பேறு பெற்றேன். எனினும், இமாம் அஹ்மதிப்னு ஹன்பலை ஒப்பாரையும், மிக்காரையும் நான் காணவில்லை'' என்றும் அபூ தாவூது சீஜிஸ்தானி எழுதுகிறார்.

இமாமவர்களின் பத்வாக்களும், சுயநிர்ணயமும் மற்ற இமாம்களுடையவைக்கு முற்றும் மாற்றமானவையாய் இருப்பினும், அவர்கள் நம்மிடமிருந்து மறைந்து எவ்வளவோ காலமாகிவிட்டபின்னருங்கூட சமநோக்கும், கலாஞானமும் பெற்ற யாரும் இமாமவர்களின் அபிப்பிராயங்களைப் போற்றாமலிருக்க முடியாது. அவர்களுடைய தீர்ப்புக்கள் ஸஹாபாக்களுடைய பத்வாக்களின் பாணியிலேயே இருந்தன. தீர்ப்புக்களுக்கு

அவர்கள் கொடுத்துள்ள தலைப்புகள்கூட ஸஹாபாக்கள்கொடுத்திருக்கும் தலைப்புகள் போலவே அமைந்துள்ளன. தங்கள் தீர்ப்புக்களுக்கு திருகுர்ஆன், ஹதீஸிலிருந்து நேரடியான ஆதாரம் காட்டியிருப்பார்கள். எங்கேனும் ஸஹாபாக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட அபிப்பிராயங்களைக் கூறியிருந்தால் தான் இமாமவர்கள் (இஜ்திஹாதின்படி) தங்கள் சுயமான முடிவை எய்துவார்கள். அதிலுங்கூட இரண்டு வித அபிப்பிராயங்களை வெளியிட்டிருப்பார்கள்.

## வணக்கத்தில்

இமாம் அஹ்மதிப்னு ஹன்பலவர்கள் வணக்கத்தில் சிறந்தவர்களாக இருந்தார்கள். எத்தகைய கடுமையான நிலையிலும் அவர்கள் தொழுகையை விடுவதில்லை. அவர்கள் கால்களுக்கு விலங்கிடப்பட்டுப் பக்தாத் சிறையில் தள்ளப்பட்ட போது, தாங்கள் அடைபட்ட இருட்டறையில் களைப்படைந்திருந்த அவர்கள் தேடியது ஒலுச் செய்வதற்கான தண்ணீரைத்தான். ஒரு பழைய பானையில் சிறிதளவு தண்ணீர் கிடைத்ததும் அதுகொண்டு வெகு கஷ்டப்பட்டு ஒலுச்செய்து விட்டு, விலங்கிடப்பட்ட கால்களுடன் நின்று தொழுதார்கள். தொழுகையை நிறைவேற்றிய பின்னரே அவர்களுக்கு ஓய்வு பற்றிய நினைவு வந்தது. இரவெல்லாம் விழித்து வணங்கியதில் அவர்கள் புகழ்பெற்றவர்களாவார்கள். அவர்கள் வாழ்நாளில் தொண்ணூற்றொன்பது தடவை இறைவனைக் கனவில் கண்டிருக்கிறார்கள். ஆனால், ஒரு தடவையாவது தாங்கள் கேட்கவேண்டிய கேள்வியைக் கேட்பதற்கு மறந்து விட்டார்கள். நூறாவது தடவை தங்கள் கனவில் இறைவனைக் கண்டபோது, 'இறைவா, உன் புனித முடுகுதலை அடைவதற்கு (உன்னை நெருங்குவதற்கு) மிகவும் சிறப்பான வணக்கம் யாது?'' என்று வினவினார்கள். உடனே இறைவன், ''திருக்குர்ஆனை ஓதிவா!'' என்று பதிலளித்தான். இமாமவர்கள், ''அதன் அர்த்தம் அறிந்து ஓதவேண்டுமா, அல்லது

வெறுமனே ஓதினாலும் போதுமா?" என்று கேட்டார்கள். இறைவன் சொன்னான், "எப்படி ஓதினாலும் சரியே, பயபக்தி யோடு ஓதுபவன் என்னை நெருங்க முடியும்" என்று. இந்தத் தகவலை இமாமவர்களே வெளியிட்டுள்ளார்கள்.

## குடும்பம்

இமாமவர்கள் மணம் புரிந்துகொண்டதிலும் அவர் களுடைய துறவு மனப்பான்மை நன்கு வெளியாகிறது. ஓரிடத்தில் இரண்டு சகோதரிகள் இருப்பதாகவும், அவர்களுள் ஒருத்தி மிகவும் அழகானவள் என்றும், மற்றவள் அழகற்ற வள் என்றும், அவர்களில் அழகியை அவர்கள் மணந்து கொள்ளலாமென்றும் அவர்களிடம் கூறப்பட்டது. அப்போது, அந்த இரண்டு பெண்களில் அதிகமான பேணுதலும், அறிவும் உடையவள் யார் என்று இமாமவர்கள் வினவினார்கள். அழ கற்ற பெண்தான் என்று சொல்லப்பட்டது, உடனே, அந்தப் பெண்ணையே தாங்கள் உவப்பதாகக் கூறி அவளை மணந்து கொண்டார்கள். கடைசிவரை அந்தப் பெண்ணோடு சிறப்பான குடும்ப வாழ்வு நடத்தினார்கள்.

இமாமவர்களுக்குப் பல புத்திரர்கள் இருந்துள்ளனர். அவர்கள் காலமாகும்போது இரண்டு வயதிலும், ஐம்பது நாளிலும்கூட இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள் என்று படித்தோம். அவர்களிடமே கல்வி பெற்று மேதைகளான புதல்வர்கள் இருவரும் இருந்தனர். அவர்களில் மூத்தவரான முஹம்மது ஸாலிஹ் என்பவர் இஸ்பஹானில் நீதிபதியாகப் பதவி வகித்தார், இளைய புதல்வரான அப்துல்லாஹ் மாபெரும் கலாஞானியாய்த் தமது தந்தையின் நூற்களைச் சீர் படுத்தி வெளியிடும் பணியைச் செய்தார்.

## நூற்கள்

இமாமவர்களின் நூற்கள் அறிஞர் உலகத்தால் பெரிதும் போற்றப்படுபவையாகும். மத்ஹபுகளின் சட்ட திட்டங்கள், அவற்றின் மூலங்களுடன், சன்மார்க்க நெறிமுறையின் ஏவல் விலக்கல்களையும், அவற்றின் சிறப்பையுமெல்லாம் இமாமவர்

கள் விரிவாக விளக்கியுள்ளரார்கள். இமாமவர்கள் எழுதியுள்ள நூற்களில் மிகவும் பிரபலமானதும், ஹதீஸ்களின் மகத்தான தொகுப்புமான 'முஸ்னது' மிகவும் முக்கியமானதாகும். இஸ்லாமிய உலகில் இன்றும் இது மதித்துப் போற்றப்படுகிறது. சுமார் இருபத்தெட்டாயிரம் ஹதீஸ்களைக் கொண்ட இந்தக் கிரந்தத்தைத் தொகுத்து வெளியாக்கியவர் இமாமவர்களின் புதல்வர் அப்துல்லாஹ் ஆவார். ஹிஜ்ரி ஆறும் நூற்ருண்டிலிருந்து இத்த ஹதீஸ் களஞ்சியத்தை ஒரு ஸ்தாபனம் மதீனாவில் நபிபெருமானாரின் ரௌலாவில் ஐம்பத்தாறு நாட்கள் தொடர்ந்து படித்து முடித்துவந்ததாகத் தெரிகிறது.

இதையன்றி, 'கிதாபுஸ் ஸலாத்' (தொழுகைப்பற்றியது) 'கிதாபுல் அமல்' (சன்மார்க்க அனுஷ்டானங்கள் பற்றியது), 'கிதாபுத் தப்ஸீர்' (திருகுர்ஆன் வியாக்கியான உரை), 'ரத்து அலல் ஜஹுதிகா' (திரு குர்ஆன் சிருஷ்டிக்கப்பட்டதென்பதற்கு மறுப்புகள் அடங்கியது), 'கிதாபுஜ் ஜுஹ்து' (துறவு பற்றிய விளக்கம்), 'கிதாபுல் மனுஸிக்' (ஹஜ்ஜு அனுஷ்டானங்கள் பற்றியது), 'கிதாபுல் ஈமான்' (மெய்விஸ்வாசம் பற்றிய விளக்கம்) 'கிதாபு மனுகிபுஅலீ' (ஹஜ்ரத் அலீ (ரலி) பற்றிய நூல்), 'கிதாபுத் தாரீக்' (வரவாற்றுநூல் ஆகியவை) இமாமவர்களின் முக்கிய நூற்களாகும்.

இமாமவர்கள் பிக்ஹு சம்பந்தமான தனி நூல் எதுவும் எழுதவில்லை என்றும், தங்கள் மாணவர்கள் அது பற்றிக் கேட்ட கேள்விகளுக்கு அவர்கள் கொடுத்த பதில்களும், அவர்கள் கொடுத்த மார்க்கத் தீர்ப்புக்களும்தாம் தொகுக்கப்பட்டு ஹன்பலி மத்ஹபின் பிக்ஹாக ஆக்கப்பட்டன என்றும் சொல்லப்படுகிறது. இவற்றுள் 'மஸாயிலு ஸாலிஹ்' என்பது அவர்களுடைய மூத்த புதல்வர் ஸாலிஹ், பிக்ஹு சம்பந்தமாகக் கேட்ட கேள்விகளுக்கு அவர்கள் கொடுத்த பதில்கள் அடங்கியதாகும். இது போன்று இமாமவர்கள் கொடுத்த தீர்ப்புக்கள் மட்டும் இருபது நூற்களில் தொகுக்கப்பட்டுள்ளன. இவை யாவும் அவர்களுடைய மாணவர்களாலேயே தொகுக்கப்பட்டுள்ளன.

இமாமவர்களுடைய இந்தத் தீர்ப்புக்களின்படி உண்டான மத்ஹபுதான் ஹன்பலி மத்ஹபு ஆயிற்று. இது மற்ற மூன்று மத்ஹபுகளையும்போல ஸுன்னத்-வல்-ஜமாஅத்துக்கு உட்பட்ட மத்ஹபாக ஏற்கப்பட்டுள்ளது. இந்த மத்ஹபில் சுயமான அபிப்பிராயத்துக்கு அதிகமான இடம் தரப்படவில்லை. சகல விஷயங்களையுமே ஹதீஸ் அடிப்படையில் அமைக்க எண்ணியதால், போதுமான ஆதாரமற்ற ஹதீஸ்களையும் ஹன்பலி இமாமவர்கள் ஏற்றுள்ளார்கள் என்று சொல்லப்படுகிறது.

## ஹன்பலி மத்ஹபு

ஹன்பலி மத்ஹபினர்தாம் இன்று மிகக் குறைவானவர்களாவர். இமாமவர்கள் காலமானபின் அவர்களுடைய மாணவர்கள் பலர் இந்த மத்ஹபின் மூலச் சட்டங்களை உருவாக்கி இதை நெடுகிலும் பரப்பினர். இவ்விதம் சுமார் நூற்றி இருபது மாணவர்கள் தீவிரமாக முயன்றுள்ளனர். இமாமவர்களிடம் கல்விபெற்ற அவர்களுடைய இரண்டு புதல்வர்களையன்றி அஸ்வத், ஷாதான், அப்துர் ரஹ்மான் பின் மஹ்தி, வகீவு, யஹ்யா பின் ஆதம், யஜீத் பின் ஹாரூன், அபூ பக்ருல் அஸ்ரம், ஹர்பு, பகீ, ஹன்பல் பின் இஸ்ஹாக், ஷாபீன், மைமூனி, அபுல் காஸிம் ஆகியோர் அவர்களுடைய முக்கியமான மாணவர்களாவர். (ஹதீஸ் கிரந்தங்களின் தொகுப்பாளர்களான இமாம் புகாரி, முஸ்லிம், அபூ தாவூது முதலியவர்களும் இமாமவர்களிடம் பாடங் கேட்டதாகச் சொல்லப்படுகிறது.) ஹிஜ்ரி ஐந்தாம் நூற்றுண்டில் ஸிரியாவிலும், பலஸ்தீனிலும் இது அதிகமும் பரவியிருந்தது.

ஹிஜ்ரி ஏழாம் நூற்றுண்டுக்கு முன்னரே ஹன்பலி மத்ஹபைப் பின்பற்றுவோர் பாரஸீகத்தில் நெடுகிலும் பரவியிருந்தனர். பிரபல நூலாசிரியரும், கடுமையான முறையில் மார்க்க அனுஷ்டானங்களை வற்புறுத்தியவருமான இப்னு தைமியா ஹன்பலி மத்ஹபினர்தாம். ஹஜ்ரத் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் ஆண்டகை அவர்களும் இந்த மத்ஹபைப் பின்பற்றியவர்களே. இவர்களுடைய மகத்தான கிரந்த

மான 'குன்யதுத்-தாலிபீ'னில் ஹன்பலி மத்ஹபின் மஸ்அலாக்கள் பலவற்றையும் காண முடிகிறது.

துருக்கி ஸுல்தான்கள் ஆட்சிக்கு வந்த பின்னர்தான் ஹன்பலி மத்ஹபு பரவுவது தடைப்பட்டது. எனினும், சென்ற நூற்றுண்டில் எழுந்த வஹாபி இயக்கத்தில் இந்த மத்ஹபின் கொள்கைகளே பின்பற்றப்பட்டன. இன்று இந்த மத்ஹபைப் பின்பற்றுவோர் ஆப்ரிக்கா, மத்தியக் கிழக்கு ஆகிய பகுதிகளில் மட்டும் உள்ளனர். அவர்களுடைய தொகையும் மிகக் குறைவாகும்.

## இமாமவர்களின் கடிதம்

கடைசியாக, இமாமவர்களின் அபிப்பிராயங்கள் அடங்கிய ஒரு கடிதத்தின் முக்கியமான பகுதிகளை மட்டும் இங்கே தந்து இதை முடிக்கலாம். இமாமவர்களின் மாணவரும், அக்காலத்தில் இஸ்லாத்தில் பிளவுகளை உண்டாக்கி வந்தவர்களை எதிர்த்துப் போரிட்டு வந்தவருமான முஸத்தத் என்ற பஸரா வாசி இமாமவர்களுக்கு நிருபமொன்றெழுதி நபிபெருமான் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களின் அடிப்படையில் தமக்குப் போதனைகள் அருளுமாறு கேட்டார். அதற்குப் பதிலாக இமாமவர்கள் கடிதமொன்று எழுதினர்கள். அதன் முக்கிய மான பகுதிகள் வருமாறு:

(இமாம் அஹ்மதிப்னு ஹன்பலவர்கள் எழுதுகிறார்கள்:) ''சர்வ புகழும் அல்லாஹ்வுக்கே உரியதாகும். தன் திருப் பொருத்தமும், நல்லிணக்கமும் எதிலுள்ளதோ அதையே அவன் எனக்கும், உனக்கும் மட்டற்று அருளுவானாக! தன் திருப்தியும், திருப் பொருத்தமுமில்லாததி லிருந்து அவன் நம்மைக் காப்பாற்றுவானாக! மேலும், அல் லாஹ்வுக்குப் பயந்து, பக்தியுடன் ஒழுகிச் சீர்பட்ட மெய்நேசர் களின் நல்லமல்களையே நீயும், நானும் செய்து சித்திபெற நல்லுதவியளிப்பானாக! ஏனெனில், அத்தகைய புனிதமான நல்லமல்களே பூரணமான பணிவுக்கு அடையாளங்களாகும். நீயும், நானும் அல்லாஹ்வின்மீது பயபக்தி கொள்ளுமாறும்,

ஸுன்னத்-வல்-ஜமாஅத்தின் கொள்கையை ஏற்று நடக்குமாறும் வஸியத்துச் செய்கிறேன். ஏனெனில், ஸுன்னத்தை நிராகரிப்பவர்களுக்குரிய வேதனைகளும், ஸுன்னத்தின் படி சிரேஷ்டமாக அனுஷ்டானம் செய்த நல்லடியார்கள் பெற விருக்கும் நற்கூலியும் எத்தகையன என்பதை நீ அறிவாய்! ''ஸுன்னத்தின்படியே முற்றும் ஒழுகும் மெய்தேசர்கள் சுவர்க்கம் புகுவார்கள்" என்ற ஹதீஸையும் நீ அறிவாய்.

''திரு குர்ஆனின் போதனையைவிடத் தலையானதாக வேறு எதையும் கருதக்கூடாது. திரு குர்ஆன் அல்லாஹ்வின் திரு வசனம்; சிருஷ்டிக்கப்படாதது. அதில் முன் இருந்தவர்களைப்பற்றி அறிவுறுத்தும் நிகழ்ச்சிகள்கூட சிருஷ்டிக்கப் படாதவையேயாகும். விதிவசப்பட்டோலையில் (லௌஹுல் மஹ்பூலில்) காணப்படும் விஷயங்களும் கூட சிருஷ்டிக்கப்படாதவைதாம். அவை சிருஷ்டிக்கப்பட்டவை என்று கூறுவோரும் காபிர்களே; அவர்கள் காபிர்களல்லர் என்போரும் காபிர்களே.

''திரு குர்ஆனுக்கு அடுத்தபடிதான் நபிபெருமான் (ஸல்) அவர்களுடைய ஹதீஸ்கள் முக்கியமானவையாகும். அத்துடன், ஸஹாபாக்கள், தாபியீன்களின் வழி முறையையும் நாம் பின்பற்றி ஒழுகவேண்டும்.

''நபிபெருமான் (ஸல்) அவர்களின் போதனைகள் அனைத்தையும் உண்மைகொண்டு, ஸுன்னத்தைச் சம்பூரணமாக ஏற்று ஒழுகுவதே ஈடேற்றத்துக்குரிய மார்க்கமாகும். நமக்குமுன் வாழ்ந்த மகான்களும், இக்கால அறிஞர்களும் இதன்படியே நடந்துகாட்டியுள்ளனர்; காட்டுகின்றனர்.

''ஏகத்துவத்தின் (தௌஹீதின்) கலிமாவை வாயால் மொழிவதுடன், அனுஷ்டானத்திலும் அமல்படுத்த வேண்டும். அதுவே மெய்விஸ்வாசத்தின் அடையாளமாகும். நல்லமல்களைச் செய்வதால் மனிதன் சீர்பட்டு உயர்வதுடன், பாவகாரியங்களைச் செய்வதால் சீரழிந்து தாழ்ந்து விடுவான். சில சமயம் மனிதன் ஈமான் என்ற வட்டத்திலிருந்து நழுவி, இஸ்

லாம் என்ற வட்டத்துள்ளும் இறங்கி விடுவான். பாவ மன்னிப்பு வேண்டி (தௌபாச் செய்து) புனிதப்படுவதால். மீண்டும் மூமின் (ஈமான் கொண்டவன்) ஆகலாம். ஒரு முஸ்லிமை, ஷிர்க் அல்லது ஏதேனும் ஒரு பர்லை மறுப்பது தவிர வேறு எந்தக் கருமமும் இஸ்லாத்தைவிட்டு அப்புறப் படுத்திவிடாது. ஒரு முஸ்லிம் ஏதேனும் ஒரு பர்லை (அது பர்லு அல்ல என்று மறுக்காமலே) அலட்சியமாகத் தவிர்த்துக் கொண்டிருந்தால் அந்த நிலையிலும் அல்லாஹ் நாடினால் அவனை மன்னிப்பான்; அல்லது தண்டிப்பான்.

''இஃதிப்படியிருக்க முஃதஜிலாக்களோ, தெரிந்தோ தெரியாமலோ பாவ காரியங்களைச் செய்பவர்களையும் காபிர்கள் என்றே கூறிவிடுகின்றனர். எனவே, முஃதஜிலாக்களின் முடிவுப்படி ஆதம் நபி (அலை) அவர்களும், யூஸுப் நபி (அலை) அவர்களின் சகோதரர்களுங்கூடக் காபிர்களே. மேலும், அவர் களின் முடிவுப்படி ஒரே ஒரு தானியமணியைத் திருடுபவனும் நரகவாதியாவதுடன், அவன் மனைவியும் தலாக்குப் பெற்றவ ளாவாள்; அவன் ஹஜ்ஜு செய்திருந்தாலும் மீண்டும் ஹஜ்ஜு செய்வது அவனுடைய கடமையாகிவிடுகிறது. நிச்சயமாக, இவ்வாறு கூறித்திரிபவர்களே காபிர்களாவர். இவர்களோ டெல்லாம் சகவாசங் கொள்ளக்கூடாது. இவர்கள் அறுத்துக் கொடுக்கும் இறைச்சியையும் உண்ணக்கூடாது.

''இவ்விதமே ராபிஜிகள் (ஷீயாக்கள்) ஹஜ்ரத் அபூ பக்கர்(ரலி) அவர்களைவிட ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களை சிரேஷ்டமானவர்களாகவும், ஈமானில் தலையானவர்களாகவும் கருதுகின்றனர். மேலும், திரு குர்ஆனில், ''முஹம்மது ரஸூலுல்லாஹ்வும் அவரோடு இருப்பவரும்...'' என்று கூறப்படும் திருவசனத்தில் 'அவர்களோடு இருப்பவர்' என்பது ஹஜ்ரத் அலீயையே குறிப்பதாக அவர்கள் கருதுகின்றனர். இது சரியன்று. அது ஹஜ்ரத் அபூ பக்கரையே குறிக்கிறது என்பதற்குத் தக்க சான்றுகள் உண்டு. இவ்வாறு ஹஜ்ரத் அபூ பக்கரின் மெய்விஸ்வாசத்தையே குறைத்துப் பேசுபவர்கள் திரு குர்ஆன், ஹதீஸின் போதனைகளுக்கே மாறு

செய்பவர்களாவர். ஹஜ்ரத் அபூ பக்கர் தங்கள் முப்பதாம் வயதில் ஈமான் கொண்டார்கள். அச்சமயம் ஹஜ்ரத் அலீ (ரலி) ஏழே வயதுப் பாலகராக இருந்தார்கள். அந்த நிலையில் இஸ்லாத்தின் கடமைகள் ஹஜ்ரத் அலீ (ரலி) மீது கடமையாக மாட்டாவல்லவா!

''அல்லாஹ்வின் தீர்ப்பு, விதிப்பு (கலா, கத்ரு) களின் மீதும், நன்மை தீமை யாவும் அல்லாஹ்வின் ஆணையாலேயே உண்டாகின்றன என்றும் நாம் ஈமான் கொண்டுள்ளோம். பிரபஞ்சத்தையும், அதிலுள்ளவை அனைத்தையும் படைக்கு முன்பே சுவர்க்கத்தையும், சுவர்க்கவாதிகளையும் இறைவன் சிருஷ்டித்துள்ளான், சுவர்க்கத்தின் சர்வ சௌபாக்கியங்களும் என்றென்றும் அழியாமல் நிலை பெற்றிருப்பவை என்றும் நாம் ஈமான் கொண்டுள்ளோம். சுவர்க்கத்தின் அருட்கொடைகள் அழிந்து படுபவை என்று கூறுபவர்கள் காபிர்களாவர். இது போன்றே நரகம் பற்றியும் நம் ஈமான் நிலைபெற்றுள்ளது. "நபி பெருமானாரின் ஷபாஅத்தால் ஒரு கூட்டம் நரகிலிருந்து விமோசனம் பெற்று சுவர்க்கம் புகுவார்கள்" என்றும், சுவர்க்கவாதிகள் நிச்சயம் முகக் கண்களால் அல்லாஹ்வைத் தரிசிப்பார்கள் என்றும், ஹஜ்ரத் மூஸா நபி (அலை) அவர்களோடு அல்லாஹ் வசனித்தான் என்றும், ஹஜ்ரத் இப்ராஹீம் நபி (அலை) அவர்களைத் தனக்குத் தோழராக ஆக்கிக் கொண்டான் என்றும், நன்மை தீமையை நிறுக்கும் தராசு, கடக்கவேண்டிய பாலம் உண்டென்றும், நபிமார்கள் அனைவரும் உண்மையானவர்கள், ஹஜ்ரத் ஈஸா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், அவன் திருத்தூதருமாவார்கள் என்றும், ஷபாஅத்தும், அர்ஷும், குர்ஸும் உண்டென்றும், மலக்குல் மௌத்தே உயிர்வாங்குகிறார் என்றும், பிறகு கேள்வி கணக்குக்காக மீண்டும் உயிர் சடலத்தில்புகுத்தப்படும் என்றும், மதீனாவிலிருக்கும் கப்ரு நபிபெருமான் (ஸல்) அவர்களுடையது தான் என்றும், அதனை அடுத்துள்ள கப்ருகள் இரண்டும் ஹஜ்ரத் அபூ பக்கர், உமர் (ரலி) ஆகிய இருவருடையவை என்றும், அடியார்களின் இதயம் அல்லாஹ்வின் பார்வையிலேயே இருக்கிறது என்றும்,

இதே உம்மத்தில் தஜ்ஜால் வெளிப்படுவான் என்றும், அப்போது ஹஜ்ரத் ஈஸா நபி (அலை) அவர்கள் வந்து அவனைக் 'கத்' என்ற வாயிலின் அருகில் கொன்றுவிடுவார்கள் என்றும் ஈமான் கொண்டுள்ளோம்.

''ஸுன்னத்-வல்-ஜமா அத்தின் உலமாக்கள் மறுத்துள்ளவை அனைத்தும் ஆகாதவைகளே. சகலவித 'பித்அத்'களை விட்டும் விலக்கிக்கொள்ளவேண்டும். ஹஜ்ரத் அபூ பக்கர், உமர், உதுமான், அலீ, தல்ஹா, ஜுபைர், சஃது, சயீது, அப்துர் ரஹ்மானிப்னு ஒளப், அபூ உபைதத்துல் ஜர்ராஹ் ஆகிய பதின்மரும் நிச்சயமாகச் சுவர்க்கவாதிகள் என்று நாம் சாட்சியம் கூறுகிறோம். தொழுகையில், 'அல்லாஹு அக்பர்' என்று கூறும்போதெல்லாம் இரண்டு கைகளையும் உயர்த்துவதும், இரைந்து 'ஆமீன்' கூறுவதும், முஸ்லிம் ஆட்சியாளர்களுக்காகப் பிரார்த்திப்பதும், ஃதவாபுக்குரிய செயல்களாகும்.

''...வேண்டுமென்றே தொழுகையை விட்டவன் குப்ரான செயலைச் செய்தவனாவான். (தொழுகையல்லாத) வேறு நல்லமல்கள் எதையும் விட்டதால் குப்ரு வந்துவிடாது... ஜும்ஆ, ஈத், மற்றுமுண்டான ஜமாஅத் தொழுகைகளைப் பாவியான அல்லது, பாவமே செய்யாத மனிதர்களின் பின்னால் (முக்ததியாக) நின்று தொழுவது கூடும். பாவம் செய்த ஒருவர் பின்நின்று தொழுததற்காக அந்தத் தொழுகையை மீண்டும் தொழுவது சரியன்று. அவ்வாறு தொழுபவர் பிரஸ்தாபத் தொழுகையின் ஃதவாபையே இழந்தவராவார். கிப்லாவை முன்னோக்கி நின்று தொழுபவருடைய ஜனாஸாவுக்காக ஜனாஸாத் தொழுகை தொழலாம். ஜனாஸாத் தொழுகைக்கு நான்கு தக்பீர்கள் உண்டு. ஆனால், இமாமாய் நிற்பவர் ஐந்து தக்பீர்கள் கூறினால், பின்னால் நிற்பவர்களும் ஐந்து தக்பீர்கள் கூறிவிட வேண்டும். இவ்வாறு ஒரு தடவை ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களே செய்துள்ளார்கள்...''

# முடிவுரை

இந்த நான்கு இமாம்களும் திருக்குர்ஆனேயும், நபி பெருமான் (ஸல்) அவர்களுடைய நடைமுறையையும் முழுக்க முழுக்கப் பின்பற்றியவர்களாகவே தங்களுடைய மத்ஹபுகளை உண்டாக்கித் தந்துள்ளனர். அவர்கள் அவ்விதம் செய்ய வேண்டுவது எத்துணை அவசியமாக இருந்தது என்பதையும், அப்படிச் செய்திராவிட்டால் இஸ்லாமியக் கோட்பாடுகள் சுய நலமிகளாலும், இஸ்லாத்தின் எதிரிகளாலும் சின்னுபின்ன மாக்கப்பட்டுச் சிதைந்து போயிருக்கும் என்பதையும் முன்னமேயே விளக்கியுள்ளோம். அதனுல்தான், இந்த நான்கு இமாம்களுடைய மத்ஹபுகளில் ஏதேனும் ஒன்றைக் கட்டாயம் பின்பற்றியாக வேண்டுவது 'ஸுன்னத்-வல் ஜமாஅத்'தைச் சேர்ந்த ஒவ்வொருவருடையவும் கடமையாகிவிட்டது. மகா ஞானிகள், மத்ஹபுகளின் நியமங்களுக்கும் மேலே சென்று விட்ட மகான்கள்கூட இந்த மத்ஹபுகளில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றியவர்களாகவே வாழ்ந்துள்ளனர். நமது ஆண்டகை ஹஜ்ரத் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரலி) அவர்களே ஹன்பலி மத்ஹபைத் தொடர்ந்ததுடன், அதன் பிக்ஹுச் சட்டதிட்டங்களை விளக்கி நூல் எழுதியுள்ளார்கள். எனவே, நாம் ஒவ்வொருவரும் இந்த மத்ஹபுகளில் ஒன்றைப் பின்பற்றித்தான் தீரவேண்டும் என்பது பெறப்படுகிறது.

அப்படி ஒரு மத்ஹபைப் பின்பற்றுபவர் சகல காரியங்களிலும் அந்த மத்ஹபின் கோட்பாடுகளேயே பின்பற்றியாக வேண்டும். இது அவசியமானதாகும். தீராது என்ற நெருக்கடியான சந்தர்ப்பங்களிலும், பேணுதலான விஷயங்களிலும் தான் இதற்கு விதிவிலக்கு உண்டு.

நான்கு மத்ஹபுகளுமே திரு குர்ஆனேயும், நபி பெருமாஞரின் நடைமுறையையும் அடிப்படையாகக் கொண்டே உண்டாகியிருப்பதால், ஒவ்வொன்றிலிருந்து ஒருவன் தனக்கு விருப்பமானதைப் பின்பற்றிஞல் என்ன என்று ஒரு கேள்வி எழலாம். உதாரணமாகத் தொழுகையை எடுத்துக்கொள்வோம். அதில் தக்பீர் கட்டுவது, ஃதஞ ஓதுவது, இமாம் ஜமாஅத்தில் ஸூரா பாத்திஹா ஓதப்பட்டதும் ஆமீன் சொல்வது முதலிய விஷயங்களில் ஹனபி மத்ஹபுக்கும் ஷாபியீ மத்ஹபுக்கும் வித்தியாசங்கள் உள்ளன. உண்மையில் இரண்டுவிதமாகவும் நபிபெருமான் (ஸல்) அவர்கள் தொழுதுள்ளார்கள். சில சமயங்களில் அவர்கள் தொழுதிருப்பதை முன்நிறுத்தி இமாம் அபூ ஹனீபாவும், வேறு சில சமயங்களில் அவர்கள் தொழுதிருப்பதை முன்நிறுத்தி இமாம் ஷாபியீயும் இவ்விதம் திட்டம் வகுத்தனர். இஃதிப்படியிருக்க, ஒருவன் இரண்டு மத்ஹபின்படியான அனுஷ்டானங்களுமே எம்பெருமாஞரின் அனுஷ்டானத்தைப் பின்பற்றியவையாக இருக்கின்ற நிலேயில், ஒரு ரகஅத்தில் இமாம் அபூ ஹனீபா சொன்னபடியும், மறு ரகஅத்தில் இமாம் ஷாபியீ சொன்னபடியும் தொழுதால் என்ன என்று வினவலாம். முதல் ரகஅத்தில் இமாம் ஜமாஅத்தில் ஸூரா பாத்திஹா ஓதப்பட்டதும் மௌனமாக ஆமீன் கூறிக்கொண்டு, இரண்டாவது ரகஅத்தில் சப்தமிட்டு ஆமீன் கூறிஞல் என்ன, தவருென்றுமில்லேயே என்று வினவலாம். இப்படியே ஒங்வொரு விஷயத்திலும் ஒவ்வொருவரும் தத்தம் இஷ்டப்படி செய்வது என்று ஏற்பட்டால் எத்தகைய குழப்பம் உண்டாகும் என்பதைச் சற்று சிந்தித்து பாருங்கள்! அப்படிச் செய்வதன்மூலம் ஒவ்வொருவரும் விதவிதமான குழப்பங்களே உண்டாக்கித் தமது வணக்கங்களின் பயனேயே இழக்கவும் நேரலாம். எனவேதான், ஸுன்னத்-வல்- ம

அத் என்ற கட்டுக் கோப்பைச் சேர்ந்தவர்கள் இந்த நான்கு மத்ஹபுகளில் ஏதாவது ஒன்றைப் பின்பற்றியாகவேண்டும், நான்கிலுமிருந்து சிற்சில விஷயங்களைத் தம் மனம் போன போக்கில் பின்பற்றுவது கூடாது (ஹராம்) என்று உலமாக்கள் விதித்தனர். சிறந்த சிந்தனையாளரும், ஞானியுமான மகாகவி இக்பால்கூட இதை வற்புறுத்தியுள்ளார். தன் பெற்றோர்கள் ஒரு மத்ஹபைச் சேர்ந்தவர்களாக இருப்பதால், அவர்களுடைய பிள்ளைகளும், அந்த மத்ஹபிலுள்ளவர்களாய் இருப்பதுதான் இ[illegible]றுள்ள நடைமுறையாகும். இதையே 'தக்லீத்' என்பர். இந்தத் 'தக்லீத்' என்பதில் நம்பிக்கையில்லாத இக்பால் தாம் முற்றும் இமாமுல் அஃலம் அபூ ஹனீபாவைப் பின்பற்றியதாகத் தெரிவிக்கிறார். ஒருவன் பின்னர் தன் ஆராய்ச்சி கொண்டு, தான் அனுஷ்டித்துவரும் மத்ஹபை விட்டு, இந்த நான்கில் வேறொரு மத்ஹபில் சேர்ந்துகொள்வது கூடும்.

இவ்வுலகக் காரியங்களிலும், சன்மார்க்க அனுஷ்டானங்களிலும் மிகவும் இடைஞ்சலான சந்தர்ப்பத்தில் ஒருவன் தன் மத்ஹபின்படியான அனுஷ்டானத்தை விட்டு, வேறு ஒரு மத்ஹபின்படியான அனுஷ்டானத்தை மேற்கொள்ள அனுமதியுண்டு. அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் தான் 'இன்ன இமாமின் மத்ஹபைப் பின்பற்றுகிறேன்' என்று நிர்ணயஞ் செய்து கொள்ளவேண்டும். உதாரணமாகத் தொழுகைக்கு ஆயத்தமாவதற்கு ஒலுச்செய்வதற்கு ஹனபி மத்ஹபின்படி 'ஹவுளு' பத்தடி அகலமும், பத்தடி நீளமும் உள்ளதாக இருக்க வேண்டும், ஷாபியீ மத்ஹபுப்படியோ ஒன்றே கால் முழ நீளம், அதே அகலம், ஆழம் உள்ள 'ஹவுளு' ஒலுச் செய்யப் போதுமானதாகும். எனவே, ஹனபி மத்ஹபைப் பின்பற்றும் ஒருவர், பத்து அடி நீளம், பத்து அடி அகலமுள்ள

'ஹவுளு' இல்லாத நிலையில், இந்தச் சிறிய 'ஹவு'ளில், 'நான் ஷாபியீ இமாமைப் பின்பற்றி ஒலுச் செய்கிறேன்' என்று நிர்ணயத்துடன் ஒலுச்செய்து கொள்ளலாம். இது போலவே, ஷாபியீ மத்ஹபின்படி ஒலுச்செய்தவன் மணப்ப தற்குத் தடையற்ற பெண் ஒருத்தியின்மீது திரையில்லாமல் பட்டுவிட்டால் அவனுடைய ஒலு முறிந்துவிடுகிறது. ஆனால், ஹனபி மத்ஹபின்படி அப்படி முறிவதில்லை. இந்த இரண்டு முடிபுகளுமே இரண்டு ஹதீஸ்களை ஆதாரமாகக் கொண்டவை தாம். எனவே, கஃபத்துல்லாஹ்வை ஒலுவுடன் 'தவாப்' செய்யும் ஷாபியீ மத்ஹபைப் பின்பற்றுபவர், அங்கே 'தவாப்' செய்யும் பதினையிரக்கணக்கான பெண்களில் யாராலாவது திரையின்றித் தொடப்பட்டால் ஒலு முறிந்தவராகிவிடுகிறார். எனவே, இவர் ஒலுச்செய்யும்போதே தாம் தவாபில் ஒலுவுடன் இருப்பதற்காகத் தாம் ஹனபி இமாமைப் பின்பற்றி ஒலுச் செய்வதாக நிர்ணயஞ் செய்துகொண்டு ஒலுச்செய்யலாம். இப்படிப் பல விஷயங்களுண்டு. பிக்ஹுக் கிதாபுகளில் இது பற்றிய விபரங்களைக் கண்டுகொள்ளலாம்.

இந்த நான்கு மத்ஹபில் எந்த ஒன்றைப் பின்பற்றி அமல் செய்தவனும் நேர்வழியில் நடப்பவனுவான். இந்த நான்கு மத்ஹபுகளின் அழகு என்னவென்றால், இவற்றிடையுள்ள அபிப்பிராயபேதங்களிடையேயும் இந்த நான்கு மத்ஹபைச் சேர்ந்தவர்களும் தோளோடு தோள் சேர்ந்தவர்களாக, இந்த நான்கில் ஏதேனும் ஒரு மத்ஹபைப் பின்பற்றித் தொழுகை நடத்தும் இமாமுக்குப் பின்னால் நின்று தத்தம் மத்ஹபின் படியே தொழ முடிவது தான். இது சிந்திக்கவேண்டிய விஷய மாகும்.

மேலும், எந்த ஒரு மத்ஹபைச் சேர்ந்தவனும் தன் மத்ஹபின் இமாமைப்போலவே, மற்ற மூன்று மத்ஹபின் இமாம்களையும் மதிப்பாகவும் கண்ணியமாகவும் கருதவேண்

டும். இவர்களில் யாரைப்பற்றியும் இழிவான ஒரு வார்த்தை யும் பேசக்கூடாது. அத்துடன், மற்ற மூன்று மத்ஹபைப் பின்பற்றுபவர்களைப் பழிப்பது கூடாது. இமாம் ஷாபியீ உண்டாக்கித்தந்த மத்ஹபு இமாம் அபூ ஹனீபா உண்டாக்கித் தந்த மத்ஹபிலிருந்து பலவகைகளில் அபிப்பிராயபேதமுடைய தாக இருப்பினும், இமாம் ஷாபியீ எவ்விதம் இமாம் அபூ ஹனீபாவை மதித்துவந்துள்ளார்கள், அவர்களுடைய அடக்க ஸ்தலத்தில் அவர்கள் வகுத்துத்தந்த நியதிப்படி தொழுதார் கள் என்பதை நினைவு கூர்ந்து சிந்திக்கவேண்டும்.

சத்தியத்தைக் காப்பதற்காக இந்த இமாம்கள் காட்டிய மன உறுதி நம்மனைவருக்கும் நல்லதோர் முன்மாதிரியாக அமையுமாக! வாழ்க்கை சோதனைகள் நிறைந்ததுதான். சத்தி யத்தைப் புறக்கணித்துப் போகவாழ்வு பெற்ற யாரும் நல் வாழ்வு வாழ்ந்ததில்லை, இம்மையிலேயே அதற்கான தண்டனை களை அடைகிறார்கள் என்பதை நாம் கண்கூடாகக் காண் கிறோம். எனவே, இந்த மகாத்மாக்களான இமாம்களுடைய வாழ்க்கை இந்த வழியிலும் நமக்கு வழிகாட்டுமாக!

---

# உதவிய நூற்கள்

இந்த நூலை எழுதுவதற்குக் குறிப்பெடுக்க உதவிய நூற்கள் வருமாறு :

1. ஸீரத்தே அயிம்மயே அர்பஆ—ஸையிது ரயீஸ் அஹ்மது ஜஃபரி (உர்து)
2. ஸீரத்தே நுஃமான்—அல்லாமா ஷிப்லீ (உர்து)
3. ஸீரத்தே ஷாபியீ—மௌலானா காலித் மியான் (உர்து)
4. ஸவானிஹ் உமரி இமாம் மாலிக்—ஸையிது ஸுலைமான் நத்வி (உர்து)
5. ரிஸாலா அஹ்மத் பின் ஹன்பல்—இஜ்ஜுத் தீன் (உர்து)
6. ஹுஜ்ஜத்துல்லாஹில் பாலிகா—ஷாஹ் ஒலி யுல்லாஹ் (உர்து)
7. தத்கிரத்துல் ஹுஃப்பால்—அல்லாமா தஹபி (அரபி)
8. தாரீக பக்தாத்—இப்னு ஜஸாலா (அரபி)
9. தஹ்தீபுத் தஹ்தீப்—இப்னு ஹஜர் (அரபி)
10. எ ஷார்ட் ஹிஸ்டரி ஆப் தி ஸாரஸன்ஸ்—அமீர் அலீ (ஆங்கிலம்)
11. என்ஸைக்ளோப்பீடியா ஆப் இஸ்லாம் (ஆங்கிலம்)
12. நான்கிமாம்கள் சரித்திர வசனரூபகம்—யாழ்ப்பாணம் ஷைகு மஃரூபு லப்பை எழுதியது (தமிழ்). [இது கீழ்க்கரையில் வாழ்ந்த பெரியார் ஹஜ்ரத் ஸையிது முஹம்மது லெப்பை ஆலிம் என்ற மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களால், 'மராகிபுல் மவாஹிபு

—பீ மஞக்கிபி உலில் மதாஹிபு, என்ற பெயரில் எழுதப்பட்ட அரபித் தமிழ் நூலின் தமிழாக்கமாகும். அந்த அரபித் தமிழ் நூல் அல்லாமா ஹஸன் அவர்கள் எழுதிய 'மஃதனுல் யாவாக்கீத்தி வல் ஜவாஹிரி' என்ற அரபி நூலின்மொழிபெயர்ப்பாகும். 'நான்கிமாம்கள் சரித்திரம்' என்ற இந்தத் தமிழ் நூல் அரபித் தமிழ் நடையும், யாழ்ப்பாணத் தமிழ் நடையும் கலந்த நடையிலுள்ளது. இது கி.பி. 1891-ம் ஆண்டில் சென்னையில் அச்சிடப்பட்டதாகும். இந்த நூலிலிருந்து சில நல்ல தகவல்கள் நமது நூலில் எடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன.]

---